# वैयासिकन्यायमाला
# வையாஸிக ந்யாயமாலா




*SRI BHAGAVAN VEDAVYASA*

(ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு 11வது ஆச்சார்யாள்
ஸ்ரீஸ்ரீ பாரதீதீர்த்த மஹாஸ்வாமிகள்)

ௐ




21/2




# वै या सि क न्या य मा ला

# வையாஸிக ந்யாயமாலா

( ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு 11வது ஆச்சார்யாள்
ஸ்ரீ ஸ்ரீ பாரதீதீர்த்த மஹாஸ்வாமிகள்)

தமிழாக்கம்
ஸ்ரீ ஞானானந்தபாரதீ ஸ்வாமிகள்



ஸ்ரீமதி லிங்கம்மாள் ராமராஜு
சாஸ்த்ரப்ரதிஷ்ட்டா டிரஸ்ட்,
இராஜபாளையம்.

முதற் பதிப்பு : ஆகஸ்டு 2000 ( 2000 பிரதிகள்)

விலை ரூ : 150/-

<u>பிரதிகள் கிடைக்குமிடம் :</u>

1) ஸ்ரீமதி லிங்கம்மாள் ராமராஜு சாஸ்த்ரப்ரதிஷ்டா டிரஸ்ட்,
**1,**காந்திகலை மன்றம் சாலை,
**இராஜபாளையம் –626 117.**
e-mail :shastraprathishta@yahoo.com

2) சாஸ்த்ரப்ரகாஸிகா டிரஸ்ட்,
சந்திரவிலாஸ் அபார்ட்மெண்ட்ஸ்,
A-3, No-9, 8வது தெரு,
Dr ராதாகிருஷ்ணன் சாலை, மைலாப்பூர்
சென்னை – **600 004.** Phone : 044 – 8530975
e-mail : info@sastraprakasika.org

3) புத்தக நிலையம்,
ஸ்ரீ சாரதா பீடம்,
சிருங்கேரி – **577 139**

4) ஸ்ரீ சாரதா டிரஸ்ட் புத்தக நிலையம்,
ஸ்ரீ சங்கர மடம்,
சங்கரபுரம், பஸவங்குடி,
பெங்களூர் – **560 004.**

5) ஸ்ரீ வித்யாதீர்த்த ஃபவுண்டேஷன்,
5, பிருந்தாவனம் தெரு, மைலாப்பூர்,
சென்னை – **600 004.** Phone : 044 – 4985946

---

Printed by :
**Abhi Printographs,** 8/1266,Muthuramalingar Nagar,
Reserveline, SIVAKASI



ஸ்ரீ ஸ்ரீ அபிநவவித்யாதீர்த்த மஹாஸ்வாமிகள்





।। श्री शृङ्गेरी श्रीजगद्गुरुमहासंस्थानम् ।।

श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य पदवाक्यप्रमाणपारावारपारीण
यमनियमासनप्राणायामप्रत्याहारधारणाध्यानसमाध्यष्टाङ्गयोगानुष्ठाननिष्ठ
तपश्चक्रवर्त्यनाद्यविच्छिन्न श्रीशङ्कराचार्यगुरुपरम्पराप्राप्त षड्दर्शनस्थापनाचार्य
व्याख्यानसिंहासनाधीश्वर सकलनिगमागमसारहृदय सांख्यत्रयप्रतिपादक वैदिकमार्गप्रवर्तक
सर्वतन्त्रस्वतन्त्रादिराजधानी विद्यानगरमहाराजधानी कर्णाटकसिंहासनप्रतिष्ठापनाचार्य
श्रीमद्राजाधिराजगुरुभूमण्डलाचार्य ऋष्यशृङ्गपुरवराधीश्वर तुङ्गभद्रातीरवासि
श्रीमद्विद्याशङ्करपादपद्माराधक श्रीजगद्गुरु श्रीमदभिनवविद्यातीर्थस्वामिगुरुकरकमलसञ्जात

## ।। श्री जगद्गुरु शृङ्गेरी श्रीमद्भारतीतीर्थमहास्वामिभिः ।।



निखिलास्तिक महाजनविषये नारायणस्मरणपुरस्सरं विरचिता आशिषस्समुल्लसन्तु ।

इह खलु संसारान्धतमसे लीनान् लोकानुद्धर्तुकामो भगवान् बादरायणः चतुरध्यायीं शारीरकमीमांसां प्रणिनाय। तत्र च परस्परविरुद्धार्थतया आपाततःप्रतिभासमानानां वेदान्तवाक्यानां अद्वितीये ब्रह्मणि समन्वयः परपक्षाणामनपेक्षत्वं आत्मज्ञानसाधनानि, तत्फलं च सुष्ठु प्रत्यपादिषत। तेषां च सूत्राणां परशिवावतारभूताः श्रीमच्छङ्करभगवत्पादाचार्याः प्रसन्नगम्भीरं भाष्यं विरचयामासुः। व्याससूत्राणां यथावत् तत्त्वावबोधः अस्मादेव भाष्यात् भवितुमर्हति। युक्तं चैतत्। महाविष्णोरवतारभूतस्य बादरायणस्य हृदयं महेश्वरावतारभगवत्पादा इव कोऽन्यो ज्ञातुं प्रभवेत् ? तदुक्तं माधवीयशङ्करविजये भगवता बादरायणेन भगवत्पादान् प्रति -' बह्वर्थगर्भाणि लघूनि यानि निगूढभावानि च मत्कृतानि । त्वामेवमित्थं विरहय्य नाऽस्ति यस्तानि सम्यग्विवरीतुमीष्टे ॥ 'इति।

तदेतद्भाष्यं विस्तृतं सुकुमारमतीनां दुरवगाहमिति तस्य सुलभावबोधाय दयार्द्रहृदयाः इतः षट्शतवर्षेभ्यः प्राक् शृङ्गेरीशारदापीठं परिभूषितवन्तः जगद्गुरुवरेण्याः श्रीभारतीतीर्थस्वामिनः वैयासिकन्यायमालां निबबन्धुः । सोऽयं निबन्धः एकैकस्याप्यधिकरणस्यार्थं संक्षेपतः श्लोक - - द्वयेनोक्त्वा ललितपदगुम्फैः तद्विवृण्वन् जिज्ञासूनां भूयांसमुपकारमातनोति।

अत एव अत्युत्तममिमं ग्रन्थं द्रविडभाषानुवादेन सह राजापालयनगरस्थ लिगम्माळ्शारदा प्रतिष्ठाननाम्नी संस्था मुद्राप्य प्रचिकाशयिषतीति विदित्वा नितरां मोदामहे। वयमिममनुवादमवा - - लोकयाम। मूलग्रन्थार्थावबोधः अनेनानुवादेन अनायासेनैव भवितुमर्हति।

श्रीशारदाचन्द्रमौलीश्वरयोरनुकम्पापूरेण ग्रन्थोऽयं जिज्ञासुजनकर्णकिसलयालङ्कारो भूयात्, अनुवादकाः प्रकाशकाश्च श्रेयःपरम्पराभिस्समभिवर्धन्तामित्याशास्महे।

इति नारायणस्मरणम्

शृङ्गगिरिः
विक्रमवत्सरीय व्यासपूर्णिमा,
भानुवासरः। १६.७.२०००.





ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீஜகத்குரு மஹாஸம்ஸ்தானம்
ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீஜகத்குரு சிருங்கேரி
ஸ்ரீமத்பாரதீதீர்த்த மஹாஸ்வாமிகள் அருளிய
ஸ்ரீமுகத்தின் மொழி பெயர்ப்பு



எல்லா ஆஸ்திக மஹாஜனங்கள் விஷயமாக நாராயணஸ்மரண பூர்வகமாக செய்து அருளப்பட்ட ஆசீர்வாதங்கள் நன்கு விளங்கட்டும்!

இங்கு ஸம்ஸாரமாகிற குருட்டிருட்டில் மறைந்துள்ள ஜனங்களை மேலே கை தூக்கிவிடுவதில் ஆசை கொண்ட பகவான் பாதராயணர் நான்கு அத்யாயங்கள் கொண்ட சாரீரக மீமாம்ஸாசாஸ்திரத்தை இயற்றியருளினார். அதில் ஒன்றுக் கொன்று விரோதமுள்ளதாக, மேலெழுந்தவாரியாகத் தோன்றுகிற வேதாந்தவாக்யங்களுக்கு அத்விதீயமான பிரஹ்மத்தில் தாத்பர்யம், எதிரிகளின் பக்ஷங்களுக்கு அப்ராமாண்யம், ஆத்மஞானஸாதனங்கள், அதன் பலன் இவை நன்கு விளக்கப்பட்டுள்ளன.

அந்த ஸூத்ரங்களுக்கு பரமசிவ அவதாரபூதரான ஸ்ரீசங்கரபகவத்பாதாசார்யாள் மிகவும் தெளிவாகவும், ஆழ்ந்த கருத்துக்களைக்கொண்டதுமான பாஷ்யத்தை இயற்றி அருளினார்கள். வியாஸஸூத்ரங்களின் உள்ளது உள்ளபடியான தத்வஞானம் இந்தபாஷ்யத்தில் தான் கிடைக்கிறது. இது ந்யாயம் தான். மஹாவிஷ்ணுவின் அவதாரபூதரான பாதராயணருடைய ஹிருதயத்தை மஹேசுவர அவதாரமான பகவத்பாதாள்போல வேறுயார் அறிந்துகொள்ளமுடியும்? இந்தவிஷயம் பற்றி மாதவீய சங்கரவிஜயத்தில் பகவான் பாதராயணரால் பகவத்பாதரைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. "அநேக அர்த்தங்களை உடையதும், லகுவானநிபந்தங்களை உடையதும், தாத்ப்ர்யங்கள் மறைந்து உள்ளதுமான எவைகள் என்னால் கூறப்பட்டுள்ளதோ, எவன் அவைகளை நன்கு அறிவதற்கு தகுதியுள்ளவனோ அவன் உன்னைத்தவிர வேறுயாராக இருக்க முடியும்? "

அந்த இந்த பாஷ்யமானது விஸ்தாரமானது ஸுகுமாரமதிகளுக்கு அறியவதற்கு கடினமானதினால், அதை ஸுலபமாக அறிந்துகொள்வதற்காக கருணையால் நனைந்த ஹிருதயமுள்ளவர்களும் 600 வருஷங்களுக்கு முன் சிருங்கேரி சாரதா பீடத்தையலங்கரித்த ஜகத்குரு சிரேஷ்ட்டர்களான ஸ்ரீபாரதீதீர்த்தஸ்வாமிகள் வையாஸிக ந்யாயமாலையை இயற்றியருளினார்கள். இந்த கிரந்தமானது ஒவ்வொரு அதிகரணத்தின் அர்த்தத்தை சுருக்கமாக இரண்டு சுலோகங்களால் கூறி, பிறகு அதன் வியாக்யானத்தில் அதை விவரித்துக்கூறி ஜிக்ஞாஸுக்களுக்கு அதிகமான உபகாரத்தைச் செய்கிறது.

ஆகையாலேயே மிகவும் சிறந்த இந்த கிரந்தத்தை தமிழ் பாஷையின் அநுவாதத்துடன் கூட ராஜபாளையம் நகரத்திலுள்ள ஸ்ரீமதிலிங்கம்மாள்ராமராஜு சாஸ்த்ரப்ரதிஷ்ட்டா என்ற பெயருள்ள நிறுவனத்தால் அச்சிட்டு பிரகாசப்படுத்துகிறது என்பதையறிந்து மிகவும் ஸந்தோஷம் அடைகிறோம். நாங்கள் இந்த தமிழ் அநுவாதத்தைப் பார்த்தோம் மூலகிரந்தத்தின் அர்த்தஞானம் இந்த தமிழ் அநுவாதத்தால் சிரமமில்லாமலே கிடைக்கும்.

ஸ்ரீசாரதா-சந்திரமௌளீசுவரரின் கருணாபிரவாஹத் தால் இந்த கிரந்தமானது ஜிஜ்ஞாஸுஜநங்களின் துளிர்போன்ற கைகளிலே அலங்காரமாக விளங்கட்டும். இதை அநுவாதம் செய்தவர்களுக்கும் பிரகாசப்படுத்தியவர்களுக்கும் சிரேயஸ்பரம்பரை விருத்தியடையட்டும் என்று ஆசீர்வதிக்கிறோம்.



சிருங்கேரி,
விக்ரமவருஷவ்யாஸபூர்ணிமா,
ஞாயிற்றுக்கிழமை: **16.7.2000**

நாராயணஸ்மரணம்





# பதிப்புரை

ஸ்ரீ தக்ஷிணாம்நாய சிருங்கேரி ஸ்ரீசாரதா பீடாதிபதி ஜகத்குரு பரம்பரையில் 11-வது பீடாதிபதிகளாக விளங்கி வந்த ஸ்ரீ பாரதீ தீர்த்த மஹா ஸ்வாமிகளால் இயற்றி அருளப்பட்டது "வையாஸிக ந்யாயமாலா" என்னும் வேதாந்த கிரந்தம்.

அத்வைத வேதாந்த சாஸ்திரங்கள் எல்லாவற்றிற்கும் பரம மூலமாக உள்ளது வியாஸாசார்யாள் எழுதிய ப்ரஹ்ம ஸூத்ரம் என்பது. இதில் ஸ்ரீவியாஸாசார்யாள் 191 அதிகரணங்கள் மூலம் அத்வைத வேதாந்த ஸித்தாந்தத்திற்கு அநுகூலமான 191 விஷயங்களை தீர்மானித்திருக்கிறார். எல்லா உபநிஷத்துகளின் தாத்பர்யமும் இதில்தான்என்பதை அதிகரணங்களில் காட்டுகிறார். விஷயம், ஸந்தேஹம், பூர்வபக்ஷம், ஸித்தாந்தம் என்ற நியாயங்களைக் கொண்டு தீர்மானிக்கிறார்.

இதே ரீதியில்தான் "வையாஸிக ந்யாயமாலா" என்ற இந்த கிரந்தத்திலும் ச்லோகங்கள் ரூபமாக ந்யாயங்களை காட்டியிருக்கிறார் ஒவ்வொரு அதிகரணத்திலும் இரண்டு ச்லோகங்கள். முதல்ச்லோகத்தில் விசாரிக்கப்படும் விஷயம், ஸந்தேஹம், பூர்வபக்ஷம் என்ற மூன்றும் 2வது ச்லோகத்தில் ஸித்தாந்தமும் விளக்கப்படுகிறது. ந்யாயம் மூலம் விஷயம் தீர்மானிக்கப்படுவதால் "வையாஸிக ந்யாயமாலா" என்று இந்த கிரந்தத்திற்கு பெயர். இந்த நூலின் மூலத்தை எழுதியவரே வியாக்யானத்தையும் எழுதியுள்ளார்.

"வையாஸிக ந்யாயமாலா" என்னும் இந்த ஸம்ஸ்கிருத நூலுக்கு தமிழாக்கம் எழுதித்தந்தவர் ப்ரஹ்ம ஸூத்ரபாஷ்யம் முதலான பல பெரிய வேதாந்த நூல்களுக்கு தமிழ் உரை எழுதியவர் மேலும் சிருங்கேரி ஜகத்குரு பரம்பரையில் வந்துள்ள பல ஆசார்யர்களின் மஹிமைகள், திவ்ய சரிதங்கள் முதலிய வைகளை எழுதியவர்களும் இவர்தான். தமிழ் கை எழுத்துப் பிரதியை அச்சிடுவதற்கு உபயோகமாக நமக்குத்தந்து உதவிய ஸ்ரீஞானானந்த பாரதீ ஸ்வாமிகளுக்கு எங்கள் பிராணாமங்கள்

எங்கள் பிரார்த்தனைக்கு இணங்கி எங்களின் ஸத்கிரந்தபிரகாசன கைங்கர்யத்தை ஆசீர்வதித்து ஸ்ரீமுகம் அருளி பரமானுக்ரஹம் செய்துள்ள சிருங்ககிரி ஜகத்குரு ஸ்ரீஸந்நிதானம் ஸ்ரீபாரதீதீர்த்தஸ்வாமி திவ்ய பாதாரவிந்தங்களில் எங்களுடைய பக்தி பூர்வகமான பிரணாமங்களை ஸமர்ப்பிக்கிறோம்.

இந்த தமிழாக்கத்தை ஸம்ஸ்கிருத மூலத்துடன் ஒத்துப்பார்த்து திருத்தி அச்சிடத்தயார் செய்து கொடுத்ததற்காக வியாகரண சிரோமணி வேதாந்த வித்வான் ஸ்ரீ **K.S.**வெங்கடராம சாஸ்திரிகளுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

இந்நூலின் ப்ரூப்களை திருத்திக்கொடுத்து உதவிய சென்னை ஸம்ஸ்கிருதகலாசாலை முதல்வர் வேதாந்த மீமாம்ச சிரோமணி வேதபாஷ்ய ரத்னம் **Dr.R.**கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளுக்கும் எங்கள் நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம். இந்நூலை ஸ்ரீமதிலிங்கம்மாள்ராமராஜு சாஸ்த்ரப்ரதிஷ்ட்டா டிரஸ்ட் மூலம் வெளியிடுவதை மிகுந்த பாக்யமாக கருதுகிறோம்.

வணக்கம்.

**P.R.**ராமசுப்பிரமணிய ராஜா

"ராமமந்திரம்"
இராஜபாளையம்

।। श्री ।।

# महाभाग्यम्

पहदिदं-भागधेयमस्माकं, यत् सर्वविद्येशान-परमेश्वरावतारस्वरूपाणां भौपनिषदाद्वैतसिद्धान्त प्रतिष्ठापकानां चतुर्दिक् चतुराम्नायपीठप्रतिष्ठापयितॄणां ङ्गाद्रि पावनप्रदेश निवास परमप्रीतानां श्रीजगद्गुरूणां श्रीमदादिशंङ्करभगवत्पादाचार्याणां शिष्यकोटिषु प्रविष्टानां महापुरुषाणां वंशे जन्म लाभोऽस्माकम् ।।

महत्तरंचेदं-यत् तैर्महात्मभिः इदंप्रथमतया तुङ्गानदीतीरविराजमाने प्रकृतिवैरविवर्जिते पावनतमे शृङ्गगिरिपुण्यक्षेत्रे संप्रतिष्ठापित श्रीदक्षिणाम्नाय श्रीशारदापीठनामानं व्याख्यानभद्रपीठमधिष्ठितवतां श्रीसुरेश्वर, श्रीविद्यातीर्थ, श्रीविद्यारण्य, श्रीभारतीतीर्थ, श्रीनृसिंहभारती,श्रीचन्द्रशेखरभारती, श्रीमदभिनवविद्यातीर्थप्रमुखानामाचार्यवर्याणां श्रीजगद्गुरूणां शिष्येष्वन्यतमाः स्मो वयमिति ।।

महत्तमंचेदं - यत् श्रीमदभिनवविद्यातीर्थ गुरु करकमलसञ्जातानां निरवधिकृपापीयूषवर्षिकटाक्षविराजमाननेत्रारविन्दानां शिष्यचित्तसेंतापनिवर्त--काऽनुग्रहप्रदानैकनिरतस्वान्तानां सर्वसम्पूज्यतमपादपद्मानां श्रीशङ्कराचार्यवगुरु परम्परासमागतानां श्रीदक्षिणाम्नाय शृङ्गाद्रि श्री शारादापीठाधीपानां श्री भारतीतीर्थ श्रीचरणानां परमानन्दसन्दायकदिव्यतेजोमयमूर्तिसन्दर्शन मानस शान्ति समाह्लादकर तदीय महोपदेशामृतपानादिकं भाग्यजातं पूर्वपुण्य पुञ्जवशागतं पौनःपुन्येन लभामहे वयमिति।

-- श्री के.एस्. वेङ्कटरामशास्त्री ।

|| ஸ்ரீ ||

# மஹாபாக்யம்

உலகில் நமக்குக் கிடைத்துள்ள மஹாபாக்யமென்பது எல்லா வித்யைகளுக்கும் ஈசனாரான பரமேசுவரரின் அவதார ஸ்வரூபர்களும் உபநிஷத்துகளின் முக்ய உபதேசமாக விளங்கும் அத்வைதஸித்தாந்தத்தை உலகில் நிலைநிறுத்தியவர்களும், பாரதத்தின் நான்கு திசைகளிலும் நான்கு ஆம்நாய பீடங்களை நிறுவியவர்களும், சிருங்கேரி புண்யக்ஷேத்ரத்தில் வாஸம் செய்வதில் மிகுந்த பிரீதிகொண்டவர்களுமான ஆதிசங்கர பகவத்பாதாச்சார்யர்களின் சிஷ்யர்களுடைய வம்சத்தில் பிறவிகிடைத்திருப்பது.

இதைவிடப் பெரிய பாக்யம் - அந்த மஹாத்மாவான ஆச்சார்யர்களால் துங்கா நதிக்கரையில் இயற்கையாக விரோதமுள்ள பிராணிகளும் விரோதத்தை விட்டு அன்புடன் பழகுவதும் மிகவும் தூய்மையுள்ளதுமான சிருங்கேரி புண்ய க்ஷேத்ரத்தில் முதலாவதாக ஸ்தாபிக்கப்பட்ட தக்ஷிணாம்னாய ஸ்ரீசாரதாபீடம் என்ற வியாக்யான ஸிம்ஹாஸனத்தை அலங்கரித்தவர்களான ஸ்ரீஸுரேசுவரர், ஸ்ரீவித்யாதீர்த்தர், ஸ்ரீவித்யாரண்யர், ஸ்ரீபாரதீதீர்த்தர், ஸ்ரீநருஸிம்மபாரதீ, ஸ்ரீசந்திரசேகரபாரதீ, ஸ்ரீமத்அபிநவவித்யாதீர்த்தர் முதலான ஜகத்குருக்களான ஆசார்யசிரேஷ்டர்களின் சிஷ்யர்களில் ஒருவராக நாம் இருக்கிறோம் என்பது.

எல்லாவற்றையும் விட மிகப்பெரிய பாக்யம் - ஸ்ரீமத்அபிநவவித்யாதீர்த்த ஜகத்குருக்களின் சிஷ்யர்களும் எல்லையற்ற கருணாமிருதத்தைப் பொழிகின்ற கடாக்ஷத்துடன் விளங்கும் தாமரை போன்ற நேத்ரசோபையுடன் விளங்குபவர்களும், சிஷ்யர்களின் மனதிலுள்ள ஸந்தேகத்தை அடியோடு போக்குகின்ற பரமானுக்ரஹத்தை கொடுப்பதிலேயே எப்பொழுதும் ஈடுப்பட்டுள்ள மனதுள்ளவர்களும், எல்லோராலும் பூஜிக்கத் தகுந்த பாதபத்மங்களை உடையவர்களும் ஆதிசங்கராச்சார்ய குருபரம்பரையில் வந்தவர்களும் சிருங்கேரியில் விளங்கும் ஸ்ரீ தக்ஷிணாம்னாய ஸ்ரீ சாரதாபீடத்தின் அதிபதிகளுமான ஜகத்குரு ஸ்ரீ பாரதீதீர்த்த மஹாஸ்வாமிகளின் தேஜோமய திவ்யமூர்த்திதர்சனம், மனதிற்கு சாந்தியையும் ஆனந்தத்தையும் தருகின்ற அமிருதமயமான திவ்யோபதேச சிரவணம், பரமாநுக்ரஹலாபம் முதலான மஹாபாக்யங்கள் நாம் முன் செய்த அளவற்ற மஹாபுண்யங்களின் பலனாக அடிக்கடி நமக்கு கிடைத்துக் கொண்டிருப்பது தான் மிகச்சிறந்த பாக்யமாகும்.

ஸ்ரீ K.S.வெங்கடராமசாஸ்திரி

# வையாஸிக ந்யாயமாலா

## பொருளடக்கம்

<u>நான்காவது பாதம்</u>

(அதிகரணங்கள் 8, சுலோகங்கள் 16, ஸூத்ரங்கள் 28 )



நான்கு பாதங்களும் சேர்ந்து அதிகரணங்கள் 39, சுலோகங்கள் 96 ஸூத்ரங்கள் 134.

இரண்டாவது அத்யாயம் :

முதல் பாதம்

(அதிகரணங்கள்13, சுலோகங்கள் 26, ஸூத்ரங்கள் 37)

## இரண்டாவது பாதம்

(அதிகரணங்கள் 8, சுலோகங்கள் 16, ஸூத்ரங்கள் 45)



## மூன்றாவது பாதம்

(அதிகரணங்கள் 17, சுலோகங்கள் 34, ஸூத்ரங்கள் 53)

### நான்காவது பாதம்

( அதிகரணங்கள் 9, சுலோகங்கள் 18, ஸூத்ரங்கள் 22)



இரண்டாவது அத்யாயம் நான்கு பாதங்களும் சேர்ந்து அதிகரணங்கள் 47, சுலோகங்கள் 94, ஸூத்ரங்கள் 157.

## மூன்றாவது அத்யாயம்

### முதல் பாதம்

(அதிகரணங்கள் 6, சுலோகங்கள் 12, ஸூத்ரங்கள் 27).

## இரண்டாவது பாதம்

(அதிகரணங்கள் 8, சுலோகங்கள் 16, ஸூத்ரங்கள் 41)



## மூன்றாவது பாதம்

அதிகரணங்கள் 36, சுலோகங்கள் 76, ஸூத்ரங்கள் 66.

## நான்காவது பாதம்

அதிகரணங்கள் 17, சுலோகங்கள் 36, ஸூத்ரங்கள் 52.

மூன்றுவது அத்யாயம் நான்கு பாதங்களும் சேர்ந்து
அதிகரணங்கள் 67, சுலோகங்கள் 140, ஸூத்ரங்கள் 186.

## நான்காவது அத்யாயம்

### முதல் பாதம்

(அதிகரணங்கள் 14, சுலோகங்கள் 28, ஸூத்ரங்கள் 19).



### இரண்டாவது பாதம்

(அதிகரணங்கள் 11, சுலோகங்கள் 22, ஸூத்ரங்கள் 21).

மூன்றுவது பாதம்

(அதிகரணங்கள் 6, சுலோகங்கள் 12,ஸூத்ரங்கள் 16)



நான்காவது பாதம்

(அதிகரணங்கள் 7, சுலோகங்கள் 14, ஸூத்ரங்கள் 22).



ஆக நான்காவது அத்யாயம் நான்கு பாதங்களும் சேர்ந்து அதிகரணங்கள் 38, சுலோகங்கள் 76 , ஸூத்ரங்கள் 78.

(மொத்த அதிகரணங்கள் 191,சுலோகங்கள் 406,ஸூத்ரங்கள் 555)

## வையாஸிக ந்யாயமாலா

| அத்யாயம் | பாதம் | அதிகரணம் | ஸூத்ரங்கள் | சுலோகங்கள் |
|---|---|---|---|---|
| 1 | 1 | 11 | 31 | 38 |
| | 2 | 7 | 32 | 14 |
| | 3 | 13 | 43 | 28 |
| | 4 | 8 | 28 | 16 |
| 2 | 1 | 13 | 37 | 26 |
| | 2 | 8 | 45 | 16 |
| | 3 | 17 | 53 | 34 |
| | 4 | 9 | 22 | 18 |
| 3 | 1 | 6 | 27 | 12 |
| | 2 | 8 | 41 | 16 |
| | 3 | 36 | 66 | 76 |
| | 4 | 17 | 52 | 36 |
| 4 | 1 | 14 | 19 | 28 |
| | 2 | 11 | 21 | 22 |
| | 3 | 6 | 16 | 12 |
| | 4 | 7 | 22 | 14 |
| மொத்தம் | | 191 | 555 | 406 |

# வையாஸிக ந்யாயமாலா

ஸ்ரீ வியாஸ பகவான் உபநிஷத்துக்களின் தாத்பர்யத்தை ஸந்தேஹத்திற்கு இடமன்னியில் தெளிவாக வெளிப்படுத்துவதற்கு அவசியமாயுள்ள நியாயங்களை வெகு சுருக்கமாக 555 ஸூத்திரங்களில் அடக்கி சாரீரக மீமாம்ஸை என்ற சாஸ்திரத்தை இயற்றியருளினூர். குருசிஷ்யக்கிரமமாக சாஸ்திரார்த்தத்தை நன்கு கிரஹித்து இருப்பவர்களுக்கு விஷயங்களை ஞாபகப்படுத்துவதற்கு இந்த ஸூத்திரங்கள் உபயோகப்படலாமே தவிர முன்பின் பரிசயமில்லாதவர்களுக்குப் பிரயோஜனப்படாது. ஆகையால் அந்த ஸூத்திரங்களில் கண்ட விஷயங்களை விஸ்தரித்துச் சொல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டபடியால் ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசார்யார் அவர்கள் அவைகளுக்கு பாஷ்யம் எழுதிக்கொடுத்து அனுக்ரஹித்திருக்கிறூர்கள். பின் வந்துள்ள பெரியோர்களால் அந்த பாஷ்யத்திற்கு வியாக்யானங்கள், வியாக்யானங்களுக்கு வியாக்யானங்கள் அவைகளுக்கு வியாக்யானங்கள் என்று மிகவும் விரிவாக ஏற்பட்டுவிட்டன. இவ்விதமாக விஸ்தாரத்தையடைந்துள்ள சாஸ்திரத்தை நன்கு அறிய வேண்டுமானூல் வேத வேதாந்தங்கள், தர்க்க வியாகரண மீமாம்ஸாதி சாஸ்திரங்கள், முதலியவையாவும் நன்கு மனதில் பதிந்திருந்தாலொழிய ஸாத்தியமில்லாமலிருக்கிறது. அதனூல் ஸாமான்ய வ்யுத்பத்தியுள்ளவர்களுக்கும் அந்த ஸூத்திரங்கள் பிரயோஜனப்பட வேண்டுமானூல் அவைகளின் தாத்பர்யத்தை மறுபடியும் சுருக்கிச் சொல்வதற்கு அவசியமேற்பட்டது. அந்த ஸூத்திரங்களில் மொத்தம் 191 விஷயங்கள் சொல்லப் பட்டிருக்கின்றன. ஒவ்வொரு விஷயத்தையும் எடுத்துச் சொல்லும் பாகத்திற்கு அதிகரணம் என்று பெயரிடப்படுவதால் மொத்தம் 191 அதிகரணங்கள் இந்த சாரீரக மீமாம்ஸா சாஸ்திரத்தில் அடங்கியுள்ளவையாகின்றன. ஸூத்திரங்களின் அர்த்தத்தை பிரதிபதம் எடுத்துச் சொல்லாமல் இவ்வதிகரணங்களினூல் பிரதிபாதிக்கப்படுகிற விஷயங்களை மாத்திரம் தெளிவுபடுத்தினூல் போதுமென்று கருதி ஸ்ரீபாரதிதீர்த்த ஸ்வாமிகள் அவர்கள் மிகக் கருணை கூர்ந்து வையாஸிக நியாயமாலா என்ற கிரந்தத்தை இயற்றிக் கொடுத்திருக்கிறூர்கள். அதற்குத் தானே வியாக்யானமும் எழுதி அனுகிரஹித்திருக்கிறூர். அந்த மூல கிரந்தத்தின் பிரயோஜனத்தை ஸமஸ்கிருத பாஷா பரிசயமில்லாதவர்களும் கூட அடைய வேண்டுமென்ற நோக்கத்துடன்

இங்கு தமிழில் மொழிபெயர்க்கப்படுகிறது. வியாக்யானத்தை அப்படியே மொழி பெயர்க்க அவசியமில்லாதபடியால் அதில் கண்ட விஷயங்கள் மாத்திரம் இங்கு காணப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ பாரதிதீர்த்தர் என்பவர் சிருங்கேரியில் ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யார் ஸ்தாபித்துள்ள ஸ்ரீ சாரதா பீடத்தில் 10வது ஆசார்யாராக விளங்கி வந்த பரமயோகியான ஸ்ரீ வித்யாதீர்த்தருடைய சிஷ்யராகவிருந்து அவர்களுக்குப் பின்னால் 11வது ஆசார்யாராக பீடாதிபத்யம் வஹித்து வந்த மஹான். இவரே 12வது ஆசார்யாரான ஸ்ரீவித்யாரண்ய மஹா முனிக்கு முன் ஜகத்குரு ஸ்தானத்தை அலங்கரித்தவர். ஸ்ரீவித்யாரண்யருடன் சேர்ந்து பஞ்சதசப் பிரகரணம் முதலான கிரந்தங்களை இயற்றியவர்.

ஸ்ரீ பாரதிதீர்த்தருக்கு வெகு காலம் பின்னால் வந்த ஸ்ரீஅமலாநந்தர் என்பவரும் ஸூத்திரங்களையெடுத்துக் கொள்ளாமல் அதிகரணங்களின் தாத்பர்யத்தையே விவரித்து "சாஸ்திரதர்ப்பணம்" என்றதோர் கிரந்தம் எழுதியிருக்கிறார். அதில் ஒவ்வொரு அதிகரணமும் ஒரு நியாயத்தைச் சொல்கிறதென்ற முறைப்படி நியாய சாஸ்திரப்படி ஒவ்வொரு நியாயத்திற்கும் இருக்க வேண்டியதான, பிரதிக்ஞை, ஹேது, திருஷ்டாந்தம், உபநயம், நிகமனம் என்ற ஐந்து அங்கங்களும் இங்கே எப்படி அமைந்திருக்கின்றன என்பதை எடுத்துக் காட்டுவதிலேயே முனைந்திருப்பதால், லலிதமாய் எல்லோருக்கும் அர்த்தமாகக் கூடிய வகையில் எழுதப்படவில்லை. ஆகையால் அதை எடுத்துக்கொள்ளாமல் ஸ்ரீ பாரதிதீர்த்தரின் வையாஸிக நியாயமாலையே இங்கு வெளியிடப்படுகிறது. ஸூத்திர பாஷ்யம் முதலான கிரந்தங்களை நன்கு வாசித்திருப்பவர்களுக்கு விஷயங்களை ஞாபகப்படுத்துவதற்கும் வாசிக்காதவர்களுக்கு விஷயங்களை அறிவிப்பதற்கும் இது உபயோகப்படுமென்று நம்புகிறோம்.

# வையாஸிக ந்யாயமாலா

## முன்னுரை

எந்த கிரந்தத்தை ஆரம்பித்தாலும் அது எவ்வித விக்னமுமன்னியில் பூர்த்தியடைய வேண்டியதையுத்தேசித்து இஷ்ட தேவதையையோ, குருவையோ வணங்கி ஆரம்பிப்பது என்ற பெரியோர்களின் ஸம்பிரதாயத்தை அனுஸரித்து இந்த கிரந்த கர்த்தா தன்னுடைய குருவையே பகவானாக பாவித்து வணங்கிவிட்டு இதில் விவரிக்க உத்தேசிக்கும் விஷயத்தையும் சுருக்கமாய் சொல்கிறார்.

**प्रणम्य परमात्मानं श्रीविद्यातीर्थरूपिणम्।**
**वैयासिकन्यायमाला श्लोकैः संगृह्यते स्फुटम् ।। १**

ப்ரணம்ய பரமாத்மாநம் ஞீவித்₃யாதீர்த்₂தரூபிணம்
வையாஸிகந்யாயமாலா சுலோகை:ஸங்க்₃ருஹ்யதே ஸ்புடம்:।।1

ஞீவித்யாதீர்த்தர் என்ற ரூபத்தை தரித்திருக்கும் பரமாத்மாவை நன்கு நமஸ்கரித்துவிட்டு, ஞீவியாஸ பகவான் செய்துள்ள நியாயங்கள் கோர்க்கப்பட்டிருக்கும் மாலையானது (என்னல்) சுலோகங்களால் தெளிவாய் ஸங்கிரஹிக்கப்படுகிறது.

இங்கு "நியாயங்கள்" என்ற சப்தமானது ஞீவியாஸபகவான் அருளியிருக்கும் பிரஹ்மஸூத்திரங்களின் அதிகரணங்களைக் குறிக்கும். அந்த ஸூத்திரங்களின் தாத்பர்யத்தை விரிவாய் எடுத்துச் சொல்லி ஞீசங்கர பகவத் பாதாசார்யாரும் மற்றவர்களும் எழுதியுள்ள பாஷ்யம் முதலான கிரந்தங்கள் வித்வான்களாலேயே கிரஹிக்கக்கூடியதாக இருப்பதால், ஸாமான்ய புத்தியுள்ளவர்களுக்கும் உபயோகப்படும்படி சுருக்கமாயும் தெளிவாகவும் சுலோக ரூபமாகவும் இங்கு சொல்லப் படுகிறது.

"அதிகரணம்" என்பது ஐந்து அவயவங்களையுடையது.

1)<u>விஷயம்</u> எதைப்பற்றி விசாரிக்கப்படுகிறதோ அது.
2)<u>ஸந்தேஹம்</u> விசாரிக்கும்படி எந்த ஸந்தேஹம் என்பது.
3)<u>ஸங்கதி</u> (இந்த ஸந்தேஹம் ஏற்படுவதற்கு காரணமாய் உள்ளது)

முன் அதிகரணத்துடன் தொடர்பு என்ன?

4)<u>பூர்வபக்ஷம்</u> ஸந்தேஹம் என்றால் இரண்டு விதமாயோ பலவிதமாயோதோன்றினால் தானே ஏற்படும்? முதலில் தோன்றுவது எது?

5)<u>ஸித்தாந்தம்</u> முடிவான தீர்மானம் எப்படி என்பது.

இந்த ஐந்து அவயவங்களும் இங்கே எவ்விதம் சொல்லப் படுகிறதென்பதைச் சொல்கிறார்.

एको विषयसंदेहपूर्वपक्षावभासकः।
श्लोकोऽपरस्तु सिद्धान्तवादी संगतयः स्फुटाः।। २ ।।

ஏகோ விஷயஸந்தே₃ஹபூர்வபக்ஷாவபா₄ஸக: ।
ச்லோகோஅபரஸ்து ஸித்₃தா₄ந்தவாதீ₃ ஸங்க₃தய ஸ்பு₂டா:।। 2

ஒரு சுலோகம் விஷயம், ஸந்தேஹம், பூர்வபக்ஷம், இவைகளைத் தெளிவுபடுத்துகிறது. மற்றொரு சுலோகமோ ஸித்தாந்தத்தைச் சொல்கிறது. ஸங்கதிகள் தெளிவாகவே இருக்கின்றன.

ஒவ்வொரு அதிகரணத்திற்கும் இரண்டு சுலோகங்கள். முதல் சுலோகத்தில் விஷயம் என்ன, ஸந்தேஹம் எவ்விதம், பூர்வபக்ஷம் எப்படி, என்பவைகளும் இரண்டாவது சுலோகத்தில் ஸித்தாந்தமும் சொல்லப்படுகிறது. ஸந்தேஹம், பூர்வபக்ஷம் ஏற்படுவதற்குக் காரணமாய் முன்னால் என்ன சொல்லப்பட்டதென்பதைக் காட்டும் ஸங்கதி என்பது தனியாக எடுத்துக்காட்ட அவசியமில்லாமல் தானாகவே துலங்குமானதினால் அதை இங்கே எடுத்துக்காட்டவில்லை. ஸங்கதியை எடுத்துக்காட்டாமல் நாமாகவே எப்படி ஊகித்துக் கொள்ள முடியும் என்றால் துலக்கிக்காட்டுகிறார்

शास्त्रेऽध्याये तथा पादे न्यायसंगतयस्त्रिधा ।
शास्त्रादिविषये ज्ञाते तत्तत्संगतिरूह्यताम्।। ३

சாஸ்த்ரேஅத்₄யாயே ததா₂ பாதே₃ ந்யாயஸங்க₃தயஸ்த்ரிதா₄ ।
சாஸ்த்ராதி₃விஷயே ஜ்ஞாதே தத்தத்ஸங்க₃திரூஹ்யதாம் ।। 3

நியாயங்களின் ஸங்கதிகள் சாஸ்திர விஷயமாக, அத்யாய விஷயமாக, பாத விஷயமாக என்று மூன்று விதம். சாஸ்திரம் முதலியவைகளில் பிரதிபாதிக்கப்படும் விஷயம் அறியப்பட்டுவிட்டால் அதற்குள்ள ஸங்கதியை ஊஹித்துக்கொள்ள முடியும்.

முதலில் சாஸ்திரத்தின் விஷயத்தையும் அத்யாயங்களின் விஷயங்களையும் எடுத்துச் சொல்கிறார்.

शास्त्रं ब्रह्मविचाराख्यमध्यायाः स्युश्चतुर्विधाः ।
समन्वयाविरोधौ द्वौ साधनं च फलं तथा ।। ४

சாஸ்த்ரம் ப்₃ரஹ்மவிசாராக்₂யமத்₄யாயா ஸ்யுச்சதுர்விதா₄. ।
ஸமந்வயாவிரோதௌ₄ த்₃வௌ ஸாத₄நம் ச ப₂லம் ததா₂:।। 4 ।।

பிரஹ்மத்தைப்பற்றி விசாரிப்பது என்பது சாஸ்திரம். அத்யாயங்கள் நான்கு விதமாய் இருக்கின்றன. (முதல்) இரண்டு ஸமன்வயம், அவிரோதம் எனப்படும். (மற்றவிரண்டு) ஸாதனம், அப்படியே பலன் எனப்படும்.

பிரஹ்மஸூத்திரங்களாகிய சாரீரக மீமாம்ஸா சாஸ்திரத்தில் விஷயமாயுள்ளது. பிரஹ்ம விசாரணைதான். இதில் நான்கு அத்யாயங்கள் உள்ளன.

I. முதலாவது அத்யாயத்தில் உபநிஷத்துக்களிலுள்ள வாக்கியங்களுக்குள் எவ்வித மாறுபாடும் இல்லாமல் ஏகோபித்து பிரஹ்மத்தில்தான் தாத்பர்யம் என்று நிர்ணயிக்கப்படுவதால் இவ்வத்யாயத்திற்கு ஸமன்வயம் (ஏகோபித்த முடிவு) என்பது விஷயம்.

II. இரண்டாவது அத்யாயத்தில் அந்த நிர்ணயத்திற்கு எதிராக சொல்லக்கூடிய ஆக்ஷேபணைகளை ஆதாரமற்றவையென்று நிராகரிக்கின்றபடியால், அதற்கு அவிரோதம் (விரோதமற்றது) என்பது விஷயம்.

III. மூன்றாவது அத்யாயத்தில் பிரஹ்மத்தையறிவதற்கு வேண்டியனவாயுள்ள ஸாதனங்கள் சொல்லப்படுவதால், அதற்கு ஸாதனம் என்பதே விஷயம்.

IV. நான்காவது அத்யாயத்தில் பிரஹ்மத்தையறிவதனுல் ஏற்படும் பரம புருஷார்த்தமாகிய மோக்ஷம் என்ற பலன் சொல்லப்பட்டிருப்பதால் அதற்கு பலன் என்பது விஷயமாகும். இனி ஒவ்வொரு அத்யாயத்திலுமுள்ள நான்கு பாதங்களில் பிரதிபாதிக்கப்படும் விஷயங்களை எடுத்துச் சொல்கிறுர்.

समन्वये स्पष्टलिङ्गमस्पष्टत्वेऽप्युपास्यगम् ।
ज्ञेयगं पदमात्रं च चिन्त्यं पादेष्वनुक्रमात् ।। ५ ।।

ஸமந்வயே ஸ்பஷ்டலிங்க₃மஸ்பஷ்டத்வேஅப்யுபாஸ்யக₃ம். ।
ஜ்ஞேயக₃ம் பத₃மாத்ரம் ச சிந்த்யம் பாதே₃ஷ்வனுக்ரமாத்:।।5।।

ஸமன்வய அத்யாயத்தில், (1)ஸ்பஷ்டமாயுள்ள லிங்கங்களை உடைய வாக்கியமும், (2) ஸ்பஷ்டம் இல்லாத லிங்கங்களை உடையதாக

இருப்பதிலும் உபாசிக்கத் தகுந்ததைக் குறிக்கும் வாக்கியமும், (3)அறியவேண்டியதாக உள்ளதைக் குறிக்கும் வாக்கியமும், (4) வெறும் வார்த்தை மாத்திரமும், முறையே வரிசையாக நான்கு பாதங்களிலும் விசாரிக்கப்படும் விஷயங்களாகும்.

I. முதலாவதான ஸமன்வய அத்யாயத்தில் எல்லா உபநிஷத்து வாக்கியங்களும் ஏகோபித்து ஒற்றுமையாக பிரஹ்மத்திலேயே தாத்பர்யமுள்ளவையென்று சொன்னோம். ஆனாலும் அந்த தாத்பர்யம் வெவ்வேறு வாக்கியங்களிலிருந்தும் அவ்வாக்யங்களிலுள்ள வார்த்தை களிலுமிருந்தே அறிய வேண்டியிருப்பதால் அவைகளைப்பற்றி விசாரிக்கும்படி ஏற்படுகிறது.

1. முதலாவது பாதத்தில், பிரஹ்மம் தான் சொல்லப்படுகிறது என்று வியக்தமாய் உள்ள லக்ஷணங்களைக் காணும் வாக்கியங்கள் விசாரிக்கப் படுகின்றன
2. இரண்டாவது பாதத்தில், அவ்விதம் வியக்தமாயில்லாமல் சொல்லப்படுவது பிரஹ்மம்தானு வேறு ஏதேனுமா வென்று ஸந்தேஹிக்கக் கூடிய லக்ஷணங்களைக் காணும் வாக்கியங்களிலும் அந்த லக்ஷணங்களால் குறிக்கப்படும் வஸ்து பிரஹ்மம் தான் என்று தீர்மானித்தாலும் அந்த பிரஹ்மம் உபாஸிக்க வேண்டிய ஸகுண பிரஹ்மமா அல்லது அறிந்து கொள்ள வேண்டிய நிர்குண பிரஹ்மமா, என்று மறுபடியும் ஸந்தேஹம் ஏற்படலாமகையால் இங்கு பெரும்பாலும் ஸகுண பிரஹ்ம விஷயமான வாக்கியங்கள் விசாரிக்கப்படுகின்றன.
3. மூன்றுவது பாதத்தில் அவ்விதம் வியக்தம் இல்லாத லக்ஷணங்களைக் காணும் வாக்கியங்களில் பெரும்பாலும் நிர்குண பிரஹ்மத்தை போதிக்கும் வாக்கியங்கள் விசாரிக்கப்படுகின்றன.
4. நான்காவது பாதத்தில், சில வாக்கியங்களில் உள்ள பதங்கள் பிரஹ்மத்தைக் குறிக்கின்றனவா, வேறு எதையேனுமா என்று விசாரிக்கப் படுகிறது.

**द्वितीये स्मृतितर्काभ्यामविरोधोऽन्यदुष्टता।**
**भूतभोक्तृश्रुतेर्लिङ्गश्रुतेरप्यविरुद्धता।। ६ ।।**

த்₃விதீயே ஸ்ம்ருதிதர்காப்₄யாமவிரோதோ₄அந்யது₃ஷ்டதா. ।
பூ₄தபோ₄க்த்ருச்ருதே: லிங்க₃ச்ருதேரப்யவிருத்₃த₄தா: ।। 6 ।।

II. இரண்டாவது அத்யாயத்தில் (உபநிஷத்துக்கள் பிரஹ்மத்தையே சொல்லுகின்றன என்ற ஸமன்வயத்திற்கு) (1)ஸ்மிருதியினுலாவது யுக்தியினுலாவது விரோதமில்லை யென்றும் (2) மற்ற மதங்கள் தோஷமுள்ளவையென்றும் (3) (ஆகாசம் முதலிய ஐந்து) பூதங்களையோ ஜீவனையோ சொல்லும் வேத வாக்கியங்களுடன் விரோதமில்லையென்றும் (4) அப்படியே லிங்க சரீரத்தைப் பற்றி சொல்லும் வேத வாக்கியங்களுடனும் விரோதமில்லையென்றும். (வரிசையாக நான்கு பாதங்களிலும் சொல்லப்படுகின்றன)

**तृतीये विरतिस्तत्त्वंपदार्थपरिशोधनम्।**
**गुणोपसंहृतिर्ज्ञानबहिरङ्गादिसाधनम्।। ७ ।।**

த்ருதீயே விரதிஸ்தத்த்வம்பதா$_3$ர்த$_2$பரிசோத$_4$நம். ।
கு$_3$ணோபஸம்ஹ்ருதிர்ஜ்ஞாநபஹிரங்கா$_3$திஸாத$_4$நம் ।। 7 ।।

III. மூன்ருவது அத்யாயத்தில், (1) வைராக்யம் (2) தத் (அது)த்வம் (நீ) என்ற பதங்களின் அர்த்தத்தை சோதிப்பது, விளக்குவது (3) (மற்றவிடங்களில் சொல்லப்பட்டிருக்கும்) குணங்களைச் சேர்த்துக் கொள்ளுதல் (4) ஞானத்தையடைவதற்கு வேண்டிய வெளி அங்கங்கள் முதலான ஸாதனம் (என்று வரிசையாக நான்கு பாதங்களிலும் சொல்லப்படுகின்றன).

**चतुर्थे जीवतो मुक्तिरुत्क्रान्तेर्गतिरुत्तरा।**
**ब्रह्मप्राप्तिब्रह्मलोकाविति पादार्थसंग्रहः।। ८ ।।**

சதுர்தே$_2$ ஜீவதோ முக்திருத்க்ராந்தேர்க$_3$திருத்தரா. ।
ப்$_3$ரஹ்மப்ராப்திப்$_3$ரஹ்மலோகாவிதி பாதா$_3$ர்த$_2$ஸங்க்$_3$ரஹ:।। 8 ।।

IV. நான்காவது அத்யாயத்தில், (1) ஜீவித்திருக்கையிலேயே மோக்ஷமடைதல் (2) சரீரத்தைவிட்டு வெளிக்கிளம்புதல், (3) (ஸகுண பிரஹ்மத்தை உபாஸிக்கிறவர்களுக்கு தேவயானம் என்ற) வடக்கே போகுதல் (4) (நிர்குண பிரஹ்மத்தை ஸாக்ஷாத்கரிப்பவர்களுக்கு) பிரஹ்மத்தையடைதலும் (ஸகுண பிரஹ்மத்தை உபாஸிக்கிறவர்களுக்கு) பிரஹ்ம லோகத்தையடைதலும் (வரிசையாக நான்கு பாதங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன) இவ்விதம் பாதங்களிலுள்ள விஷயங்களின் சுருக்கம் (சொல்லப்பட்டது).

இவ்விதம் சாஸ்திரம், அத்யாயம், பாதம், இவைகளின் விஷயங்கள் தெரிந்து விட்டபடியால் சாஸ்திரத்திற்கும் அத்யாயங்களுக்கும் உள்ள ஸங்கதி (ஸம்பந்தம்), அத்யாயத்திற்கும் அத்யாயத்திற்குமுள்ள ஸங்கதி, அத்யாயத்திற்கும் அதிலுள்ள பாதங்களுக்குமுள்ள ஸங்கதி, பாதத்திற்கும் அடுத்து வரும் பாதத்திற்குமுள்ள ஸங்கதி, பாதத்திற்கும் அதிலடங்கிய அதிகரணத்திற்குமுள்ள ஸங்கதி, அதிகரணத்திற்கும் முன் பின்னுள்ள அதிகரணத்திற்குமுள்ள ஸங்கதி, எல்லாவற்றையும் ஸுலபமாய் ஊஹித்துக் கொள்ளலாம். ஆகையால் தனித்து எடுத்துச் சொல்ல அவசியமில்லை. அவ்விதம் இருக்கக் கூடிய ஸங்கதிகள் பலவிதம் என்பதை மாத்திரம் எடுத்துக் காட்டுகிறார்.

ऊहित्वा संगतीस्तिस्रस्तथाऽवान्तरसंगती: ।
ऊहेदाक्षेपदृष्टान्तप्रत्युदाहरणादिका: ।। ९ ।।

ஊஹித்வா ஸங்க$_3$தீஸ்திஸ்த்ரஸ்ததா$_2$அவாந்தரஸங்க$_3$தீ: ।
ஊஹேதா$_3$க்ஷேபத்$_3$ருஷ்டாந்தப்ரத்யுதா$_3$ஹரணாதி$_3$கா: ।। 9 ।।

(சாஸ்திரம், அத்யாயம், பாதம் இவைகளைப் பொருத்த) மூன்று ஸங்கதிகளை ஊஹித்துக் கொண்டு விட்ட பிறகு, அப்படியே இடையிலுள்ள ஆக்ஷேப ஸங்கதி, திருஷ்டாந்த ஸங்கதி, பிரத்யுதாஹரண ஸங்கதி, முதலான ஸங்கதிகளை ஊஹித்துக் கொள்ள வேண்டும். எப்படி ஊஹிப்பது என்பதையும் சுருக்கமாய் காட்டுகிறார்?

पूर्वन्यायस्य सिद्धान्तयुक्तिं वीक्ष्य परे नये।
पूर्वपक्षस्य युक्तिं च तत्राऽऽक्षेपादि योजयेत् ।। १० ।।

பூர்வந்யாயஸ்ய ஸித்$_3$தா$_4$ந்தயுக்திம் வீக்ஷ்ய பரே நயே. ।
பூர்வபக்ஷஸ்ய யுக்திம் ச தத்ராஆக்ஷேபாதி$_3$ யோஜயேத் ।। 10 ।।

முன் (அதிகரணத்திலுள்ள) நியாயம் தீர்மானிப்பதற்காக ஸித்தாந்தத்தில் சொன்ன யுக்தியையும் மேலே உள்ள அதிகரணத்தில் பூர்வபக்ஷத்திற்காக சொல்லப்படும் யுக்தியையும் கவனித்துப் பார்த்து அங்கு ஆக்ஷேபம் முதலான ஸங்கதிகளை பொருத்திக் கொள்ள வேண்டும்.

முன்னுள்ள அதிகரணத்தில் ஸித்தாந்தத்தைச் சொல்வதற்காக எடுத்துக் கொண்ட யுக்தியே சரியில்லை என்று அடுத்த அதிகரணத்தில் சொல்லப்பட்டால், இது ஆக்ஷேப ஸங்கதியாகும். அந்த யுக்தியையே வைத்துக் கொண்டு வேறு விஷயம் தீர்மானிக்கப்பட்டால் திருஷ்டாந்த ஸங்கதியாகும். அந்த யுக்திக்குச் சொன்ன திருஷ்டாந்தத்திற்கு

விரோதமாக வேறு திருஷ்டாந்தம் சொன்னால், பிரத்யுதாஹரண ஸங்கதி எனப்படும்.

முன் அதிகரணத்திலுள்ள யுக்திக்கு ஸம்பந்தமின்றியே அந்த அதிகரணத்திலுள்ள விஷயத்தினால் வேறு விஷயம் ஞாபகத்திற்கு வந்து அது விசாரிக்கப்பட்டால், பிரஸங்க ஸங்கதியாகும். இவ்விதமாக ஸங்கதிகள் பலவிதம்.

இவ்வாறு சாஸ்திரம் முதலியவைகளின் விஷயங்களை சுருக்கமாக சொல்லிவிட்டு இனி ஒவ்வொரு அதிகரணமாக எடுத்து விவரித்துச் சொல்கிறார்.

## <u>முதல் அத்யாயம் : முதல் பாதம்</u>

## १. जिज्ञासाधिकरणम्

## 1. *ஜிஜ்ஞாஸாதி$_4$கரணம்*

(ஸூத்ரம் 1)

**अथातो ब्रह्मजिज्ञासा ।। १ ।।**

அதா$_2$தோ ப்$_3$ரஹ்மஜிஜ்ஞாஸா: 1

(பிறகு அதனால் ப்ரஹ்மத்தை அறிய விசாரம் செய்ய வேண்டும்)

**अविचार्यं विचार्यं वा ब्रह्माध्यासानिरूपणात्।**
**असंदेहाफलत्वाभ्यां न विचारं तदर्हति ।। ११ ।।**
**अध्यासोऽहंबुद्धिसिद्धोऽसङ्गं ब्रह्म श्रुतीरितम्।**
**संदेहान्मुक्तिभावाच्च विचार्यं ब्रह्म वेदतः ।। १२ ।।**

அவிசார்யம் விசார்யம் வா ப்$_3$ரஹ்மாத்$_4$யாஸாநிருபணாத். ।
அஸந்தே$_3$ஹாப$_2$லத்வாப்$_4$யாம் ந விசாரம் தத$_3$ர்ஹதி ।। 11
அத்$_4$யாஸோஅஹம்பு$_3$த்$_3$தி$_4$ஸித்$_3$தோ$_4$அஸங்க$_3$ம் ப்$_3$ரஹ்மச்ருதீரிதம்.।
ஸந்தே$_3$ஹாந்முக்திபா$_4$வாச்ச விசார்யம் ப்$_3$ரஹ்ம வேத$_3$த: ।। 12

(அர்த்தம்)

அத்யாஸம் நிரூபணம் செய்யப்படாதபடியால் பிரஹ்மம் விசாரிக்கத் (அர்த்தம்)தகுதியற்றதா? விசாரிக்க வேண்டியது தானா? (பிரஹ்ம விஷயமாய்) ஸந்தேஹம் இல்லாதபடியாலும் (பிரஹ்மத்தை விசாரிப்பதினால்) பிரயோஜனம் இல்லாததினாலும், அது விசாரத்திற்கு உரியதல்ல.

அத்யாஸம் என்பது "நான்" என்ற எண்ணத்தினால் ஸித்தித்திருக்கிறது. பிரஹ்மம் ஸங்கமற்றது என்று வேதத்தினால் சொல்லப்படுகிறது. (இவ்விதம் பிரஹ்மத்தின் ஸ்வரூபத்தைப்பற்றி) ஸந்தேஹம்

இருப்பதினுலும் (அதையறிவதினுல்) மோக்ஷம் (என்ற பலன்) இருப்பதினுலும், ப்ரஹ்மம் வேதத்தைக் கொண்டு விசாரிக்க வேண்டியதே.

விஷயம் :

தைத்திரீய உபநிஷத்தில்" तत् ब्रह्म, तत् विजिज्ञासस्व" "அது ப்ரஹ்மம். அதை நன்கு அறிய விரும்பு" என்றும், ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் "आत्मा वा अरे द्रष्टव्यः श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः" "ஹே மைத்ரேயீ, ஆத்மாதான் பார்க்கப்பட வேண்டும், கேட்கப்படவேண்டும், சிந்திக்கப்பட வேண்டும், தியானிக்கப்பட வேண்டும்" என்றும், மற்றும் இவைபோல ப்ரஹ்மத்தைப் பற்றி விசாரிக்கச் சொல்லும் வாக்கியங்கள் எல்லாம் இந்த அதிகரணத்திற்கு விஷயம்.

ஸந்தேஹம் :

விசாரிக்க வேண்டுமென்று வேதம் சொல்லும்போது, ஸந்தேஹத்திற்கு இடமில்லையேயென்று தோன்றலாம். ப்ரஹ்மம் என்பதோ "सत्यं ज्ञानमनन्तं ब्रह्म" (உள்ளதாய், அறிவாய், எல்லையற்றதாயுள்ளது ப்ரஹ்மம்) என்று தைத்திரீயத்தில் ஸந்தேஹமன்னியில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஆத்மா என்பதோ நான் நான் என்று எல்லாப் பிராணிகளாலும் ஸந்தேஹமன்னியில் அனுபவிக்கப்படுகிறது. அவ்விரண்டு வஸ்துக்களும் தனித்தனியாக, ஒன்றுக்கொன்று விரோதமாயுள்ள லக்ஷணங்களை உடையவைகளாக இருப்பதால், அவையிரண்டையும் கலந்து ஒன்ருக எந்த புத்தியுள்ளவனும் பார்க்கமாட்டான். ஆகையால் அவ்விதம் கலந்து பார்ப்பதான அத்யாஸம் இருக்க நியாயமுமில்லை. ஆகையால் ஸந்தேஹத்திற்கு இடமன்னியில் எல்லாம் தெளிவாய் இருப்பதால் விசாரிக்க விஷயமேயில்லை. மேலும் விசாரித்தால் ஏதேனும் ப்ரயோஜனமிருந்தால் அதில் ப்ரவிருத்தி நியாயமாகும். ப்ரஹ்மத்தை விசாரிப்பதிலிருந்து எவ்வித ப்ரயோஜனமுமில்லை. ஆகையால் விசாரிக்கவே வேண்டாமென்று தோன்றுகிறது. ஆனுல் வேதமோ விசாரிக்கச் சொல்கிறது. இதில் விசாரணை வேண்டுமா, வேண்டாமா என்று ஸந்தேஹம் ஏற்படுகிறது.

(விளக்கம்)

பூர்வபக்ஷம் :

"ब्रह्म विचारानर्हम् इति शास्त्रमनारम्भणीयम् इति पूर्वपक्षः"

ஸந்தேஹத்தைப்பற்றிச் சொல்லும் போது ப்ரஹ்ம விஷயமாக ஸந்தேஹமும் இல்லை விசாரிப்பதினுல் ப்ரயோஜனமும் இல்லை என்று

எடுத்துக்காட்டினதே விசாரம் வேண்டாமென்று சொல்லும் பூர்வ பக்ஷத்திற்குரிய யுக்திகளாகும்.

ஸித்தாந்தம் :

பிரஹ்மத்தின் லக்ஷணமும் ஆத்மாவின் லக்ஷணமும் தனித்தனியே வியக்தமாய் தெரிந்திருந்த போதிலும் "अयमात्मा ब्रह्म" "இந்த ஆத்மாவே பிரஹ்மம்" என்று பிருஹதாரண்யக உபநிஷத், மாண்டூக்ய உபநிஷத் இவைகளும் " तत्त्वमसि" "அதுவே நீ" என்று சாந்தோக்ய உபநிஷத்தும், இதுபோலவே மற்ற உபநிஷத்துக்களும் சொல்வதால் அது எப்படியென்று அறிவதற்கு விசாரம் வேண்டியிருப்பதால் விசாரத்திற்கு விஷயமிருக்கிறது. ஆத்மா வாஸ்தவத்தில் எவ்வித பற்றுதலுமில்லாத சுத்த பிரஹ்மமாகவே இருக்கையில், நான் பிரஹ்மத்தைத் தவிர வேறு என்று எண்ணிக் கொள்வதுடன் ஆத்மாவல்லாத சரீரம் முதலிய ஜடபதார்த்தங்களில் "நான்" என்ற எண்ணமும் கொண்டிருப்பதினுலேயே ஆத்மா விஷயமாக ஸந்தேஹம் ஏற்படுகிறது. இந்த ஸந்தேஹத்தை நிவிருத்தி செய்து கொண்டு "நான் பிரஹ்மமே தான்" என்ற அறிவு ஏற்பட்டுவிட்டால், முன்னுலிருந்த தப்பான எண்ணமாகிய அத்யாஸம் விலகி, ஆத்மாவின் ஸ்வரூப ஸாக்ஷாத்காரம் ஏற்படும்போது அந்த அத்யாஸத்தினுல் ஏற்பட்டுள்ள ஸுக துக்க மோஹமாகிற ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுதலை ஏற்படும். இதுவே மோக்ஷம் எனப்படும். இதற்கு மேல் உத்தமமான பலன் எதுவும் கிடையாது. ஆகையால் ஸந்தேஹம் பிரயோஜனம் இரண்டுமிருப்பதினுல் விசாரிக்க வேண்டியது அவசியம் தான் என்று ஸித்தாந்தம். அந்த விசாரத்திற்கு அனுகூலமாயிருப்பதால், இந்த சாஸ்திரமும் அவசியமே.

# २. जन्माद्यधिकरणम्

## 2. *ஜன்மாத்₃யதி₄கரணம்*

(ஸூத்ரம் 2)

**जन्माद्यस्य यतः ।। २ ।।**

**ஜந்மாத்₃யஸ்ய யத: 2**

**( இதனுடைய ஜன்மம் முதலியது எதிலிருந்தோ )**

விசாரிக்க வேண்டியது தான் என்று ஏற்பட்டால், விசாரிக்கப்பட வேண்டிய வஸ்துவிற்கு என்ன லக்ஷணம், அது இருக்கிறது என்பதற்கு என்ன பிரமாணம், என்று சொல்லாமல் போனுல்

அந்தவஸ்து இருப்பதாகவே ஏற்படாது. அதற்குள்ள லக்ஷணத்தைச் சொல்வதற்காக, இந்த அதிகரணம் ஏற்பட்டிருக்கிறது.

लक्षणं ब्रह्मणो नास्ति किंवाऽस्ति नहि विद्यते।
जन्मादेरन्यनिष्ठत्वात्सत्यादेश्चाप्रसिद्धितः ।। १३ ।।
ब्रह्मनिष्ठं कारणत्वं स्याल्लक्ष्म स्त्रग्भुजङ्गवत्।
लौकिकान्येव सत्यादीन्यखण्डं लक्षयन्ति हि ।। १४ ।।

லக்ஷணம் ப்$_3$ரஹ்மணோ நாஸ்தி கிம்வாஅஸ்தி நஹி வித்$_3$யதே।
ஜந்மாதே$_3$ரந்யநிஷ்ட$_2$த்வாத்ஸத்யாதே$_3$ச்சாப்ரஸித்$_3$தி$_4$த: ।। 13
ப்$_3$ரஹ்மநிஷ்ட$_2$ம் காரணத்வம் ஸ்யால்லக்ஷ்ம ஸ்ரக்பு$_4$ஜங்க$_3$வத்।
லௌகிகாந்யேவ ஸத்யாதீ$_3$ந்யக$_2$ண்ட$_4$ம் லக்ஷயந்தி ஹி ।। 14

(அ..ம்)

பிரஹ்மத்திற்கு லக்ஷணம் இல்லையா அல்லது இருக்கிறதா? பிறப்பு முதலியது வேறிடத்தில் இருப்பதினுலும், ஸத்யம் முதலியதிற்கு பிரஸித்தியில்லாததினுலும், லக்ஷணம் இல்லைதான்.

மாலைக்கு பாம்பு போல, பிரஹ்மத்திலிருக்கும் காரணத்தன்மை லக்ஷணமாகும். உலக பிரஸித்தமான ஸத்யம் முதலான சப்தங்களே அகண்டமாயுள்ளதை (பிரஹ்மத்தை) குறிக்கலாமல்லவா?

விஷயம் :

பிரஹ்மத்தை போதிக்கிற

"यतो वा इमानि भूतानि जायन्ते, येन जातानि जीवन्ति,
यत्प्रयन्त्यभिसंविशन्ति,.... "

"எதிலிருந்தே இந்த உண்டாயிருப்பவைகள் உண்டாயிற்றே? உண்டானவைகள் எதினுல் ஜீவிக்கின்றனவோ, எதை அடைந்து நுழைந்து விடுகின்றனவோ" என்றும், "सत्यं ज्ञानमनन्तं ब्रह्म" "ஸத்யமாய், அறிவாய், எல்லையற்றதாய், இருக்கிறது பிரஹ்மம்" என்றும், தைத்திரீய உபநிஷத் வாக்கியங்கள் விஷயம்.

ஸந்தேஹம் :

இந்த லக்ஷணங்கள் பிரஹ்மத்திற்கு பொருந்துமா, பொருந்தாதா, என்று ஸந்தேஹம்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பொருந்தாது. ஏனென்ருல் உண்டாவது முதலிய லக்ஷணங்கள் உண்டாகும் வஸ்துக்களில் இருப்பவைகளேயானதினுல் அவை

பிரஹ்மத்தில் கிடையாது ஆகையால் பிரஹ்மத்தைக்குறிக்க அவை உதவாது. உலகத்தில் கல், மண் எல்லாவற்றையும் ஸத்யம் என்கிறோம். மனுஷ்யன் மிருக பக்ஷியாதிகளையும் அறிவுள்ளவையென்கிறோம். ஆகாசம் காலம் முதலியவற்றை வரம்பற்றது என்கிறோம். இந்த வார்த்தைகள், இவைகளுக்கெல்லாம் வேறுயுள்ள அகண்டமான பிரஹ்மத்தை எப்படி போதிக்கமுடியும்? ஆகையால் பிரஹ்மத்தைக் குறிக்கக் கூடியதாய் லக்ஷணம் கிடையாது.

ஸித்தாந்தம் :

உண்டாவது முதலிய லக்ஷணங்கள் உண்டாகும் வஸ்துக்களிலிருந்த போதிலும், எதினால் உண்டாகின்றனவோ அதைக் குறிக்கப் போதுமானவைகளேயாகும். மங்கலான வெளிச்சத்தில் கீழே கிடக்கும் மாலையைப்பார்த்து பாம்பு என்று பிரமிக்கிறவனுக்கு "எது இருப்பதினால் பாம்பு தோன்றுகிறதோ அது மாலையே" என்று போதிப்பது போல, "எது இருப்பதினால் உலகம் தோன்றுகிறதோ அது பிரஹ்மம்" என்று சொல்வது உசிதமேயாகும்.வாஸ்தவத்தில் மாலை பாம்பையுண்டு பண்ணுகிறதில்லை என்றிருந்த போதிலும், மாலையினிடத்தில் பாம்புக்குக் காரணமாயிருக்கும் தன்மையைக் கல்பித்துச் சொல்கிறோம். அப்படியே பிரஹ்மத்தினிடத்திலும் உலகத்திற்குக் காரணமாயிருக்கும் தன்மையைக் கல்பித்துச் சொல்லக் கூடுமானதினால் அதுவும் பிரஹ்மத்திற்கு லக்ஷணமாகும்: பிரஹ்மத்தின் ஸ்வரூபத்தில் ஒட்டாமல் இருந்த போதிலும் பிரஹ்மத்தைக் குறிக்கப் போதுமானதாயிருப்பதால் இந்த லக்ஷணத்தை தடஸ்த லக்ஷணம் என்பார்கள். உபலக்ஷணம் என்றும் இதைக் கூறுவதுண்டு "காக்கை உட்கார்ந்து கொண்டிருப்பது இன்னார் வீடு" என்று காட்டி விட்டால் அந்த காக்கை பறந்து போய்விட்டாலும் அந்த வீட்டையறிந்து கொள்ளலாமல்லவா?

ஸத்யம், ஞானம், வரம்பற்றது என்ற சப்தங்கள் உலகப் பிரஸித்தமேயானாலும் அவைகளைக் கொண்டே அகண்டமான உலகத்தில் அடங்காத பிரஹ்மத்தைக் காட்ட முடியும். உலகத்திலுள்ள ஸத்யவஸ்துக்கள் அறிவுள்ளதாயோ, அறிவற்றவைகள் எல்லையற்றவையாகவோ, எல்லையற்றவைகள் அறிவுள்ளவையாகவோ என்றெல்லாம் இராது. ஆனாலும் அந்த வார்த்தைகளைக் கொண்டே ஸத்யமாயும், அறிவாயும், எல்லையற்றதாயும் ஒரு பதார்த்தம் உண்டென்று சொன்னால் அர்த்தம் செய்து கொள்ள முடியுமானதினால் இவ்வார்த்தைகளும் பிரஹ்மத்தை குறிப்பவைகளே. இந்த அம்சங்கள்

பிரஹ்மத்திலிருந்து பிரிக்க முடியாமல் ஸ்வரூபத்திலேயே ஒட்டியிருப்பதால் மேல் மாடியுள்ள வீடு என்பது போல ஸ்வரூப லக்ஷணம் எனப்படும். ஆக தடஸ்தலக்ஷணம், ஸ்வரூப லக்ஷணம் என்று இரண்டு விதமாகவும் பிரஹ்மத்தைக் குறிக்க முடியுமானதினுல் பிரஹ்மத்திற்கு லக்ஷணம் உண்டென்று ஸித்திக்கிறது.

# ३. शास्त्रयोनित्वाधिकरणम्

## 3. *சாஸ்திரயோனித்வாதி₄கரணம்*

(ஸூத்ரம் 3)

**शास्त्रयोनित्वात् ।। ३ ।।**

சாஸ்த்ரயோனித்வாத் : 3

( சாஸ்திர காரணத் தன்மையால் )

முன் அதிகரணத்தில் பிரஹ்மத்திற்கு லக்ஷணத்தை சொல்லிவிட்டு இந்த அதிகரணத்தில் மூல ஸூத்திரத்திலுள்ள "शास्त्र योनित्वात्" "சாஸ்திர காரணமாய் இருப்பதால்" என்பதை "சாஸ்திரத்திற்குக் காரணமாய் இருப்பதால்" என்று எடுத்துக் கொண்டால் "பிரஹ்மம் ஸர்வக்ஞம் (எல்லாமறிந்தது) என்று முன் ஸூசித்தது த்ருடமாக்கப் படுகின்றது, சாஸ்திரத்தினால் போதிக்கப்படுவதினால் காரணமாக உடையதால்" என்று எடுத்துக் கொண்டால் பிரஹ்மத்தை அறிவிக்கும் பிரமாணம் சாஸ்திரம் தான் என்று கிடைக்கிறது என்று இரண்டு விதமாகப் பிரித்து ஒவ்வொரு விதத்திற்கும் இரண்டு சுலோகங்கள் சொல்லி விளக்கிக் காட்டுகிருர்.

முதல் வர்ணகம் :

**न कर्तृ ब्रह्म वेदस्य किंवा कर्तृ, न कर्तृ तत् ।**
**विरूपनित्यया वाचेत्येवं नित्यत्ववर्णनात् ।। १५ ।।**
**कर्तृनिःश्वसिताद्युक्तेर्नित्यत्वं पूर्वसाम्यतः ।**
**सर्वावभासिवेदस्य कर्तृत्वात्सर्वविद्भवेत् ।। १६ ।।**

ந கர்த்ரு ப்₃ரஹ்ம வேத₃ஸ்ய கிம்வா கர்த்ரு ந கர்த்ரு தத் ।
விரூபநித்யயா வாசேத்யேவம் நித்யத்வவர்ணநாத் ।। 15
கர்த்ருநி ச்வஸிதாத்₃யுக்தேர்நித்யத்வம் பூர்வஸாம்யத:
ஸர்வாவபா₄ஸிவேத₃ஸ்ய கர்த்ருத்வாத்ஸர்வவித்₃ப₄வேத் ।। 16

(அ..ம்)

பிரஹ்மம் வேதத்தைச் செய்தவரா அல்லது இல்லையா? அவர் செய்தவரல்ல. "ஹே விரூப! நித்யமான வாக்கினுல் (என்னை

ஸ்துதிசெய்யும் படி செய் )" என்றிவ்விதம் வேதத்திற்கு நித்யத்தன்மை சொல்லப்பட்டிருப்பதால்
வேதத்தை ப்ரஹ்மத்தின் மூச்சாக சொல்லியிருப்பதைக் கொண்டு பிரஹ்மம் வேதத்தை செய்தவர். முந்தைய கல்பத்தில் உள்ளதற்கு ஒப்பாகவே இந்த கல்பத்திலும் வேதத்தை வெளியிடுவதினால் வேதமானது நித்யமாகிறது. எல்லா அர்த்தங்களையும் அறிவிக்கும் வேதத்தை செய்கிறவராயிருக்கும் தன்மையால் (பிரஹ்மம்) எல்லாமறிந்தவராகும் (ஸர்வக்ஞர்).
ஸந்தேஹத்திலிருந்தே விஷயத்தை அறிந்து கொள்ளக் கூடியதினுல் தனித்து எடுத்துச் சொல்ல அவசியமில்லை.

ஸந்தேஹம் :

"ब्रह्म वेदं करोति न करोति वा"

பிரஹ்மம் வேதத்தை செய்தாரா செய்யவில்லையா?

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

" **वाचा विरूप नित्यया ।**" "ஹே விரூப, நித்யமான வாக்கினுல்" என்ற மந்திரத்திலிருந்து வேதம் நித்யமாய் எப்பொழுதுமுள்ள வாக் என்று தெரிவதால், அதை யாரும் உண்டு பண்ணினது கிடையாது.

ஸித்தாந்தம் :

**अस्य महतो भूतस्य निःश्वसितमेतद्यदृग्वेदो यजुर्वेदः सामवेदः (बृह-२-४-१०)**
"ரிக் வேதம், யஜுர் வேதம், ஸாம வேதம் என்றது எதுவோ அது இந்த பெரிய பூதத்தின் (ப்ரஹ்மத்தின் ) மூச்சு" என்று பிருஹதாரண்யக உபநிஷத்திலும், **"तस्माद्यज्ञात्सर्वहुत ऋचः सामानि जज्ञिरे"** "அவரிடத்திலிருந்து ரிக்குகளும், ஸாமாக்களும் உண்டாயின" என்று புருஷ ஸூக்தத்திலும், வியக்தமாக வேதங்களுக்கு பிரஹ்மத்திலிருந்து உற்பத்தி சொல்லியிருப்பதால், பிரஹ்மமே வேதத்தைச் செய்தது. எவ்வித பிரயாஸையு மன்னியில் பிரஹ்மத்திருந்து வெளிவந்ததால் மூச்சு என்று சொல்லப்பட்டது. இப்பொழுது வெளிவந்த வேதம், முன் கல்பத்தில் இருந்தபடியே எவ்வித மாறுதலுமன்னியில் இருக்கிறபடியால் நித்யம் என்றைக்குமுள்ளது என்று சொல்லப்பட்டது. இந்த வேதத்தை பிரமாணமாக வைத்துக்கொண்டே பிரஹ்மா உலகத்தை ஸ்ருஷ்டி செய்தார் என்பதினுல், உலகத்தில் இருக்க வேண்டிய எல்லாவித வியவஸ்தைகளும் வேதத்தில்

காணக்கூடியது என்று ஏற்படுகிறது. எப்பொழுதும்கூட ஒரு கிரந்தத்தில் அடங்கிய விஷயங்களைவிட எவ்வளவோ மடங்கு விஷயங்களை அறிந்தவராக கிரந்தமியற்றிவர் இருப்பார் என்பது பிரஸித்தம். ஆகையால் எல்லா விஷயங்களையும் தெளிவுபடுத்திச் சொல்லும் வேதத்தை வெளியிட்டவர், அதையும் விட எல்லாம் அறிந்தவராகயிருந்திருக்க வேண்டுமென்று ஏற்படுவதால், பிரஹ்மம் ஸர்வக்ஞம் என்பது ஊர்ஜிதமாகக் கிடைக்கிறது.

இரண்டாவது வர்ணகம் :

**अस्त्यन्यमेयताप्यस्य किंवा वेदैकमेयता।**
**घटवत्सिद्धवस्तुत्वाद् ब्रह्मान्येनापि मीयते ।। १७ ।।**
**रूपलिङ्गादिराहित्यान्नास्य मान्तरयोग्यता।**
**तंत्वौपनिषदेत्यादौ प्रोक्ता वेदैकमेयता ।। १८ ।।**

அஸ்த்யந்யமேயதாப்யஸ்ய கிம்வா வேதை$_3$கமேயதா ।
கடவத்ஸித்$_3$த$_4$வஸ்துத்வாத்$_3$ ப்$_3$ரஹ்மாந்யேநாபி மீயதே ।। 17
ரூபலிங்கா$_3$தி$_3$ராஹித்யாந்நாஸ்ய மாந்தரயோக்$_3$யதா ।
தம்த்வௌபநிஷதே$_3$த்யாதௌ$_3$ ப்ரோக்தா வேதை$_3$கமேயதா ।।18

இதற்கு (பிரஹ்மத்திற்கு) வேறு பிரமாணங்களாலும் அறியப்படும் தன்மையுண்டா? அல்லது வேதம் ஒன்றினுலேயே அறியப்படும்தன்மையா? பிரஹ்மமானது, குடம் போல முன்னுலேயே ஸித்தமாயிருக்கும் வஸ்துவானதினுல், வேறுபிரமாணத்தினுலும் அறியத் தகுந்ததுதான்.
இதற்கு ரூபம் லிங்கம் முதலியன இல்லாததினுல் வேறு பிரமாணத்திற்கு விஷயமாகும் தன்மை கிடையாது. "உபநிஷத்தில் கண்ட அந்த (புருஷனையே கேட்கிறேன்)" என்பது முதலானவிடத்தில் வேதம் ஒன்றினுலேயே அறியப்படும் தன்மை நன்கு சொல்லப்பட்டிருக்கிறது.

ஸந்தேஹம் :

**" ब्रह्मणः प्रत्यक्षादिगम्यत्वमस्ति, न वा "**

பிரஹ்மத்தைக் காட்டிக் கொடுக்கக் கூடிய பிரமாணம் வேதம் ஒன்றுதானு? அல்லது பிரத்யக்ஷம், அனுமானம் முதலான பிரமாணங்களைக் கொண்டும் பிரஹ்மத்தை அறிய முடியுமா?
(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஏதேனும் பிரயத்தினம் செய்து அதன் பலனுக நமக்கு வேறு இடத்திலோ வேறு ஸமயத்திலோ பின்னுல் ஏற்பட வேண்டிய வஸ்துவாயிருந்தால், அது இப்பொழுது பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களுக்கு விஷயமாகாது. பிரஹ்மமோ இப்பொழுதே இங்கேயே எப்பொழுதும் எங்கும் இருக்கும் வஸ்து. நம் முன் இருக்கும் குடத்தையறிவதற்கு வேதம் வேண்டியதில்லை கண்களே போதுமானது. புகையைப் பார்த்து அங்கே நெருப்பு இருக்கிறதென்று ஊஹித்து அனுமானத்தினுல் தெரிந்து கொள்ளலாம் இதற்கும் வேதம் தேவையில்லை. அப்படியே பிரஹ்மம் ஏற்கனவே இருக்கும் வஸ்துவானதினுல் அதையறிவிக்க வேதம் தேவை இல்லை. பிரத்யக்ஷம் முதலான பௌதிகப் பிரமாணங்களே போதுமானது.

ஸித்தாந்தம் :

பிரஹ்மத்தினிடத்தில் சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் இவையேதும் கிடையாததினுல் அவைகளையே முறையே கிரஹிக்கக் கூடிய காது, த்வக், கண், நாக்கு, மூக்கு, என்ற இந்திரியங்கள் பிரஹ்மத்தையறிய யோக்கியதையற்றவை. ஆகையால் பிரஹ்மம் பிரத்யக்ஷப் பிரமாணத்திற்கு விஷயமாகாது. அனுமானம் ஒரு வஸ்துவைக் காட்ட வேண்டுமானுல் அது நேரில் பிரத்யக்ஷத்திற்கு விஷயமாயில்லாத போதிலும், அதனுடைய லிங்கம் (அடையாளம்) நெருப்பின் அடையாளம் புகை போல, ஏதேனும் ஒன்று பிரத்யக்ஷ விஷயமாயிருக்க வேண்டும். பிரஹ்மத்திற்கோ எவ்வித லிங்கமும் அதைக் காட்டிக் கொடுக்கக் கூடியதாகக் கிடையாது. ஆகையால் அனுமானம் பிரஹ்ம விஷயமாகப் பிரயோஜனப்படாது. "கவயம் என்ற மிருகம் பசுவைப் போலிருக்கும்" என்று கேள்விப்பட்டவன் காட்டுக்குப் போய் அங்கே பசு இல்லாமல் ஆனுல் பசுவைப் போலவுள்ள ஒரு மிருகத்தைக் கண்டால், இது கவயம் என்று அறிந்து கொள்ள உபமானப்பிரமாணம் உபயோகப்படுகிறது. பிரஹ்மத்தைப் போல என்று காட்டக்கூடிய வஸ்து எதுவும் இல்லாததினுல், அந்த பிரமாணமும் இங்கு பிரயோஜனமில்லை. அர்த்தாபத்தி, அனுபலப்தியென்ற மற்ற இரண்டு பிரமாணங்களும் வாஸ்தவத்தில் அனுமானத்திலேயே சேர்ந்து விடலாமானதினுல், அவைகளும் இங்கு பிரயோஜனப்படாது. மீதமுள்ள சப்தமாகிற பிரமாணத்திலும், லௌகிக சப்தம் உலகத்திலுள்ள பிரத்யக்ஷாதிகளையொட்டியே ஏற்படுவதால் அதுவும் பிரயோஜனமில்லை. லௌகிகமல்லாத சப்தப் பிரமாணமாகிற வேதம் ஒன்று தான்

பிரஹ்மத்தை அறிவிக்கக் கூடியது. "नावेदविन्मनुते तं बृहन्तम्" "வேதத்தை அறியாதவன் அந்த பெரிய வஸ்துவை அறியமாட்டான்" என்ற வாக்கியத்தினுல், அதையறிய வேதமே ஸாதனமென்று சொல்லப் பட்டிருக்கிறது. அந்த வேதத்திலும், கர்மகாண்டத்தில், பிரஹ்மத்தைத் தவிர மற்ற விஷயங்களும் சொல்லப்பட்டிருப்பதால், பிரஹ்மத்தையே முக்கியமாகச் சொல்லும் ஞானகாண்டமாகிற உபநிஷத்துக்கள்தான் பிரமாணமாகும். இதையே சாகல்யரிடம், யாஜ்ஞ்யவல்க்யர் "तं तु औपनिषदं पुरुषं पृच्छामि" " உபநிஷத்திஞலேயே பிரதிபாதிக்கப்படும் அந்த புருஷனை பற்றிக் கேட்கிறேன்" என்று சொன்னதில் இருந்து தெளிவாய் தெரிகிறது. ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசார்யார் எழுதியுள்ள பாஷ்யத்தில், இதற்கு முந்தைய (ஜன்மாதி ) அதிகரணத்தில் "சுருதி முதலான வைகளும், அனுபவம் முதலியவைகளும் இவ்விஷயத்தில் உசிதம் போல் பிரமாணம்" என்று சொல்லியிருக்கிருரேயென்ருல், முதலில் சுருதி மூலமாக பிரஹ்மத்தைப்பற்றித் தெரிந்து கொண்டு அந்த அறிவை உறுதிப்படுத்திக் கொள்வதற்காக பிரத்யக்ஷம், அனுமானம், அனுபவம் இவைகளையும் உபயோகித்துக் கொள்ளலாம் என்று மாத்திரம் தாத்பர்யம்.

# ४. समन्वयाधिकरणम्

## 4. *ஸமன்வயாதி₄கரணம்*

(ஸூத்ரம் 4)

**तत्तु समन्वयात्।। ४।।**

தத்து ஸமந்வயாத்: 4:

(அதுதான் ஏகோபித்து கருத்துடன் கூறப்பட்டுள்ளதால்)

இந்த அதிகரணத்திலும் இரண்டு வர்ணகங்கள் உண்டு.

முதல் வர்ணகம் :

वेदान्ताः कर्तृदेवादिपरा ब्रह्मपरा उत।
अनुष्ठानोपयोगित्वात्कर्त्रादिप्रतिपादकाः।। १९ ।।
भिन्नप्रकरणाल्लिङ्गषट्काच्च ब्रह्मबोधकाः।
सति प्रयोजनेऽनर्थहानेऽनुष्ठानतोऽत्र किम्।। २० ।।

வேதா₃ந்தா: கர்த்₃ருதே₃வாதிபரா ப்ரஹ்மபரா உத ।
அநுஷ்டா₂நோபயோகி₃த்வாத்கர்த்ராதி₃ப்ரதிபாத₃கா: ।। 19
பி₄ந்நப்ரகரணால்லிங்கஷட்காச்ச ப்ரஹ்மபோத₄கா: ।
ஸதி ப்ரயோஜநேஅநர்த₂ஹாநேஅநுஷ்டா₂நதோத்ர கிம் ।। 20

(அ..ம்)

வேதாந்தங்கள் (உபநிஷத்துக்கள்) கர்மாக்களை செய்கிறவன். தேவதைகள் முதலியவைகளில் தாத்பர்யமுள்ளவைகளா? அல்லது பிரஹ்மத்திலேயே தாத்பர்யமுள்ளவைகளா? அனுஷ்டானத்திற்கு உபயோகப்படும் தன்மை உள்ளதால் செய்கிறவன் முதலியவைகளையே பிரதிபாதிக்கிறவைகள்.

வேறு பிரகரணமாயிருப்பதாலும், ஆறு வித (தாத்பர்ய) லிங்கங்கள் இருப்பதினுலும், பிரஹ்மத்தையே அறிவிப்பவைகள். அனர்த்தம் விலகுகிறதென்ற பிரயோஜனமிருக்கும்போது, இங்கே அனுஷ்டானத்தினுல் ஆக வேண்டியதென்ன?

ஸந்தேஹம் :

உபநிஷத்துக்களில் ஸகுண உபாஸநம், ஐக்கிய ஞானம் போன்ற பலவித வாக்கியங்கள் காணப்படுவதால் அவை எதை முக்கியமாக பிரதிபாதிக்கின்றதென்று ஸந்தேஹம்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

உபநிஷத்துக்களில் ஜீவனைப்பற்றிச் சொல்லும் வாக்கியங்கள், கர்மா செய்கிறவனை ஸ்துதி செய்கின்றன. பிரஹ்மத்தைப்பற்றிச் சொல்லும் வாக்கியங்கள், அந்தக் கர்மாக்களால் ஆராதிக்கப்படும் தேவதையை பெருமைப்படுத்துகின்றன. உலக ஸ்ருஷ்டி முதலியவற்றைச் சொல்லும் வாக்கியங்கள்,கர்மாவுக்கு வேண்டிய ஸாதனங்களைப்பற்றி சொல்லு கின்றன. இவ்விதம் உபநிஷத் வாக்கியங்களையும் கர்மாவோடு ஸம்பந்தித்து அர்த்தம் செய்துகொண்டால் தான் கர்மாவை அனுஷ்டித்து இவை பயனுள்ளவைகளாக ஆகும். அனுஷ்டான த்திற்குப்பிரயோஜனப்படாமல் வெறும் பிரஹ்மத்தைச் சொல்லுகின்றன என்ருல் அந்த வாக்கியங்களால் எவ்விதப் பிரயோஜனமும் கிடையாது. ஆகையால் செய்கிறவன், தேவதை, ஸாதனம் இவைகளையேதான் உபநிஷத்துக்கள் போதிக்கின்றன.

ஸித்தாந்தம் :

வேதத்தில் கர்மகாண்டம், ஞானகாண்டம் என்று தனித் தனியாகப் பிரித்து கர்மாக்களை போதிக்க கர்மகாண்டமும், பிரஹ்மத்தை போதிக்க உபநிஷத் பாகமும் ஏற்பட்டிருக்கையில், உபநிஷத்துக்களிலுள்ள வாக்கியங்களை வேறு காண்டத்திலுள்ள கர்மாவுடன் ஸம்பந்தப் படுத்துவது கொஞ்சமேனும் பொருத்தமாகாது. மேலும், தாத்பர்யத்தை

நிர்ணயிப்பதற்கு ஆறுவித ஹேதுக்கள் உண்டென்று பெரியோர்கள் தீர்மானித்திருக்கிறுர்கள்.

उपक्रमोपसंहारावभ्यासोऽपूर्वता फलम्।
अर्थवादोपपत्ती च लिङ्गं तात्पर्यनिश्चये।।

தாத்பர்யத்தை தீர்மானிக்கும் விஷயத்தில் (1) துவக்கமும் முடிவும் ஒத்திருத்தல் (2) அடிக்கடி சொல்லுதல் (3) முன்னுல் தெரியாததாயிருத்தல் (4) பிரயோஜனம் (5) புகழுதல் (6) யுக்தி ஆகிய இவை (ஆறும்) லிங்கம் (அடையாளமாகும்).

திருஷ்டாந்தமாக சாந்தோக்ய உபநிஷத்தை எடுத்துக் கொண்டால். ஆருணி மஹர்ஷி தன் புத்திரன் சுவேதகேதுவிற்கு உபதேசம் பண்ணியிருப்பதில் "सदेवसोम्येदमग्र आसीत्" "ஹே ஸோம்ய! இது (இந்த உலகம்) (ஸ்ருஷ்டிக்கு) முன்னுல் ஸத் வஸ்துவாகவே இருந்தது" என்று துவக்கம்.

"ऐतदात्म्यमिदं सर्वम् । तत्सत्यं स आत्मा तत्त्वमसि ।"

"இதுவெல்லாம் அதன் தன்மையேயுடையது, அதுவே ஸத்யம், அதுவே ஆத்மா, அதுவே நீ" என்று முடிவு. இரண்டு வாக்கியங்களும் பிரஹ்ம விஷயமாகவேயிருப்பதால், துவக்கமும் முடிவும் ஒத்துப் போவதென்ற முதல் லிங்கம் இருக்கிறது. (2) "तत्त्वमसि" "அதுவே நீ" என்று ஒன்பது தடவை சொல்லியிருப்பதால், அடிக்கடி சொல்லுதல் என்ற லிங்கம் (3) உலகம் பிரஹ்மத்தைத் தவிர வேறில்லை. ஜீவனும் பிரஹ்மத்தைத் தவிர வேறில்லை என்ற விஷயம் வேறு பிரமாணங்களால் அறிய முடியாததினுல் முன்னுல் தெரியாதிருத்தல் என்ற லிங்கம் (4) பிரஹ்மமாகிற ஒரு பதார்த்தத்தையறிந்து விட்டால், வேருகத் தோன்றினுலும் வாஸ்தவமாயில்லாத ஸகல பதார்த்தங்களையும் அறிந்து விடுதல் என்ற பிரயோஜனமாகிய லிங்கம் (5) உலகத்தை உற்பத்தி செய்வது, இருக்கச் செய்வது, அடங்கச் செய்வது, அதில் தானே நுழைந்து கொண்டு அதை ஆளுவது ஆகிய ஐந்து வித செய்கைகளையும் சொல்லும் வாக்கியங்கள் புகழுதல் என்ற லிங்கம் (6) மண், தங்கம், இரும்பு இவைகளை அறிந்து விட்டால் அவைகளால் செய்யப்பட்டுள்ள எல்லாவற்றையும் அறிந்ததாகும் என்று திருஷ்டாந்தம் சொல்வது யுக்தி என்ற லிங்கம் ஆக இந்த ஆறு லிங்கங்களால் இவ்வாக்கியங்களுக்கு பிரஹ்மத்தில் தான் தாத்பர்யமென்ற நிச்சயமேற்படுகிறது.

அனுஷ்டிக்க வேண்டியதொன்றுமில்லையாஞல், பிரயோஜன மற்றது என்று சொல்வது சரியல்ல. கயிற்றைப் பார்த்து பயந்து நடுங்கி

துக்கப்படுகிறவனிடம் இது பாம்பு அல்ல வெறும் கயிறு என்பது போல உள்ள ஸந்தர்ப்பங்களில் அனுஷ்டிக்க வேண்டியது எதுவுமில்லாமல் வெறும் அறிவினுலேயே மாத்ரம் துக்க நிவிருத்தியும், ஸந்தோஷப் பிராப்தியும் ஏற்படுமானதினுல், இந்த அறிதலே எந்த கர்மாவுடனும் சேர்த்து விட அவசியமில்லே. எல்லா கர்மாக்களும் விலகுவதே உத்தமமான மோக்ஷ நிலேயாகிய பரம புருஷார்த்தம்.

இரண்டாவது வர்ணகம் :

**प्रतिपत्तिं विधित्सन्ति ब्रह्मण्यवसिता उत।**
**शास्त्रत्वात्ते विधातारो मननादेश्च कीर्तनात् ।। २१ ।।**
**नाकर्तृतन्त्रेऽस्ति विधिः शास्त्रत्वं शंसनादपि।**
**मननादिः पुरा बोधाद्ब्रह्मण्यवसितास्ततः ।। २२ ।।**

ப்ரதிபத்திம் விதித்$_4$ஸந்தி ப்ரஹ்மண்யவஸிதா உத
சாஸ்த்ரத்வாத்தே விதா$_4$தாரோ மநநாதே$_3$ச்ச கீர்தநாத் 21
நாகர்த்ருதந்த்ரேஸ்தி விதி$_4$: சாஸ்த்ரத்வம் சம்ஸநாத$_3$பி
மநநாதி$_3$: புரா போதா$_4$த் ப்$_3$ரஹ்மண்யவஸிதாஸ்தத: 22

(அ..ம்)
(வேதாந்த வாக்கியங்கள்) உபாஸனையை விதிக்கின்றனவா, அல்லது பிரஹ்மத்திலேயே முடிவான தாத்பர்யமுள்ளவைகளா? சாஸ்திரமாய் இருப்பதாலும் மனனம் முதலியதைச் சொல்லியிருப்பதாலும், அவை விதிக்கிறவைகளேயாகும்.
செய்கிறவனுக்கு அதீனமில்லாத விஷயத்தில் விதி என்பது கிடையாது. சாஸ்திரமாயிருக்கும் தன்மை எடுத்துச் சொல்வதினுலும் உண்டு. மனனம் முதலியவை அறிவிற்கு முன் உள்ளவை. ஆகையால் பிரஹ்மத்தில்தான் தாத்பர்யமுள்ளவை.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
வேதாந்திகளிலும் கர்ம வாஸனே அழுத்தமாய்ஏற்பட்டிருப்பவர்களுக்கு உபநிஷத்துக்களேயும் ஏதேனும் கர்மாவுடன் சேர்த்துவிட வேண்டுமென்ற எண்ணத்துடன் பாக்கி கர்மாக்களுடன் சேர்க்க முடியாமல் போனுலும், தியானித்தல் என்பதும் மனஸினுல் செய்யப்படும் கர்மா தானே, அந்த கர்மாவை உபநிஷத்துக்கள் விதிக்கின்றன என்று வைத்துக் கொள்ளலாமே என்கிருர்கள். ஒரு மனிதனேப் பார்த்து " உனக்கு புத்திரன் பிறந்திருக்கிருன்" என்று

சொல்லும் வார்த்தை ஏற்கனவேயுள்ள விஷயத்தைச் சொன்ன போதிலும் "நீ ஸ்நானம் செய்து, ஜாதகர்மம், பீஜதானம் முதலியதை செய்" என்று மேலுள்ள கார்யங்கள் செய்ய் வேண்டியதிருப்பது போல, பிரஹ்மம் என்னவென்று குருமுகமாய் தெரிந்து கொண்ட பிறகு அதைப்பற்றி மனனம் செய், தியானம் செய், ஸாக்ஷாத்காரம் செய் என்று பிறகு செய்ய வேண்டிய கார்யங்களிருப்பதாக வேதமே "आत्मा वा अरे द्रष्टव्यः श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः" என்று அறிதல் என்ற கர்மாவை விதிக்கிறது என்று எடுத்துக் கொள்ளலாம். மேலும் சாஸ்திரம் என்பது சாஸனம் (கட்டளை) செய்வது என்றிருப்பதால், அறிய வேண்டும், கேட்க வேண்டும், சிந்திக்க வேண்டும், தியானிக்க வேண்டும் என்று கட்டளையிடுவதாக தாத்பர்யம் சொல்வதே பொருத்தமாகும்.

ஸித்தாந்தம் :

அறிதல் என்பது விதிக்கக் கூடிய கர்மாவல்ல. வேறு யாரேனும் இடும் கட்டளையை கேட்கிறவனுக்கு அதன்படி நடக்கவும், நடக்காமல் இருக்கவும், வேறுவிதமாக நடக்கவும், ஸ்வாதீனமிருந்தால் தான் அது கட்டளையேயாகும். நம் முன் ஒரு வஸ்துவின் ரூபம் இருந்து, நம் கண்களும் ஸரியாயிருந்தால், அதன் அறிவு தானுகவே ஏற்படும். அறிவு ஏற்பட நாம் பிரயத்தினம் எதுவும் செய்ய அவசியமில்லை. அந்த அறிவு ஏற்படுவதைத் தடுக்கவும் முடியாது. அந்த வஸ்துவை வேறு விதமாய் அறியவும் முடியாது. அது எப்படியிருக்கிறதோ அப்படியே அறிய வேண்டும். ஆகையால் அந்த அறிவு விஷயமாய் நமக்கு எவ்வித ஸ்வாதந்திரியமும் கிடையாது. ஆகையால் அறிதல் என்பது கட்டளைக்கு விஷயமாகாது.

சாஸ்திரம் என்பது சாஸனம் (கட்டளை) செய்வதால் என்று மாத்திரம் வைத்துக் கொள்ள அவசியமில்லை. இருக்கிற வஸ்துவை சம்ஸனம் செய்வதால் (எடுத்துச் சொல்வதால்) என்றுலும் சாஸ்திரமாகும். குரு முகமாய் சிரவணம் செய்து பிரஹ்மத்தைப் பற்றித் திடமாகத் தெரிந்து கொண்டு பிறகு மனனம் தியானம் செய்ய வேண்டுமென்பதில்லை. சரியாய் தெரிந்து கொள்வதற்கு முன்னுலேயே ஸந்தேஹம் முதலிய தோஷங்களை நிவிருத்தி செய்து கொள்வதற்காக அவைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. சிரவணத்தினுலேயே ஸந்தேஹம் முதலிய தன்னியில் அறிந்து விட்டால் இவைகளுக்கு அவசியமில்லை. "பத்தாமவன் நீதான்" என்று கேட்டதினுல் அறிவு எப்படி ஏற்படுகிறதோ அப்படியே "அதுவே நீ" "तत्त्वमसि" என்று கேட்பதினுல்

ஆத்ம தத்வ ஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறது. ஆகையால் உபநிஷத்துக்கள் பிரஹ்மத்தை போதிப்பதிலேயே தாத்பர்யமுள்ளவைகள்.

## ५. ईक्षत्यधिकरणम्

### 5. ஈக்ஷத்யதி₄கரணம்

(ஸூத்ரம் 5 - 11)

**ईक्षतेर्नाशब्दम्।। ५।।**

ஈக்ஷதேர்நாசப்தம்: 5:

(பார்வையிருப்பதால், சப்தமற்றது இல்லை)

**गौणश्चेन्नाऽऽत्मशब्दात्।। ६।।**

கௌணச்சேந்நாஆத்மசப்தா₃த்: 6:

(கௌணம் என்றால், இல்லை, ஆத்மா என்ற வார்த்தையிருப்பதால்)

**तन्निष्ठस्य मोक्षोपदेशात्।। ७ ।।**

தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதே₃சாத்: 7 :

(அதில் நிலைத்தவனுக்கு மோக்ஷம் உபதேசிக்கப்பட்டிருப்பதால்)

**हेयत्वावचनाच्च।। ८।।**

ஹேயத்வாவசநாச்ச: 8:

(தள்ளவேண்டியதாக சொல்லாததினாலும்)

**स्वाप्ययात् ।। ९।।**

ஸ்வாப்யயாத் : 9:

(தன்னிடத்தில் ஒடுங்குவதால்)

**गतिसामान्यात्।। १० ।।**

க₃திஸாமாந்யாத்: 10 :

(ஒரேவிதமாகக் கூறியிருப்பதால்)

**श्रुतत्वाच्च।। ११।।**

ச்ருதத்வாச்ச: 11.

(சொல்லப்பட்டுள்ளதாலும்)

**तदैक्षतेतिवाक्येन प्रधानं ब्रह्म वोच्यते।**
**ज्ञानक्रियाशक्तिमत्त्वात्प्रधानं सर्वकारणम्।। २३ ।।**
**ईक्षणाच्चेतनं ब्रह्म १क्रियाज्ञाने तु मायया।**
**आत्मशब्दात्मतादात्म्ये प्रधानस्य विरोधिनी ।। २४ ।।**

தைத₃க்ஷதேதிவாக்யேந ப்ரதா₄நம் ப்ரஹ்ம வோச்யதே ।
ஜ்ஞாநக்ரியாசக்திமத்வாத்ப்ரதா₄நம் ஸர்வகாரணம் ।। 23
ஈக்ஷணாச்சேதநம் ப்ரஹ்ம க்ரியாஜ்ஞாநே து மாயயா ।

ஆத்மசப்தா₃த்மதாதா₃த்ம்யே ப்ரதா₄நஸ்ய விரோதி₄நீ ।। 24

(அ..ம்)

அது ஆலோசித்தது" (तदैक्षत) என்ற வாக்கியத்தினுல் பிரதானம் சொல்லப்படுகிறதா? அல்லது பிரஹ்மமா? ஞான சக்தி, கிரியா சக்தி இரண்டையுமுடையதாயிருப்பதால் எல்லாவற்றிற்கும் காரணமாயிருப்பது பிரதானம்தான்.

"ஆலோசித்தது" என்று சொல்லியிருப்பதால் சேதனமான பிரஹ்மந்தான் (ஸர்வகாரண வஸ்து) (அதனிடத்திலும்) மாயையினுல் கிரியையும், ஞானமும் ஸம்பவிக்கும். மேலும் ஆத்மா என்ற சப்தமும், ஆத்மாவுடன் தாதாத்ம்யம் (ஒரே தன்மையாயிருத்தல்) என்பதும், பிரதானத்திற்கு விரோதமாயுள்ளவை.

விஷயம் :

சாந்தோக்யம் 6வது அத்யாயத்தில் "सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम्" "ஹே ஸோம்ய! இது முதலில் ஸத் வஸ்துவாகவே இருந்தது, ஒன்ருகவே இரண்டாவது அற்றதாக" என்று ஆரம்பித்து "तदैक्षत बहुस्यां प्रजायेय। तत्तेजोऽसृजत।" "அது நான் பலவாக ஆவேன். நன்கு உண்டாவேன் என்று ஆலோசித்தது; அது தேஜஸை ஸ்ருஷ்டித்தது" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஸந்தேஹம் :

இதில் ஜகத்காரணமாய் சொல்லப்பட்டிருக்கும் வஸ்து அசேதனமான பிரதானமா, சேதனமான பிரஹ்மமா?

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிரதானத்தில் ஸத்வ, ரஜஸ், தமஸ், என்ற மூன்று குணங்களிருப்பதால், மாறுதலடையும் போது ஞானசக்தி, கிரியாசக்தி இரண்டும் ஏற்படக்கூடியவை. இந்த இரண்டு சக்திகளுமில்லாமல் ஸ்ருஷ்டிக்க முடியாது. பிரஹ்மமோ குணமற்றதாயும் மாறுதலற்றதாயுமிருப்பதால் அதனிடத்தில் இந்த சக்திகள் இருக்கக் கூடியதில்லை. ஆகையால் ஜகத்காரண வஸ்து பிரதானந்தான் என்று ஸாங்கியர்கள் எண்ணுகிருர்கள்.

ஸித்தாந்தம் :

"ஆலோசித்தது" என்று சொல்லப்பட்டிருப்பதால், சேதனமாயுள்ள பிரஹ்மந்தான் ஜகத்காரணமாய்ச் சொன்ன ஸத் வஸ்துவாயிருக்க

முடியும். அசேதனமான பிரதானத்திற்கு ஆலோசித்தல் என்பது பொருந்தாது. மாயையின் மூலமாய் பிரஹ்மத்தினிடத்திலும் ஞானசக்தி, கிரியாசக்தி இரண்டும் ஏற்படக் கூடியதேயாம். மேலும் "अनेन जीवेन आत्मना अनुप्रविश्य नामरूपे व्याकरवाणि" "இந்த ஜீவாத்மஸ்வரூபமாக உள் நுழைந்து நாம ரூபங்களை நன்கு ஏற்படுத்துவேன்" என்று தன்னைச் சொல்லக்கூடிய ஆத்மாவென்ற சப்தத்தினால் சேதனனுயுள்ள ஜீவனையே குறிப்பிட்டிருக்கிறார். பிற்பாடும் சேதனனுயுள்ள சுவேத கேதுவைப் பார்த்து குரு" तत् त्वं असि"(அதுவே நீ) என்று அவனுக்கு ஜகத்காரணவஸ்துவுடன் ஒன்றாய் இருக்கும் தன்மையை உபதேசிக்கிறார். பிரதானம் ஜகத்காரணமென்றால் இந்த இரண்டு அம்சங்களும் பொருந்தாது. ஆகையால் ஸத் என்று சொல்லப்படுவது சேதனமான பிரஹ்மந்தான்.

## ६. आनन्दमयाधिकरणम्

### 6. ஆனந்த₃மயாதி₄கரணம்

(ஸூத்ரம் 12 - 19)

**आनन्दमयोऽभ्यासात्।। १२ ।।**

ஆனந்த₃மயோअப்₄யாஸாத் 12

(ஆனந்தமயன் (ப்ரஹ்மமே) அப்பியாஸத்தினால்)

(விருத்தி கார மதப்படி)

**विकारशब्दान्नेति चेन्न प्राचुर्यात्।। १३।।**

விகாரசப்தா₃ந்நேதி சேந்ந ப்ராசுர்யாத் 13

(விகாரத்தைச் சொல்லும் சப்தத்தினால் இல்லை என்றால், இல்லை, பிராசுர்யத்தினால்)

**तद्धेतुव्यपदेशाच्च ।। १४ ।।**

தத்₃தே₄துவ்யபதே₃சாச்ச 14

(அதற்கும் காரணமாய் குறிப்பிட்டிருப்பதாலும்)

**मान्त्रवर्णिकमेव च गीयते।। १५।।**

மாந்த்ரவர்ணிகமேவ ச கீ₃யதே 15

(மந்திர வர்ணத்தில் கண்டதுதான் சொல்லப்படுகிறது)

**नेतरोऽनुपपत्तेः ।। १६ ।।**

நேதரோஅநுபபத்தே: 16

(மற்றவன் இல்லை, பொருத்தமில்லாததினால்)

**भेदव्यपदेशाच्च ।। १७ ।।**

பே₃த₃வ்யபதே₃சாச்ச 17

(வேற்றுமை குறிப்பிட்டிருப்பதாலும்)

**कामाच्च नानुमानापेक्षा।। १८।।**

காமாச்ச நாநுமாநாபேக்ஷா 18
(காமம் சொல்லியிருப்பதினாலும், அனுமானத்தினால் கூறும் பிரதானத்தின் அபேக்ஷையில்லை)

तस्मिन्नस्य च तद्योगं शास्ति।। १९ ।।

தஸ்மிந்நஸ்ய ச தத்யோக₃ம் சாஸ்தி 19
(அதில் இவனுக்கு அதனுடன் சேருவதையும் சொல்கிறது)

இதில் வேதாந்திகளில் சிலர் சொல்லும் அபிப்பிராயத்தை முதலில் எடுத்து சொல்லிவிட்டு, பின்னால் தன் மதத்தைச் சொல்கிறார். முதலில்

संसारी ब्रह्म वाऽऽनन्दमयः संसार्ययं भवेत्।
विकारार्थमयट्शब्दात्प्रियाद्यवयवोक्तितः।। २५ ।।
अभ्यासोपक्रमादिभ्यो ब्रह्माऽऽनन्दमयो भवेत्।
प्राचुर्यार्थो मयट्शब्दः प्रियाद्याः स्युरुपाधिगाः ।। २६ ।।

ஸம்ஸாரீ ப்₃ரஹ்ம வாஆனந்த₃மய: ஸம்ஸார்யயம் ப₄வேத் ।
விகாரார்த₂மயட்சப்₃தா₃த்ப்ரியாத்₃யவயவோக்தித: ।। 25
அப்₄யாஸோபக்ரமாதி₃ப்₄யோ ப்₃ரஹ்மஆனந்த₃மயோ ப₄வேத்।
ப்ராசுர்யார்தோ₂ மயட்சப்₃த₃: ப்ரியாத்₃யா: ஸ்யுருபாதி₄கா₃: ।।26

(அ..ம்)

ஆனந்தமயன் என்பது ஸம்ஸாரியா (ஜீவனா)? அல்லது பிரஹ்மமா? மாறுதலைச் சொல்லும் "மயட்" என்ற சப்தமிருப்பதினாலும், பிரியம் முதலான அவயவங்களை சொல்லியிருப்பதினாலும் இது ஸம்ஸாரிதான் ஆகும்.

அடிக்கடி சொல்லுதல், துவக்கம் முதலானவைகளிலிருந்து (கவனிக்கும் போது) ஆனந்தமயன் பிரஹ்மமாகத்தான் இருக்க வேண்டும். "மயட்" என்ற சப்தம் அதிகம் என்ற அர்த்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. பிரியம் முதலியவை உபாதிகளைச் சேர்ந்தவையாகும்.

ஸந்தேஹம் :

தைத்திரீய உபநிஷத்தில் அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆனந்தமயம் என்று ஐந்து பதார்த்தங்கள் வரிசையாக ஒன்றுக்குள்ளொன்றாக இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளில் எல்லாவற்றிற்கும் உள்ளேயிருப்பதாக சொல்லப்படும் ஆனந்தமயன் என்பது, ஜனனமரண ஸுகதுக்காதிகளையனுபவிக்கும் ஸம்ஸாரியான ஜீவனா? அல்லது பரமாத்மாவா?

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஆனந்தமயன் என்ற சப்தத்திற்கு ஆனந்தத்தின் மாறுபாடு என்று அர்த்தம் உள்ளதால் அந்த அர்த்தம் ஜீவனிடத்தில் தான் பொருந்தும். எவ்வித மாறுதலுமற்ற பரமாத்மாவில் பொருந்தாது. தவிரவும் இந்த ஆனந்தமயனை வர்ணிக்கும் போது "तस्य प्रियमेव शिरः। मोदो दक्षिणः पक्षः। प्रमोद उत्तरः पक्षः। आनन्द आत्मा, ब्रह्म पुच्छं प्रतिष्ठा" "இதற்கு பிரியம் தான் சிரஸ், மோதம் வலது பக்கம், பிரமோதம் இடது பக்கம், ஆனந்தம் நடுசரீரம், பிரஹ்மம் புச்சம் பிரதிஷ்டை (ஆதாரம்)" என்று ஐந்து அவயவங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. விரும்பின விஷயத்தைப் பார்ப்பதினால் ஏற்படும் ஸுகம்" "பிரியம்" எனப்படும் அதை அடைவதினால் ஏற்படும் ஸுகம் "மோதம்". அதை அனுபவிப்பதினால் ஏற்படும் ஸுகம் "பிரமோதம்". நல்ல தூக்கம் முதலானதில் பொதுவாக அக்ஞானத்துடன் கலந்து தோன்றும் ஸுகம் "ஆனந்தம்". எதையும் அபேக்ஷிக்காமல் சுத்தமாயுள்ள ஸுகம் "பிரஹ்மம்". இவைகளை ஆனந்தமயத்திற்கு அங்கங்களாகக் கல்பிப்பது அந்த ஆனந்தமயனை நன்றாக அறிந்து கொள்வதற்காக எவ்வித அம்சமுமற்ற பரமாத்மாவினிடத்தில் இவ்வித அவயவங்களை கல்பிக்க முடியாது. ஆகையினாலும் இந்த ஆனந்த மயன் ஸம்ஸாரிதான்.

ஸித்தாந்தம் :

ஆனந்தமயன் பரமாத்மாதான் பின்னால் "आनन्दस्य मीमांसा" ஆனந்தத்தைப் பற்றின விசாரம், "एतं आनन्दमयं आत्मानं उपसंक्रामति" "இந்த ஆனந்தமயனை ஆத்மாவை அடைகிறான்" என்றெல்லாம் ஆனந்தமயனைப் பற்றி அடிக்கடி சொல்லியிருக்கிறது. உபநிஷத்தும் "सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म।" "ஸத்யமாய், ஞானமாய், அனந்தமாய் இருக்கிறது பிரஹ்மம்" என்று ஆரம்பித்து "इदं सर्वं असृजत।" "இதையெல்லாம் ஸ்ருஷ்டித்தது" என்று அதன் பெருமையையெல்லாம் சொல்லியிருப்பதால், தாத்பர்யத்தைத் தெரிவிக்கும் ஆறு லிங்கங்களும் பிரஹ்மத்தினிடத்தில் தான் பொருந்தும். "மயட்" என்ற சப்தம் மாறுபாடு என்ற அர்த்தத்தை மாத்திரம் சொல்கிறதென்பதில்லை. அதிகம் என்ற அர்த்தமுமுண்டு. ஓர் அறை "பாத்திரமயமாக இருந்தது" என்றால் அங்கே பாத்திரங்கள் அதிகமாக இருந்தன என்று தான் அர்த்தம். பிரஹ்மத்தினிடத்தில் ஆனந்தம் அதிகமாயிருப்பதால், ஆனந்த மயன் என்று சொல்லலாம். பிரியம் முதலிய அவயவங்கள் பிரஹ்மத்தில் இல்லையானாலும், விஷயத்தை பார்ப்பது அடைவது

முதலிய நிமித்தங்களால், இருப்பதாகத் தோன்றலாம். ஆகையால் பரமாத்மாதான் ஆனந்தமயன் என்ற சப்தத்தினுல் சொல்லப் பட்டிருக்கிற வஸ்துவாம். இவ்விதம் வேறு சிலர் மதத்தை சொல்லிவிட்டு, இனி பரமஸித்தாந்தமான ஸ்ரீசங்கரபகவத் பாதருடைய மதப்படி, பூர்வபக்ஷ ஸித்தாங்களேச் சொல்கிருர்:

अन्याङ्गं स्वप्रधानं वा ब्रह्म पुच्छमिति श्रुतम् ।
स्यादानन्दमयस्याङ्गं पुच्छेऽङ्गत्वप्रसिद्धितः ।। २७ ।।
लाङ्गूलासंभवादत्र पुच्छेनाऽऽधारलक्षणा ।
आनन्दमयजीवोऽस्मिन्नाश्रितोऽतः प्रधानता ।। २८ ।।

அந்யாங்க₃ம் ஸ்வப்ரதா₄னம் வா ப்₃ரஹ்ம புச்ச₂மிதி ச்ருதம் ।
ஸ்யாதா₃னந்த₃மயஸ்யாங்க₃ம் புச்சே₂அங்க₃த்வப்ரஸித்₃தி₄த: ।। 27
லாங்கூ₃லாஸம்ப₄வாத₃த்ர புச்சே₂நாஆதா₄ரலக்ஷணா ।
ஆனந்த₃மயஜீவோஅஸ்மிந்நாச்ரிதோஅத: ப்ரதா₄னதா ।। 28

(அ..ம்)

"புச்சம்" என்று சொல்லப்பட்டிருக்கிற பிரஹ்மம் வேறு எதற்காவது அங்கமா? அல்லது தானே பிரதானமாயுள்ளதா? புச்சம் என்பதில் அங்கமாயிருக்கும் தன்மை பிரஸித்தமாயிருப்பதால், ஆனந்தமயத்தின் அங்கமாய்த்தான் இருக்க வேண்டும்.

இங்கே "வால்" என்ற அர்த்தம் ஸம்பவிக்காததினுல் "புச்சம்" என்ற சப்தத்தினுல் ஆதாரம் என்பதையே குறிப்பிட்டதாகும்.ஆனந்தமயனுன ஜீவன் இதனிடத்தில் ஆசிரயித்திருக்கிறது. ஆகையால் பிரதானமாக இருக்கும் தன்மை.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

" ब्रह्म पुच्छं प्रतिष्ठा। " புச்சம் என்ற சப்தம் வால் என்ற அர்த்தத்தில் சரீரத்தில் ஒரு அங்கம் என்றே பிரஸித்தியிருப்பதால் இங்கே புச்சம் என்று சொல்லப்படும் பிரஹ்மம் ஆனந்தமயனுக்கு அங்கந்தான் என்று ஏற்படுகிறது.

ஸித்தாந்தம் :

ஆனந்தமயனுக்கு வால் கிடையாதபடியால் புச்சம் என்பதற்கு வால் தான் என்று அர்த்தம் எடுத்துக் கொள்வது இங்கே பொருந்தாது. பூமியில் உட்காருவதானுல் எல்லா மிருகங்களும் வாலுள்ள பிரதேசத்தையே பூமியில் வைத்துக் கொண்டு உட்காருவதால், புச்சம் என்பதால் சரீரத்திற்கு ஆதாரமாயுள்ளது என்று மாத்திரம்

குறிப்பிடுவதாக வைத்துக் கொள்ள வேண்டும். ஆனந்தமயனு யிருக்கும் ஜீவனுக்கு இருப்பைக்கொடுத்துத் தாங்கி வருவதால், பிரஹ்மம் ஜீவனுக்கு ஆதாரம் என்ற முறையில் புச்சம் என்று சொல்லப்படுகிறது. தவிரவும் "ब्रह्मविदाप्नोति परम् ।" "பிரஹ்மத்தை அறிகிறவன் மேலானதை அடைகிறுன்" என்ற ஆரம்பமும்

"असन्नेव स भवति, असद्ब्रह्मेति वेद चेत्।
अस्ति ब्रह्मेति चेद्वेद सन्तमेनं ततो विदुः ।।"

"பிரஹ்மம் இல்லையென்று அறிந்தானேயானுல், அவனே இல்லையென்று ஆகிறுன். பிரஹ்மம் இருக்கிறது என்று அறிந்தானேயானுல், இவனே இருக்கிறவன் என்று அதனுல் அறிகிறுர்கள்", என்று அடிக்கடி பிரஹ்மத்தைப் பற்றி சொல்லியிருப்பதால் பிரஹ்மம் தான் உபநிஷத்தின் பிரதானமான தாத்பர்யம் என்று நன்ருய் தெரிகிறது.

## ७. अन्तरधिकरणम

### 7. *அந்தரதி$_4$கரணம்*

(ஸூத்ரம் 20 - 21)

**अन्तस्तद्धर्मोपदेशात् ।। २० ।।**

அந்தஸ்தத்$_3$த$_4$ர்மோபதே$_3$சாத் 20
(உள்ளேயிருப்பது (பிரஹ்மமே), அதன் தர்மத்தின் உபதேசமிருப்பதால்)

**भेदव्यपदेशाच्चान्यः ।। २१ ।।**

பே$_4$த$_3$வ்யபதே$_3$சாச்சாந்ய: 21
(வேற்றுமை குறிப்பிடப்பட்டிருப்பதாலும், வேறு)

சாந்தோக்ய முதல் அத்யாயத்தில் "**अथ य एषोऽन्तरादित्ये हिरण्मयः पुरुषो दृश्यते।**" "இனி ஆதித்யனிடத்தில் உள்ளே தங்கம் போல் பிரகாசிக்கிறவராய், எந்த இந்த புருஷன் காணப்படுகிருரோ" என்று உபாஸிக்க வேண்டிய வஸ்து சொல்லப்படுகிறது. அது என்னவென்று இந்த அதிகரணத்தில் விசாரிக்கப்படுகிறது.

**हिरण्मयो देवतात्मा किंवाऽसौ परमेश्वरः ।
मर्यादाधाररूपोक्तेर्देवतात्मैव नेश्वरः ।। २९ ।।
सार्वात्म्यात्सर्वदुरितराहित्याच्चेश्वरो मतः ।
मर्यादाद्या उपास्त्यर्थमीशेऽपि स्युरुपाधिगाः ।। ३० ।।**

ஹிரண்மயோ தே$_3$வதாத்மா கிம்வாஅஸௌ பரமேச்வர: ।
மர்யாதா$_3$தா$_4$ரரூபோக்தே$_3$ர்தேவதாத்மைவ நேச்வர: ।। 29

ஸார்வாத்ம்யாத்ஸர்வது$_3$ரிதராஹித்யாச்சேச்வரோ மத: ।
மர்யாதா$_3$த்$_3$யா உபாஸ்த்$_2$யர்தமீசேஅபி ஸ்யுருபாதி$_4$கா: ।। 3

(அ..ம்)

ஹிரண்மயர் (தங்கத்தைப் போல் பிரகாசிப்பவர்) என்பது தேவதா ஸ்வரூபமாயுள்ளவரா? அல்லது இவருக்கும் மேலான ஈசுவரரா? எல்லை, ஆதாரம், ரூபம் இவை சொல்லப்பட்டிருப்பதால் தேவதாத்மாதான், ஈசுவரர் அல்ல.

எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயிருக்கும் தன்மையுள்ளதினுலும், எந்த வித தோஷமுமற்ற தன்மையுள்ளதாலும் ஈசுவரர்தான் என்று தீர்மானிக்கப்படுகிறது. எல்லை முதலியவை ஈசுவரரிடத்திலும், உபாஸனை செய்ய வேண்டியதற்காக உபாதிகளிலுள்ளவையாக ஏற்படலாம்.

ஸந்தேஹம் :

"अन्तरादित्ये इत्याधारोक्तिः।" ஏதோவொரு ஜீவன் விசேஷமான கர்மாவையும், உபாஸனையையும் செய்து அதன் பலனுக தேவனுக ஆகி ஸூர்ய மண்டலத்திலிருந்து கொண்டு, உலக விஷயமான அதிகாரத்தை நடத்திக் கொண்டிருக்கலாம். அந்த ஜீவன் உபாஸிக்கப்படவேண்டியதாக இந்தவிடத்தில் சொல்லப்பட்டிருக் கிறதா? அல்லது எங்கும் வியாபித்திருக்கும் ஈசுவரர் ஸூர்ய மண்டலத்திலும் இருப்பதால், அவர் இங்கே சொல்லப்படுகிருரா?

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

இவர் விஷயமாய் " ये चामुष्मात्पराञ्चो लोकाः, तेषां चेष्टे देवकामानां च ।" அதற்கு அப்பாலும் எந்த லோகங்கள் இருக்கின்றனவோ, அவைகளையும் தேவபோகங்களையும் ஆளுகிருர் என்று அவருடைய ஆளுகைக்கு எல்லை சொல்லியிருக்கிறது. "अन्तरादित्ये।" "ஸூர்யனுக்கு உள்ளே" என்று அவருக்கு ஆதாரம் (இருப்பிடம்) சொல்லியிருக்கிறது. மேலும் "हिरण्मयः....हिरण्यश्मश्रुः हिरण्यकेशः आप्रणारवात् सर्व एव सुवर्णः" "தங்கமயமாயுள்ளவர், தங்க மீசை தாடியுள்ளவர், தங்க கேசமுடையவர், நகத்திலிருந்து எல்லாமே தங்கம்" என்று ரூபமும் சொல்லப் பட்டிருக்கிறது. இந்த லக்ஷணங்கள், எல்லாவற்றையும் ஆளுகிறவராய், எல்லாவற்றிற்கும் ஆதாரமாய், எவ்வித ரூபமும் அற்றவராயிருக்கும் ஈசுவரரிடத்தில் பொருந்தாது. ஆகையால், இங்கே சொல்லியிருப்பது ஆதித்ய மண்டலாபிமானியான தேவதைதான்.

ஸித்தாந்தம் :

அப்படியல்ல, இங்கே சொல்லியிருப்பது ஈசுவரரே தான். இந்த ஹிரண்மய புருஷனைப்பற்றி சொல்லும் போது "सैवर्क् तत्साम, तदुक्थम्, तद्यजु:, तद्ब्रह्म।" "அதுவே ரிக், அது ஸாமம், அது உக்தம், அது யஜுஸ், அது பிரஹ்மம்" என்று ரிக் முதலான எல்லா உலக ஸ்வரூபமாய் இருப்பதாகச் சொல்லப் படுகிறது. இது இரண்டாவதற்ற பரமேசுவரரிடத்தில் தான் பொருந்துமேயொழிய, இரண்டாவதை உடைய எந்த தேவதைக்கும் பொருந்தாது. தவிரவும் "स एष सर्वेभ्य: पापेभ्य: उदित:।" "அந்த இவர் எல்லா பாபங்களிலிருந்தும் மேல் போனவர்" என்று சொல்லப்பட்டிருக்கும் ஸகலவிதபாபமும் அற்றிருத்தல் என்ற லக்ஷணம் பிரஹ்மம் ஒன்றுக்கே உரியது. தேவர்களுக்கு அடிக்கடி அஸுரர்கள் முதலானவர்களால் துக்கம் ஏற்படுவதினுலேயே, அவர்களிடத்தில் முன் ஸம்பாதிக்கப்பட்டுள்ள பாபங்கள் இருக்கின்றனவென்று தெரிகிறது. எல்லை, ஆதாரம், ரூபம் இவை உபாதிகளைச் சேர்ந்தவை உபாதிகளுடன் சேர்ந்தே பரமேசுவரர் உபாஸிக்கப் படவேண்டியிருப்பதால், இவைகளும் அவரிடமிருப்பதாக பாவிக்கப்படுவது நியாயமேயாகும். ஆகையால் ஹிரண்மயபுருஷன் ஈசுவரர் தான்.

## ८. आकाशाधिकरणम्

## 8. *ஆகாசாதி₄கரணம்*

(ஸூத்ரம் 22)

**आकाशस्तल्लिङ्गात्।। २२ ।।**

ஆகாசஸ்தல்லிங்கா₃த் 22

(ஆகாசம்(பிரஹ்மமே), அவருடைய அடையாளமாயிருப்பதால்)

சாந்தோக்யம் முதல் அத்யாயத்தில், சிலகர் என்ற மஹரிஷி பிரவாஹகர் என்ற ராஜனை, எல்லா உலகங்களுக்கும் ஆதாரமாயுள்ள வஸ்துவைப் பற்றிக் கேட்ட போது "आकाश इति ह उवाच, सर्वाणि ह वा इमानि भूतानि आकाशात् एव उत्पद्यन्ते, आकाशं प्रति अस्तं यन्ति, आकाशो ह एव एभ्यो ज्यायान् , आकाश: परायणम्" "ஆகாசம் என்று சொன்னர், இந்த எல்லா பூதங்களும் ஆகாசத்திலிருந்தே உண்டாகின்றன, ஆகாசத்திலேயே மறைவை அடைகின்றன, ஆகாசம் தான் இவைகளைவிடப் பெரிது, ஆகாசம் மேலான அடையுமிடம்" என்று இருக்கிறது. இங்கே "ஆகாசம்" என்பது என்னவென்பது விஷயம்.

आकाश इति होवाचेत्यत्र खं ब्रह्म वाऽत्र खम्।
शब्दस्य तत्र रूढत्वाद्वाय्वादेः सर्जनादपि।। ३१ ।।
साकाशजगदुत्पत्तिहेतुत्वाच्छ्रौतरूढितः।
एवकारादिना चात्र ब्रह्मैवाकाशशब्दितम् ।। ३२ ।।

ஆகாச இதி ஹோவாசேத்யத்ர கம் ப்₃ரஹ்ம வாஅத்ர க₂ம் ।
சப்₃த₃ஸ்ய தத்ர ரூட₄த்வாத்₃வாய்வாதே₃: ஸர்ஜநாத₃பி ।। 31
ஸாகாசஜக₃து₃த்பத்திஹேதுத்வாச்ச்₂ரௌதரூடி₄த : ।
ஏவகாராதி₃நா சாத்ர ப்₃ரஹ்மைவாகாசசப்₃தி₃தம் ।। 32

(அ..ம்)
"ஆகாசம் என்று சொன்னர்" என்றவிடத்தில் (வெறும் பூத) ஆகாசமா? அல்லது பிரஹ்மமா? (ஆகாசம் என்ற) சப்தம் (வெறும் பூத) ஆகாசத்திலேயே (உலகத்தில்) உறுதிப்பட்டிருப்பதினுலும், வாயு முதலானதை ஸ்ருஷ்டி செய்வதினுலும், (வெறும் பூத) ஆகாசம் தான். ஆகாசமுள்பட உலகத்திற்குக் காரணமாயிருப்பதினுலும், வேதத்தில் (பிரஹ்மம் என்ற அர்த்தத்தில்) உறுதிப்பட்டிருப்பதினுலும், (ஆகாசத்திலிருந்தே, ஆகாசமே என்று) "ஏவ" என்றது முதலியதிருப்பதினுலும், இங்கே ஆகாசம் என்ற சப்தத்தினுல் சொல்லப்படுவது பிரஹ்மமே தான்.

ஸந்தேஹம் :
ஆகாசம் என்ற சப்தம் பூத ஆகாசத்தைச் சொல்கிறதா? அல்லது பிரஹ்மத்தையா?
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
உலகத்தில் அந்த சப்தம் பூத ஆகாசத்திலேயே உபயோகிக்கப்பட்டு வருகிறது. ஆகாசத்திலிருந்து வாயு, வாயுவிலிருந்து அக்னி என்ற முறையாக எல்லா பூதங்களும் உண்டானதாகச்சொல்லப்படுவதாலும், லயமாகும்போது அவைகள் ஆகாசத்தில் லயமாவதினுலும், உபநிஷத்தில் கூறிய லக்ஷணம் பூத ஆகாசத்தில் பொருந்தும். ஆகையால் இங்கே சொல்லியிருப்பது பூதாகாசம் தான்.

ஸித்தாந்தம் :
உபநிஷத்தில் "எல்லா பூதங்களும்" என்று வியக்தமாய் சொல்லி இருப்பதால், ஆகாசமுள்பட எல்லா பூதங்களேயும் தான் எடுத்துக் கொள்ள வேண்டும். பூத ஆகாசம் பூத ஆகாசத்திற்கே, அதாவது

தனக்குத்தானே காரணமாயிராது. ஆத்மாவினிடமிருந்து பூத ஆகாசம் உற்பத்தியானதாகவும், அதன் பிறகு அந்த ஆகாசத்திலிருந்து வாயு உண்டானதாகவுமே சொல்லப்படுகிறது. ஆகையால் "எல்லா" பூதங்களுக்கும் காரணமாயிருப்பது பிரஹ்மந்தான். உலகத்தில் ஆகாச சப்தம் பூத ஆகாசத்தில் உபயோகித்த போதிலும், வேதத்தில் "ஆகாசந்தான் நாமரூபங்களை ஏற்படுத்துவது" என்பது முதலியவிடங்களில், பிரஹ்மம் என்ற அர்த்தத்திலேயே உபயோகிக்கும் வழக்கமிருந்து வருகிறது. மேலும், "ஆகாசத்திலிருந்தே" என்று சொல்வதால், வேறு காரணம் எதுவும் மறுக்கப்படுகிறது. இந்த லக்ஷணம் பூத ஆகாசத்தில் பொருந்தாது. குடம் முதலியவைகளைச் செய்வதற்கு மண் முதலியனவும் காரணமாவதால், பிரஹ்மமோ ஸத்வஸ்துவாயிருப்பதால் "இருக்கிறது" என்று சொல்லக்கூடிய எல்லா பதார்த்தங்களும் அதைத் தவிர வேறில்லாததினால், பிரஹ்மமே எல்லாவற்றிற்கும் காரணமாகும். "பெரிது" மேலான அடையுமிடம்" என்பதும், பிரஹ்மத்திலேயே உசிதமாகும். ஆகையால் இங்கே "ஆகாசம்" என்பது பிரஹ்மந்தான்.

## ९. प्राणाधिकरणम्

### 9. *ப்ராணாதி₄கரணம்*

(ஸூத்ரம் 23)

**अत एव प्राणः ।। २३ ।।**

9. அத ஏவ ப்ராண: 23

( இதினாலேயே ப்ராணன்(பிரஹ்மமே) )

சாந்தோக்யம் முதல் அத்யாயத்தில், உஷஸ்தியிடம், பிரஸ்தோதாவானவர் ஸாமத்தின் அம்சமான பிரஸ்தாவ பக்தி என்பதில் தேவதை யார் என்று கேட்டதற்கு அவர் "**प्राण इति होवाच। सर्वाणि ह वा इमानि भूतानि प्राणमेवाभिसंविशन्ति।**" "பிராணன் என்று சொன்னார். இந்த எல்லா பூதங்களும் பிராணனிலேயே தான் ஒடுங்குகின்றன" என்றுள்ள இடத்தில், பிராணன் என்பது என்ன என்று விசாரணை.

**मुखस्थो वायुरीशो वा प्राणः प्रस्तावदेवता।**
**वायुर्भवेत्तत्र सुप्तौ भूतसारेन्द्रियक्षयात्।। ३३ ।।**
**संकोचोऽक्षपरत्वे स्यात्सर्वभूतलयश्रुतेः।**
**आकाशशब्दवत्प्राणशब्दस्तेनेशवाचकः।। ३४ ।।**

முக₂ஸ்தோ₂ வாயுரீசோ வா ப்ராண: ப்ரஸ்தாவதே₂வதா ।

வாயுர்ப₄வேத்தத்ர ஸுப்தௌ பூ₄தஸாரேந்த்₃ரியக்ஷயாத் ।।33
ஸங்கோசோஅக்ஷபரத்வே ஸ்யாத்ஸர்வபூ₄தலயச்ருதே: ।
ஆகாசசப்₃த₃வத்ப்ராணசப்₃த₄ஸ்தேநேசவாசக: ।। 34

(அ..ம்)

பிரஸ்தாவ தேவதையான பிராணன் முகத்திலிருக்கும் வாயுவா? அல்லது ஈசுவரரா? தூங்கும் போது பூதங்களின் ஸாரமாகிய இந்திரியங்கள் அதில் லயமடைவதால், வாயுவாகத்தானிருக்கும்.
இந்திரியம் மாத்திரத்தில் தாத்பர்யமென்று வைத்துக் கொண்டால், எல்லா பூதங்களும் லயமடைகின்றனவென்ற சுருதிக்கு ஸங்கோசம் செய்வதாகும். (அர்த்தத்தை சுருக்க வேண்டிவரும்) ஆகையால் ஆகாசமென்ற சப்தம் போலவே பிராணன் என்ற சப்தமும் ஈசுவரரையே சொல்வதாகும்.

ஸந்தேஹம் :

"सैषा देवता प्रस्तावमन्वायत्ता।" பிரஸ்தாவமென்ற ஸாம பாகத்திற்கு தேவதையாகச் சொல்லப்படும் பிராணன் என்பது முகத்தில் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கும் பிராணவாயுவா? அல்லது பரமேசுவரரா?

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிராணன் என்ற சப்தம் முகத்தில் மேலும் கீழும் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கும் வாயுவிலேயே பிரஸித்தமாயிருக்கிறது. நன்கு தூங்கும் காலத்தில் எல்லா பூதங்களுடைய ஸாரமான இந்திரியங்கள்யாவும், பிராணவாயுவிலேயே ஒடுங்குவதினுல் உபநிஷத்தில் கண்ட லக்ஷணமும் பொருந்தக்கூடியதே ஆகையால் பிராணன் வாயுதான்.

ஸித்தாந்தம் :

"எல்லா பூதங்களும்" என்று உபநிஷத்தில் சொல்லியிருக்கையில் பிராணனை விலக்கி இந்திரியங்களை மாத்திரம் குறிப்பதாக எடுத்துக் கொள்வது உசிதமாகாது. பிரஹ்மத்தை "பிராணனுக்கும் பிராணன்" என்பது முதலானவிடங்களில் "பிராணன்" என்ற சப்தத்திலுலேயே வேதத்தில் வியவஹரிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் இங்கு சொன்ன பிராணன் பிரஹ்மம் தான்.

# १०. ज्येतिश्चरणाधिकरणम्

## 10. *ஜ்யோதிச்சரணாதி4கரணம்*

(ஸூத்ரம் 24 - 27)

**ज्योतिश्चरणाभिधानात्।। २४।।**

ஜ்யோதிச்சரணாபி4தா4நாத் 24

(ஜ்யோதிஸ்(பிரஹ்மமே), சரணம் சொல்லியிருப்பதால்)

**छन्दोभिधानान्नेति चेन्न तथा चेतोर्पणनिगदात्तथाहि दर्शनम्।। २५ ।।**

ச2ந்தோ3பி4தா4நாந்நேதி சேந்ந ததா2
சேதோர்பணநிக3தா3த்ததா2ஹி த3ர்சநம் 25

(சந்தஸ் சொல்லப்பட்டிருப்பதால், இல்லை என்றால், இல்லை, அப்படியே மனஸை வைக்கச்சொல்லியிருப்பதால், அப்படியே தான் காண்கிறது)

**भूतादिपादव्यदेशोपपत्तेश्चैवम्।। २६ ।।**

பூ4தாதி3பாத3வ்யதே3சோபபத்தேச்சைவம் 26

(பூதங்கள் முதலியதை பாதமாக குறிப்பிட்டிருப்பது பொருந்துமானதினாலும் இவ்விதம்)

**उपदेशभेदान्नेति चेन्नोभयस्मिन्नप्यविरोधात्।। २७ ।।**

உபதே3சபே4தா3ந்நேதி சேந்நோப4யஸ்மிந்நப்யவிரோதா4த் 27

(உபதேசத்தில் பேதமிருப்பதால் இல்லையென்றால், அப்படியல்ல இரண்டிலும்கூட விரோதமில்லாததினால்)

சாந்தோக்யம் மூன்றுவது அத்யாயத்தில், காயத்ரீ வித்யையில் "अथ यदतः परो दिवो ज्योतिर्दीप्यते।" இனி லோகத்திற்கப்பால் எது ஜ்யோதிஸாகப் பிரகாசிக்கிறதோ" என்றிருக்கும் வாக்கியத்திலுள்ள "ஜ்யோதிஸ்" எது என்று விஷயம்.

**कार्यज्योतिरुत ब्रह्म ज्योतिर्दीप्यत इत्यतः।**
**ब्रह्मणोऽसन्निधेः कार्यतेजोलिङ्गबलादपि।।३५।।**
**चतुष्पात्प्रकृतं ब्रह्म यच्छब्देनानुवर्त्यते।**
**ज्योतिः स्याद्भासकं ब्रह्म लिङ्गं तूपाधियोगतः ।।३६।।**

கார்யஜ்யோதிருத ப்3ரஹ்ம ஜ்யோதிர்தீ3ப்யத இத்யத: ।
ப்3ரஹ்மணோஅஸந்நிதே4: கார்யதேஜோலிங்க3ப3லாத3பி ।। 35
சதுஷ்பாத்ப்ரக்ருதம் ப்3ரஹ்ம யச்ச2ப்3தே3நாநுவர்த்யதே ।
ஜ்யோதி: ஸ்யாத்3பா4ஸகம் ப்3ரஹ்ம லிங்க3ம் தூபாதி4யோக3த:।।3

(அ..ம்)

"ஜ்யோதிஸ் பிரகாசிக்கிறது" என்ற அது கார்யமான (உண்டான ஸாதாரணமான) ஜ்யோதிஸா (வெளிச்சமா)? அல்லது பிரஹ்மமா?

பிரஹ்மம் ஸமீபத்தில் சொல்லப்படாததினாலும், தேஜஸ்ஸின் அடையாளம் காட்டப்பட்டிருக்கும் பலத்தினாலும் கார்யமானதுதான். "எது என்ற சப்தத்தினால் (முன் பிரஸ்தாவித்திருக்கும்) நான்கு பாதங்களுள்ள பிரஹ்மம் இங்கேயும் சொல்லப்படுவதாக தொடர்ந்து வரப்பட்டிருக்கிறது. பிரஹ்மம் (எல்லாவற்றையும்) பிரகாசப்படுத்தித் தெரியப்படுத்துவதால் ஜ்யோதிஸ் ஆகும். அடையாளமோ உபாதியின் ஸம்பந்தத்தினால் (பிரஹ்மத்தில் பொருந்தும்).

ஸந்தேஹம் :

த்யு லோகத்திற்கும் அப்பால் விளங்குவதாகச் சொல்லப்படும் ஜ்யோதிஸ் கண் பார்ப்பதற்கு உபகாரம் செய்யும் தேஜஸா? அல்லது பிரஹ்மமா?

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

இந்த வாக்கியத்தில் ஸமீபத்தில் பிரஹ்மத்தைப்பற்றி பிரஸ்தாவமே இல்லாததினால், ஜ்யோதிஸ் என்ற சப்தம் பிரஹ்மத்தைக் குறிக்கிறதென்பது ஸரியாகாது. மேலும் தேஜஸ் தான் என்பதற்கு இங்கே "इदं वाव तद्यदिदमस्मिन्नन्तः पुरुषे ज्योतिः ।" "எந்த இந்த ஜ்யோதிஸ் இந்த புருஷனுக்குள் இருக்கிறதோ இதுவே அது" என்று சொல்லி சரீரத்திலிருக்கும் ஜாடராக்னியுடன் வேறுபடாமலிருக்கும் தன்மையாகிற லிங்கமும் காண்கிறபடியால் கார்யமான தேஜஸ் தான் இங்கே சொல்லப்படும் ஜ்யோதிஸ்.

ஸித்தாந்தம் :

பிரஹ்மத்தைப்பற்றி ஸமீபத்தில் பிரஸ்தாவமில்லையென்பது ஸரியல்ல. இதற்கு முந்தியுள்ள காயத்ரீ கண்டத்தில் "पादोऽस्य सर्वा भूतानि त्रिपादस्यामृतं दिवि।" "இவருடைய ஒரு பாதமே எல்லா பூதங்களும், இவருடைய நாசமற்ற மூன்று பாதங்கள் ஸ்வயம் பிரகாசமான அவரிடத்திலேயே இருக்கின்றன" என்று நான்கு பாதங்களுள்ளதாக பிரஹ்மம் சொல்லப்பட்டிருக்கிறது. "எந்த இது" என்று இந்த வாக்கியத்தில் வரும் வார்த்தைகள் அந்த முன் சொல்லப்பட்டதையே குறிக்கும். ஆகையால் அது இங்கேயும் சொல்லப்பட்டதாகிறது. எல்லாவற்றையும் தெளிவாய் தெரியம்படிச் செய்வதால் ஜ்யோதிஸ் என்ற சப்தம் பிரஹ்மத்திற்கு பொருந்தக் கூடியதே. சரீரத்திற்குள் இருக்கிறதென்ற லிங்கம் உபாதியின் ஸம்பந்தத்தால் பிரஹ்மத்திற்கும் பொருந்தும். ஆகையால் இங்கு சொன்ன ஜ்யோதிஸ் பிரஹ்மம் தான்.

# ११. प्रतर्दनाधिकरणम्

## 11. ப்ரத$_3$ர்தனாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 28 - 31)

**प्राणस्तथाऽनुगमात्।। २८ ।।**

ப்ராணஸ்ததா$_2$அநுக$_3$மாத் 28

(பிராணன்(பிரஹ்மமே), அவ்விதம் ஒத்துவருவதால்)

**न वक्तुरात्मोपदेशादिति चेदध्यात्मसंबन्धभूमा ह्यस्मिन्।। २९ ।।**

ந வக்துராத்மோபதே$_3$சாதி$_3$தி சேத$_3$த்$_4$யாத்மஸம்ப$_3$ந்த$_4$பூமா ஹ்யஸ்மிந் 29

(இல்லை, சொல்லுகிறவனுடைய ஆத்மாவை உபதேசித்து இருப்பதால் என்றால், இதில் ஆத்மா விசயமான ஸம்பந்தம் அதிகமிருக்கிறதல்லவா)

**शास्त्रदृष्ट्या तूपदेशो वामदेववत्।। ३० ।।**

சாஸ்த்ரத்$_3$ருஷ்ட்யா தூபதே$_3$சோ வாமதே$_3$வவத் 30

(உபதேசமோ சாஸ்திர திருஷ்டியால், வாமதேவருடையதுபோல)

**जीवमुख्यप्राणलिङ्गान्नेति चेन्नोपासात्रैविध्यादाश्रितत्वादिह तद्योगात्।। ३१।।**

ஜீவமுக்$_2$யப்ராணலிங்கா$_3$ந்நேதி சேந்நோபாஸாத்ரைவித்$_3$யாதா$_3$ச்ரிதத்வாதி$_3$ஹ தத்$_3$யோகா$_3$த் 31

(ஜீவனுடையவும் முக்கிய பிராணனுடையவும் லிங்கமிருப்பதால் இல்லை என்றால், அப்படியல்ல, உபாஸனை மூன்றுவிதமாகி விடுமானதினால், ஆசிரயிக்கப்பட்டிருப்பதாலும் இங்கே அதன் சேர்க்கையிருப்பதாலும்)

கௌஷீதகீ உபநிஷத்தில் பிரதர்தனன் என்ற அரசனிடம் இந்திரன் "**प्राणोऽस्मि प्रज्ञात्मा तं मामायुरमृतमित्युपास्व।**" "நான் ஞானஸ்வரூபமான பிராணனாக இருக்கிறேன், அப்படியிருக்கும் என்னை ஆயுஸ் என்றும், அமிருதம் என்றும் உபாஸிப்பாயாக" என்று சொல்லுகிறான். இதில் கண்ட "பிராணன்" யார் என்று இதில் நிர்ணயிக்கப்படுகிறது.

**प्राणोऽस्मीत्यत्र वाग्विन्द्रजीवब्रह्मसु संशयः।**
**चतुर्णां लिङ्गसद्भावात्पूर्वपक्षस्त्वनिर्णयः।। ३७ ।।**
**ब्रह्मणोऽनेकालिङ्गानि तानि सिद्धान्यनन्यथा।**
**अन्येषामन्यथासिद्धेर्व्युत्पाद्यं ब्रह्म नेतरत्।। ३८ ।।**

ப்ராணோஅஸ்மீத்யத்ர வாய்விந்த்$_3$ரஜீவப்$_3$ரஹ்மஸு ஸம்சய: ।
சதுர்ணாம் லிங்க$_3$ஸத்$_3$பாவாத்பூர்வபக்ஷஸ்த்வநிர்ணய: ।। 37
ப்$_3$ரஹ்மணோநேகாலிங்கா$_3$நி தாநி ஸித்$_3$தா$_4$ந்யநந்யதா$_2$ ।
அந்யேஷாமந்யதா$_2$ஸித்$_3$தே$_4$ர்வ்யுத்பாத்$_3$யம் ப்$_3$ரஹ்ம நேதரத் ।। 38

"பிராணனுக இருக்கிறேன்" என்றவிடத்தில் சொல்லப்படுவது வாயுவா? இந்திரனு? ஜீவனு? பிரஹ்மமா? என்று ஸம்சயம். நான்கிற்கும் லிங்கம் இருப்பதால் நிர்ணயிக்க முடியாது என்று பூர்வபக்ஷம்.
பிரஹ்மத்தைக் காட்டும் லிங்கங்கள் பல இருக்கின்றன. அவை வேறு விதமானுல் பொருந்தாது. மற்ற லிங்கங்களேயோ வேறு விதமாக (பிரஹ்மத்தில்) பொருத்த முடியும். ஆகையால் சொல்லப்படுவது பிரஹ்மமே வேறு எதுவுமில்லை.

ஸந்தேஹம் :

அந்த உபநிஷத்திலேயே "इदं शरीरं परिगृह्योत्थापयति" "இந்த சரீரத்தை பிடித்துக் கொண்டு நிறுத்தி வைக்கிறது என்பது பிராணவாயுவைக் குறிக்கும் லிங்கம். "अस्मि" "இருக்கிறேன்" என்று சொல்கிறவன் இந்திரனுயிருப்பதால், அது இந்திரனைக் குறிக்கும் லிங்கமாகும். "वक्तारं विद्यात्" "பேசுபவனை அறிவாய்" என்பது ஜீவனைக் குறிக்கும் லிங்கமாகும்."आनन्दोऽजरोऽमरः""ஆனந்தஸ்வரூபமாயுள்ளது, ஜரையற்றது, மரணமற்றது" என்பது பிரஹ்மத்தின் லிங்கம். இவ்விதம் நான்கு வித லிங்கங்களுமிருப்பதால் அந்த நான்கில் இங்கே சொல்லப்படுவது எது என்று ஸந்தேஹம்.
(வி..ம்)

பூர்வபக்ஷம் :

நான்கு விதமாகவும் லிங்கங்கள் இருப்பதால், நிர்ணயிக்க முடியாது தான்.

ஸித்தாந்தம் :

அப்படியல்ல. பிரதர்தனன் இந்திரனைக் கேட்கும் போது "त्वमेव मे वृणीष्व यं त्वं मनुष्याय हिततमं मन्यसे" "மனுஷ்யனுக்கு உத்தமமான ஹிதமாக தாங்கள் எதை நினைக்கிறீர்களோ, அதை தாங்களே எனக்காக கூறுங்கள் (பொறுக்கிச் சொல்லுங்கள்)" என்று சொல்லப்படும் உத்தமமான ஹிதம் என்ற தன்மை பிரஹ்மத்திற்கு தான் பொருந்தக்கூடிய லிங்கம். இந்திரன் பதில் சொல்லும்போது "यो मां विजानीयात्, नास्य केनचन कर्मणा लोको मीयते, न मातृवधेन, न पितृवधेन।" "எவன் என்னை அறிகிருனே, அவனுக்கு எவ்வித செய்கையினுலும் உலகம் கெட்டு விடாது. தாயைக் கொல்வதினுலுமில்லை, தந்தையைக் கொல்வதினுலுமில்லை" என்று மஹாபாதகங்களால் கூட அவன் தீண்டப்பட மாட்டான் என்பது பிரஹ்மத்திற்கே லிங்கம். இவ்விதமாக அந்த உபநிஷத்தில் காணப்படும் பிரஹ்ம லிங்கங்கள் பலவிருக்கின்றன.

அவைகளை எப்படியாவது பிராணவாயு, இந்திரன், ஜீவன் இவற்றில் பொருத்திவிடுவது ஸாத்தியமில்லை. , ஆனால் பிராணவாயு முதலியவற்றைக் குறிக்கும் லிங்கங்களை, அவை பிரஹ்மத்தை அறிவதற்கு துவாரமாய் இருப்பதால், பிரஹ்மத்தில் பொருத்திவிட முடியும். இவ்விதமாக பிரஹ்மத்தைக் குறிக்கும் லிங்கங்கள் அதிகமாய் இருப்பதாலும், மற்ற லிங்கங்களுக்கு வேறு விதமாகப் போக்கு சொல்லக் கூடியதாயிருப்பதினாலும், இங்கு பிராணன் என்று சொல்லப்படுவது பிரஹ்மமே தவிரபிராணவாயு முதலியவையல்ல.

இவ்விதம் முதல் அத்யாயத்தில் முதல் பாதத்தில் 11 அதிகரணங்கள், 38 சுலோகங்கள் (ஸூத்ரங்கள் 31).

================================

# முதல் அத்யாயம் : இரண்டாவது பாதம்

## १. सर्वत्रप्रसिद्ध्यधिकरणम्

## 1. ஸர்வத்ரபிரஸித்$_3$த்$_4$யதி$_4$கரணம்

(ஸூத்ரம் 1 - 8)

**सर्वत्र प्रसिद्धोपदेशात्।। १ ।।**

ஸர்வத்ர ப்ரஸித்$_3$தோ$_4$பதே$_3$சாத் 1

(எங்கும் பிரஸித்தமாயுள்ளதை உபதேசம் செய்வதால்)

**विवक्षितगुणोपपत्तेश्च ।। २ ।।**

விவக்ஷிதகு$_3$ணோபபத்தேச்ச 2

(சொல்லவிரும்பும் குணம் பொருந்துமானதினாலும்)

**अनुपपत्तेस्तु न शारीरः।। ३ ।।**

அநுபபத்தேஸ்து ந சாரீர: 3

(பொருந்தாததினால் சாரீரன் இல்லை)

**कर्मकर्तृव्यपदेशाच्च ।। ४ ।।**

கர்மகர்த்ருவ்யபதேசாச்ச 4

(கர்மாவாகவும், கர்த்தாவாகவும் குறிப்பிட்டிருப்பதாலும்)

**शब्दविशेषात् ।। ५ ।।**

சப்தவிசேஷாத் 5

(சப்தத்தில் வித்யாஸமிருப்பதால்)

**स्मृतेश्च ।। ६ ।।**

ஸ்ம்ருதேச்ச 6

(ஸ்மிருதியிலிருந்தும்)

**अर्भकौकस्त्वात्तद्व्यपदेशाच्च नेति चेन्न; निचाय्यत्वादेवं व्योमवच्च।। ७**

அர்ப$_4$கௌகஸ்த்வாத்தத்$_3$வ்யபதே$_3$சாச்ச நேதி சேந்ந;
நிசாய்யத்வாதே$_3$வம் வ்யோமவச்ச 7

(சிறிய இடமாயிருப்பதாலும் அதைக் குறிப்பிட்டிருப்பதாலும் இல்லை என்றால் அப்படியல்ல இவ்விதம் தியானிக்கவேண்டிய தன்மையால் ஆகாசம் போலவும்)

**संभोगप्राप्तिरिति चेन्न वैशेष्यात्।। ८ ।।**

ஸம்போ$_4$க$_3$ப்ராப்திரிதி சேந்ந வைசேஷ்யாத் 8

(ஸம்போகம் ஏற்படும் என்றால் இல்லை வித்யாஸமிருப்பதால்)

சாந்தோக்யம் மூன்றுவது அத்யாயத்தில் சாண்டில்ய வித்யையில் "मनोमय: प्राणशरीरो भारूप:" "மனோமயன், பிராணனை சரீரமாயுடையவன், பிரகாச ஸ்வரூபமாயுள்ளவன்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அது யார் என்று இந்த அதிகரணத்திற்கு விஷயம்.

मनोमयोऽयं शारीर ईशो वा प्राणमानसे।
हृदयस्थित्यणीयस्त्वे जीवे स्युस्तेन जीवगाः।। १ ।।
शमवाक्यगतं ब्रह्म तद्धितादिरपेक्षते।
प्राणादियोगश्चिन्तार्थश्चिन्त्यं ब्रह्म प्रसिद्धितः।। २ ।।

மநோமயோயம் சாரீர ஈசோ வா ப்ராணமாநஸே ।
ஹ்ருத$_3$யஸ்தி$_2$த்யணீயஸ்த்வே ஜீவே ஸ்யுஸ்தேந ஜீவகா$_3$: ।। 1
சமவாக்யக$_3$தம் ப்$_3$ரஹ்ம தத்$_3$தி$_4$தாதி$_3$ரபேக்ஷதே ।
ப்ராணாதி$_3$யோக$_3$ச்சிந்தார்த$_2$ச்சிந்த்யம் ப்$_3$ரஹ்ம ப்ரஸித்$_3$தி$_4$த: ।। 2

(அ..ம்)

இந்த மனோமயன் சாரீரனா (சரீரத்திலுள்ள ஜீவனா)? அல்லது ஈசுவரரா? பிராணன், மனஸ், ஹ்ருதயத்திலிருக்கும் தன்மை, வெகு சிறியதாயிருக்கும் தன்மை, இவை ஜீவனிடத்தில் தான் இருக்கும், ஆகையால் ஜீவனையே சேர்ந்தவை.

சமத்தை விதிக்கும் (முன்னுள்ள) வாக்கியத்தில் கண்ட பிரஹ்மத்தை இந்த "தத்திதம்" முதலான கூட்டு வார்த்தைகள் அபேக்ஷிக்கின்றன. பிராணன் முதலியதுடன் சேர்த்துச் சொன்னது. சிந்தனை செய்ய வேண்டியதற்காக பிரஹ்மம் தான் சிந்திக்க வேண்டியது। என்ற பிரஸித்தியிருப்பதால்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

மனஸின் மாறுபாடு மனோமயன் என்பதினால் ஜீவனுக்கு மனஸின் ஸம்பந்தமிருக்கிறது. பிராணன் இதற்கு சரீரம் என்பதினால் பிராண ஸம்பந்தமும் ஜீவனுக்கு இருக்கிறது. ஈசுவரருக்கோ "अप्राणो हि अमनाः शुभ्रः" "பிராணனற்றவர், மனஸ் அற்றவர், சுத்தமாயிருப்பவர்" என்று சொல்லியிருப்பதால் இவ்வித ஸம்பந்தம் எதுவும் அவருக்கு கிடையாது. மேலும், " एष मे आत्मा अन्तः हृदये अणीयान् " "இந்த என் ஆத்மா ஹ்ருதயத்திற்கு உள்ளே வெகு சிறியது" என்று சொல்லப்படுகிற ஹ்ருதயத்தில் இருப்பு, வெகு சிறியதாயிருத்தல், இவை எவ்வித ஆதாரமுமற்றவராய் எங்கும் வியாபிக்கிறவராய் இருக்கும் ஈசுவரரிடத்தில் பொருந்தாது. ஆகையால் இங்கே சொல்லப்படுவது ஜீவன்தான்.

ஸித்தாந்தம் :

இதற்கு முன் வாக்கியத்தில் "सर्वं खल्विदं ब्रह्म, तज्जलान् --इति शान्त उपासीत" "இது எல்லாமே பிரஹ்மம். அதிலிருந்தே உண்டாகி, அதிலேயே லயமடைவதாய், அதனுலேயே ஜீவித்திருக்கிறது என்பதிஞல் சாந்தனுயிருந்து அதை உபாஸனை செய்" என்று எல்லாமே பிரஹ்ம ஸ்வரூபமாயிருப்பதால், ராகத்வேஷாதிகளுக்கு இடமில்லாததிஞல் உபாஸிக்கும் போது சாந்தனுயிருக்க வேண்டுமென்று விதிக்கப்படுகிறது. இந்த வாக்கியத்தில் கண்ட "பிரஹ்மம்" என்பதற்கு விசேஷணமாக மனேமயன், பிராணசரீரன் என்று மேலுள்ள வாக்கியத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மனஸின் விசாரம் என்று மனேமயசப்தம் ஏற்படுவதால், அது "தத்திதம்" என்ற ஸமாஸம். பிராணனை சரீரமாயுடையவன் என்று பிராணசரீர சப்தம் ஏற்படுவதால் அது "பகுவ்ரீஹி" ஸமாஸம். இரண்டுமே பிரஹ்மத்தையே குறிக்கிறது. பிரஹ்மம், மனஸ், பிராணன் இவைகளற்று எவ்வித உபாதியுமில்லாமல், ஸ்வரூபத்திலிருந்த போதிலும், உபாதியுடன் கூடின பிரஹ்மமே உபாஸனைக்கு விஷயமாகுமாதலால் அதற்கு இந்த விசேஷணங்கள் பொருந்தும். ஜீவனுக்கு உபாஸிக்கப்படும் தன்மை உபநிஷத்துக்களில் எங்கேயும் சொல்லியிருப்பது கிடையாது. ஆகையால் இங்கே சொன்னது பிரஹ்மமே தான்.

# २. अत्रधिकरणम्

## 2. *அத்ரதி₄கரணம்*

(ஸூத்ரம் 9, 10)

**अत्ता चराचरग्रहणात् ।। ९ ।।**

அத்தா சராசரக்₃ரஹணாத் 9

(சாப்பிடுகிறவர் ப்ரஹ்மம், சராசரங்கள் கிரஹிக்கப்படுவதால்)

**प्रकरणाच्च ।। १० ।।**

ப்ரகரணாச்ச 10

(பிரகரணத்தினாலும்)

கடோபநிஷத் இரண்டாவது வல்லியில்

"यस्य ब्रह्म च क्षत्रं च उभे भवत ओदनः ।
मृत्युर्यस्योपसेचनं क इत्था वेद यत्र सः ।।"

"எவருக்கு பிராஹ்மண ஜாதியும், க்ஷத்திரிய ஜாதியுமாகிய இரண்டும் அன்னமாக இருக்குமோ, எவருக்கு மிருத்யு (அந்த அன்னத்திற்கு ருசி கொடுப்பதற்காக) கூடச் சேர்க்கும் பதார்த்தமோ, அவர் எங்கே இருக்கிருரோ அந்தவிடத்தை இவ்விதமென்று யார் அறிய முடியும்?"

என்று சொல்லப்பட்டதில் உள்ள "அத்தா" (சாப்பிடுகிறவர்) யார்? என்று இங்கு விஷயம்.

जीवोऽग्निरीशो वाऽत्ता स्यादोदने जीव इष्यताम्।
स्वाद्वत्तीति श्रुतेर्वह्निर्वाऽग्निरन्नाद इत्यतः।। ३ ।।
ब्रह्मक्षत्रादिजगतो भोज्यत्वात्स्यादिहेश्वरः।
ईशप्रश्नोत्तरत्वाच्च संहारस्तस्य चात्तृता।। ४ ।।

ஜீவோஅக்₃நிரீசோ வாஅத்தா ஸ்யாதோ₃த₃நே ஜீவ இஷ்யதாம் ।
ஸ்வாத்₃வத்தீதி ச்ருதேர்வஹ்நிர்வாஅக்₃நிரந்நாத₃ இத்யத: ।। 3
ப்₃ரஹ்மக்ஷத்ராதி₃ஜக₃தோ போ₃ஜ்யத்வாத்ஸ்யாதி₃ஹேச்வர: ।
ஈசப்ரச்நோத்தரத்வாச்ச ஸம்ஹாரஸ்தஸ்ய சாத்த்ருதா ।। 4

(அ..ம்)

சாப்பிடுகிறவர் ஜீவனு? அக்னியா? ஈசுவரரா? அன்னம் என்றிருப்பதினுல் "पिप्पलं स्वादु अत्ति" "கர்மபலனை ருசியாய் சாப்பிடுகிருன்" என்று (ஜீவனைப்பற்றி) சுருதி சொல்வதினுல் ஜீவனையே வைத்துக் கொள்ளலாம் அல்லது "अग्निः अन्नादः" "அக்னி அன்னத்தை சாப்பிடுகிறவர்" என்ற சுருதியினுல் அக்னியாக இருக்கலாம்.

இங்கே பிராஹ்மணர், க்ஷத்திரியர் முதலான ஜகத்தே சாப்பிடப்படும் வஸ்துவாகச் சொல்லியிருப்பதாலும், ஈசுவரர் விஷயமான கேள்விக்கே இந்த வாக்கியம் பதிலாகவிருப்பதினுலும், ஈசுவரராகத்தான் இருக்க வேண்டும். ஸம்ஹாரம் செய்வது அவருக்கு சாப்பிடும் தன்மையாம்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

அன்னம் என்றும் அதனுடன் சேர்க்கும் பதார்த்தம் என்றும் சொல்லியிருப்பதால், இங்கே சொல்வது யாரோ சாப்பிடுகிறவர் என்று ஏற்படுகிறது."ருசியாய் சாப்பிடுகிருன்" என்று சுருதியில் காண்பதால் ஜீவனுகவோ, "அக்னி அன்னத்தை சாப்பிடுகிறவர்" என்ற சுருதியினுல் அக்னியாகவோ தான் இருக்க வேண்டும் "ருசியாய் சாப்பிடுகிருன்" என்று ஜீவனைச் சொல்லும் வாக்கியத்திலேயே "अनश्नन् अन्योऽभिचाकशीति" "மற்றொருவர் சாப்பிடாமலிருந்து கொண்டு பிரகாசிக்கிருர்" என்று ஈசுவரர் சாப்பிடுவதில்லையென்று வியக்தமாய் சொல்லியிருப்பதால் இங்கு சொல்லப்படுவது ஈசுவரராயிருக்க முடியாது.

ஸித்தாந்தம் :

இங்கே பிராஹ்மணனையும், க்ஷத்திரியனையும் குறிப்பிட்டது, ஜகத்பூராவையும் குறிப்பிடுவதற்காகத்தான். இவ்விதமாக ஜகத்தையே சாப்பிடக்கூடியவர், ஈசுவரரைத் தவிர வேறு யாரும் இருக்க முடியாது. இங்கே சாப்பிடுவது என்பது ஸம்ஹாரம் செய்வது, லயிக்கச் செய்வது, என்று தாத்பர்யம். இந்தக் கார்யம் ஈசுவரரால் தான் செய்யப்படுகிறது என்பது பிரஸித்தம்.

மேலும் இந்த உபநிஷத்தில் யமதர்மராஜனிடத்தில் நசிகேதஸ்

**अन्यत्र धर्मादन्यत्राधर्मादन्यत्रास्मात्कृताकृतात्।**
**अन्यत्र भूताच्च भव्याच्च यत्तत्पश्यसितद्वद ।।**

"தர்மத்திற்கும் வேருக, அதர்மத்திற்கும் வேருக, இந்த உண்டானது (கார்யம்) உண்டாகாதது (காரணம்) இவைகளுக்கு வேருக உண்டாகியிருந்ததற்கும், உண்டாகப் போவதற்கும் வேருக, எந்த வஸ்துவை அறிந்திருக்கிறீரோ அதைச் சொல்லுங்கள்" என்று தாத்பர்யம், கார்ய, காரணம், முக்காலம் இவைகளுக்கு அப்பால் உள்ள வஸ்துவையே கேட்டிருக்கிருன். அதற்கு பதில் சொல்லும் முறையில் இந்த வாக்கியம் யமதர்மராஜனுல் சொல்லப்பட்டிருப்பதால் இதில் குறிப்பிடும் "சாப்பிடுகிறவர்" ஈசுவரர்தான்.

# ३. गुहाप्रविष्टाधिकरणम्

## 3. கு₃ஹாப்ரவிஷ்டாதி₄கரணம்

(ஸூத்ரம் 11,12)

**गुहां प्रविष्टावात्मानौ हि तद्दर्शनात्।। ११ ।।**

கு₃ஹாம் ப்ரவிஷ்டாவாத்மாநௌ ஹி தத்₃த₃ர்சநாத் 11
(குகையில் புகுந்திருப்பவர்கள் ஜீவேசுவரர்கள் இரண்டும் ஆத்மாக்கள் அல்லவா! அப்படியே காணுவதால்)

**विशेषणाच्च ।। १२ ।।**

விசேஷணாச்ச 12
(விசேஷணத்தினாலும்)

கடோபநிஷத் மூன்ருவது வல்லியில்

**“ऋतं पिबन्तौ सुकृतस्य लोके गुहां प्रविष्टौ परमे परार्धे।**
**छायातपौ ब्रह्मविदो वदन्ति पञ्चाग्नयो ये च त्रिणाचिकेताः।।”**

"உத்தமமான பிரஹ்ம ஸ்தானமான சரீரத்தில் புத்தியாகிற குஹையில், நிழல் வெய்யில் போலுள்ள இருவர் புகுந்து கொண்டு நன்கு

செய்யப்பட்டதற்குள்ள கர்ம பலனை அருந்திக் கொண்டிருக்கிறார்களென்று பிரஹ்மத்தையறிந்தவர்களும், எவர்கள் ஐந்து அக்னிகளுடன் உள்ளவர்களாய் நாசிகேதாக்னி சயனம் மும்முறை செய்திருக்கிறார்களோ அவர்களும் சொல்கிறார்கள்" என்று சொல்லப்படும் இருவர் யார் என்று இங்கு விஷயம்.

**गुहां प्रविष्टौ धीजीवौ जीवेशौ वा, हृदि स्थितेः।**
**छायातपाभ्यां दृष्टान्ताद्धीजीवौ स्तो विलक्षणौ।। ५ ।।**
**पिबन्ताविति चैतन्यं द्वयोर्जीवेश्वरौ ततः।**
**हृत्स्थानमुपलब्ध्यै स्याद्वैलक्षण्यमुपाधितः।। ६ ।।**

கு₃ஹாம் ப்ரவிஷ்டௌ தீ₄ஜீவௌ ஜீவேசௌ வா, ஹ்ருதி ஸ்தி₂தே:।
சா₂யாதபாப்₄யாம் த்₃ருஷ்டாந்த₃தீ₄ஜீவௌஸ்தோ விலக்ஷணௌ।।5
பிப₃ந்தாவிதி சைதந்யம் த்₃வயோர்ஜீவேச்வரௌ தத: ।
ஹ்ருத்ஸ்தா₂நமுபலப்₃த்₄யை ஸ்யாத்₃வைலக்ஷண்யமுபாதி₄த: ।। 6

(அ..ம்)

(புத்தி) குஹையில் புகுந்திருப்பது புத்தியும் ஜீவனுமா? அல்லது ஜீவனும் ஈசுவரனுமா? ஹ்ருதயத்தில் இருப்பதாகச் சொல்வதினாலும், நிழல் வெய்யில் என்று திருஷ்டாந்தம் சொல்லியிருப்பதினாலும், ஒன்றுக்கொன்று (ஜடம் சைதன்யம் என்று) வேறுபட்டுள்ள புத்தியும் ஜீவனுமாகத்தான் இருக்க வேண்டும்.

அருந்துகிறவர்கள் என்பதால் இருவருக்கும் அறிவு இருக்க வேண்டும். ஆகையால் இவரிருவரும் ஜீவனும் ஈசுவரரும் தான். ஹ்ருதயத்தில் இருத்தல் அறிய வேண்டியதற்காகவாகும். ஒருவருக்கொருவர் வேறுபடுதல் உபாதிகளினால் இருக்கக்கூடும்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

வெகு சுருங்கினதான இடமாக ஹ்ருதயம் சொல்லப்பட்டிருப்பதால் புத்தியும் ஜீவனுமாகத்தானிருக்க முடியும். புத்தி ஜடமாகவும், ஜீவன் சேதனமாகவும் இருப்பதால் நிழலிற்கும் வெய்யிலுக்கும் ஒப்பிட்டது பொருத்தமேயாகும். ஈசுவரர் ஸர்வ வியாபகமாக இருப்பவரை ஹ்ருதய குஹையில் இருப்பதாகச் சொல்வது ஸரியாகாது. ஜீவன் ஈசுவரர் இருவரும் சேதனர்களாயிருப்பதால் நிழல் வெய்யில் என்ற திருஷ்டாந்தம் ஸரியாகாது. ஆகையால் புத்தியும் ஜீவனும் தான்.

ஸித்தாந்தம் :

அருந்துகிறவர்கள் என்று சேர்த்துச் சொல்லியிருப்பதால் இருவரும் அருந்தக்கூடிய, அதாவது அனுபவிக்கக்கூடிய, அறிவு உள்ளவர்களாகவே இருக்க வேண்டும். ஆகையால் இங்கே சொல்வது சேதனர்களான ஜீவனும் ஈசுவரருந்தான். ஸர்வவியாபியான ஈசுவரரை அறிந்து கொள்ளக் கூடிய ஸ்தானம் ஹ்ருதயமானதினுல், அவர் அங்கேயிருப்பதாக சொல்லப்படுகிறது. இருவரும் சேதனர்களாயிருந்த போதிலும் உபாதியுடன் கூடினவன் ஜீவன், உபாதியற்றவர் ஈசுவரர் என்ற காரணத்தினுல் ஒருவருக்கொருவர் வேறுபாடும் பொருந்தும். ஆகையால் இங்கே சொல்லப்பட்டது ஜீவனும் ஈசுவரருந்தான்.

## ४. अन्तराधिकरणम्

### 4. *அந்தராதி$_4$கரணம்*

(ஸூத்ரம் 13 - 17)

**अन्तर उपपत्तेः ।। १३ ।।**

அந்தர உபபத்தே: 13

(உள்ளேயிருப்பவர் பரமாத்மா, பொருந்துவதால்)

**स्थानादिव्यपदेशाच्च ।। १४ ।।**

ஸ்தா$_2$நாதி$_3$வ்யபதே$_3$சாச்ச 14

(ஸ்தானம் முதலியதை குறிப்பிட்டிருப்பதாலும்)

**सुखविशिष्टाभिधानादेव च ।। १५ ।।**

ஸுக$_2$விசிஷ்டாபி$_4$தா$_4$நாதே$_3$வ ச 15

(ஸுகத்துடன்கூடினவர் என்று சொல்லியிருப்பதினாலேயும்)

**श्रुतोपनिषत्कगत्याभिधानाच्च ।। १६ ।।**

ச்ருதோபநிஷத்கக$_3$த்யாபி$_4$தா$_4$நாச்ச 16

(பிரஹ்மோபாஸனத்தைக் கேட்டு அனுஷ்டித்தவனுக்கு ஏற்படும் கதியை (இங்கு) சொல்லியிருப்பதாலும்)

**अनवस्थितेरसंभवाच्च नेतरः ।। १७ ।।**

அநவஸ்தி$_2$தேரஸம்ப$_4$வாச்ச நேதர: 17

(நிலையான இருப்பில்லாததினாலும் ஸம்பவிக்காததினாலும் மற்றது இல்லை)

சாந்தோக்யம் நான்காவது அத்யாயத்தில் ஸத்யகாமர் உபகோஸலருக்கு உபதேசிப்பதில் "**य एषोऽक्षिणि पुरुषो दृश्यते, एष आत्मेति होवाच। एतदमृतम्, एतद्ब्रह्म** ""எந்த இந்த புருஷன் கண்ணில் காணப் படுகிருனே, அவன் ஆத்மா என்று சொன்னுர். இது மரணமற்றது, இது

பிரஹ்மம்" என்ற வாக்கியமிருக்கிறது. கண்ணில் காணப்படும் புருஷன் என்பது யார் என்று
இங்கே விசாரிக்கப்படுகிறது.

छायाजीवौ देवतेशौ वाऽसौ योऽक्षणि दृश्यते।
आधारदृश्यतोक्त्येशादन्येषु त्रिषु कश्चन।। ७ ।।
कं खं ब्रह्म यदुक्तं प्राक्तदेवाक्षण्युपास्यते।
वामनीत्वादि नान्येषु नामृतत्वादिसंभवः।। ८।।

சா₂யாஜீவௌ தே₃வதேசௌ வாஅஸௌயோஅக்ஷணி த்₃ருச்யதே।
ஆதா₄ரத்₃ருச்யதோக்த்யேசாத₃ந்யேஷு த்ரிஷு கச்சந ।। 7
கம் க₂ம் ப்₃ரஹ்ம யது₃க்தம் ப்ராக்ததே₃வாக்ஷண்யுபாஸ்யதே ।
வாமநீத்வாதி₃ நாந்யேஷு நாம்ருதத்வாதி₃ஸம்ப₄வ: ।। 8

(அ..ம்)

கண்ணில் எது தெரியப்படுகிறதாகச் சொல்லப்படுகிறதோ, அது (கண்ணில் தோன்றும்) பிரதிபிம்பமா? ஜீவனு? தேவதையா? ஈசுவரரா? ஆதாரமுடையதாயிருத்தல், பார்க்கப்படுந்தன்மை, இரண்டும் சொல்லியிருப்பதால் ஈசுவரரைத்தவிர்த்து மற்றுள்ள மூன்றில் ஏதேனும் ஒன்று.

முன்னல் எந்த பிரஹ்மம் ஸுகம், ஆகாசம் என்று சொல்லப் பட்டிருக்கிறதோ அதுவேதான் கண்ணில் உபாஸிக்கப்படுகிறது. வாமனீ என்பது முதலான தன்மையும் (பிரஹ்மத்தைத் தவிர) மற்றவைகளில் மரணமற்ற தன்மையும் ஸம்பவிக்காது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

நமக்கு முன்னல் ஒருவன் கண்ணைத் திறந்து கொண்டு நின்ருல் அவனுடைய கருவிழியில் நம்முடைய பிரதிபிம்பம் தெரியும். ஆகையால் கண்ணில் பார்க்கப்படுவது பிரதிபிம்பமே. அல்லது அவன் தூங்குகிருனு? அறிவுடனிருக்கிருனு? என்று அவன் கண்ணைப் பார்த்தால் தெரியுமானதினுல், அங்கே பார்க்கப்படும் அவனுடைய சேதனும்சமான ஜீவனுயிருக்கலாம். அல்லது கண்ணிலுள்ள பார்க்கும் சக்தி அதற்கு அபிமான தேவதையான ஆதித்யனுடைய அனுக்ரஹத்தினுலேயே ஏற்படுவதாலும் "आदित्यश्चक्षुर्भूत्वाऽक्षिणी प्राविशत्" "ஆதித்யன் கண்இந்திரியமாகி இரண்டு கண்களிலும் புகுந்தார்" என்று வேதம் சொல்வதாலும் அங்கு பார்க்கப்படுவது ஆதித்ய தேவதையாக இருக்கலாம். பிரஹ்மத்திற்கு ஆதாரம் கிடையாததினுலும்,

பார்க்கப்படும் தன்மை கிடையாததினுலும் இங்கே சொன்னது பிரஹ்மம் அல்ல. மற்ற மூன்றில் ஏதாவது ஒன்ருகத் தானிருக்க வேண்டும்.

ஸித்தாந்தம் :

இதற்கு முன்னுல் "कं ब्रह्म" "ஸுகஸ்வரூபமாயுள்ளது பிரஹ்மம்" . "खं ब्रह्म" "ஆகாசம் போல் (வியாபகமாய், பரிபூர்ணமாய், சுத்தமாய்) இருப்பது பிரஹ்மம்" என்று எது சொல்லப்பட்டதோ அதுவேதான் "எந்த இந்த புருஷன்" என்று இங்கே சொல்லப்படுகிறது. அதையே உபாஸனே செய்ய வேண்டுமென்று உபாஸித்து அதற்கு இருப்பிடம் கண்ணுகவும் "வாமனீ" (நல்லதையெல்லாம் கொண்டு வருபவர்) "பாமனீ" (எல்லா உலகங்களிலும் பிரகாசிக்கிறவர்) "ஸம்யத்வாமர்" (எல்லா நல்ல கர்ம பலன்களுக்கும் காரணமாயிருப்பவர்) என்பது முதலான முறையில் உபாஸிக்க வேண்டுமென்று கண்டிருக்கிறது. இவ்வித குணங்கள் உபாஸிக்கப்படும் பிரஹ்மத்திற்குத் தான் பொருத்தமாகும். உபாதியுடன் கூடியதினுல் அதற்கு ஆதாரமாக கண்ணேச் சொல்வதோ, சாஸ்திர திருஷ்டியினுல் பார்க்கக்கூடியதென்று சொல்வதோ, விரோதமாகாது. மேலும் மேலுள்ள வாக்கியங்களில் சொல்லப்படுகிற மரணமற்ற தன்மை, பயமற்ற தன்மை முதலிய குணங்கள் மற்ற மூன்றுக்கும் கொஞ்சமேனும் பொருந்தாது. ஆகையால் இங்கே உபாஸிக்கும்படிச் சொன்னது ஈசுவரரேதான்.

# ५. अन्तर्याम्यधिकरणम्

## 5 *அந்தர்யாம்யதி$_4$கரணம்*

(ஸூத்ரம் 18 - 20)

**अन्तर्याम्यधिदैवादिषु तद्धर्मव्यपदेशात्।। १८ ।।**

அந்தர்யாம்யதி$_4$தை$_3$வாதி$_3$ஷு தத்$_3$த$_4$ர்மவ்யபதே$_3$சாத் 18

(அதிதைவம் முதலானவைகளில் அந்தர்யாமி பரமாத்மா, அவர் தர்மம் குறிப்பிடுவதால்)

**न च स्मार्तमतद्धर्माभिलापात्।। १९ ।।**

ந ச ஸ்மார்தமதத்$_3$த$_4$ர்மாபி$_4$லாபாத் 19

(ஸ்மார்த்தமும்(பிரதானமும்) இல்லை, அதைக்காட்டிலும் வேறான சேதனனின் தர்மம் சொல்லியிருப்பதால்)

**शारीरश्चोभयेऽपि हि भेदेनैनमधीयते।। २० ।।**

சாரீரச்சோப$_4$யேஅபி ஹி பே$_4$தே$_3$நைநமதீ$_4$யதே 20

(சாரீரனும் ஆத்மாவல்ல, இருவருமே இவனை வேறாக

சொல்லுகிறார்கள் அல்லவா)

பிருஹதாரண்ய உபநிஷத் 5வது அத்யாயத்தில் யாஜ்ஞவல்க்ய மஹரிஷி உத்தாலகரிடம் "यः पृथिवीमन्तरो यमयत्येष ते आत्माऽन्तर्याम्यमृतः" "எவர் பூமிக்குள் இருந்து கொண்டு அதை நியமனம் செய்கிறாரோ, அவரே உனக்கும் ஆத்மா, உனக்குள்ளுமிருந்து உன்னை நியமனம் செய்கிறவர். அவர் மரணமற்றவர்" என்று ஆரம்பித்துச் சொல்லி வருகிறார். அவ்விதம் சொல்லப்படும் அந்தர்யாமீ யார் என்பது இங்கே விஷயம்.

प्रधानं जीव ईशो वा कोऽन्तर्यामी जगत्प्रति।
कारणत्वात्प्रधानं स्याज्जीवो वा कर्मणो मुखात्।। ९ ।।
जीवैकत्वामृतत्वादेरन्तर्यामी परेश्वरः।
द्रष्टृत्वादेर्न प्रधानं न जीवोऽपि नियम्यतः।। १० ।।

ப்ரதா₄நம் ஜீவ ஈசோ வா கோஅந்தர்யாமீ ஜக₃த்ப்ரதி ।
காரணத்வாத்ப்ரதா₄நம் ஸ்யாஜ்ஜீவோ வா கர்மணோ முகா₂த் ।। 9
ஜீவைகத்வாம்ருதத்வாதே₃ரந்தர்யாமீ பரேச்வர: ।
த்₃ரஷ்ட்ருத்வாதே₃ர்ந ப்ரதா₄நம் ந ஜீவோபி நியம்யத: ।। 10

(அ..ம்)

ஜகத்தையுத்தேசித்து அந்தர்யாமீ (உள்ளிருந்து நியமனம் செய்கிறவர்) யார்? பிரதானமா? ஜீவனா? ஈசுவரரா? (ஜகத்திற்கு) காரணமாயிருப்பதால் பிரதானமாயிருக்கலாம். அல்லது (ஜீவர்கள் கர்மபலனை அனுபவிப்பதற்காகவே ஜகத் ஸ்ருஷ்டிக்கப்படுவதால்) கர்மாவின் மூலமாய் ஜீவன் (அந்தர்யாமியாகவிருக்கலாம்).

ஜீவனுடன் ஒன்றாயிருக்கும் தன்மை, மரணமற்றிருக்கும் தன்மை, முதலியவை சொல்லியிருப்பதால் அந்தர்யாமி பரமேசுவரர்தான். "பார்க்கிறவர்" என்ற தன்மை முதலியதிருப்பதால் பிரதானம் அல்ல. நியமிக்கப்படும் தன்மை ஜீவனுக்கிருப்பதால், ஜீவனுமல்ல.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

உலகம் பூராவிற்கும் உபாதான காரணமாயிருப்பதால் தன்னால் உண்டாக்கப்பட்ட எல்லா பதார்த்த விஷயமாகவும் நியமனம் செய்யும் தன்மையிருக்குமாதலால் அந்தர்யாமீ என்பது பிரதானமே. அல்லது ஜீவனே தர்மம் அதர்மம் எனப்படும் கர்மாக்களை அனுஷ்டித்து அந்த கர்மாக்களே பலனைக் கொடுப்பதற்காக பலனையனுபவிப்பதற்கு வேண்டிய ஸாதன வஸ்து ரூபமான ஜகத்தை ஸ்ருஷ்டிப்பதால், கர்மா

மூலமாக ஜகத்தையுண்டு பண்ணுவது ஜீவனேயானதினால் அவனே அந்தர்யாமீ.

ஸித்தாந்தம் :

பிரதானம் அசேதனமானதினால் அது ஆத்மாவுடன் ஒன்றாயிருக்க முடியாது. வாக்கியத்திலோ "அவரே உனக்கும் ஆத்மா" என்று சொல்லப்படுகிறது. மரணமற்ற தன்மை, ஸகல பதார்த்தங்களிலும் வியாபித்திருக்கும் தன்மை, முதலியதெல்லாம் பிரஹ்மத்தினிடத்தில் தான் பொருந்தும். மேலும் "अदृष्टो द्रष्टा, अश्रुतः श्रोता" "பார்க்கப்படாதவர், பார்க்கிறவர், கேட்கப்படாதவர், கேட்பவர்" என்பது முதலிய லக்ஷணங்கள் சேதனமான பிரஹ்மத்திற்குத் தான் பொருந்துமேயொழிய பிரதானத்திற்குப் பொருந்தாது. பிருதிவீ முதலியதை உள்ளிருந்து நியமனம் செய்வது போலவே "य आत्मानमन्तरो यमयति" "எவர் ஜீவனுக்கும் உள் இருப்பவராக நியமனம் செய்கிறாரோ" என்றிருப்பதால் ஜீவன் நியமிக்கப்படுபவன் ஆதலால் நியமனம் செய்யும் அந்தர்யாமியாகவிருக்க முடியாது. ஆகையால் அந்தர்யாமீயென்பது பரமேசுவரர்தான்.

## ६. अदृश्यत्वाधिकरणम्

## 6 அதி₃ருச்யத்வாதி₄கரணம்

(ஸூத்ரம் 21 - 24)

**अदृश्यत्वादिगुणको धर्मोक्तेः ।। २१ ।।**

அத்₃ருச்யத்வாதி₃கு₃ணகோ த₄ர்மோக்தே: 21

(பார்க்கத்தகாத தன்மை முதலிய குணங்களையுடையது பரமாத்மா, தர்மங்கள் சொல்லியிருப்பதால் )

**विशेषणभेदव्यपदेशाभ्यां च नेतरौ ।। २२ ।।**

விசேஷணபே₄த₃வ்யபதே₃சாப்₄யாம் ச நேதரௌ 22

(விசேஷணம், பேதம் இரண்டும் குறிப்பிடப்படுவதாலும், மற்ற இரண்டும் பூதயோநி இல்லை)

**रूपोपन्यासाच्च ।। २३ ।।**

ரூபோபந்யாஸாச்ச 23

(ரூபம் வர்ணித்திருப்பதாலும்)

முண்டகோபநிஷத்தில் "तदव्ययं यद्भूतयोनिं परिपश्यन्ति धीराः" "எது நாசமற்றதாயுள்ளதோ, பூதங்களுக்குக் காரணமாயுள்ள அதை சுத்தமான புத்தியுள்ளவர்கள் நன்கு அறிகிறார்கள்" என்று

கண்டிருக்கிறது. இங்கு காணும் பூதங்களுக்குக் காரணமாயுள்ளது எது? என்று விசாரிக்கப்படுகிறது.

भूतयोनिः प्रधानं वा जीवो वा यदि वेश्वरः।
आद्यौ पक्षावुपादाननिमित्तत्वाभिधानतः ।। ११ ।।
ईश्वरो भूतयोनिः स्यात्सर्वज्ञत्वादिकीर्तनात्।
दिव्याद्युक्तेर्न जीवः स्यान्न प्रधानं भिदोक्तितः।। १२ ।।

பூ$_4$தயோநி: ப்ரதா$_4$நம் வா ஜீவோ வா யதி$_3$ வேச்வர: ।
ஆத்$_3$யௌ பக்ஷாவுபாதா$_3$நநிமித்தத்வாபி$_4$தா$_4$நத : ।। 11
ஈச்வரோ பூ$_4$தயோநி: ஸ்யாத்ஸர்வஜ்ஞத்வாதி$_3$கீர்தநாத் ।
தி$_3$வ்யாத்$_3$யுக்தேர்ந ஜீவ: ஸ்யாந்ந ப்ரதா$_4$நம் பி$_4$தோ$_3$க்தித: ।। 12

(அ..ம்)

"பூதயோநி" (பூதங்களுக்குக் காரணம்) என்பது பிரதானமா? அல்லது ஜீவனா? அல்லது ஈசுவரரா? "யோனி" என்ற சப்தம் காரணத்தைக் குறிக்கும் ஆனதினால் காரணம் என்பது உபாதான காரணம், நிமித்த காரணம் என்று இருவிதமாயிருப்பதால் முதலில் சொன்ன இரண்டு பக்ஷங்களும் (பிரதானம், ஜீவன்) தான் இருக்க வேண்டும்.
ஸர்வக்ஞத்தன்மை முதலியது சொல்லியிருப்பதால் "பூதயோனி" ஈசுவரராகத்தான் இருக்க வேண்டும். "திவ்யம்" என்பது முதலியது சொல்லியிருப்பதால் ஜீவன் அல்ல. வேற்றுமை சொல்லியிருப்பதால் பிரதானமும் இல்லை.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிரதானமே ஜகத்ரூபமாக பரிணமத்தையடைந்திருப்பதால் ஜகத்திற்கு அது உபாதான காரணம். தர்மாதர்மம் மூலமாக ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கு ஜீவன் நிமித்த காரணம். ஆகையால் இவ்விரண்டும் தான் பூத யோனியாய் இருக்க முடியும். ஈசுவரர் அல்ல.

ஸித்தாந்தம் :

அந்த பூதயோனியை வர்ணிக்கும் போது "यः सर्वज्ञः सर्ववित्,यस्य ज्ञानमयं तपः" "எவர் எல்லாமறிந்தவரோ, எல்லாவற்றையும் விசேஷமாய் அறிந்தவரோ, எவருடைய தபஸ் ஞானமயமோ", அதாவது எவர் பொதுவாக எல்லாவற்றையும் அறிவதுடன் அந்த எல்லாமென்பதில் சேர்ந்த ஒவ்வொரு வஸ்துவையும் தனித்தனியே அறிந்தவரோ, எவருக்கு தபஸ் என்பது நன்கு ஆலோசனை செய்வதேயாகுமோ என்று

இவ்விதம் சொல்லப்பட்டிருக்கும் லக்ஷணம் பிரஹ்மத்திற்குத் தான் பொருந்துமானதினால் பிரஹ்மந்தான் பூதயோனி. மேலும் அதையே

"दिव्यो ह्यमूर्तः पुरुषः सबाह्याभ्यन्तरो ह्यजः"

"அந்த ஸ்வயம் பிரகாசமான புருஷர் ரூபமற்றவர், வெளியிலும் உள்ளுமிருப்பவர், பிறப்பில்லாதவர்" என்று சொல்வதால் வெளியிலும் உள்ளும் வியாபிப்பவர், பிறப்பில்லாதவர் என்றுள்ள லக்ஷணம் மிகவும் அளவுக்குட்பட்டு பிறப்பு முதலியதுடன் கூடின ஜீவனிடம் பொருந்தாது. பிரதானத்தை பூதயோனியாகச் சொல்லலாமென்றால் "अक्षरात् परतः परः।" "மேலானதாயுள்ள அக்ஷரத்திற்கும் மேலாயுள்ளது" என்று "அக்ஷர" என்ற சப்தத்தில் சொல்லப்படும் பிரதானத்திற்கும் அப்பாலுள்ளதென்று வேறுபடுத்திச் சொல்லியிருப்பதால் அது பிரதானமாக இருக்க முடியாது. ஆகையால் பூதயோனி என்பது ஈசுவரர்தான்.

## ७. वैश्वानराधिकरणम्

### 7 *வைசுவாநராதி₄கரணம்*

(ஸூத்ரம் 24 - 32)

**वैश्वानरः साधारणशब्दविशेषात् ।। २४ ।।**

வைச்வாநர ஸாதா₄ரணசப்₃தவிசேஷாத் 24

(வைசுவாநரர் பரமாத்மா, ஸாதாரண சப்தத்தில் விசேஷமிருப்பதால்)

**स्मर्यमाणमनुमानं स्यादिति ।। २५ ।।**

ஸ்மர்யமாணமநுமாநம் ஸ்யாதி₃தி 25

(ஸ்மிருதியில் சொல்லப்படுவது லிங்கமாகும் என்பதால்)

**शब्दादिभ्योऽन्तः प्रतिष्ठानाच्च नेति चेन्न तथादृष्ट्युपदेशादसंभवात्पुरुषमपि चैनमधीयते ।। २६ ।।**

சப்தா₃தி₄ப்யோஅந்த: ப்ரதிஷ்டாநாச்ச நேதி சேந்ந ததா₂த்ருஷ்ட்யுபதே₃சாத₃ ஸம்ப₄வாத்புருஷமபி சைநமதீ₄யதே 26

(சப்தம் முதலானவைகளாலும் உள்ளே இருப்பதாலும் இல்லை என்றால், இல்லை அவ்வித திருஷ்டியின் உபதேசம் இருப்பதால் ஸம்பவமில்லாததால், இவரை புருஷன் என்றும் கூட சொல்கிறார்கள்)

**अत एव देवता भूतं च ।। २७ ।।**

அத ஏவ தே₃வதா பூ₄தம் ச 27

(அதினாலேயே தேவதையோ, பூதாக்னியோ இல்லை)

**साक्षादप्यविरोधं जैमिनिः ।। २८ ।।**

ஸாக்ஷாதப்யவிரோதம் ஜைமிநி: 28

(ஸாக்ஷாத்தாகக்கூட விரோதமில்லையென்று ஜைமினி (சொல்கிறார்))

**अभिव्यक्तेरित्याश्मरथ्यः ।। २९ ।।**

அபி₄வ்யக்தேரித்யாச்மரத்₂ய: 29
(அபிவ்யக்தியினால் என்று ஆச்மரத்யர்)
**अनुस्मृतेर्बादरि:।। ३० ।।**
அனுஸ்ம்ருதேர்பா₃த₃ரி: 30
(அனுஸரித்து நினைப்பதால் என்று பாதரி)
**संपत्तेरिति जैमिनिस्तथाहि दर्शयति।। ३१ ।।**
ஸம்பத்தேரிதி ஜைமிநிஸ்ததா₂ஹி த₃ர்சயதி 31
(ஸம்பத்தியினால் என்று ஜைமினி, அப்படியல்லவாகாட்டுகிறது)
**आमनन्ति चैनमस्मिन्।। ३२ ।।**
ஆமநந்தி சைநமஸ்மிந் 32
(மேலும், இவரை இதில் சொல்லுகிறார்கள்)

சாந்தோக்யத்தின் ஐந்தாவது அத்யாயத்தில் "आत्मानं वैश्वानरमुपास्ते" "வைசுவாநரர் ஆத்மாவை உபாஸிக்கிருர்" என்று காணப்படுகிறது. இங்கு சொல்லப்படும் வைசுவாநரர் யார்? என்பது இப்பொழுது விஷயம். இவர் ஜாடராக்னியா என்றெல்லாம் ஸந்தேஹம்.

**वैश्वानर: कौक्षभूतदेवजीवेश्वरेषु क:।**
**वैश्वानरात्मशब्दाभ्यामीश्वरान्येषु कश्चन।। १३ ।।**
**द्युमूर्धत्वादितो ब्रह्मशब्दाच्चेश्वर इष्यते।**
**वैश्वानरात्मशब्दौ ताविश्वरस्यापि वाचकौ।। १४ ।।**

வைச்வாநர கௌக்ஷபூ₄ததே₃வஜீவேச்வரேஷு க: ।
வைச்வாநராத்மசப்₃தா₃ப்₄யாமீச்வராந்யேஷு கச்சந ।। 13
த்₃யுமூர்த₄த்வாதி₃தோ ப்₃ரஹ்மசப்தா₃ச்சேச்வர இச்யதே ।
வைச்வாநராத்மசப்₃தௌ₃ தாவிச்வரஸ்யாபி வாசகௌ ।। 14

(அ..ம்)
வைசுவாநரர் என்பது ஜாடராக்னி, (பஞ்ச பூதங்களில் ஒன்ருகிய) பூத அக்னி, அக்னி தேவதை, ஜீவன், ஈசுவரர் இவைகளில் யார்? வைசுவாநரர் என்றும் "ஆத்மா" என்றுமுள்ள இரண்டு சப்தங்களால் ஈசுவரரைத் தவிர்த்து மற்றவைகளில் ஏதேனும் ஒன்று.
த்யுலோகத்தை சிரஸாகவுடையது என்பதிருப்பதினுலும் பிரஹ்மம் என்ற சப்தம் இருப்பதினுலும் ஈசுவரர்தான் என்று கருதப்படுகிறது. அந்த "வைசுவாநரர்", "ஆத்மா" என்ற இரண்டு சப்தங்களும் பிரஹ்மத்தையும் சொல்லும் வார்த்தைகளே.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
வேதத்தில் "**अयमग्निर्वैश्वानरो योऽयमन्त: पुरुषे ..... येनेदमन्नम् पच्यते ।**" "எந்த இது புருஷனுக்குள் இருக்கிறதோ, எதனுல் இந்த அன்னம் பாகம்

செய்யப்படுகிறதோ, இந்த அக்னி வைசுவாநரர்" என்று வைசுவாநர சப்தம் ஜாடராக்னி விஷயமாக உபயோகிக்கப்பட்டிருக்கிறது. "**विश्वस्मा अग्नि भुवनाय देवा वैश्वानरम्**" "எல்லா உலகத்திற்குமாக தேவர்கள் வைசுவாநர அக்னியை" என்றவிடத்தில் பூத அக்னியைச் சொல்கிறது. "**वैश्वानरस्य सुमतौ स्याम**" "வைசுவாநரருடைய நல்ல எண்ணத்தில் இருப்போமாக" என்றவிடத்தில் அக்னி தேவதையைக் குறிக்கிறது. ஆகையால் வைசுவாநரர் என்று சொல்லியிருப்பதால் ஜாடராக்னி, பூத அக்னி, அக்னி தேவதை இம் மூன்றுக்கும் பொருந்தும் ஆத்மா என்ற சப்தமோ ஜீவனிடத்தில் உலக பிரஸித்தமாயிருப்பதால் இங்கு சொல்லும் வைசுவாநரர் ஜீவனே. எவ்வாறேனும் ஈசுவரர் என்று காட்டுவதற்கு எவ்வித அடையாளமுமில்லை.

ஸித்தாந்தம் :

**"तस्य ह वा एतस्याऽऽत्मनो वैश्वानरस्य मूर्धैव सुतेजाः"**

"அந்த இந்த வைசுவாநர ஆத்மாவுக்கு சிரஸ்தான் நன்கு பிரகாசிக்கும் (த்யுலோகம்)" என்பது முதலான வாக்கியங்களால் இந்த வைசுவாநரருக்கு அவயவங்களாக த்யு லோகம் முதலிய ஜகத்பூராவும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இது ஈசுவரரைத் தவிர வேறு எங்கும் பொருந்தாது. மேலும், "**को न आत्मा, किं ब्रह्म।**" "நம் ஆத்மா யார்? பிரஹ்மம் எது" என்று பிரஹ்மம் என்ற சப்தம் ஈசுவரரிடத்தில் தான் முக்கியமாய் பிரயோகிக்கப்படுகிறது. வைசுவாநர சப்தத்திற்கு விசுவமாயுள்ள நரர் என்று பிரித்துப் பார்த்தால் எல்லா ஸ்வரூபமாயுள்ள புருஷர் என்ற முறையில் விசுவாநரர் என்று பிரஹ்மத்திற்குப் பொருத்தமாகும். விசுவாநரர் என்பதே வைசுவாநரர். ஆத்மா என்ற சப்தமோ, ஜீவனிடத்தில் எவ்வளவு பிரஸித்தமோ அவ்வளவு பிரஹ்மத்தினிடத்திலும் பிரஸித்தம். ஆகையால் வைசுவாநரர் என்பது பரமேசுவரர் தான்.

இவ்விதம் முதல் அத்யாயம் இரண்டாவது பாதத்தில் 7 அதிகரணங்கள் 14 சுலோகங்கள் (32 ஸூத்ரங்கள்).

================================

# १. द्युभ्वाद्यधिकरणम्

## 1. த்₃யுப்₄வாத்₃யதி₄கரணம்

(ஸூத்ரம் 1 - 7)

**द्युभ्वाद्यायतनं स्वशब्दात्।। १।।**

த்₃யுப்₄வாத்₃யாயதநம் ஸ்வசப்₃தா₃த் 1

(த்யு, பூ முதலியதன் ஆயதனம், (ப்ரஹ்மம்) தன் சப்தமிருப்பதால்)

**मुक्तोपसृप्यव्यपदेशात्।। २ ।।**

முக்தோபஸ்ருப்யவ்யபதே₃சாத் 2

(விடுபட்டவனால் நெருங்கி அடையவேண்டியதாகக் குறிப்பிடுவதினால்)

**नानुमानमतच्छब्दात्।। ३ ।।**

நானுமாநமதச்ச₂ப்₃தா₃த் 3

(அனுமானவழியாய் கூறும் பிரதானம் இல்லை, அதன் சப்தம் இல்லாததினால்)

**प्राणभृच्च।। ४ ।।**

ப்ராணப்₄ருச்ச 4

(பிராணனை தரிக்கிறவனும் இல்லை)

**भेदव्यपदेशात्।। ५ ।।**

பே₄த₃வ்யபதே₃சாத் 5

(வேற்றுமை சொல்லியிருப்பதால்)

**प्रकरणात् ।। ६ ।।**

ப்ரகரணாத் 6

(பிரகரணத்தினால்)

**स्थित्यदनाभ्यां च ।। ७ ।।**

ஸ்தி₂த்யத₃நாப்₄யாம் ச 7

( (உதாஸீனமாக) இருப்பு, சாப்பிடுவது இவைகளிலிருந்து )

முண்டகோபநிஷத்தில் "**यस्मिन्द्यौः पृथिवी चान्तरिक्षमोतं मनः सह प्राणैश्च सर्वैः। तमेवैकं जानथात्मानमन्या वाचो विमुञ्चथामृतस्यैष सेतुः ।।**" "எவரிடத்தில் த்யுலோகமும், பூலோகமும், அந்தரிக்ஷமும் கோர்க்கப் பட்டிருக்கிறதோ (எவரிடத்தில்) எல்லா பிராணன்களுடன் (இந்திரியங்களுடன் சேர்ந்து) மனஸ் கோர்க்கப்பட்டு இருக்கிறதோ அந்த ஒரு ஆத்மாவையே அறியுங்கள். மற்ற பேச்சுக்களை விட்டுவிடுங்கள். இவர் தான் மரணமற்ற தன்மைக்கு அணைக்கட்டு"

என்று சொல்லப்பட்டிருக்கிறது. அங்கே த்யுலோகம் முதலியவைகளுக்கு ஆதாரமாகச் சொல்லப்படுவது எது என்று இந்த அதிகரணத்தின் விஷயம்.

सूत्रं प्रधानं भोक्तेशो द्युभ्वाद्यायतनं भवेत्।
श्रुतिस्मृतिप्रसिद्धिभ्यां भोक्तृत्वादीश्वरेतरः ।। १।।
नाद्यौ पक्षावात्मशब्दात्र भोक्ता मुक्तगम्यतः ।
ब्रह्मप्रकरणादीशः सर्वज्ञत्वादितस्तथा।। २ ।।

ஸூத்ரம் ப்ரதா₄நம் போ₄க்தேசோ த்₃யுப்₄வாத்₃யாதநம் ப₄வேத் ।
ச்ருதிஸ்ம்ருதிப்ரஸித்₃தி₄ப்₄யாம் போ₄க்த்ருத்வாதீ₃ச்வரேதர: ।। 1
நாத்₃யௌ பக்ஷாவாத்மசப்₃தாந்ந போ₄க்தா முக்தக₃ம்யத: ।
ப்₃ரஹ்மப்ரகரணாதீ₃ச: ஸர்வஜ்ஞத்வாதி₃தஸ்ததா₂ ।। 2

(அ..ம்)

த்யுலோகம், பூலோகம் இவை முதலியதிற்கு ஆதாரமாயிருப்பது ஸூத்ராத்மாவா? பிரதானமா? ஜீவனு? ஈசுவரரா? சுருதியிலுள்ள பிரஸித்தி யாலும், ஸ்மிருதியிலுள்ள பிரஸித்தியாலும், போக்தாவாக இருப்பதாலும் ஈசுவரரைத் தவிர வேறுதான்.

ஆத்மா என்ற சப்தமிருப்பதால் முதல் இரண்டு பக்ஷங்களும் இல்லே. முக்தனுல் அடையப்படவேண்டியதாயிருப்பதால் ஜீவனுமில்லே. பிரஹ்மத்தைச் சொல்லும் பிரகரணமாயிருப்பதாலும், அப்படியே ஸர்வக்ஞத் தன்மை முதலியது சொல்லியிருப்பதாலும் ஈசுவரர்தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

த்யுலோகம், பூலோகம் முதலிய ஸகல ஜகத்தும் எதை ஆசிரயித்திருக்கிறதோ அதைத்தான் அறிய வேண்டும். எது ஆசிரயித்துக் கொண்டிருக்கிறதோ அதை அறிவதில் பிரயோஜனமில்லேயென்று இவ்வாக்கியம் சொல்வதால், சுருதியைப் பார்க்கும்போது "वायुना वै गौतम सूत्रेणायं च लोकः परश्च लोकः सर्वाणि च भूतानि संदृब्धानि भवन्ति" "ஹே கௌதம, வாயு என்ற ஸூத்ராத்மாவினுல் தான் இந்த லோகமும், மேலுள்ள லோகமும், எல்லா பூதங்களும் தாங்கப்படுபவைகளாக இருக்கின்றன" என்று பிரஸித்தியிருப்பதால் அந்த ஆதாரவஸ்து ஸூத்ராத்மா ஆகலாம். அல்லது ஸாங்கியர்களுடைய ஸ்மிருதியை பிரமாணமாக வைத்துக் கொண்டால் எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் இருப்பது பிரதானம் என்று தெரிவதால் அதையே எடுத்துக் கொள்ளலாம். அல்லது இந்த

வாக்கியத்தில் ஆத்மா என்று சொல்லியிருப்பதால் உலகப் பிரஸித்தியைக் கொண்டு ஜீவன் என்றே வைத்துக் கொள்ளலாம். எப்படியும் ஈசுவரர் அல்ல.

ஸித்தாந்தம் :

"ஆத்மா" என்ற சப்தம் உபயோகப்படுத்தியிருப்பதால் அந்த ஆதாரவஸ்து ஸூத்ராத்மாவாகவோ, பிரதானமாகவோ இருக்க முடியாது. **(यदा पश्यः पश्यते रुक्मवर्णं कर्तारमीशं पुरुषं ब्रह्मयोनिम्। तदा विद्वान्पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति)** எப்பொழுது (இதை) அறிகிறானோ அப்பொழுது புண்ய பாபங்களை உதறித்தள்ளிவிட்டு, எவ்வித அழுக்குமில்லாதவனாய், மேலான ஒன்றாயிருக்கும் தன்மையை அடைகிறான்" என்றும் **"ब्रह्म वेद ब्रह्मैव भवति "** "எவன் பிரஹ்மத்தை அறிகிறானோ அவன் பிரஹ்மமாகவே ஆகிவிடுகிறான்" என்று த்யுலோகம் முதலியதற்கு ஆதாரமாயுள்ள வஸ்துவிற்கு முக்தியடையும் புருஷனால் அடையப்படும் தன்மை சொல்லப் பட்டிருப்பதாலும், அந்த தன்மை ஸுகதுக்கங்களையனுபவிக்கும் ஜீவனுக்கு இருக்கக் கூடியதில் லாததினாலும் அந்த ஆதாரவஸ்து ஜீவன் அல்ல. தவிரவும் பூதயோனியைச் சொல்லிவரும் பிரகரணமாயிருப்பதாலும் ஸர்வக்ஞத்தன்மை முதலியதும் பிரஹ்மத்திற்கே பொருந்தியது ஆனதினாலும் இங்கு காண்கிற ஆதாரவஸ்து பிரஹ்மமேதான்.

## २. भूमाधिकरणम्

## 2. *பூ$_4$மாதி$_4$கரணம்*

(ஸூத்ரம் 8, 9)

**भूमा संप्रसादादध्युपदेशात्।। ८ ।।**

பூ$_4$மா ஸம்ப்ரஸாதா$_3$த$_3$த்$_4$யுபதே$_3$சாத் 8

(பூமா பரமாத்மாதான் பிராணனுக்கு மேலே உபதேசிக்கப்பட்டிருப்பதால்)

**धर्मोपपत्तेश्च।। ९ ।।**

த$_4$ர்மோபபத்தேச்ச 9

(தர்மங்கள் பொருந்துவதாலும்)

சாந்தோக்யம் ஏழாவது அத்யாயத்தில் நாரதரிடம் ஸனத்குமாரர் நாமம் முதல் ஆரம்பித்து மேல் மேல் உள்ள பிராணன் வரை 15 தத்வங்களை உபதேசித்து வந்து கடைசியில் எதற்கு மேல் எதுவும் கிடையாதோ அதை **"यत्र नान्यत्पश्यति नान्यच्छृणोति नान्यद्विजानाति स भूमा"** "எவ்விடத்தில் வேறுயுள்ளதை பார்ப்பதில்லையோ வேறுயுள்ளதை கேட்பதில்லையோ,

வேருயுள்ளதை அறிவதில்லையோ அது பூமா (பெரிது)" என்று சொல்லப்படுகிறது. அந்த வஸ்து, என்னவென்று விசாரணைக்கு விஷயம்.

भूमा प्राणः परेशो वा प्रश्नप्रत्युक्तिवर्जनात्।
अनुवर्त्यातिवादित्वं भूमोक्तेश्वासुरेव सः।। ३ ।।
विच्छिद्यैषत्विति प्राणं सत्यस्योपक्रमात्तथा।
महोपक्रम आत्मोक्तेरीशोऽयं द्वैतवारणात्।। ४ ।।

பூ₄மா ப்ராண: பரேசோ வா ப்ரச்நப்ரத்யுக்திவர்ஜநாத் ।
அனுவர்த்யாதிவாதி₃த்வம் பூ₄மோக்தேச்வாஸுரேவ ஸ: ।। 3
விச்சி₂த்₃யைஷத்விதி ப்ராணம் ஸத்யஸ்யோபக்ரமாத்ததா₂ ।
மஹோபக்ரம ஆத்மோக்தேரீசோஅயம் த்₃வைதவாரணாத் ।। 4

(அ..ம்)
பூமா என்பது பிராணனு? அல்லது பரமேசுவரரா? கேள்வி பதில் என்ற முறை விடப்பட்டிருப்பதாலும், "அதிவாதியாகவிருத்தல்" என்பதைத் தொடர்ந்தே பூமா சொல்லப்படுவதாலும், அது பிராணன் தான்.
"एष तु" "இவரோ என்றால் " என்று பிராணனை விட்டுவிட்டு, ஸத்யத்தைப்பற்றிஆரம்பித்திருப்பதாலும், அப்படியே உபநிஷத்தின் முதல் ஆரம்பத்தில் ஆத்மாவை சொல்லியிருப்பதாலும், இரண்டாயிருப்பது நிராகரிக்கப்படுவதாலும் இது ஈசுவரர்தான்.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
பெரிதென்று ஸனத்குமாரர் நாமம் முதலியவைகளைச் சொல்லிவரும் போது ஒவ்வொன்றும் சொல்லப்பட்டவுடன் "अस्ति भगवो भूयः" "ஹே பகவானே! இதைவிடப் பெரிது உண்டா? என்று நாரதர் கேட்டுக் கொண்டே வந்திருக்கிருர். பிராணனைப் பற்றி ஸனத்குமாரர் சொன்ன பிறகு "இதைவிடப் பெரிது உண்டா?" என்று நாரதர் கேட்கவுமில்லை. "உண்டு" என்று ஸனத்குமாரர் பதில் சொல்லவுமில்லை. அவ்விதம் சொல்லாமல் பூமாவைச் சொல்கிருர். ஆகையால் எல்லா வஸ்துக்களையும் விட பெரிதாயுள்ள பூமா என்பது பிராணன் தான் என்று ஏற்படுகிறது. பிராணனைப்பற்றி சொன்னதற்கும்,பூமாவைப் பற்றி சொன்னதற்கும் மத்தியில் இடைவெளியில்லை. தவிரவும் பிராணதத்வத்தை உபதேசித்து விட்டு அந்த பிராணனை உபாஸிக்கிறவன் "அதிவாதி" (மேலுள்ளதைப் பேசுபவன்) என்று அவனுடைய பெருமையைச்

சொல்லிவிட்டு அந்த அதிவாதித்தன்மையைத் தொடர்ந்தே பூமாவை உபதேசிப்பதால் பிராணனும், பூமாவும் ஒன்றென்று தெரிவிக்கிறார். ஆகையால் பூமா என்பது பிராணன் தான்.

ஸித்தாந்தம் :

ஸனத்குமாரர் பிராணனை சொல்லிவிட்டு அதை உபாஸிக்கிறவன் அதிவாதியென்றும் சிலாகித்துவிட்டு, பிறகு "एष तु वा अतिवदति यः सत्येनाति वदति" "ஆனால் எவன் ஸத்யத்தைக் கொண்டு அதிவாதம் செய்கிறானோ, அவன்தான் (வாஸ்தவமாய்) அதிவாதம் செய்கிறான் என்ற வாக்கியத்தில் "ஆனால்" என்ற சப்தத்தினால் பிராணோபாஸகனுடைய அதிவாதித் தன்மையை விலக்கிவிட்டு முக்கியமாய் உள்ள அதிவாதித் தன்மைக்குக் காரணமாயுள்ள பிரஹ்மத்தை ஸத்யம் என்ற சப்தத்தினால் தனியாக ஆரம்பிக்கிறார். அப்படியே உபநிஷத்தின் ஆரம்பத்தில் " तरति शोकमात्मवित् " "ஆத்மாவை அறிபவன் சோகத்தை கடக்கிறான்" என்று அறிய வேண்டிய பொருளாக பரமாத்மாவே சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியே பின்னால் "எவ்விடத்தில் வேறு எதையும் பார்ப்பதில்லையோ" என்று இரண்டாவது பதார்த்தத்தை நிராகரிப்பதின் மூலமாக பூமாவின் லக்ஷணம் சொல்லப்படுகிறது. ஆகையால் இரண்டாவதற்ற பரமாத்மா தான் பூமா.

## ३. अक्षराधिकरणम्

### 3. *அக்ஷராதி₄கரணம்*

(ஸூத்ரம் 10 - 12)

**अक्षरमम्बरान्तधृतेः ।। १० ।।**

அக்ஷரமம்ப₃ராந்தத்₄ருதே: 10

(அக்ஷரம் (ப்ரஹ்மம்) ஆகாசம்முடிய உள்ளதை தரிப்பதினால்)

**सा च प्रशासनात् ।। ११ ।।**

ஸா ச ப்ரசாஸநாத் 11

(அதுவோ நன்கு சாஸனம் செய்வதால்)

**अन्यभावव्यावृत्तेश्च ।। १२ ।।**

அந்யபா₄வாவ்யாவ்ருத்தேச்ச 12

(வேறு வஸ்துவின் தன்மையிலிருந்து விலக்கியிருப்பதாலும்)

பிருஹதாரண்யகம் ஐந்தாவது அத்யாயத்தில் கார்கியிடம் யாஜ்ஞ்யவல்க்ய மஹர்ஷி " एतद्वै तदक्षरं गार्गि ब्राह्मणा अभिवदन्ति अस्थूलमनण्वह्रस्वम् " "ஹே கார்க்கி! இதுதான் அந்த "அக்ஷரம்" அதை

பிராஹ்மணர்கள் நன்கு சொல்கிறுர்கள். ஸ்தூலமல்லாதது, அணுவல்லாதது, குட்டையல்லாதது" என்று சொல்கிறுர். "அக்ஷரம்" என்ற வஸ்து எது என்று இங்கு விஷயம்.

**अक्षरं प्रणवः किंवा ब्रह्म लोकेऽक्षराभिधा।**
**वर्णे प्रसिद्धा तेनात्र प्रणवः स्यादुपास्तये।। ५ ।।**
**अव्याकृताधारतोक्तेः सर्वधर्मनिषेधतः ।**
**शासनाद्द्रष्टृतादेश्च ब्रह्मैवाक्षरमुच्यते।। ६ ।।**

அக்ஷரம் ப்ரணவ: கிம்வா ப்$_3$ரஹ்ம லோகேஅக்ஷராபி$_4$தா$_4$ ।
வர்ணே ப்ரஸித்$_3$தா$_4$ தேநாத்ர ப்ரணவ: ஸ்யாது$_3$பாஸ்தயே ।। 5
அவ்யாக்ருதாதா$_4$ரதோக்தே: ஸர்வத$_4$ர்மநிஷேத$_4$த: ।
சாஸநாத்$_3$த்$_3$ரஷ்ட்டதாதே$_3$ச்ச ப்$_3$ரஹ்மைவாக்ஷரமுச்யதே ।। 6

(அ..ம்)
அக்ஷரம் என்பது பிரணவமா? அல்லது பிரஹ்மமா? உலகத்தில் அக்ஷரம் என்ற பெயர் வர்ணத்தில் (எழுத்தில்) பிரஸித்தமாய் இருக்கிறது. அதனுல் இங்கே உபாஸனைக்காகச் சொல்லப்படுவது பிரணவம்தான். அவ்யாகிருதத்திற்கும் ஆதாரமாகச் சொல்லப்பட்டு இருப்பதாலும், எல்லா தர்மங்களும் மறுக்கப்பட்டு இருப்பதாலும், ஆளுபவதினுலும், பார்க்கிறவருடைய தன்மை முதலியது சொல்லப்பட்டு இருப்பதாலும், பிரஹ்மந்தான் அக்ஷரம் என்று சொல்லப்படுகிறது.

(வி..ம்)
பூர்வபக்ஷம் :
**"येनाक्षरसामाम्नायमधिगम्य"** "எதனுல் அக்ஷரங்களுடைய கோர்வையை அறிந்து கொண்டு" என்பது முதலானவிடங்களில் வர்ணத்திற்கே அக்ஷரசப்தம் உபயோகிப்பது பிரஸித்தமாயிருக்கிறது. தவிரவும் இங்கே பிருகிருதத்தில் பிரணவமாகிற அக்ஷரத்தை உபாஸிக்கும்படி சொல்ல வேண்டியதாயிருக்கிறது. ஆகையால் இந்தவிடத்தில் அக்ஷரம் என்பது பிரணவமாகிற வர்ணத்தைத்தான் குறிக்கிறது.

ஸித்தாந்தம் :
அப்படியல்ல யாஜ்ஞ்யவல்க்யர் **"एतस्मिन्नु खल्वक्षरे गार्ग्याकाश ओतश्च प्रोतश्च"** "ஹே கார்க்கி! இந்த அக்ஷரத்திலல்லவா ஆகாசம் குறுக்கு நெடுக்காக கோர்க்கப் பட்டிருக்கிறது" என்று சொல்வதிலிருந்து ஆகாசம் என்ற சப்தத்தினுல் சொல்லப்படும் அவியாகிருதத்திற்கு ஆதாரமாக அக்ஷரம்

சொல்லப்படுகிறது. இவ்விதம் அவ்யாகிருதத்திற்கு ஆதாரமாயிருக்குந் தன்மை பிரணவத்திற்கு கொஞ்சமேனும் பொருந்தக் கூடியதில்லை. தவிரவும், ஸ்தூலமில்லாதது, அணுவல்லாதது, குட்டையல்லாதது என்று ஸம்ஸாரத்திலிருக்கக் கூடிய எல்லா தர்மங்களும் அக்ஷரத்தில் கிடையாதென்று சொல்லப்படுகிறது. . மேலும் "**एतस्य वाऽक्षरस्य प्रशासने गार्गि सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठतः**" "ஹே கார்க்கி! இந்த அக்ஷரத்தின் ஆளுகைக்குள்பட்டு ஸூர்யனும், சந்திரனும் நன்கு தாங்கப்பட்டு நிற்கிறார்கள்" என்று ஜகத்தையே ஆளுந்தன்மை அக்ஷரத்திற்குச் சொல்லியிருக்கிறது. இதுவும் தவிர " **तद्वा एतदक्षरं गार्ग्यदृष्टं द्रष्टृ अश्रुतं श्रोतृ**" "ஹே கார்க்கி! அந்த இந்த அக்ஷரம் பார்க்கப்படுவதில்லை, பார்ப்பது கேட்கப்படுவதில்லை, கேட்பது" என்று பார்க்குந்தன்மை முதலியதும் பிரமாணங்களினால் அறிய முடியாத தன்மையும் அக்ஷரத்திற்கு சொல்லப்பட்டிருக்கிறது. இந்த லக்ஷணங்கள் எதுவும் பிரணவத்திற்குப் பொருந்தாது. ஆகையால் இங்கு சொன்ன அக்ஷரம் பிரஹ்மம் தான்.

# ४. ईक्षतिकर्माधिकरणम्

## 4. *ஈக்ஷதிகர்மாதி₄கரணம்*

(ஸூத்ரம் 13)

**ईक्षतिकर्मव्यपदेशात्सः ।। १३ ।।**

ஈக்ஷதிகர்மவ்யபதே₃சாத்ஸ: 13

(பார்ப்பதற்கு கர்மாவாக (விசயமாக) சொல்லியிருப்பதால், அவர் பரபிரஹ்மம்)

பிரச்னோபநிஷத்தில் "**यः पुनरेतं विमात्रेणोमित्येतेनैवाक्षरेण परं पुरुषमभिध्यायीत**" "ஓம் என்ற மூன்று மாத்திரையுள்ள இந்த அக்ஷரத்தினாலேயே எவர் இந்த பரமபுருஷனை நன்கு தியானம் செய்கிறாரோ" என்றிருக்குமிடத்தில் சொல்லப்படும் பரமபுருஷன் என்பது யார்? என்பது இங்கே விஷயம்.

**त्रिमात्रप्रणवे ध्येयमपरं ब्रह्म वा परम्।**
**ब्रह्मलोकफलोक्त्यादेरपरं ब्रह्म गम्यते।। ७ ।।**
**ईक्षितव्यो जीवघनात्परस्तत्प्रत्यभिज्ञया।**
**भवेद्ध्येयं परं ब्रह्म क्रममुक्तिः फलिष्यति।। ८ ।।**

த்ரிமாத்ரப்ரணவே த்₄யேயமபரம் ப்₃ரஹ்ம வா பரம் ।
ப்₃ரஹ்மலோகப₂லோக்த்யாதே₃ரபரம் ப்₃ரஹ்ம க₃ம்யதே ।। 7
ஈக்ஷிதவ்யோ ஜீவக₄நாத்பரஸ்தத்ப்ரத்யபி₄ஜ்ஞயா ।
ப4வேத்₃த்₄யேயம் பரம் ப்₃ரஹ்ம க்ரமமுக்தி: ப₂லிஷ்யதி ।। 8

(அ..ம்)
மூன்று மாத்திரையுள்ள பிரணவத்தில் தியானிக்கப்பட வேண்டியது அபர பிரஹ்மமா? அல்லது பரபிரஹ்மமா? பிரஹ்ம லோகத்தை பலனுக சொல்லியிருப்பது முதலானதிலிருந்து அபரபிரஹ்மம் என்று தெரிகிறது. பார்க்கப்பட வேண்டியவர் (ஸாக்ஷாத் தரிசிக்க வேண்டியவர்) ஜீவர்களுக்கு மேலுள்ளவர். அவர் ஞாபகப்படுத்தப்படுவதால் தியானிக்கப்பட வேண்டியது பரபிரஹ்மந்தான் ஆகும். கிரமமுக்தி பின்னுல் பலனுக ஏற்படும்.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
"स सामभिरुन्नीयते ब्रह्मलोकम्" "அவன் ஸாமங்களினுல் பிரஹ்மலோகம் கொண்டு போகப்படுகிறுன்" என்று நான்முக பிரஹ்மாவின் லோகம் போவதாக பலன் சொல்லியிருப்பதாலும், பரபிரஹ்மத்தின் தியானத்தினுல் அந்த லோகம் வரையில் தான் பலன் என்பது பொருந்தாததினுலும், இங்கு கண்ட "பரமபுருஷன்" எனபது ஹிரண்யகர்பரென்று சொல்லப்படுகிற அபர பிரஹ்மம் தான். மற்றவர்களேயுத்தேசித்து இவர் மேலானவராகவேயிருப்பதால் மேலானவர் என்ற அடைமொழி இவரிடம் பொருந்தக் கூடியது தான்.

ஸித்தாந்தம் :
"स एतस्माज्जीवघनात्परात्परं पुरिशयं पुरुषमीक्षते"
அவன் இந்த மேலான ஜீவர்களுக்கு மேலாயுள்ள ஹ்ருதயத்திலிருக்கும் புருஷனேப் பார்க்கிறுன் என்று மேல் வாக்கியத்தில் காண்கிறது. அதாவது எவன் உபாஸனே செய்து பிரஹ்ம லோகத்தையடைகிறுனே அவன் இந்த எல்லா ஜீவர்களுடைய ஸமஷ்டியாய் மேலாகவிருக்கும் ஹிரண்யகர்ப்பரை விடவும் மேலானவராயும் எல்லா பிராணிகளுடைய ஹ்ருதயத்திலும் இருப்பவருமான பரமாத்மாவை ஸாக்ஷாத்கரிக்கிறுன் என்று சொல்லப்பட்டு இருக்கிறது. இங்கே ஸாக்ஷாத்கரிக்கப்பட வேண்டியவராக சொல்லப்படுகிற பரமாத்மா தான் ஆரம்பத்தில் தியானத்திற்கு விஷயமாக சொல்லப்பட்டிருக்கிறுர் என்று தெரிகிறது. இரண்டு இடங்களிலும் பரமபுருஷன் என்று மேலானவர், புருஷன் என்கிற இரண்டு சப்தங்களும் காணப்படுவதால் சொல்லப்படுவது ஒருவரேயென்று ஞாபகப்படுத்தப்படுகிறது. பிரஹ்மலோகத்தையடைவது மாத்திரம் தான் பலன் என்பதில்லே, அங்கிருந்தே கிரமமுக்தி ஏற்படுமானதினுல் தியானிக்க வேண்டியது பரபிரஹ்மந்தான்

# ५. दहराधिकरणम्

## 5. *த$_3$ஹராதி$_4$கரணம்*

(ஸூத்ரம் 14 - 21)

**दहर उत्तरेभ्यः ।। १४ ।।**

த$_3$ஹர உத்தரேப்$_4$ய: 14

(தஹராகாசம் பரமாத்மா பின் வாக்யத்திலுள்ள காரணங்களால்)

**गतिशब्दाभ्यां तथा हि दृष्टं लिङ्गं च ।। १५ ।।**

க$_3$திசப்$_3$தா$_3$ப்$_4$யாம் ததா$_2$ ஹி த்$_3$ருஷ்டம் லிங்க$_3$ம் ச 15

(கதி, சப்தம் இவைகளிலிருந்து, அப்படியேதான் லிங்கமும் காணப்படுகிறது)

**धृतेश्च महिम्नोऽस्यास्मिन्नुपलब्धेः ।। १६ ।।**

த்$_4$ருதேச்ச மஹிம்நோஅஸ்யாஸ்மிந்நுபலப்$_3$தே$_4$: 16

(தரிப்பது என்ற மகிமையாலும், அது இவரிடத்தில் காண்பதால்)

**प्रसिद्धेश्च ।। १७ ।।**

ப்ரஸித்$_3$தே$_4$ச்ச 17

(பிரஸித்தியினாலும்)

**इतरपरामर्शात्स इति चेन्नासंभवात् ।। १८ ।।**

இதரபராமர்சாத்ஸ இதி சேந்நாஸம்ப$_4$வாத் 18

(மற்றவனை (ஜீவனை) சொல்வதால் அவன் (தஹரம்) என்றால் ஸம்பவிக்காததினால்)

**उत्तराच्चेदाविर्भूतस्वरूपस्तु ।। १९ ।।**

உத்தராச்சேதா$_3$விர்பூ$_4$தஸ்வரூபஸ்து 19

(மேலுள்ள பிரஜாபதி வாக்யத்தால் என்றால், அவன் சோதிக்கப்பட்ட ஸ்வரூபமுள்ளவன்தான்)

**अन्यार्थश्च परामर्शः ।। २० ।।**

அந்யார்த$_2$ச்ச பராமர்ச: 20

(ஜீவனைக் குறிப்பிடுவதும் வேறு தாத்பர்யமுள்ளது)

**अल्पश्रुतेरिति चेत्तदुक्तम् ।। २१**

அல்பச்ருதேரிதி சேத்தது$_3$க்தம் 21

(சிறியதாகச் சொல்லியிருக்கிறதே என்றால் அது சொல்லப்பட்டு விட்டது)

தஹரவித்யைக்கு அடுத்தபடியாக பிரஜாபதிவித்யை சொல்லப்படுகிறது. சாந்தோக்யம் எட்டாவது அத்யாயத்தில் "**अथ यदिदमस्मिन्ब्रह्मपुरे दहरं पुण्डरीकं वेश्म, दहरोऽस्मिन्नन्तराकाशः, तस्मिन्यदन्तः, तदन्वेष्टव्यम्, तद्वाव विजिज्ञासितव्यम्**" "இனி இந்த பிரஹ்மபுரத்தில் சிறிதாய் கமலம் போல்

எந்த இந்த இருப்பிடம் இருக்கிறதோ, அதில் உள்ளே சிறியதாக ஆகாசம் உள்ளது.அதற்கும் உள்ளே எது இருக்கிறதோ அது தேடியடையப்படவேண்டும். அது தான் நன்கு அறிய ஆசைப்பட வேண்டியது "என்று சொல்லப்பட்டிருக்கிறது" "பிரஹ்மத்தை அறிந்து கொள்வதற்குள்ள ஸ்தானமாயிருப்பதால் இந்த சரீரம் பிரஹ்மபுரம் எனப்படுகிறது. அதில் சிறியதாக ஹ்ருதய கமலமாகிய இருப்பிடம் இருக்கிறது. அந்த இருப்பிடத்திற்குள்ளே சிறியதாக ஆகாசம் இருக்கிறது" என்று அர்த்தம். இவ்விதம் சொல்லப்படும் "ஆகாசம்" என்பது என்னவென்று இங்கே விசாரிக்கப்படுகிறது.

दहरः को वियज्जीवो ब्रह्म वाकाशशब्दतः।
वियत्स्यादथवाल्पत्वश्रुतेर्जीवो भविष्यति।। ९ ।।
बाह्याकाशोपमानेन द्युभूम्यादिसमाहितेः।
आत्मापहतपाप्मत्वात्सेतुत्वाच्च परेश्वरः।। १० ।।

த₃ஹர: கோ வியஜ்ஜீவோ ப்₃ரஹ்ம வாகாசசப்₃த₃த: ।
வியத்ஸ்யாத₃த₂வால்பத்வச்ருதேர்ஜீவோ ப₄விஷ்யதி ।। 9
பா₃ஹ்யாகாசோபமாநேந த்₃யுபூ₄ம்யாதி₃ஸமாஹிதே: ।
ஆத்மாபஹதபாப்மத்வாத்ஸேதுத்வாச்ச பரேச்வர: ।। 10

(அ..ம்)

தஹரகாசமானது, எது? பூத ஆகாசமா? ஜீவனா? பிரஹ்மமா? ஆகாசம் என்ற சப்தமிருப்பதால் பூத ஆகாசமாக இருக்கலாம். அல்லது சிறியதாயிருக்குந்தன்மை (சூக்ஷ்மமாய் இருக்கும் தன்மை) சொல்லப்பட்டிருப்பதால் ஜீவனாக இருக்கலாம்.

வெளியிலுள்ள ஆகாசத்தை உபமானமாகச் சொல்லியிருப்பதினாலும், த்யு லோகம், பூலோகம் முதலியது இதில் வைக்கப்பட்டிருப்பதினாலும், ஆத்மாவென்றும் பாபமற்றவனென்றும் சொல்லியிருப்பதாலும், ஸேது என்பதினாலும் தஹரர் பரமேசுவரர் தான்.

यः प्रजापतिविद्यायां स किं जीवोऽथवेश्वरः।
जाग्रत्स्वप्रसुषुप्तोक्तेस्तद्वाञ्जीव इहोचितः।। ११ ।।
आत्माऽपहतपाप्मेति प्रक्रम्यान्ते स उत्तमः।
पुमानित्युक्त ईशोऽत्र जाग्रदाद्यवबुद्धये।। १२ ।।

ய: ப்ரஜாபதிவித்₃யாயாம் ஸ கிம் ஜீவோஅத₂வேச்வர: ।
ஜாக்₃ரத்ஸ்வப்நஸுஷுப்தோக்தேஸ்தத்வாஞ்ஜீவ இஹோசித: ।। 11
ஆத்மாஅபஹதபாப்மேதி ப்ரக்ரம்யாந்தே ஸ உத்தம: ।

புமாநித்யுக்த ஈசோஅத்ர ஜாக்₃ரதா₃த்₃யவபு₃த்₃த₄யே ॥ 12

(அ..ம்)

பிரஜாபதி வித்யையில் எவர் சொல்லப்படுகிருரோ அவர் ஜீவனு? அல்லது ஈசுவரரா? விழிப்பு, கனவு, தூக்கம், இவை சொல்லப்பட்டிருப்பதால், அவைகளையுடைய ஜீவன் தான் இங்கே சொல்லப்படுகிறான் என்பது பொருத்தமாயுள்ளது.

ஆத்மா, பாபமற்றவர் என்று ஆரம்பித்து கடைசியில் அவர் உத்தமமான புருஷர் என்று சொல்லியிருப்பதால் இங்கு ஈசுவரர்தான். விழிப்பு முதலியது சொன்னது அவரை அறிந்து கொள்ள வேண்டியதற்காக.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஆகாசம் என்ற சப்தம் உலகத்தில் பூத ஆகாசத்திலேயே பிரஸித்தமாயிருப்பதால், இங்கு கண்ட சிறிய ஆகாசம் பூத ஆகாசமாகவே இருக்கலாம். அல்லது தஹராகசம் என்று சொல்வதால் அளவுக்குள்பட்டிருக்கும் ஜீவனுக இருக்கலாம். எப்படியும் ஸர்வவியாபகமான பிரஹ்மம் குறிக்கப்படமாட்டாது.

ஸித்தாந்தம் :

"यावान्वा अयमाकाशस्तावानेषोऽन्तर्हृदय आकाश:"

"இந்த ஆகாசம் எவ்வளவோ, அவ்வளவு ஹ்ருதயத்திலுள்ளேயிருக்கும் இந்த ஆகாசம்" என்று ஹ்ருதயத்திலுள்ள ஆகாசத்திற்கு உபமானமாக வெளியில் பிரஸித்தமாயுள்ள பூத ஆகாசம் சொல்லப்பட்டிருக்கிறது. தனக்கு தன்னையே உபமானமாகச் சொல்வது பொருந்தாது. ஆகையால் ஹ்ருதயத்திலுள்ள ஆகாசம் வெளியிலுள்ள பூத ஆகாசத்தை விட வேறு, அதுவில்லையென்று நன்கு தெரிகிறது. சிறிய அளவிற்குள்பட்டிருக்கும் ஜீவனுக்கு வியாபகமாயிருக்கும் பூத ஆகாசத்தை உபமானமாகச் சொல்வதும் பொருந்தாது. ஆகாச சப்தம் பூத ஆகாசத்தில் உலகத்தில் பிரஸித்தம் என்ருல் அந்த சப்தம் வேதத்தில் பிரஹ்மத்தைச் சொல்வதாக பிரஸித்தியிருக்கிறது. மேலும், " उभे अस्मिन्द्यावापृथिवी अन्तरेव समाहिते" "இதற்கு உள்ளேயே த்யுலோகம், பூலோகம் இரண்டும் வைக்கப்பட்டிருக்கின்றன" என்பது முதலான வாக்கியங்கள் ஜகத்பூராவிற்கும் ஆதாரமாயிருக்கும் தன்மை இந்த தஹராகாசத்திற்கு சொல்லப்படுகிறது. அப்படியே "अथैष आत्माऽपहतपाप्मा" "இந்த ஆத்மா எவ்வித பாபமுமற்றவர்" என்றும் "य

आत्मा स सेतुर्विधृतिः""ஆத்மா எவரோ அவர் அணை, தாங்குபவர்" என்பதனால் உலகவியவஸ்தைகள் ஒன்றோடொன்று கலந்து கெட்டுவிடாமல் தடுத்துக் காப்பாற்றி வருகிறவர் என்றும் சொல்லப்படுகிறது. இந்த லக்ஷணங்கள் பூத ஆகாசத்திற்கோ ஜீவனுக்கோ பொருந்தாது. இவ்விதமுள்ள காரணங்களால் இங்கு சொல்லப்பட்ட தஹராகாசம் பரமாத்மா தான். அங்கு தேவர்களின் அரசன் இந்திரனும், அஸுரர்களின் அரசன் விரோசனனும் பிரஹ்மாவிடம் ஆத்ம தத்வத்தைப்பற்றி கேட்டபோது பிரஹ்மா " य एषोऽक्षिणि पुरुषो दृश्यते, एष आत्मेति होवाच" "எந்த இந்த புருஷன் கண்ணிற்குள் தெரிகிறாரோ அவர் ஆத்மா என்று சொன்னார்" என்று உபநிஷத் சொல்கிறது. இங்கே சொன்ன ஆத்மா ஜீவாத்மாவா? பரமாத்மாவா? என்று விசாரம்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

இந்தவிடத்தில் "अक्षिणि पुरुषः" " புருஷன் கண்ணில் (தெரிகிறான்)" என்பதிலிருந்து விழிப்பு நிலை சொல்லப்பட்டதாக ஆகிறது. "य एष स्वप्ने महीयमानश्चरति" "எந்த இவர் ஸ்வப்னத்துடன் பெருமையுடன் ஸஞ்சரிக்கிறாரோ" என்பதினால் ஸ்வப்னம் சொல்லப்படுகிறது. "सुप्तः समस्तः संप्रसन्नः स्वप्नं न विजानाति" "தூங்குகிறவர் எல்லா மடங்கினவராக நன்கு பிரஸன்னராக இருந்து கொண்டு ஸ்வப்னத்தை அறிவதில்லை" என்பதினால் தூக்கமும் சொல்லப்படுகிறது. இந்த மூன்று நிலைகளும் எடுத்துச் சொல்லப்படுவதால் அந்த நிலைகளையுடைய ஜீவன்தான் குறிக்கப்படுகிறார் என்பது உசிதமாகும். ஈசுவரருக்கோ இந்த மூன்று நிலைகளும் கிடையாததினால் அவர் இங்கே சொல்லப்படுபவர் ஆகமாட்டார்.

ஸித்தாந்தம் :

"य आत्माऽपहतपाप्मा विजरो विमृत्युः"

"எந்த ஆத்மா பாபமற்றவரோ, ஜரையற்றவரோ, மரணமற்றவரோ" என்று பரமாத்மாவைப்பற்றி ஆரம்பித்து "स उत्तमः पुरुषः" "அவர் உத்தமமான புருஷர்" என்று பரமாத்மாவிலேயே முடிப்பதால் இங்கு சொன்னது ஈசுவரர் தான். அப்படியானால் விழிப்பு முதலியதை விஸ்தரித்துச் சொன்னது வீண் என்று ஆகிவிடுமேயென்றால் அப்படியல்ல. பரமாத்மாவை நேரில் சுட்டிக்காட்ட முடியாததினால் மரத்து கிளையைக் காட்டி சந்திரனை (அதிலிருப்பது போல் கண்டு)

தெரிவிப்பது போல பரமாத்மாவைத் தெரிவிக்க இந்த நிலைகள் ஒருவாறு படிக்கட்டாக உபயோகப் படுகின்றன. ஆகையால் இங்கு சொன்ன "கண்ணிலுள்ள புருஷன்" என்பது ஈசுவரர் தான்.

## ६. अनुकृत्यधिकरणम्

## 6. அனுகிருத்யதி₄கரணம

(ஸூத்ரம் 22,23)

**अनुकृतेस्तस्य च ।। २२ ।।**

அனுக்ருதேஸ்தஸ்ய ச 22

(அனுகரணம் செய்வதாலும், அதனுடையவும்)

**अपि च स्मर्यते ।। २३ ।।**

அபி ச ஸ்மர்யதே 23

(மேலும் ஸ்மரிக்கவும்படுகிறது)

முண்டகோபநிஷத்தில் "न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः। तमेव भान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति।।" "அதனிடத்தில் ஸூர்யன் பிரகாசிக்கிறதில்லை, சந்திரனும் நக்ஷத்ரங்களும் பிரகாசிக்கிறதில்லை, இந்த மின்னல்களும் பிரகாசிக்கிறதில்லை. இந்த அக்னி எப்படி பிரகாசிக்கும்? பிரகாசித்துக் கொண்டிருக்கிற அவரையே அனுஸரித்து எல்லாம் பிரகாசிக்கின்றன. அவருடைய பிரகாசத்தினுல் தான் இதெல்லாம் பிரகாசிக்கின்றன" என்று ஜகத்திற்கெல்லாம் பிரகாசம் கொடுப்பதாக சொன்ன வஸ்து எது என்பது இங்கு விஷயம்.

**न तत्र सूर्यो भातीति तेजोऽन्तरमुतापि चित्।**
**तेजोऽभिभावकत्वेन तेजोऽन्तरमिदं महत् ।। १३ ।।**
**चित्स्यात्सूर्याद्यभास्यत्वात्तादृक्तेजोऽप्रसिद्धितः।**
**सर्वस्मात्पुरतो भानात्तद्भासाचान्यभासनात्।। १४ ।।**

ந தத்ர ஸூர்யோ பா₄தீதி தேஜோஅந்தரமுதாபி சித் ।
தேஜோஅபி₄பா₄வகத்வேந தேஜோஅந்தரமிதம்₃ மஹத் ।। 13.
சித்ஸ்யாத்ஸூர்யாத்₃யபா₄ஸ்யத்வாத்தாத்₃ருக்தேஜோஅப்ரஸித்₃தி₄த:।
ஸர்வஸ்மாத்புரதோ பா₄நாத்தத்₃பா₄ஸாசாந்யபா₄ஸநாத் ।। 14

(அ..ம்)

"அவரிடத்தில் ஸூர்யன் பிரகாசிக்கிறதில்லை" என்பது வேறு தேஜஸா? அல்லது இங்கே சைதன்யமா? (மற்ற) தேஜஸ்களை

பிரயோஜனமற்றதாகச் செய்யும் தன்மையினுல் இது பெரிதாயுள்ள வேருெரு தேஜஸ்.

ஸூர்யன் முதலியனவைகளால் பிரகாசப்படுத்த முடியாததினுலும், (ஸூர்யன் முதலியதின் தேஜஸை வீணுகச் செய்யக்கூடிய) அப்படியுள்ளவேறு தேஜஸ் இருப்பதாக பிரஸித்தியில்லாததினுலும் சைதன்யமாகத் தான் இருக்க வேண்டும். (உலகத்தில் பிரகாசிக்கிற) எல்லாவற்றிற்கும் முன்னுலேயே பிரகாசித்துக் கொண்டிருப்பதால் அதனுடைய பிரகாசத்தினுல் தான் மற்றவைகள் பிரகாசிக்கின்றன.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

உலகத்தில் ஸூர்யனுடைய வெளிச்சத்தில் தீபம் எப்படி பிரகாசமற்று மங்கி விடுகிறதோ அதே மாதிரி ஸூர்யன் முதலியவைகளை விட இன்னும் பெரிதாயுள்ள வெளிச்சம் இருந்தால் இவை பிரகாசமற்றதாக ஆகிவிடும்.

ஆகையால் கண்ணுக்குத் தெரிகிற வெளிச்சம் போல ஸூர்யன் முதலியவைகளையும் விட வெகு அதிகமாய் பிரகாசிக்கும் ஏதோ வெளிச்சமுள்ள வஸ்து தான் இங்கே சொல்லப்பட்டிருக்கிறது.

ஸித்தாந்தம் :

அப்படி ஸூர்யன் முதலானவைகளுடைய தேஜஸை வீணுக்கும் படியான வெளிச்சமிருப்பதாக எங்கும் பிரஸித்தி கிடையாது. தவிரவும், ஸூர்யன் முதற்கொண்டு பிரகாசிக்கிறதாகத் தெரிய வேண்டுமானுல் அதற்கு முன்னுலேயே அதை அறியக்கூடிய சைதன்யம் இருந்துதீர வேண்டும். அப்படி முன்னுலேயேயிருக்கும் தன்மை சைதன்யத்திற்குத்தான் உண்டு. அதனுல் தான் "பிரகாசிக்கிறதாயுள்ள அவரை அனுஸரித்தே எல்லாம் பிரகாசிக்கிறது" என்று சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் ஸூர்யன் முதலியவைகளின் வெளிச்சம் இருப்பதையும், வெளிச்சமில்லாமல் இருட்டாயிருப்பதையும், ஆக உலகம் யாவற்றையும் அறியக்கூடிய சக்தி சைதன்யத்திற்குத் தான் உண்டு. அதினுலேயே "அதனுடைய பிரகாசத்தினுல் இது எல்லாம் பிரகாசிக்கிறது" என்று ஸூர்ய சந்திராதிகள் உள்பட அவைகளின் இல்லாமையுள்பட எல்லாவற்றையும் அறிவிற்கு விஷயமாக்கிப் பிரகாசிக்கும்படிச் செய்கிறது. ஆகையால் இந்த வாக்கியத்தில் சொல்லப்படும் வஸ்து வெறும் வெளிச்சம் போலுள்ள ஜடமான வஸ்துவல்ல.

எல்லாவற்றையும் அறிவினல் விளங்கச் செய்கின்ற சக்தி வாய்ந்த சைதன்யமே.

# ७. प्रमिताधिकरणम्

## 7. ப்ரமிதாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 24,25)

**शब्दादेव प्रमितः ।। २४ ।।**

சப்$_3$தா$_3$தே$_3$வ ப்ரமித: 24

(சப்தத்தினாலேயே, அளவிடப்பட்டவர்)

**हृद्यपेक्षया तु मनुष्याधिकारात्।। २५ ।।**

ஹ்ருத்$_3$யபேக்ஷயா து மனுஷ்யாதி$_4$காராத் 25

(ஹிருதயத்தில் அபேக்ஷயால் தான், மனுஷ்யனுக்கு அதிகாரமுள்ளதால்)

கடோபநிஷத்தில் "**अङ्गुष्ठमात्रः पुरुषो मध्य आत्मनि तिष्ठति। ईशानो भूतभव्यस्य स एवाद्य सउश्वः**" "சரீரத்தில் மத்தியில் உண்டானது, உண்டாகப் போவது எல்லாவற்றையும் ஆளுபவராக கட்டைவிரல் அளவுள்ள புருஷன் இருக்கிருன்" என்று நான்காவது வல்லியில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த அளவுள்ள புருஷன் யார் என்று இதில் தீர்மானிக்கப்படுகிறது.

**अङ्गुष्ठमात्रो जीवः स्यादीशो वाऽल्पप्रमाणतः।**
**देहमध्ये स्थितेश्चैव जीवो भवितुमर्हति।। १५ ।।**
**भूतभव्येशताजीवे नास्त्यतोऽसाविहेश्वरः।**
**स्थितिप्रमाणे ईशेऽपि स्तो हृद्यस्योपलब्धितः ।। १६ ।।**

அங்கு$_3$ஷ்ட$_2$மாத்ரோ ஜீவ: ஸ்யாதீ$_3$சோ வாஅல்பப்ரமாணத: ।
தே$_3$ஹமத்$_4$யே ஸ்தி$_2$தேச்சைவ ஜீவோ ப$_4$விதுமர்ஹதி ।। 15
பூ$_4$தப$_4$வ்யேசதாஜீவே நாஸ்த்யதோஅஸாவிஹேச்வர: ।
ஸ்தி$_2$திப்ரமாணே ஈசேபி ஸ்தோ ஹ்ருத்$_3$யஸ்யோபலப்$_3$தி$_4$த: ।। 16

(அ..ம்)

கட்டைவிரல் அளவுள்ளவர் ஜீவனு? ஈசுவரரா? சிறியதான அளவு சொல்லப்படுவதினுலும், சரீரத்தின் மத்தியில் இருப்பதினுலும், ஜீவனுக இருப்பது தான் நியாயம்.

உண்டானது, உண்டாகப்போவது இவைகளுக்கெல்லாம் ஆளுபவராக இருக்கும் தன்மை ஜீவனிடத்தில் கிடையாது. ஆகையால் இங்கே இவர் ஈசுவரர் தான். இவரை ஹ்ருதயத்தில் அறியவேண்டியிருப்பதால்,

ஈசுவரரிடத்திலும் (சரீர மத்தியில்) இருப்பு (கட்டைவிரல்) அளவு என்பதும் இருக்கும்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

கட்டைவிரல் என்ற அளவு மிகவும் சிறியதாயிருப்பதால் ஸர்வ வியாபகமாயுள்ள ஈசுவரரிடம் அந்த அளவு உள்ளவர் என்பது பொருந்தாது. அதே காரணத்தினால் அவர் சரீரத்திற்குள் அடங்கியிருப்பவர் என்பதும் பொருந்தாது. இந்த இரண்டு லக்ஷணங்களும் ஜீவனிடமே பொருந்து மானதினால் இங்கே சொல்லப்படுவது ஜீவன்.

ஸித்தாந்தம் :

"உண்டானது, உண்டாகப்போவது எல்லாவற்றையும் ஆளுபவர்" என்பதால் அநாதிகாலமாய் தோன்றி விளங்கி மறைந்த எல்லா உலகங்களையும் இனி அனந்தமான காலத்தில் தோன்றி விளங்கி மறைந்து போகக் கூடிய உலகங்களையும் ஆளுபவர் என்று தாத்பர்யம். இந்த லக்ஷணம் ஒரு நாளும் ஜீவனிடம் பொருந்தாது. தவிரவும் ஜீவனுமே ஆளப்படும் தன்மையுள்ளவனானதால் அவனை ஆளுபவன் என்று சொல்வதே பொருந்தாது. ஈசுவரர் விஷயத்திலோ ஜீவன் உள்பட ஸகல ஜகத்தையும் எப்பொழுதுமே ஆளும் சக்தியிருந்து வருகிறது. அவரை அறிய வேண்டிய இடமாக ஹ்ருதய கமலத்தைச் சொல்வதால் அவர் தேஹ மத்தியில் இருப்பதாகவும், அந்த ஹ்ருதய கமலத்திற்குத் தக்கபடி உபாதியினால் ஏற்பட்ட கட்டைவிரல் அளவு உள்ளவராகவும் சொல்வதைத் தவிர வேறில்லை. ஆகையால் இங்கே கட்டைவிரல் அளவுள்ளவர் என்பது பரமேசுவரர்தான்.

# ८.देवताधिकरणम्

## 8. தே₃வதாதி₄கரணம்

(ஸூத்ரம் 26 - 33)

**तदुपर्यपि बादरायणः संभवात् ।। २६ ।।**

தது₃பர்யபி பா₃த₃ராயண: ஸம்ப₄வாத் 26

(அதற்கு மேலேயும் பாதராயணர், ஸம்பவிப்பதால்)

**विरोधः कर्मणीति चेन्नानेकप्रतिपत्तेर्दर्शनात् ।। २७ ।।**

விரோத₄: கர்மணீதி சேந்நாநேகப்ரதிபத்தே₃ர்தர்சநாத் 27

(கர்மாவில் விரோதம் என்றால், இல்லை, பலவாக இருப்பது

காணப்படுவதால்)

शब्द इति चेन्नातः प्रभवात्प्रत्यक्षानुमानाभ्याम्।। २८ ।।

சப்₃த இதி சேந்நாத: ப்ரப₄வாத்ப்ரத்யக்ஷானுமாநாப்₄யாம் 28
(சப்தத்தில் என்றால் இல்லை, அதிலிருந்து உண்டாவதால்,
பிரத்யக்ஷம் அனுமானம் இவைகளால்)

अत एव च नित्यत्वम् ।। २९ ।।

அத ஏவ ச நித்யத்வம் 29
(இதினாலேயும்கூட, நித்யத்தன்மை)

समाननामरूपत्वाच्चावृत्तावाप्यविरोधो दर्शनात्स्मृतेश्च।।३०।।

ஸமாநநாமருபத்வாச்சாவ்ருத்தாவாப்யவிரோதோ₄
த₃ர்சநாத்ஸ்ம்ருதேச்ச 30
(திரும்பவும் சிருஷ்டியில்கூட ஸமானமான நாம ரூபமிருப்பதினாலும்
விரோதமில்லை, காண்பதால், ஸ்மிருதியினாலும்)

मध्वादिष्वसंभवादनधिकारं जैमिनिः।। ३१ ।।

மத்₄வாதி₃ஷ்வஸம்ப₄வாத₃நதி₄காரம் ஜைமிநி: 31
(மதுவித்யை முதலியவைகளில் ஸம்பவிக்காததினால்
அதிகாரமில்லையென்று ஜைமினி)

ज्योतिषि भावाच्च ।। ३२ ।।

ஜ்யோதிஷி பா₄வாச்ச 32
(ஜ்யோதிஸில் இருப்பதாலும்)

भावं तु बादरायणोऽस्ति हि।। ३३।।

பா₄வம் து பா₃த₃ராயணோஅஸ்தி ஹி 33
(ஆனால் உண்டு என்கிறார் பாதராயணர் இருக்கிறதே)

பிருஹதாரண்யகம் மூன்றுவது அத்யாயத்தில் "तद्यो यो देवानां प्रत्यबुध्यत स एव तदभवत्, तथर्षीणाम्" "தேவர்களில் எவர் எவர் அதையறிந்தாரோ அவரே அதுவாக ஆகிவிட்டார், அப்படியே ரிஷிகளிலும்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. பிரஹ்மத்தை அறியும் விஷயத்தில் தேவர்களுக்கு அதிகாரமுண்டா? என்று இங்கு விசாரணை.

नाधिक्रियन्ते विद्यायां देवाः किंवाधिकारिणः।
विदेहत्वेन सामर्थ्यहानेर्नैषामधिक्रिया।। १७ ।।
अविरुद्धाज्ञातवादिमन्त्रादेर्देहसत्त्वतः ।
अर्थित्वादेश्च सौलभ्याद्देवाद्या अधिकारिणः।। १८ ।।

நாதி₄க்ரியந்தே வித்₃யாயாம் தே₃வா: கிம்வாதி₄காரிண: ।
விதே₃ஹத்வேந ஸாமர்த்₂யஹாநேர்நைஷாமதி₄க்ரியா ।। 17
அவிருத்₃தா₄ஜ்ஞாதவாதி₃மந்த்ராதே₃ர்தே₃ஹஸத்த்வத: ।
அர்தி₂த்வாதே₃ச்ச ஸௌலப்₄யாத்₃தேவாத்₃யா அதி₄காரிண: ।। 18

(அ..ம்)
வித்யையில் தேவர்கள் அதிகாரமற்றவர்களா? அல்லது அதிகாரம் உள்ளவர்களா? சரீரமற்ற தன்மையினுல் ஸாமர்த்தியம் இராததினுல் இவர்களுக்கு அதிகாரம் கிடையாது.
விரோதமில்லாத தெரிந்ததில்லாததைச் சொல்லும் மந்திரம் முதலியதிலிருந்து (தேவர்களுக்கு) சரீரம் இருப்பதாகத் தெரிவதாலும் ஆசைப்படும் தன்மை முதலியது (அவர்களிடமும்) இருப்பது ஸுலபமானதினுலும் தேவர் முதலானவர்களும் அதிகாரிகள்
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
(பலன்) வேண்டுமென்று நினைப்பவன், (ஸாதனத்தை அனுஷ்டிக்க) ஸாமர்த்தியமுள்ளவன், (செய்ய வேண்டியதை நன்கு) அறிந்தவன் சாஸ்திரத்தினுல் தடுக்கப்படாதவன் எவனே அவன் அதிகாரமுள்ளவன் என்று அதிகாரமிருப்பதற்கு வேண்டியதான அம்சங்கள் யாவும் சரீரமேயில்லாத தேவர்களிடத்தில் இருக்க முடியாததினுல் அவர்களுக்கு அதிகாரம் கிடையாது. வேதத்திலுள்ள மந்திரங்கள் அர்த்த வாதங்கள் முதலான பாகங்களில் தேவர்களுக்கு விக்ரஹம் (உடல்) சொல்லியிருக்கிறதே என்றால் அந்த வாக்கியங்களெல்லாம் விதிக்கப் படும் கர்மாவிடத்தில் ஒட்டி அதிலேயே தாத்பர்யமுள்ளதால் தனித்து தான் சொல்லும் அர்த்தத்தில் தாத்பர்யமற்றவையே: ஆகையால் அந்த வாக்கியங்கள் தேவர்களுக்கு சரீரமுண்டென்று ஸாதிக்கப்போதுமானவை அல்ல. சரீரமில்லாததினுல் அவர்களுக்கு வேதத்தில்சொல்லியிருக்கும் ஸாதனங்களை அனுஷ்டிப்பதற்கு வேண்டிய ஸாமர்த்தியம் கிடையாது. ஆகையால் அவர்களுக்கு அதிகாரம் கிடையாது.

ஸித்தாந்தம் :
அர்த்தவாதம் என்பது மூன்று விதமுண்டு. (1)குணவாதம் (2) அனுவாதம் (3) பூதார்த்தவாதம் என்று அவைகளின் லக்ஷணம்

विरोधे गुणवादः स्यादनुवादोऽवधारिते।
भूतार्थवादस्तद्धानादर्थवादस्त्रिधा मतः ।।

"விரோதமிருந்தால் குணவாதம் ஆகும் முன்னமேயே தீர்மானிக்கப் பட்டிருந்தால் அனுவாதம் இரண்டுமில்லாதபோது பூதார்த்தவாதம் என்று அர்த்தவாதம் மூன்று விதமாக கருதப்படுகிறது" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது (1) யாகத்திலுள்ள "யூபஸ்தம்பம்

ஆதித்யன்" "आदित्यो यूप:" "யாகம் செய்கிறவன் விரிப்பு" "यजमान: प्रस्तर:" என்பது முதலியவிடங்களில் ஆதித்யன் யூபமில்லை, யஜமானன் விரிப்பும் இல்லை என்று பிரத்யக்ஷமாய் தெரிவதினுல் புத்தியில்லாத மனிதனை மாடு என்றும், நல்ல தபஸ்வியை நெருப்பு என்றும் சொல்வது போல ஏதோ இரண்டிற்கும் ஸமானமாயுள்ள ஒரு குணத்தை வைத்து அவ்விதம் சொல்லப்பட்டிருக்கிறது என்ற முறையில் குணவாதம் எனப்படும். (2) "அக்னி பனிக்கு மருந்து" " अग्निर्हिमस्य भेषजम् " "வாயு வெகு வேகமாய் போகும் தேவதையே" "वायुर्वै क्षेपिष्ठा देवता" முதலானவிடங்களில் இதில் கண்ட விஷயம் ஏற்கனவே நமக்கு பிரத்யக்ஷாதி பிரமாணங்களால் தெரிந்தேயிருப்பதால் இதைச் சொல்லும் வாக்கியம் அனுவாதம் எனப்படும். (3) "இந்திரன் விருத்ரனை உத்தேசித்து வஜ்ராயுதத்தை மேலே தூக்கினுன்" "इन्द्रो वृत्राय वज्रमुदयच्छत्" என்பது முதலிய இடங்களில் பிரத்யக்ஷாதி பிரமாணங்களுக்கு விரோதமாய் எதுவுமில்லை. நமக்கு ஏற்கனவே தெரிந்ததை திரும்பச் சொன்னதாகவுமில்லை. அப்படியிருக்க இவைகளுக்கு வாஸ்தவமாயுள்ள விஷயங்களையே சொல்லுகின்றன என்று வைத்துக்கொள்வதில் எவ்வித தோஷமும் இல்லாததினுல் பூதார்த்தவாதம் (உள்ள விஷயத்தை சொல்லுதல்) எனப்படும்.அந்த பூதார்த்தவாதமாகிய வாக்கியங்களைக் கேட்கும்போது நம் மனதில் அர்த்தம் ஏற்படுகிறபடியால் அந்த அர்த்தம் வேறு எந்த பிரமாணத்திற்கும் விரோதமில்லாமிலிருப்பதாலும் அது முன்னுலே தெரியாததினுலும் அந்த அர்த்தத்தைச் சொல்லும் வாக்கியங்களுக்கு பிராமாண்யம் கிடையாது என்று சொல்வது நியாயமாகாது. அந்த வாக்கியங்களுக்கு கர்மாக்களை விதிக்கும் வாக்கியத்துடன் ஈடுபாடிருந்து அதிலேயே பரம தாத்பர்யம் இருந்த போதிலும் தனக்குள் அர்த்தத்தை வெளிப்படுத்துவதில் ஸாமர்த்தியம் இல்லாமல் போகாது. தான் வெளியிடும் அர்த்தம் அவாந்திர தாத்பர்யமாயிருந்தபோதிலும் அதற்கும் பிராமாண்யம் உண்டு தான். இவ்விதமாக பூதார்த்த வாதமாகவிருக்கும் வாக்கியங்களுக்கு பிராமாண்யமுன்டென்று ஏற்படுகிறது. இதே நியாயம் மந்திரங்களில் சொல்லப்படும் விஷயங்களுக்கும் பொருந்தும். இவ்விதமிருப்பதால் மந்திரங்கள் அர்த்தவாதம் முதலிய வாக்கியங்களில் கண்டபடி தேவாதிகளுக்கு சரீரம் உண்டென்று ஏற்படுகிறது. சரீரம் இருப்பதினுல் சிரவணம் முதலான ஸாதனங்களை அனுஷ்டிப்பதற்கு வேண்டிய ஸாமர்த்தியம் இருந்தே தீரும். தாங்கள் அனுபவிக்கும் ஐசுவர்யம்

நாசமடையக்கூடியது, தாரதம்யமுள்ளது என்பதைப் பார்ப்பதினால் நாசமற்று சாசுவதமாய் தாரதம்யமற்று ஸர்வோத்தமமாய் உள்ள மோக்ஷ நிலையடைய ஸாதனமாயுள்ள பிரஹ்ம வித்யையில் அவர்களுக்கும் ஆசையிருப்பது ஸஹஜம். அவர்களுக்கு உபநயனம் அத்யயனம் இல்லையானாலும், தானாகவே அவர்களுக்கு வேதம் ஸ்புரிக்குமானதினால் வித்வானாகவுமிருப்பார்கள். அவர்களுக்கு பிரஹ்ம வித்யை கிடையாதென்று தடுக்கும் சாஸ்திரமும் கிடையாது. ஆகையால் அதிகாரத்திற்கு வேண்டியதாக பூர்வபக்ஷத்தில் காட்டிய நான்கு அம்சங்களும் தேவாதிகளிடம் இருப்பதால் அவர்களுக்கு அதிகாரமுண்டு என்றே தீர்மானம். ஸகுண பிரஹ்ம உபாஸனைகளில் சிலவற்றில் ஆதித்யன் முதலானவர்களின் தியானமும் கலந்திருக்கும். அவ்விதமிருக்கும் போது ஆதித்யன் முதலானவர்கள் தியானிக்கும்படி அவர்களைவிட வேறு ஆதித்யாதிகள் கிடையாததினால் தியானத்திற்கு இடமில்லை. அப்படியே ஆதித்யன் முதலானவர்களின் பதவிகளையே உபாஸனையின் பலனாகவுடைய உபாஸனைகளில் ஆதித்யாதிகளாக இப்பொழுதேயிருப்பவர்கள் ஈடுபட அவசியமில்லாமலிருப்பதால் அவ்வுபாஸனைகளும் அவர்களுக்கு தேவையில்லை. இவ்வித தியானமோ பலனோயில்லாததான நிர்க்குண பிரஹ்ம விஷயமான வித்யையில் எவ்வித இடைஞ்சலும் கிடையாது. ஆகையால் அதில் தேவாதிகளுக்கும் அதிகாரம் உண்டு.

## ९. अपशूद्राधिकरणम्

## 9. *அபசூத்₃ராதி₄கரணம்*

(ஸூத்ரம் 34 - 38)

**शुगस्य तदनादरश्रवणात्तदाद्रवणात्सूच्यते हि ।। ३४।।**

**சுக₃ஸ்ய தத₃நாத₃ரச்ரவணாத்ததா₃த்₃ரவணாத்ஸூச்யதே ஹி 34**
**(இவனுக்கு சோகம், அவைகளின் அனாதரவைக் கேட்டதினால், அதினால் போனதினால், ஸூசிக்கப்படுகிறதல்லவா )**

**क्षत्रियत्वगतेश्चोत्तरत्र चैत्ररथेन लिङ्गात्।। ३५।।**

*க்ஷத்ரியத்வக₃தேச்சோத்தரத்ர சைத்ரரதே₂ந லிங்கா₃த் 35*
**(மேலேயிருக்கும் சைத்ராதனென்ற லிங்கத்தினால் க்ஷத்திரயத்தன்மை அறியப்படுவதாலும்)**

**संस्कारपरामर्शात्तदभावाभिलापाच्च।। ३६।।**

**ஸம்ஸ்காரபராமர்சாத்தத₃பா₄வாபி₄லாபாச்ச 36**
**(ஸம்ஸ்காரம் சொல்லியிருப்பதால் அது கிடையாதென்று சொல்லியிருப்பதாலும்)**

तदभावनिर्धारणे च प्रवृत्तेः ।। ३७ ।।
ததத்$_3$பா$_4$வநிர்தா$_4$ரணே ச ப்ரவ்ருத்தே: 37
(அது இல்லையென்று தீர்மானம் கொண்டே பிருவிருத்தித்தபடியால்)

श्रवणाध्ययनार्थप्रतिषेधात्स्मृतेश्च ।। ३८ ।।
ச்ரவணாத்$_4$யயநார்த$_2$ப்ரதிஷேதா$_4$த்ஸ்ம்ருதேச்ச 38
(ஸ்மிருதியினால் சிரவணம் அத்யயனம் பிரயோஜனம் தடுக்கப்பட்டிருப்பதாலும்)

உபநயனம் அத்யயனம் இல்லையானாலும் தேவர்களுக்கு பிரஹ்ம வித்யையில் அதிகாரமுண்டென்று சொன்னபடியால் உபநயனம் அத்யயனமில்லாத சூத்ரர்களுக்கும் அதிகாரமுண்டா? என்று விசாரிக்க வேண்டியிருக்கிறது. அவர்களுக்கும் அதிகாரம் இருப்பது போல் த்வனிக்கக்கூடிய வேத வாக்கியமும் காணப்படுவதால் ஸந்தேஹம்.

शूद्रोऽधिक्रियते वेदविद्यायां अथवा न हि ।
अत्रैवर्णिकदेवाद्या इव शूद्रोऽधिकारवान् ।। १९ ।।
देवाः स्वयंभातवेदाः, शूद्रोऽध्ययनवर्जनात् ।
नाधिकारी श्रुतौ, स्मार्ते त्वधिकारो न वार्यते ।। २० ।।

சூத்$_3$ரோஅதி$_4$க்ரியதே வேத$_3$வித்$_3$யாயாம் அத$_2$வா ந ஹி ।
அத்ரைவர்ணிகதே$_3$வாத்$_3$யா இவ சூத்$_3$ரோஅதி$_4$காரவாந் ।। 19
தே$_3$வா: ஸ்வயம்பா$_4$தவேதா$_3$:, சூத்$_3$ரோஅத்$_4$யயநவஜர்நாத் ।
நாதி$_4$காரீ ச்ருதௌ, ஸ்மார்தே த்வதி$_4$காரோ ந வார்யதே ।। 20

(அ..ம்)
வேதத்தில் கண்ட வித்யையில் சூத்ரன் அதிகாரமுள்ளவனா? அல்லது அதிகாரமற்றவனா? (பிராஹ்மண, க்ஷத்திரியர், வைசியர் என்ற) மூன்று வர்ணங்களிலும் சேராத தேவர்கள் போல சூத்ரனும் அதிகாரமுள்ளவன் தான்.
தேவர்கள் தானாகவே ஸ்புரிக்கும் வேதத்தையுடையவர்கள். சூத்ரன் வேதாத்யயனமில்லாதவனானதினால் வேதத்தில் அதிகாரியல்ல. ஸ்மிருதி காண்டத்திலோ (அவனுக்கு) அதிகாரம் தடுக்கப்படவில்லை.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
சாந்தோக்யம் நான்காவது அத்யாயத்தில் ஸம்வர்க வித்யை சொல்லப்பட்டிருக்கிறது. ஜானசுருதி என்ற ஒருவன் ஆயிரம் கோக்களையும் தன் பெண்ணையும் முத்து மாலையையும் அழகான ரதத்தையும் சில கிராமங்களையும் காணிக்கையாக கொண்டு வந்து

ரைக்வர் என்ற பெரியாரை குருவாக அடைந்தான். அப்பொழுது அந்த ரைக்வர் இவனைப் பார்த்து "आजहार इमाः शूद्र,अनेनैव मुखेन आलापयिष्यथाः" "ஹே சூத்ர! இவைகளைக் கொண்டு வந்திருக்கிறாய். இவைகளையே காரணமாய்க் கொண்டு என்னை பேசும்படி செய்கிறாய்" அதாவது "சூத்ரனாயிருக்கும் ஹே ஜானசுருதே! ஆயிரம்கோக்கள் முதலானவைகளைக் கொண்டு வந்திருக்கிறாய். இதினாலேயே உன் பெண் முதலானதை காணிக்கையாகக்கொடுப்பதினாலேயே என்னுடைய மனஸை திருப்தி செய்து என்னை உனக்கு உபதேசிக்கும்படிச் செய்கிறாய்" என்கிறார். இதிலிருந்து சூத்ரனுக்கும் வேதவித்யையில் அதிகாரம் உண்டென்று தெரிகிறது. அவனுக்கு உபநயனம் அத்யயனம் இல்லையானாலும் எப்படி உபநயனம், அத்யயனம் இல்லாத தேவர்களுக்கு அதிகாரம் இருக்கிறதோ அப்படியே மூன்று வர்ணங்களுக்குள் சேராத சூத்ரனுக்கும் அதிகாரமிருக்கலாம்.

ஸித்தாந்தம் :

தேவர்களுக்கும், சூத்ரனுக்கும் வித்யாஸம் உண்டு. உபநயனம் அத்யயனம் தேவர்களுக்கு இல்லையானால், முன் ஜன்மாக்களில் ஸம்பாதித்துள்ள புண்ய விசேஷத்தினால் வேதம் அவர்களுக்குத் தானாகவே ஸ்புரிக்கும். அவ்வித பூர்வ புண்யம் சூத்ரனுக்கு இல்லையானதினால் தானாக வேதம் அவனுக்கு ஸ்புரிக்காது. வேதத்தைக் கற்றுக் கொள்ளலாமென்றால் அதற்கு அடிப்படையான உபநயனமே அவனுக்கு கிடையாததினால் அவனுக்கு வேதாத்யனத்தில் அதிகாரம் இல்லை. ஆகையால் வேதத்தில் சொல்லிய வித்யையில் அவனுக்கு அதிகாரமில்லை. ஜான சுருதி விஷயமாய் கண்ட "சூத்ர" என்ற சப்தம் சூத்ர ஜாதியைக் குறிப்பதல்ல. தனக்கு வித்யையில்லையேயென்ற சோகத்தினால் வெகு ஆவலோடு ரைக்வரிடம் ஓடினதினால்" शुचा द्रराव" "சோகத்தினால் ஓடினான்" என்ற அர்த்தத்தில் சொல்லப்படும் வார்த்தையே இது. பிரஸித்தமான அர்த்தத்தை விட்டு விட்டு இவ்விதம் அர்த்தம் செய்வதற்கு என்ன நியாயமென்று கேட்கலாம். அவன் ஸாரதியை ஏவினதாகவும் மற்றும் வித விதமாகவும் அவனுடைய ஐசுவர்யம் உபநிஷத்தில் வர்ணிக்கப்பட்டிருப்பதினால் அவன் க்ஷத்திரியன் என்று வியக்தமாய் தெரிகிறது. ஆகையால் சூத்ரனுக்கு அதிகாரமுண்டென்று சொல்ல இந்த ஸம்பவம் பிரமாணமாகாது. வேதவித்யையில் சூத்ரனுக்கு அதிகாரமில்லையென்றால் அவனுக்கும் சாசுவதமான ஸுகமாகிய மோக்ஷநிலையில் ஆசையிருக்கக்கூடியது

ஸஹஜமேயானதினால் அவனுக்கு அதையடைய வழியேயில்லையா என்று கேட்கலாம். வேதவித்யையில் அதிகாரமில்லையானாலும் ஸ்ம்ருதி புராணங்கள் மூலமாக ப்ரஹ்மக்ஞானம் ஏற்படுமானதினால் அவனுக்கும் மோக்ஷம் ஸித்திக்கக்கூடியதே.

## १०. कम्पनाधिकरणम्

## 10. *கம்பனாதி₄கரணம்*

(ஸூத்ரம் 39)

**कम्पनात्।। ३९।।**

கம்பநாத் 39

(அசைவதால்)

கடோபநிஷத் ஆறுவது வல்லியில் "**यदिदं किंच जगत्सर्वं प्राण एजति निःसृतम्। महद्भयं वज्रमुद्यतं य एतद्विदुरमृतास्ते भवन्ति।।**" "எந்த இது உண்டாயிருக்கிறதோ அந்த எல்லா ஜகத்தும் பிராணன் இருப்பதினால் நடுங்குகிறது, அது வெகு பயங்கரமான வஜ்ராயுதம் மேல் தூக்கினது போல எவர் இதை அறிகிறார்களோ, அவர்கள் மரணமற்றவர்களாக ஆகிறார்கள்" என்ற வாக்கியத்தில் கண்ட நடுங்கச் செய்கிறவர் யார்? என்பது இங்கேவிஷயம்.

**जगत्कम्पनकृत्प्राणोऽशनिर्वायुरुतेश्वरः।**
**अशनिर्भयहेतुत्वाद्वायुर्वा देहचालनात्।। २१।।**
**वेदनादमृतत्वोक्तेरीशोऽन्तर्यामिरूपतः।**
**भयहेतुश्चालनं तु सर्वशक्तियुतत्वतः।। २२।।**

ஜக₃த்கம்பநக்ருத்ப்ராணோசநிர்வாயுருதேச்வர: ।
அசநிர்ப₄யஹேதுத்வாத்₃வாயுர்வா தே₃ஹசாலநாத்।। 21
வேத₃நாத₃ம்ருதத்வோக்தேரீசோஅந்தர்யாமிரூபத: ।
ப₄யஹேதுச்சாலநம் து ஸர்வசக்தியுதத்வத:।। 22

(அ..ம்)

ஜகத்தை நடுங்கச் செய்யும் பிராணன் என்பது இடியா? வாயுவா? அல்லது ஈசுவரரா? பயத்திற்குக் காரணமென்பதினால் இடி அல்லது சரீரத்தை சலிக்கச் செய்வதால் வாயு.

(இதை) அறிவதினால் மரணமற்ற தன்மை சொல்லியிருப்பதால் ஈசுவரர் அந்தர்யாமிரூபமிருப்பதால் பயத்திற்குக் காரணம் எல்லாவித சக்திகளையும் உடையவராதலால் சலிக்கச் செய்வது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

வெகு பயங்கரம் என்று ஜகத்தை நடுங்கச் செய்வதாக பிராணனைப்பற்றி சொல்லியிருப்பதால் எல்லாரையும் நடுங்கச் செய்யும் இடியாக இருக்கலாம் அல்லது பிராணன் என்ற சப்தம் உபயோகிக்கப்பட்டிருப்பதால் சரீரத்தை சலிக்கும் படிச் செய்வது பிராணவாயு என்பது பிரஸித்தமாயிருக்கும் காரணத்தைக் கொண்டு இங்கே சொன்னதும் அந்த வாயுவாகவேயிருக்கலாம்.

ஸித்தாந்தம் :

"எவர் இதை அறிகிறுர்களோ அவர்கள் மரணமற்றவர்களாக ஆகிறுர்கள்" என்று சொல்லியிருப்பதால் இங்கு சொன்ன பிராணன் என்பது ஈசுவரர்தான். இடியையோ பிராணவாயுவையோ அறிகிறவன் மரண மற்றவனுக ஆகமுடியாது. "भीषास्मात् वात: पवत" "இவரிடத்திலிருந்து பயத்திஞல் காற்று வீசுகிறது" என்பது முதலான வாக்கியங்களிலிருந்து ஈசுவரர் அந்தர்யாமியாயிருப்பதால் பயத்திற்குக் காரணமாகவுமிருப்பார். தேஹம் முதலியதை சலிக்கும் படிச் செய்யும் சக்தி எல்லா சக்தியுமுள்ள ஈசுவரரிடத்தில் பொருந்தக் கூடியதே. ஆகையால் பிராணன் என்று இங்கே கண்டிருப்பது ஈசுவரர்தான்.

# ११. ज्योतिरधिकरणम्

## 11. *ஜ்யோதிரதி₄கரணம்*

(ஸூத்ரம் 40)

**ज्योतिर्दर्शनात्।। ४०।।**

ஜ்யோதிர்த₃ர்சநாத் 40

(ஜ்யோதிஸ்,ப்ரஹ்மம் தான் காணுவதால்)

சாந்தோக்யம் எட்டாவது அத்யாயத்தில் பிரஜாபதிவித்யையில் "**एष संप्रसाद: अस्मात् शरीरात् समुत्थाय परं ज्योति: उपसंपद्य स्वेन रूपेण अभिनिष्पद्यते, स उत्तम: पुरुष:**" "இந்த ஸம்பிரஸாதன் இந்த சரீரத்திலிருந்து நன்கு வெளிக்கிளம்பி பரமான ஜ்யோதிஸை அடைந்து தன்னுடைய ரூபத்துடன் ஆகிவிடுகிறுன். அவரே உத்தமமான புருஷன்" என்று கண்டிருக்கிறது.இங்கே "இந்த நிலையில் நன்கு பிரஸன்னமாகிறது" என்ற அர்த்தத்தில் ஸம்பிரஸாதம் என்ருல் நல்ல தூக்கம். அந்த நிலையில் அந்நிலையையுடையவன் ஆகிற ஜீவன் ஸம்பிரஸாதன் என்று குறிப்பிடப்படுகிறது. அந்த ஜீவன் இந்த சரீரத்திலிருந்து

அடைவதாகச் சொல்லப்படுகிற "பரமான ஜ்யோதிஸ்" எது? என்று இங்கு விஷயம்.

परं ज्योतिस्तु सूर्यस्य मण्डलं ब्रह्म वा भवेत्।
समुत्थायोपसंपद्येत्युक्त्या स्याद्रविमण्डलम्।। २३।।
समुत्थानं त्वंपदार्थशुद्धिर्वाक्यार्थबोधनम्।
संपत्तिरुत्तमत्वोक्तेर्ब्रह्म स्यादक्षिसाक्षितः।। २४।।

பரம் ஜ்யோதிஸ்து ஸூர்யஸ்ய மண்ட₃லம் ப்₃ரஹ்ம வா ப₄வேத்।
ஸமுத்தா₂யோபஸம்பத்₃யேத்யுக்த்யா ஸ்யாத்₃ரவிமண்ட₃லம்।। 23
ஸமுத்தா₂நம் த்வம்பதா₃ர்த₂ஶுத்₃தி₄ர்வாக்யார்த₂போ₃த₄நம் ।
ஸம்பத்திருத்தமத்வோக்தேர்ப்₃ரஹ்ம ஸ்யாத₃க்ஷிஸாக்ஷித: ।। 24

(அ..ம்)

பரமான ஜ்யோதிஸ் என்பது ஸூர்ய மண்டலமா? அல்லது பிரஹ்மமாயிருக்குமா? நன்கு வெளிக்கிளம்பி அடைந்து என்று சொல்வதினுல் ஸூர்யமண்டலமாகவிருக்கும்.

"வெளிக்கிளம்புதல்" என்பது நீ என்ற பதத்தின் அர்த்தத்தை (ஜீவனுடைய தத்வத்தை) சோதித்தறிதல் "அடைதல்" என்பது ("நீ" என்ற) வாக்கியத்தின் அர்த்தத்தை அறிதல். உத்தமரென்று சொல்லியிருப்பதால் பிரஹ்மம் தான் ஆகும். அவர் இவருக்கும் ஸாக்ஷியாயிருப்பவராதலால்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

சரீரத்திலிருந்து வெளிக்கிளம்பி ஜ்யோதிஸை அடைகிருன் என்பதினுல் சரீரத்திற்கு வெளியிலுள்ளதாய் போய் அடைய வேண்டியதாயுள்ள ஒரு பிரகாசம் என்று ஏற்படுகிறது. பிரஹ்மம் வெளியில் உள்ளதாகவோ அடைய வேண்டியதாகவோ இல்லை. அதையடைய வெளிக்கிளம்ப அவசியமில்லை. அடைகிறவன் அடையப்படுவது என்ற பேதமும் அதனிடம் கிடையாது. ஆகையால் இங்கு சொன்ன ஜ்யோதிஸ் ஸூர்ய மண்டலம் தான்.

ஸித்தாந்தம் :

"உத்தம புருஷன்" என்று சொல்லியிருப்பது ஜடமான ஸூர்ய மண்டலத்திற்கோ, ஜீவனுகவேயிருக்கிற ஆதித்ய தேவனுக்கோ பொருந்தாது. பிரஹ்மத்திற்குத்தான் பொருந்தும். மேலும்"यो वेद इदं जिघ्राणि-इति, स आत्मा। यो वेद-इदं शृणवानि-इति ,स आत्मा।" "நான் இதை முகர்வேன் என்பதை எவர் அறிகிருரோ, அவர் ஆத்மா நான் கேட்பேன்

என்பதை எவர் அறிகிருரோ, அவர் ஆத்மா" என்றெல்லாம் சொல்லப்பட்டிருப்பதால் முகர்கிறவன், முகரும் இந்திரியம், முகரப்படும் வஸ்து, கேட்கிறவன், கேட்க உதவும் இந்திரியம், கேட்கப்படும் வஸ்து ஆகிய எல்லா பதார்த்தங்களேயும் பார்த்துக் கொண்டு ஸாக்ஷியாலிருந்து வருபவர் ஆத்மாவென்று சொல்லப்பட்டிருக்கிறது. இதனுடன் சேர்ந்துள்ள வாக்கியத்தில் கண்ட ஜ்யோதிஸ் என்பதும் இந்த ஆத்மாவாகிய ஸாக்ஷியான பிரஹ்மமாகத்தான் இருக்க வேண்டும். சரீரத்திலிருந்து வெளிக்கிளம்புதல் என்பது இவ்விடத்தில் ஸ்தூல ஸூக்ஷ்ம காரணமென்ற மூன்று வித சரீரங்களிலிருந்தும் சுத்தமான ஆத்மாவைப்பிரித்து வேறென்று அறிந்து கொள்ளல் என்று தான் அர்த்தம். அப்படியே "அடைதல்" என்பது எங்கேயோ போய் அடைதல் என்ற அர்த்தமில்லே. அவ்விதம் சரீரத்திலிருந்து வேறுபட்டதாய் அறிந்து கொண்ட ஜீவஸ்வரூபத்தை பிரஹ்மமாக அறிவது என்று தான் அர்த்தம். ஆகையால் இங்குள்ள பரமான ஜ்யோதிஸ் பிரஹ்மமே தான்.

# १२. अर्थान्तरत्वादिव्यपदेशाधिकरणम्

## 12. அர்தா₂ந்தரத்வாதி₃வ்யபதே₃சாதி₄கரணம்

(ஸூத்ரம் 41)

**आकाशोऽर्थान्तरवादिव्यपदेशात्।। ४१।।**

ஆகாசோஅர்தா₂ந்தரவாதி₃வ்யபதே₃சாத் 41

(ஆகாசம், வேறுபொருளாயிருக்கும் தன்மை முதலியது சொல்லியிருப்பதால்)

அதே சாந்தோக்யம் எட்டாவது அத்யாயத்தில் "आकाशो ह वै नामरूपयोर्निर्वहिता, ते यदन्तरा" நாமரூபம் இவைகளே நிர்வஹிப்பது ஆகாசம், எதற்குள் அவையிரண்டும் உள்ளனவோ என்று சொல்லியிருக்கும் இடத்தில் ஆகாசம் என்பது என்ன? என்பது இங்கு விஷயம்.

**वियद्वा ब्रह्म वाऽऽकाशो वै नामेति श्रुतं, वियत्।**
**अवकाशप्रदानेन सर्वनिर्वाहकत्वतः।। २५।।**
**निर्वोढृत्वं नियन्तृत्वं चैतन्यस्यैव तत्त्वतः ।**
**ब्रह्म स्याद्वाक्यशेषे च ब्रह्मात्मेत्यादिशब्दतः।। २६।।**

வியத்₃வா ப்₃ரஹ்ம வாஆகாசோ வை நாமேதி ச்ருதம், வியத் ।
அவகாசப்ரதா₃நேந ஸர்வநிர்வாஹகத்வத: ।। 25

நிர்வோட்₄ருத்வம் நியந்த்ருத்வம் சைதன்யஸ்யைவ தத்வத: ।
ப்₃ர்ஹ்ம ஸ்யாத்₃வாக்யசேஷே ச ப்₃ரஹ்மாத்மேத்யாதி₃சப்₃த₃த:।।26

(அ..ம்)

நாமரூபங்களை நிர்வஹிப்பது ஆகாசமே என்று சொல்லப்படுவது (வெறும் பூத) ஆகாசமா? அல்லது பிரஹ்மமா? (எல்லா பதார்த்தங்களுக்கும்) இடம் கொடுக்கும் காரணத்தினுல் எல்லாவற்றையும் நிர்வஹிக்கும் தன்மையுள்ளதால் (பூத) ஆகாசம் தான்.

நிர்வஹிக்கும் தன்மை, அதாவது நியமனம் செய்யும் தன்மை சைதன்யத்திற்குத்தான் வாஸ்தவத்தில் உண்டு. இந்த வாக்கியத்தின் மிச்ச பாகத்தில் பிரஹ்மம், ஆத்மா முதலான சப்தங்கள் இருப்பதினுலும் (இங்கே ஆகாசம் என்பது) பிரஹ்மம் தான் ஆகும்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஜகத்திலுள்ள எல்லா பதார்த்தங்களும் இருந்து வருவதற்காக இடம் கொடுப்பதினால் பூத ஆகாசத்தில் தான் நிர்வஹிக்கும் தன்மை பொருந்தும். அதனுல் அதுவேதான் இங்கே சொல்லப்படும் ஆகாசம்.

ஸித்தாந்தம் :

இங்கே நிர்வஹிப்பது என்பது வெறும் இடம் கொடுப்பது என்று மாத்திரமில்லை, ஏற்படுத்தி, தாங்கி, நடத்திகொண்டு செலுத்துவதெல்லாம் அதில் சேரும். அவ்விதத்தன்மை சேதனமாயுள்ள பிரஹ்மத்தில் தான் இருக்க முடியும். அப்படியே வேறு சுருதியில் "अनेन जीवेनाऽऽत्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि।" இந்த ஜீவன் என்ற ஆத்மஸ்வரூபமாக உள் புகுந்து நாமரூபங்களை நன்கு விஸ்தாரமாய் செய்வேன் என்று பிரஹ்மம் ஆலோசித்ததாகக் காண்கிறது. ஜடமாயுள்ள ஆகாசத்திற்கு நியமனம் செய்யப்பட வேண்டியவைகளுக்குள்ளிருக்கும் வேற்றுமைகளை அறிந்து கொள்ள சக்தியில்லாததால் அதனிடத்தில் நியமனம் செய்யும் சக்தி இருக்க முடியாது. ஆகையால் இங்கே சொன்ன ஆகாசம் பிரஹ்மம் தான். மேலும் இதே வாக்கியத்தில் "तद्ब्रह्म, तदमृतं, स आत्मा।" அது பிரஹ்மம், அது மரணமற்றது, அது ஆத்மா என்று சொல்லப்படும் பிரஹ்மாயிருக்கும் தன்மை, மரணமற்றிருக்கும் தன்மை, ஆத்மாவாய் இருக்கும் தன்மை என்பதெல்லாம் பிரஹ்மத்தினிடத்திலேயே பொருந்துமேயொழிய

வெறும் ஆகாசத்தில் பொருந்தாது. ஆகையாலும் இங்கே ஆகாசம் என்பது பிரஹ்மமே.

# १३. सुषुप्त्युत्क्रान्त्यधिकरणम्

## 13. ஸுஷுப்த்யுத்கிராந்த்யதி₄கரணம்

(ஸூத்ரம் 42,43)

**सुषुप्त्युत्क्रान्त्योर्भेदेन।। ४२।।**

ஸுஷுப்த்யுத்க்ரந்த்யோர்பே₄தே₃ந 42

(ஸுஷுப்தி உத்க்ராந்தி இவைகளில் வேறாக)

**पत्यादिशब्देभ्यः।। ४३।।**

பத்யாதி₃சப்₃தேப்₄ய: 43

(பதி முதலான சப்தங்களிலிருந்து )

பிருஹதாரண்யகம் ஆருவது அத்யாயத்தில் " **योऽयं विज्ञानमयः प्राणेषु हृद्यन्तर्ज्योतिः पुरुषः समानः सन्नुभौ लोकावनुसंचरति।**" "எவர் இந்த விக்ஞானமயரான புருஷர் பிராணங்களில் ஹ்ருதயத்தில் உள்ளே ஜ்யோதிஸாய் பொதுவாய் இருந்து கொண்டு இரண்டு உலகங்களையும் அனுஸரித்து ஸஞ்சரிக்கிருரோ" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு சொன்ன விக்ஞானமய புருஷர் யார்? என்று விஷயம்.

**स्याद्विज्ञानमयो जीवो ब्रह्म वा जीव इष्यते।**
**आदिमध्यावसानेषु संसारप्रतिपादनात्।। २७।।**
**विविच्य लोकसंसिद्धं जीवं प्राणाद्युपाधितः।**
**ब्रह्मत्वमन्यतोऽप्राप्तं बोध्यते ब्रह्म नेतरत्।। २८।।**

ஸ்யாத்₃விஜ்ஞாநமயோ ஜீவோ ப்₃ரஹ்ம வா ஜீவ இஷ்யதே ।
ஆதி₃மத்₄யாவஸாநேஷு ஸம்ஸாரப்ரதிபாத₃நாத்।। 27
விவிச்ய லோகஸம்ஸித்₃த₄ம் ஜீவம் ப்ராணாத்₃யுபாதி₄த: ।
ப்₃ரஹ்மத்வமந்யதோ அப்ராப்தம் போ₃த்₄யதே ப்₃ரஹ்ம நேதரத்।।28

(அ..ம்)

விக்ஞானமயன் என்பது ஜீவனுயிருக்குமா? அல்லது பிரஹ்மமா? (உபநிஷத்தின்) ஆரம்பத்திலும், மத்தியிலும், கடைசியிலும் ஸம்ஸாரமே பிரதிபாதிக்கப்பட்டிருப்பதால் ஜீவன் என்று கருதப்படுகிறது.

உலகத்தில் உறுதியாய் தெரிந்துள்ள ஜீவனை பிராணன் முதலான உபாதிகளிலிருந்து பிரித்தெடுத்து (அவனுக்கே) வேறு எந்த பிரமாணத்திலும் அறியக்கூடாத பிரஹ்மமாயிருக்கும் தன்மை

போதிக்கப்படுகிறது. (ஆகையால் விக்ஞானமயன் என்பது) பிரஹ்மமே வேறு எதுவுமில்லை.

(வி..ம்)

பூர்வபக்ஷம்:

விக்ஞானமயன் என்பது லிங்கசரீரமயன். இதினுலேயே அவன் ஸ்தூல சரீரத்தை விட வேறு என்று ஏற்படுகிறது. பிராணன்களில் (அதாவது கண் முதலிய இந்திரியங்களில்), அப்படியே பிராணன், அபானன் முதலான வாயுக்களில் ஹ்ருதயத்தில் (உள்ளிருக்கும் கருவியான அந்த: கரணத்தில்) என்று ஏழாம் வேற்றுமை உபயோகித்திருப்பதால் அவை ஆதாரமென்று குறிப்பிடப்படுகிறது அவைகளில் ஆதேயமாய் உள்ளே வைக்கப் பட்டிருக்கும் பதார்த்தமாக சொல்லப்படும் புருஷன் அந்த இந்திரியங்கள், வாயுக்கள், மனஸ் இவைகளுக்கு வேருயிருப்பவன் என்பதும் தீர்மானமாகத் தெரிகிறது. மனஸின் பரிணுமங்களான காமம், ஸங்கல்பம் முதலான விருத்திகள் யாவும் வெளியிலிருப்பதால் "உள்ளே" என்ற சப்தத்தினுல் அந்த விருத்திகளுக்கும் வேருயிருப்பவன் விக்ஞானமய புருஷன் என்று ஏற்படுகிறது. இப்படியிருப்பதால், அவன் இந்திரியங்கள், பிராணவாயுக்கள், அந்த:கரணம், அதன் விருத்திகள் இவையெல்லாவற்றையும் விட வேருயுள்ளவனென்று ஏற்படுவதால் அவைகளை எல்லாம் பார்த்துக் கொண்டு ஸாக்ஷியாயிருந்து வரும் சைதன்யஸ்வரூபமுள்ளவன் என்பது "ஜ்யோதிஸ்" என்ற சப்தத்தினுல் தெரிகிறது. அந்த புருஷன் லிங்க சரீரத்தைத் தானுகவே எண்ணிக் கொண்டு பொதுவாக இந்த உலகத்திலும், பரலோகத்திலும் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கிருன் என்று இந்த வாக்கியம் சொல்கிறது. அவ்விதம் ஸஞ்சரிப்பது ஜீவனேயானதினுல் இங்கே கண்ட விக்ஞானமய புருஷன் ஜீவன் தான், தவிரவும் ஆரம்பத்தில் இரண்டு லோகங்களிலும் ஸஞ்சரிக்கிருர் என்று சொன்னதினுலேயே ஜராமரண ஸுகதுக்கமாகிய ஸம்ஸாரதசைதான் சொல்லப்பட்டிருக்கிறதென்று தெளிவாகத் தெரிகிறது. மத்தியிலும் ஸம்பிரஸாதம் (தூக்கம்) ஸ்வப்னம், விழிப்பு என்ற மூன்று அவஸ்தைகளைச் சொல்வதும் ஸம்ஸாரத்தைப் பற்றியே தான், கடைசியிலும் **"स वा अयमात्मा ब्रह्म विज्ञानमयो मनोमय: प्राणमय:।"** "அந்த இந்த ஆத்மாவாகிற பிரஹ்மம் விக்ஞானமயன், மனேமயன், பிராணமயன் என்பது முதலான வார்த்தைகளால் உபாதிகளோடு கூடின ஸ்வரூபத்தையே வர்ணிப்பதால் அங்கேயும் ஸம்ஸாரம் சொல்லப்படுகிறது. ஆகையால் இங்கு சொன்ன விக்ஞானமய புருஷன் ஜீவன்தான்.

ஸித்தாந்தம் :

உலகத்திலேயே நான் நான் என்ற எண்ணத்தினுலேயே ஜீவன் இருப்பது ஸித்திப்பதால் அதை எடுத்துச் சொல்ல வேதம் தேவையில்லை. அதனுலேயே இங்கே பிரதிபாதிக்கப்படுவது ஜீவன் அல்ல. அப்படியானுல் ஜீவனைப்பற்றி சொல்வானேன் என்று கேட்டால் முதலில் பிராணன் முதலான உபாதிகளிலிருந்து பிரித்துக் காட்டுவதற்காக சொல்லப்பட்டது. மத்தியில் விழிப்பு முதலான மூன்று அவஸ்தைகளுடைய ஸம்பந்தம் கிடையாதென்பதைக் காட்டுவதற்காக சொல்லப்பட்டது. இவ்விதம் பிராணன் முதலானதிலிருந்தும், இம்மூன்று அவஸ்தைகளிலிருந்தும் பிரித்துத் தனியாகக் காட்டின ஜீவனை திரும்பச் சொல்லி அவனுக்கு ஸ்வரூபத்தில் பிரஹ்மமாயிருக்கும் தன்மையைக் கடைசியில் காட்டப்பட்டிருக்கிறது. ஆகையால் மூன்று இடங்களிலும் ஜீவனைப்பற்றி சொல்ல வேண்டியிருந்தது. அந்த தனித்து சுத்தமாகக் காட்டப்பட்ட ஜீவனுக்கு பிரஹ்ம தன்மையுண்டென்ற விஷயம் வேறு எந்த பிரமாணத்தினுலும் அறிய முடியாததினுல் அதில் தான் வேதத்திற்குத் தாத்பர்யம். ஆகையால்இங்கே பிரதிபாதிக்கப்பட்டது பிரஹ்மமே'தவிர ஜீவன் இல்லை என்பது ஸித்தம்.

இவ்விதம் முதல் அத்யாயம் மூன்ருவது பாதத்தில் அதிகரணங்கள் 13, சுலோகங்கள் 28 (ஸூத்ரங்கள் 43).

================================

# १. आनुमानिकाधिकरणम्

## 1. ஆநுமாநிகாதி₄கரணம்

(ஸூத்ரம் 1 - 7)

**आनुमानिकमप्येकेषामिति चेन्न,शरीररूपकविन्यस्तगृहीतेर्दर्शयति च ।।१।।**

ஆனுமாநிகமப்யேகேஷாமிதி சேந்ந
சரீரரூபகவிந்யஸ்தக்₃ருஹீதேர்த₃ர்சயதி ச 1
(ஆனுமானிகமும் (பிரதானம்) சிலர்களுக்கு என்றால் இல்லை. ரூபகமாக கல்பிக்கப்பட்ட சரீரம் கிரகிக்கப்படுவதால், காட்டுகிறதும்கூட)

**सूक्ष्मं तु तदर्हत्वात्।। २।।**

ஸூக்ஷ்மம் து தத₃ர்ஹத்வாத் 2
(ஸூக்ஷ்மமோ, அதற்கு அர்ஹத்தன்மையிருப்பதால்)

**तदधीनत्वादर्थवत्।। ३ ।।**

தத₃தீ₄நத்வாத₃ர்த₂வத் 3
(அவருக்கு அதீனமாயிருப்பதால் பிரயோஜனமுள்ளது)

**ज्ञेयत्वावचनाच्च ।। ४।।**

ஜ்ஞேயத்வாவசநாச்ச 4
(அறியவேண்டியதாக சொல்லாததினாலும்)

**वदतीति चेन्न; प्राज्ञो हि प्रकरणात्।। ५ ।।**

வத₃தீதி சேந்ந: ப்ராஜ்ஞோ ஹி ப்ரகரணாத் 5
(சொல்கிறது என்றால் இல்லை, பிராக்ஞன் அல்லவா பிரகரணத்தினால்)

**त्रयाणामेव चैवमुपन्यासः प्रश्नश्च।। ६ ।।**

த்ரயாணாமேவ சைவமுபந்யாஸ: ப்ரச்நச்ச 6
(மூன்றுக்குத்தான் இவ்விதம் உபந்யாஸம், கேள்வியும்)

**महद्वच्च।। ७ ।।**

மஹத்₃வச்ச 7
(மஹத்தைப்போலவும்)

கடோபநிஷத் மூன்றுவது வல்லியில் "इन्द्रियेभ्यः परा ह्यर्था अर्थेभ्यश्च परं मनः । मनसस्तु परा बुद्धिः बुद्धेः आत्मा महान्परः। महतः परम् अव्यक्तात् पुरुषःपरः।।" "இந்திரியங்களைவிட விஷயங்கள் மேலானவை, விஷயங்களை விட மனஸ் (மேலானது), மனஸை விடவோ புத்தி (மேலானது), புத்தியைவிட மஹத் என்ற ஆத்மா மேலானது, மஹத்திற்கு மேலாயுள்ளது அவ்யக்தம், அவ்யக்தத்திற்கு மேலாயுள்ளது

புருஷன்" என்று சொல்லப்படுகிறது. இங்கே சொல்லப்படும் "அவ்யக்தம்" என்பது என்னவென்பது இங்கு விஷயம்.

महतः परमव्यक्तं प्रधानमथवा वपुः।
प्रधानं सांख्यशास्त्रोक्ततत्वानां प्रत्यभिज्ञया।। १।।
श्रुतार्थप्रत्यभिज्ञानात्परिशेषाच्च तद्वपुः।
सूक्ष्मत्वात्कारणावस्थमव्यक्ताख्यां तदर्हति।। २।।

மஹத: பரமவ்யக்தம் ப்ரதா$_4$நமத$_2$வா வபு: ।
ப்ரதா$_4$நம் ஸாங்க்$_2$யசாஸ்த்ரோக்ததத்வாநாம் ப்ரத்யபி$_4$ஜ்ஞயா ।। 1
ச்ருதா$_2$ர்தப்ரத்யபி$_4$ஜ்ஞாநாத்பரிசேஷாச்ச தத்$_3$வபு: ।
ஸூக்ஷ்மத்வாத்காரணாவஸ்த$_2$மவ்யக்தக்$_2$யாம் தத$_3$ர்ஹதி ।। 2

(அ..ம்)

மஹத்திற்கு மேலானதாகச் சொல்லப்படும் அவ்யக்தம் பிரதானமா? அல்லது சரீரமா? ஸாங்கிய சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கும் தத்வங்களின் ஞாபக மேற்படுவதால் பிரதானம் தான்.

வேதத்தில் கண்ட விஷயம் ஞாபகத்திற்கு வருவதாலும் மிஞ்சுவதினுலும், அது சரீரம். காரண அவஸ்தையிலிருக்கிற அது ஸூக்ஷ்மமாயிருப்பதால் அவ்யக்தம் என்ற பெயரை அதற்கு கொடுப்பது உசிதம்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஸாங்கிய சாஸ்திரத்தில் தத்வங்களை வரிசையாகச் சொல்லும் போது மஹத், அவ்யக்தம், புருஷன் என்று கிரமமாக ஒன்றுக்கொன்றுமேலானதாக விருப்பதாகச் சொல்லப்படுகிறது.இங்கே வேதத்திலும் அதே வரிசையாக மேல் மேலாக மஹத், அவ்யக்தம், புருஷன் என்று சொல்லியிருப்பதால் ஸாங்கிய சாஸ்திரத்தில் கண்டவைகளே ஞாபகப்படுத்தப்படுகின்றன. ஆகையால் இங்குள்ள அவ்யக்தம் என்பது அவர்கள் அவ்யக்தம் என்று சொல்கிற பிரதானம் தான்.

ஸித்தாந்தம் :

இதற்கு முன் "आत्मानं रथिनं विद्धि शरीरं रथमेव तु। बुद्धिं तु सारथिं विद्धि मनः प्रग्रहमेव च।। इन्द्रियाणि हयानाहुर्विषयांस्तेषु गोचरान् ।।" "ஆத்மாவை ரதத்தின் ஸ்வான்தாராகத் தெரிந்து கொள். சரீரத்தை ரதமாகவே (தெரிந்து கொள்) புத்தியையோ ரதமோட்டுபவனுக தெரிந்து கொள் மனஸை கடிவாளமென்றே (தெரிந்து கொள்) இந்திரியங்களை குதிரைகள் என்றும்

அவை போகும் மார்க்கங்களை விஷயங்கள் என்றும் சொல்கிறார்கள்" என்று சொல்லியிருக்கிறது. இதில் ஆத்மா, சரீரம், புத்தி, மனஸ், இந்திரியங்கள், விஷயங்கள் என்று வரிசையாகக் காண்கின்றன. இங்கே மேலேயிருந்து கீழ்கீழாகக் காணப்பட்டிருக்கிறது.மேல்மேலாக எடுத்துக் கொண்டால் விஷயங்கள், இந்திரியங்கள், மனஸ், புத்தி, சரீரம், ஆத்மா என்று ஏற்படும். இவைகளில் பின் வாக்கியத்தில் விஷயங்கள் (அர்த்தங்கள்) இந்திரியங்கள், மனஸ், புத்தி, ஆத்மா (புருஷன்) என்ற வார்த்தைகள் அப்படியேயிருப்பதால் முன் சொன்னவைகளையே ஞாபகப்படுத்துகின்றன. வேறு சாஸ்திரத்தில் உள்ளவைகளை ஞாபகப்படுத்துகின்றன என்பதைவிட இங்கேயே ஸமீபத்தில் உள்ளவைகளை ஞாபகப்படுத்துகின்றன என்று எடுத்துக் கொள்வதுதான் உசிதமாகும். இவ்விதம் ஞாபகப்படுத்துவதில் முன் வாக்கியத்தில் உள்ள சரீரம் என்பது இங்கே காணவில்லை. முன் வாக்கியத்தில் காணாத அவ்யக்தம் என்பது இங்கே காண்கிறது. ஆகையால் இங்குள்ள அவ்யக்தம் என்ற சப்தத்தினால் முன் சொன்னவைகளில் விட்டுப் போனதாய் இருக்கின்ற "சரீரம்" என்பதைத் தான் கிரஹிக்க வேண்டும். அதுவே தான் இங்கே ஞாபகப்படுத்தப் படுகிறது. மிஞ்சுவதினால் என்பதே இதற்குக் காரணம். பின் வாக்கியத்தில் மஹத் என்ற சப்தமிருக்கிறதே, அதை முன் வாக்கியத்தில் காணவில்லையே? என்று தோன்றலாம். அதுவும் "புத்தி" என்ற வார்த்தையிலேயே அடங்கியிருக்கிறது. புத்தி என்பது நம்மைப் போலுள்ளவர்களின் புத்தி என்றும், அவைகளுக்குக் காரணமாயுள்ள ஹிரண்யகர்ப்பருடைய புத்தி என்றும் இருவகைப்படும். இந்த ஹிரண்யகர்ப்பருடைய புத்தி தான் மஹத் என்று சொல்லப்பட்டிருக்கிறது. முன் வாக்கியத்தில் இரண்டையும் சேர்த்து ஒன்றாக "புத்தி" என்று மாத்திரம் சொல்லப்பட்டது. பின்னால் இரண்டையும் தனித்தனியே "புத்தி" "மஹத்" என்ற சப்தங்களினால் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதமாக முன் வாக்கியத்தில் மிஞ்சுகிற சரீரமும் பின் வாக்கியத்தில் மிஞ்சுகிற அவ்யக்தமும் ஒன்று தான் என்று தீர்மானிக்கப்படுகிறது. ஆனால் சரீரமானது நன்கு ஸ்பஷ்டமாய்த் தெரிந்து கொண்டிருப்பதால் அதை அவ்யக்தம் தெளிவாயில்லாதது என்று எப்படிச் சொல்லலாமென்று ஸந்தேஹிக்கலாம். ஸ்தூலமாயுள்ள சரீரம் தான் வியக்தமாயிருக்குமே தவிர, அதே சரீரம் காரண அவஸ்தையிலிருக்கும் போது ஸூக்ஷ்ம தசையிலிருப்பதால்அப்பொழுது வியக்தம் இல்லாதது

தான்.(அப்பொழுது அவ்யக்தம் தான்) ஆகையால் இங்கே சொல்லப் படும் "அவ்யக்தம்" சரீரம் தான்.

# २. चमसाधिकरणम्

## 2. சமஸாதி₄கரணம்

(ஸூத்ரம் 8 - 10)

चमसवदविशेषात् ।। ८ ।।

சமஸவத₃விசேஷாத் 8

(சமஸம்போல, தனிப்பட்ட காரணமில்லாததினால்)

ज्योतिरुपक्रमा तु तथा ह्यधीयत एके ।।९।।

ஜ்யோதிருபக்ரமா து ததா₂ ஹ்யதீ₄யத ஏகே 9

(ஜ்யோதிஸில் ஆரம்பித்துள்ளவை, அப்படியே சிலர் சொல்கிறார்கள்)

कल्पनोपदेशाच्च मध्वादिवदविरोधः ।। १० ।।

கல்பநோபதே₃சாச்ச மத்₄வாதி₃வத₃விரோத₄: 10

(கல்பனையாக உபதேசித்திருப்தாலும், மது முதலியதுபோல் விரோதமில்லை)

சுவேதாசுவதரோபநிஷத்தில் நான்காவது அத்யாயத்தில் "अजामेकां लोहितशुक्लकृष्णाम्।" "சிவப்பு வெளுப்பு கருப்பாயுள்ள ஒரு அஜையை (பிறப்பற்றதை)" என்று கண்டிருக்கிறது. இந்த "அஜை" என்பது என்ன என்று விசாரிக்கப்படுகிறது.

अजा हि सांख्यप्रकृतिस्तेजोऽबन्नात्मिकाऽथवा।
रज आदौ लोहितादिलक्ष्येऽसौ सांख्यशास्त्रगा।। ३।।
लोहितादिप्रत्यभिज्ञा तेजोऽबन्नादिलक्षणाम्।
प्रकृतिं गमयेच्छ्रौतीमजाक्लृप्तिर्मधुत्ववत्।। ४।।

அஜா ஹி ஸாங்க்₂யப்ரக்ருதிஸ்தேஜோப₃ந்நாத்மிகாத₂வா ।
ரஜ ஆதௌ₃ லோஹிதாதி₃லக்ஷ்யேஅஸௌ ஸாங்க்₂யசாஸ்த்ரகா₃ ।3
லோஹிதாதி₃ப்ரத்யபி₄ஜ்ஞா தேஜோப₃ந்நாதி₃லக்ஷணாம் ।
ப்ரக்ருதிம் க₃மயேச்ச₂ரௌதீமஜாக்ல்ப்திர்மது₄த்வவத் ।। 4

(அ..ம்)

இங்கே "அஜா" என்பது ஸாங்கியர் சொல்கிற பிரகிருதியா? அல்லது தேஜஸ், அப், அன்னம் இவ்வுருவமான அவாந்தரப்ரக்ருதியா? ரஜோகுணம் முதலியதில் சிவப்பு முதலியது தெரிவதால் இது ஸாங்கிய சாஸ்திரத்தில் கண்டது தான்.

சிவப்பு முதலியதின் ஞாபகம் தேஜஸ், அப், அன்னம் இவை முதலானவைகளை லக்ஷணமாயுடைய வேதத்தில் கண்ட பிரகிருதியைத் தான் தெரிவிக்கும். "அஜை" என்று கல்பிப்பது "மது" என்று கல்பிப்பது போலத்தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

சிவப்பு, வெளுப்பு, கருப்பு என்றுள்ள வர்ணங்கள் ரஜஸ், ஸத்வம், தமஸ் என்பவைகளையே ஞாபகப்படுத்துகிறபடியால் அவைகளையுடைய "அஜை" என்பது அந்த மூன்று குணங்களையும் ஸ்வரூபமாயுடைய ஸாங்கிய சாஸ்திரத்தில் பிரதானமென்று சொல்கிற காரணவஸ்துவான ப்ரகிருதி என்று அர்த்தம். அந்த குணங்களுக்கும் இந்த வர்ணங்களுக்கும் என்ன ஸம்பந்தம் என்று கேட்கலாம். ரஞ்ஜகமாகவிருப்பதால் ரஜோகுணம் சிவப்பு என்றும், ஸ்வச்சமாயிருப்பதினுல் ஸத்வ குணம் வெளுப்பு என்றும், மறைப்பதினுல் தமோகுணம் கருப்பு என்றும் சொல்லப்படுகிறது. இவ்விதமாக இங்கே "அஜை" என்பது ஸாங்கியர்களின் பிரதானம் தான்.

ஸித்தாந்தம் :

மூன்று குணங்களை பொருத்துக் கொண்டு ஏதோவொரு ஸாம்யத்தை வைத்து அவைகளுக்கு வர்ணங்களைக் கல்பிக்க அவசியமேயில்லை. வேதத்திலேயே அந்த மூன்று வர்ணங்கள் எதெதைச் சேர்ந்தவையென்று வியக்தமாய் சொல்லியிருக்க அதைவிட்டு வெளியில்போவது உசிதமாகாது. "यदग्रे रोहितं रूपं तेजसस्तद्रूपम् यच्छुक्लं तदपाम् यत्कृष्णं तदन्नस्य" "அக்னியில் சிவப்பு ரூபம் எதுவோ, அது தேஜஸின் ரூபம் எது வெளுப்போ, அது அப்பைச் சேர்ந்தது எது கருப்போ, அது அன்னத்தினுடையது" என்று தேஜஸ், அப், அன்னம் என்ற ரூபமாயுள்ள ப்ரகிருதிக்கு சிவப்பு, வெளுப்பு, கருப்பு என்ற ரூபங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகள் தான் இங்கே ஞாபகப்படுத்தப் படுகின்றன. வேதத்திலேயே கண்டதை ஞாபகப்படுத்துவது என்பது வேறு எங்கேயோயுள்ளதை ஞாபகப்படுத்துவது என்பதைவிட பிரபலமாயுள்ளது. குணங்களை எடுத்துக் கொண்டு அவைகளுக்கு வாஸ்தவத்திலில்லாத வர்ணங்களைக் கல்பிப்பதற்கு எவ்வித அவசியமில்லாமல், அந்த வர்ணங்களை அப்படியேயுடைய தேஜஸ், அப், அன்னம் வடிவமாக இருப்பதால் அவைகள் ஸ்வரூபமாயுள்ள வேதத்தில் சொல்லும்

ப்ரகிருதிதான் "அஜா" என்று இங்கு சொல்லப்படுகிறது. "அஜா" என்ற சப்தத்திற்கு பிரஸித்தமான அர்த்தம் "பெண் ஆடு" என்பது இங்கே பொருத்தமாகாது. "ஜனிக்காதது" என்று வைத்துக் கொள்ளலாமோவென்ருல் தேஜஸ், அப், அன்னம் இவை பிரஹ்மத்தில் இருந்து உண்டானவைகளாகவே இருக்கின்றன. அப்படியிருந்த போதிலும் அதன் தத்வம் நமக்கு நன்கு மனஸில் பதிவதற்காக அதையொரு ஆடு போல கல்பித்து வேதம் சொல்கிறது. மூன்று வர்ணங்களையுடைய ஆடு போல என்று கல்பிக்கலாமா என்ருல் வேதத்திலேயே "असौ वा आदित्यो देवमधु " "இந்த ஸூர்யன் தேவர்களுடைய தேன்" தேன் அல்லாததை தேன் என்று கல்பித்திருப்பது போல இங்கேயும் ஆடு அல்லாததை ஆடு என்று உபநிஷத் கல்பித்துச் சொல்லியிருக்கிறது. ஆகையால் இங்கே சொன்ன "அஜா" தேஜஸ், அப், அன்னம் இவை ஸ்வரூபமாயுள்ள பிரகிருதியே தவிர ஸாங்கியர் சொல்லும் பிரதானமல்ல.

# ३. संख्योपसंग्रहाधिकरणम्

## 3. *ஸங்க்₂யோபஸங்கி₃ரஹாதி₄கரணம்*

(ஸூத்ரம் 11 - 13)

**न संख्योपसंग्रहादपि नानाभावादतिरेकाच्च ।। ११ ।।**

ந ஸங்க்₂யோபஸங்க்₃ரஹாத₃பி நாநாபா₄வாத₃திரேகாச்ச 11

(எண்ணிக்கை சொல்வதினாலும் இல்லை, பலவாயிருப்பதினாலும் அதிகமாயிருப்பதினாலும்)

**प्राणादयो वाक्यशेषात् ।। १२ ।।**

ப்ராணாத₃யோ வாக்யசேஷாத் 12

(ப்ராணன் முதலியவைகள், வாக்கியசேஷத்திலிருந்து)

**ज्योतिषैकेषामसत्यन्ने ।। १३ ।।**

ஜ்யோதிஷைகேஷாமஸத்யந்நே 13

(ஜ்யோதிஸினால் சிலருக்கு, அன்னம் இல்லாதிருக்கையில்)

பிருஹதாரண்யம் ஆருவது அத்யாயத்தில் "यस्मिन्पञ्च पञ्चजना आकाशश्च प्रतितिष्ठत:। तमेव मन्ये आत्मानं विद्वान्ब्रह्मामृतोऽमृतम्।।" "எதனிடத்தில் ஐந்து பஞ்சஜனங்களும், ஆகாசமும் நிலைத்திருக்கின்றனவோ அதையே தான் ஆத்மாவாய், மரணமற்றதாய், பிரஹ்மமாய் எண்ணுகிறேன். அதை அறிகிற நானும் மரணமற்றவனுக ஆவேன்" என்றிருப்பதில் கண்ட "ஐந்து பஞ்ச ஜனங்கள்" என்பது என்ன? என்று இங்கு தீர்மானிக்கப்படுகிறது.

पञ्च पञ्चजनाः सांख्यतत्त्वान्याहो श्रुतीरिताः।
प्राणाद्याः सांख्यतत्त्वानि पञ्चविंशतिभासनात्।। ५ ।।
न पञ्चविंशतेर्भानमात्माकाशातिरेकतः।
संज्ञापञ्चजनेत्येषा प्राणाद्याः संज्ञिनः श्रुताः।। ६।।

பஞ்ச பஞ்சஜநா: ஸாங்க்$_2$யதத்த்வாந்யாஹோ ச்ருதீரிதா: ।
ப்ராணாத்$_3$யா: ஸாங்க்$_2$யதத்த்வாநி பஞ்சவிம்சதிபா$_4$ஸநாத்।। 5
ந பஞ்சவிம்சதேர்பா$_4$நமாத்மாகாசாதிரேகத: ।
ஸம்ஜ்ஞாபஞ்சஜநேத்யேஷா ப்ராணாத்$_3$யா: ஸம்ஜ்ஞிந:ச்ருதா:।। 6

(அ..ம்)
பஞ்ச பஞ்ச ஜனங்கள் என்பது ஸாங்கியர் சொல்லும் தத்வங்களா? அல்லது வேதத்தில் சொல்லிய பிராணன் முதலியவைகளா? இருபத்தைந்து என்று தெரிவதினால் ஸாங்கியர் சொல்லும் தத்வங்கள்தான்.
ஆத்மாவும் ஆகாசமும் அதிகமாயிருப்பதால் இருபத்தைந்து என்று தெரிவதில்லை. "பஞ்சஜனங்கள்" என்ற இது வெறும் பெயர். அப்பெயருள்ளவைகள் வேதத்தில் கண்ட பிராணன் முதலியவை.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
இங்கே "பஞ்ச பஞ்ச ஜனங்கள்" என்று சொல்வதில் முதலில் ஒரு பஞ்ச பின்னால் "பஞ்ச" என்று ஒரு ஐந்து. இருப்பதால் ஐந்து ஐந்து என்று கிடைக்கிறது. அதாவது இருபத்தைந்து என்று கிடைக்கிறது. ஸாங்கிய மதத்தில் விகாரத்தையடையாமலிருக்கும் மூலபிரகிருதி என்ற பிரதானம் ஒன்று. பிரதானத்தின் கார்யமாகவும், பின்னுள்ளவைகளுக்கு காரணமாயும் உள்ள ப்ரகிருதி விகிருதி பதார்த்தங்கள் ஏழு. காரணத் தன்மையற்று, கார்யமாகவேயிருக்கும் விகார பதார்த்தங்கள் பதினாறு. ஆத்மா ஒன்று என்று மொத்தம் தத்வங்கள் 25 என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. அந்த 25 தத்வங்கள்தான் இங்கே சொல்லப்படுகிற ஐந்து ஐந்து ஜனங்கள் என்பது.

ஸித்தாந்தம் :
பஞ்ச பஞ்ச ஜனங்கள் என்பதை இருபத்தைந்து என்று கணக்குப் பண்ணினாலும் அந்த எண்ணிக்கை ஸாங்கியர்களின் தத்வங்களை சொல்வதாக ஆகாது. ஏனென்றால் ஆகாசம் என்பது அவர்கள் சொல்லும் இருபத்தைந்துக்கு உள்பட்டது. இங்கேயோ தனியாக "ஆகாசமும்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் "எதில் இவை

நிலேத்திருக்கின்றனவோ அது ஆத்மா" என்று சொல்லப்படுவதால் ஆத்மா என்பது பஞ்ச பஞ்ச ஜனங்களில் சேர்ந்ததாக ஆகாது. ஆத்மா ஆச்ரயராயிருப்பதாயும், ஆச்ரயாக்கப்பட்டதாயும் இருப்பது பரஸ்பர விரோதமானதினுல் ஸாத்தியமில்லே. தவிரவும் ஆத்மாவைச் சேர்த்துத் தான் ஸாங்கியர்களின் 25 தத்வங்கள். இங்கேயோ தனியாக மற்றவைகளுக்கு ஆசிரயமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வாக்கியத்தில் கண்ட பஞ்ச பஞ்ச ஜனங்கள் என்பதை 25 என்று சொன்னுல் தனியாய் சொல்லப்பட்டிருக்கும் ஆகாசம் ஆத்மா என்ற இரண்டையும் சேர்த்துக்கொண்டால் மொத்தம் 27 ஆகிவிடும். அதுவும் ஸாங்கிய மதத்திற்கு ஒத்து வராது. ஆகையால் அவர்களுடைய தத்வங்களே இங்கே குறிப்பதாகச் சொல்வதற்கு வழியேயில்லே. அப்படியானுல் இந்த வாக்கியத்தில் சொல்லியிருப்பது என்னவென்று கேட்கலாம். இங்கே "பஞ்சஜன" என்பது ஒரு கூட்டத்தைக் குறிக்கும் பெயர் "ஸப்தரிஷிகள் ஏழு" என்று சொல்வது போல. "பஞ்சஜனம் என்று சொல்லப்படுகிறவர்கள் ஐந்து பேர்கள்" என்று தான் தாத்பர்யம். ஐந்து ஐந்து. இருபத்தைந்து என்று கணக்கிட வழியில்லே. அந்த ஐவர் யார் என்பது பின் வாக்கியமாகிற " प्राणस्य प्राणमुत चक्षुषश्चक्षुरुत श्रोत्रस्य श्रोत्रमुतान्नस्यान्नं मनसो ये मनो विदुः।" "எவர் இதை பிராணனுக்கும் பிராணனுக, கண்ணுக்கும் கண்ணுக, காதுக்கும் காதாக, அன்னத்திற்கும் அன்னமாக, மனஸிற்கும் மனஸாக அறிகிருர்களோ" என்று கண்டிருக்கும் பிராணன், கண், காது, அன்னம், மனஸ் என்றதில் முதலில் சொன்ன ஐந்துந்தான் "பஞ்சஜனங்கள்" இரண்டாவதாகச் சொன்ன பிராணன் முதலியன அவ்வைந்திற்கும் ஸாக்ஷியாயிருக்கும் ஆத்ம சைதன்யம். ஆகையால் முன் வாக்கியத்திலுள்ள பஞ்சஜனங்கள் என்பது இந்த பிராணன், கண் முதலியவைகள் தான்.

## ४. कारणत्वाधिकरणम्

## 4. *காரணத்வாதி₄கரணம்*

(ஸூத்ரம் 14,15)

**कारणत्वेन चाकाशादिषु यथाव्यपदिष्टोक्तेः ।। १४ ।।**

காரணத்வேந சாகாசாதி₃ஷு யதா₂வ்யபதி₃ஷ்டோக்தே: 14
(ஆகாசம் முதலானவைகளில் காரணத்தன்மையாகக் குறிப்பிட்டபடியே சொல்லியிருப்பதால்)

## समाकर्षात्।। १५।।
## ஸமாகர்ஷாத் 15
## (தொடர்ந்து வருவதால்)

இதுவரை வாக்கியங்களின் தாத்பர்யத்தையும், சில பதங்களில் அர்த்தத்தையும் பற்றி விசாரணை செய்து எல்லா உபநிஷத்துக்களுக்கும் பிரஹ்மத்திலேயேதான் தாத்பர்யம் என்பது எடுத்துக்காட்டப்பட்டது. தவிரவும் பிரஹ்மத்திற்கு லக்ஷணம் சொல்லும் போது அதுவே ஜகத்திற்குக் காரணமாயுள்ள வஸ்து என்று குறிப்பிடப்பட்டது. அது அவ்வளவு சரியில்லைப்போலிருக்கிறதேயென்று சில ஆக்ஷேபணைகளைக் கண்டு அவைகளுக்கு ஸமாதானம் இந்த பாதத்திலுள்ள மேல் அதிகரணங்களில் சொல்லப்படுகிறது.

समन्वयो जगद्योनौ न युक्तो युज्यतेऽथवा।
न युक्तो वेदवाक्येषु परस्परविरोधतः।। ७।।
सर्गक्रमविवादेऽपि नासौ स्त्रष्टरि विद्यते।
अव्याकृतमसत्प्रोक्तं युक्तोऽसौ कारणे ततः।। ८।।

ஸமந்வயோ ஜகத்₃யோநௌ ந யுக்தோ யுஜ்யதேஅத₂வா ।
ந யுக்தோ வேத₃வாக்யேஷு பரஸ்பரவிரோத₄த: ।। 7
ஸர்க₃க்ரமவிவாதே₃அபி நாஸௌ ஸ்ரஷ்டரி வித்₃யதே ।
அவ்யாக்ருதமஸத்ப்ரோக்தம் யுக்தோஅஸௌ காரணே தத: ।। 8

(அ..ம்)

ஜகத்காரணமென்ற விஷயத்தில் (உபநிஷத்துக்களுக்குள்) ஒத்துப்போதல் என்பது பொருந்துமா? அல்லது பொருந்தாதா? வேதவாக்கியங்களுக்குள் ஒன்றுக்கொன்று விரோதமிருப்பதால் பொருந்தாது.

ஸ்ருஷ்டி செய்யும் வரிசையில் பலவிதமாகச் சொல்லப்பட்டிருந்த போதிலும் ஸ்ருஷ்டி செய்கிறவர் விஷயத்தில் பலவிதமாய் சொல்லுதல் இல்லை."அஸத்" (இல்லாதது) என்று (நாமரூபங்களால்) வியாகரணம் செய்யாதது (தெளிவாய்த் தெரியாதது) சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் காரணவிஷயத்தில் ஒத்துப்போதல் பொருத்தமே.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

தைத்திரீய உபநிஷத்தில் "आत्मन आकाशः संभूतः" "ஆத்மாவினிடமிருந்து ஆகாசம் உண்டாயிற்று" என்று ஆரம்பித்து ஆகாசம் முதலியதை ஸ்ருஷ்டி செய்ததாக காண்கிறது. சாந்தோக்யத்திலோ,

தைத்திரீயத்தில் கண்ட ஆகாசம் வாயு இரண்டையும் விட்டுவிட்டு " तत् तेजोऽसृजत" "அது தேஜஸை ஸ்ருஷ்டி செய்தது" என்று தேஜஸை முதலில் வைத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. ஐதரேய உபநிஷத்திலோ " स इमान् लोकान् असृजत" "அவர் இந்த உலகங்களை ஸ்ருஷ்டித்தார்" என்று உலக ஸ்ருஷ்டி காணப்படுகிறது. முண்டகோபநிஷத்தில் " एतस्मात् जायते प्राण:" "இதிலிருந்து பிராணன் உண்டாகிறது" என்று பிராணஸ்ருஷ்டி முதலில் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் ஸ்ருஷ்டிக்கப்படுவதிலுள்ள வரிசையில் மாத்திரம் விரோதம் என்பதில்லை. காரணவஸ்துவின் ஸ்வரூபத்திலேயே விரோதம் காண்கிறது. சாந்தோக்யத்தில் " सत् एव सोम्य इदं अग्रे आसीत्" "இது முன்னால் ஸத்தாகவேயிருந்தது, ஹே ஸோம்ய!" என்று காரணவஸ்துவிற்கு ஸத்தன்மை இருக்கும் தன்மை சொல்லப்பட்டிருக்கிறது. தைத்திரீயத்திலோ நேர் விரோதமாய் "असत् वा इदं अग्रे आसीत्" "இது முன்னால் அஸத்தாகவேயிருந்தது" என்று அஸத்தன்மை (இல்லாத்தன்மை) சொல்லப்படுகிறது. ஐதரேய உபநிஷத்திலோ "आत्मा वा इदं एक एव अग्रे आसीत्" "இது முன்னால் ஒரே ஆத்மாவாகவே இருந்தது" என்று காரணவஸ்துவிற்கு ஆத்மத்தன்மை சொல்லப்படுகிறது.இவ்விதமாக ஒன்றுக்கொன்று விரோதமாயிருப்பதால் எல்லா உபநிஷத்துக்களும் காரணவிஷயத்தில் ஒத்துப் போகின்றன என்பது சரியல்ல.

ஸித்தாந்தம் :

ஸ்ருஷ்டிக்கப்படும் பதார்த்தங்களிலோ, ஸ்ருஷ்டி செய்யும் வரிசைக் கிரமத்திலோ விவாதம் இருக்கட்டும். பிரஹ்மம் இரண்டாவதற்றது எனபதைப் போதிப்பதே உபநிஷத்துக்களின் தாத்பர்யமானதினால் மற்ற விஷயங்களில் மாறுபாடு இருப்பதினால் எவ்வித தோஷமும் இல்லை. ஸ்ருஷ்டிக்கப்படுவது எல்லாம் பிரஹ்மத்திலிருந்தே உண்டானபடியால் அவையாவும் பிரஹ்மத்தைத் தவிர வேறு இல்லை. ஆகையால் பிரஹ்மம் இரண்டாவதற்றது என்றுதான் உபதேசிக்க வேண்டிய விஷயம். அப்படி ஜகத்திற்குக் காரணமாயிருப்பது பிரஹ்மமேயென்பதில் எவ்வித விவாதமும் இல்லை. ஆகையால் பிரஹ்ம விஷயத்தில் எல்லா உபநிஷத்துக்களும் ஒத்துதான் இருக்கின்றன. ஸத்தாயுள்ள பிரஹ்மத்தை (எல்லா ஜீவஸ்வரூபமாயிருப்பதால் ) ஆத்மா என்றும் சொல்லப்படுகிறது. ஜகத்காரணமாயுள்ள சுத்த பிரஹ்மத்தினிடத்தில் பிரிவைக்காட்டக்கூடிய நாமரூபங்கள் கிடையாததினால் அது

அவியாகிருதம் என்ற அர்த்தத்தில் அஸத் என்று சொல்லப்பட்டதே தவிர, இருப்பேயில்லாத வஸ்து என்ற அர்த்தத்தில் சொல்லப்படவில்லே. அதே வாக்கியத்தில் "அஸத்தாக இருந்தது" என்று சொல்வதினுலேயே அது இருப்புள்ள ஸத்வஸ்து தான் என்பது நன்ருகத் தெரிகிறது. அது வாஸ்தவமாகவே இல்லாமலிருந்தால் அதிலிருந்து ஜகத் எப்படித் தோன்றும்படி, காரண வஸ்துவாக இருக்க முடியும் என்று வேறு சுருதியில் " कथं असतः सत् जायेत " "இல்லாததிலிருந்து இருப்பது எப்படி பிறக்கும்?" என்று எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. இவ்விதம் எல்லா வாக்கியங்களுக்கும் தாத்பர்யம் ஒன்று தான் என்று நன்கு எடுத்துக்காட்ட முடியுமானதினுல் ஜகத்காரண விஷயத்தில் சமன்வயமானது ( ஒத்துப்போதல் ) பொருத்தமாயுள்ளது தான்.

# ५. बालाक्यधिकरणम्

## 5. *பா₃லாக்யாதி₄கரணம்*

(ஸூத்ரம் 16 - 18)

**जगद्वाचित्वात्।। १६।।**

ஜக₃த்₃வாசித்வாத் 16

(ஜகத்தை சொல்வதாயிருப்பதால்)

**जीवमुख्यप्राणलिङ्गान्नेति चेत्तद्व्याख्यातम्।। १७।।**

ஜீவமுக்₂யப்ராணலிங்கா₃ந்நேதி சேத்த₃த்வ்யாக்₂யாதம் 17

(ஜீவலிங்கம் முக்கியபிராணலிங்கமிருக்கிறதினால் இல்லை என்றால்,. அது வியாக்யானம் செய்தாகிவிட்டது)

**अन्यार्थं तु जैमिनिः प्रश्नव्याख्यानाभ्यामपि चैवमेके।। १८।।**

அந்யார்த₂ம் து ஜைமிநி: ப்ரச்நவ்யாக்₂யாநாப்₄யாமபி சைவமேகே 18

(ஜைமிநியோ வேறுவிசயத்திற்காக, கேள்வியிலிருந்தும் வியாக்யானத்திலிருந்தும், இவ்விதமே சிலரும்)

கௌஷீதகிப்பிராஹ்மண உபநிஷத்தில் பாலாகி என்ற பிராஹ்மணர் ஆதித்யன் முதலான புருஷர்களே வரிசையாக பிரஹ்மம் என்று சொல்லி வந்ததில் அவைகளேத் தள்ளிவிட்டு, ராஜன் " यो वै बालाके, एतेषां पुरुषाणां कर्ता यस्य वैतत्कर्म, स वै वेदितव्यः।" "ஹே பாலாகே! இந்த புருஷர்களுக்கெல்லாம் எவர் கர்த்தாவோ, அது எவருடைய கர்மாவோ அவர் தான் அறிய வேண்டியவர்" என்கிருர். இங்கே எல்லா புருஷர்களுக்கும் கர்த்தாவென்று சொல்லப்பட்டிருப்பது யார்? என்று விசாரிக்கப்படுகிறது.

पुरुषाणां तु कः कर्ता प्राणजीवपरात्मसु।
कर्मेति चलने प्राणो जीवोऽपूर्वे विवक्षिते।। ९।।
जगद्वाची कर्मशब्दः पुंमात्रविनिवृत्तये।
तत्कर्ता परमात्मैव न मृषावादिता ततः।। १०।।

புருஷாணாம் து க: கர்தா ப்ராணஜீவபராத்மஸு ।
கர்மேதி சலநே ப்ராணோ ஜீவோஅபூர்வே விவக்ஷிதே ।। 9
ஜக₃த்₃வாசீ கர்மசப்₃த: பும்மாத்ராவிநிவ்ருத்தயே ।
தத்கர்தா தரமாத்மைவ ந ம்ருஷாவாதி₃தா தத: ।। 10

(அ..ம்)

பிராணன், ஜீவன், பரமாத்மா இவர்களுக்குள் புருஷர்களுக்கு கர்த்தா என்பது யார்? கர்மாவென்று சலனம் சொல்வதால் பிராணன். (அல்லது) அபூர்வத்தைச் சொல்ல எண்ணிஞல் ஜீவன்.

புருஷர்களை மாத்திரம் என்பதைத் தடுப்பதற்காக கர்ம சப்தம் (போட்டிருப்பதால்) ஜகத்தைச் சொல்கிறது. அதன் கர்த்தா பரமாத்மாவே தான். அதஞல் தான் பொய் சொல்லாத்தன்மை.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

கர்ம என்ற சப்தம் சலிப்பது என்பதைச் சொல்வதாலும், சரீரம் முதலியதை சலிக்கும் படிச் செய்வது பிராணவாயுவின் ஸம்பந்தத்திஞலேயே ஆனதிஞலும் இங்கு கர்த்தா என்று சொல்லப்பட்டது பிராணன். அல்லது கர்ம என்ற சப்தம் புண்ய பாபங்களால் ஏற்படும் "அபூர்வம்" என்பதைச் சொல்வதிஞலும், அந்த அபூர்வத்தை ஸம்பாதித்து உண்டு பண்ணினது ஜீவனேயானதிஞலும் இங்கு சொன்ன கர்த்தா ஜீவஞக இருக்கலாம்.

ஸித்தாந்தம் :

இங்கே கர்ம என்ற சப்தம் சலிப்பது என்ற அர்த்தத்தையோ, அபூர்வமென்ற அர்த்தத்தையோ குறிக்கிறதில்லை. செய்யப்படுவது எதுவோ அது கர்ம என்ற முறையில் உண்டாக்கப்படுவதான ஜகத்தையே சொல்கிறது. இவ்விதம் எடுத்துக் கொண்டால் தான் அவர் புருஷர்களுக்கு மாத்திரம் கர்த்தா என்பதில்லை, ஜகத் பூராவிற்கும் கர்த்தா என்ற அர்த்தம் கிடைக்கும். ஹே பாலாகே! நீர் யாரையெல்லாம் புருஷர்கள் என்று சொன்னீரோ அவர்களுக்கெல்லாம் இவர் கர்த்தா. ஆகையால் அவர்கள் செய்யப்படுகிறவர்களேயா வதால் அவர்கள் வாஸ்தவத்தில் செய்கிறவர் என்று ஆகாது. இந்த

முறையில் அவர்கள் வாஸ்தவமாய் புருஷர்களேயில்லை. இவர் தான் புருஷர். நீர் சொன்ன புருஷர்களுக்கும் கர்த்தா இவர் என்று சொன்னேன். அப்படித்தான் அவர் மஹிமையை சுருக்கிச் சொல்வானேன், அவர்கள் உள்பட ஜகத் பூராவும் அவரால் செய்யப்பட்டதே. அவர் தான் அறிய வேண்டியவர் என்று ராஜனின் அபிப்பிராயம். பூரா ஜகத்தையும் உண்டு பண்ணும் தன்மை பரமாத்மவையே சேர்ந்தது. இது பிராணனுக்கோ ஜீவனுக்கோ கிடையாது. மேலும் பாலாகி முதலில் ராஜனிடம் "உமக்கு பிரஹ்மத்தை சொல்கிறேன்" **"ब्रह्म ते ब्रवाणि"** என்று ஆரம்பித்து ஒவ்வொன்றாக ஆதித்யன் முதலான பதினாரு புருஷர்களைச் சொன்னதில் ராஜன் அவைகளையெல்லாம் **"मृषा वै किल"** "பொய்யானதல்லவா?" என்று மறுத்தளித்து விட்டு, தான் சொல்லும் போது பிரஹ்மம் என்று பிராணனையோ, ஜீவனையோ சொல்லியிருந்தால் இவனும் பொய் சொன்னவனாகவே ஆவான். அது கொஞ்சமேனும் உசிதமில்லை. ஆகையால் இங்கே சொல்லப்பட்ட ஜகத் கர்த்தா பரமாத்மாதான்.

# ६. वाक्यान्वयाधिकरणम्

## 6. *வாக்யான்வயாதி₄கரணம்*

(ஸூத்ரம் 19 - 22)

**वाक्यान्वयात्।। १९।।**

வாக்யாந்வயாத் 19

(வாக்கியத்தின் அன்வயத்தினால்)

**प्रतिज्ञासिद्धेर्लिङ्गमाश्मरथ्यः।। २०।।**

ப்ரதிஜ்ஞாஸித்₃தே₄ர்லிங்க₃மாச்மரத்₂ய: 20

(பிரதிக்ஞையின் ஸித்திக்கு லிங்கம் என்று ஆச்மரத்யர்)

**उत्क्रमिष्यत एवंभावादित्यौडुलोमिः।। २१।।**

உத்க்ரமிஷ்யத ஏவம்பா₄வாதி₃த்யௌடு₃லோமி: 21

(வெளியில் கிளம்புகிறவர் (பின்னால்) இவ்விதம் ஆவதால் என்று ஔடுலோமி)

**अवस्थितेरिति काशकृत्स्नः।। २२।।**

அவஸ்தி₂தேரிதி காசக்ருத்ஸ்ந: 22

(அவ்விதம் இருப்பதால் என்று காசக்ருத்ஸ்னர்)

பிருஹதாரண்யகம் நான்காவது அத்யாயத்தில் யாஜ்ஞவல்க்ய மஹர்ஷி தன் பார்யை மைத்ரேயியிடம் **"आत्मा वा अरे द्रष्टव्यः, श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः"** "ஹே மைத்ரேயி! ஆத்மா தான் ஸாக்ஷாத்கரிக்க வேண்டியவர், கேட்கப்படவேண்டியவர், மனனம் செய்யப்பட

வேண்டியவர், நிதித்யாஸனம் செய்யப்படவேண்டியவர்" என்று சொல்கிருர். இங்கு சொல்லப்படும் ஆத்மா பிரஹ்மமா? அல்லது ஜீவனு? என்பது இங்கு விஷயம்.

**आत्मा द्रष्टव्य इत्युक्तः संसारी वा परेश्वरः।**
**संसारी पतिजायादिभोगप्रीत्याऽस्य सूचनात्।। ११।।**
**अमृतत्वमुपक्रम्य तदन्तेऽप्युपसंहृतम्।**
**संसारिणमनूद्यातः परेशत्वं विधीयते।। १२।।**

ஆத்மா த்$_3$ரஷ்டவ்ய இத்யுக்த: ஸம்ஸாரீ வா பரேச்வர: ।
ஸம்ஸாரீ பதிஜாயாதி$_3$போ$_4$க$_3$ப்ரீத்யாஅஸ்ய ஸூசநாத் ।। 11
அம்ருதத்வமுபக்ரம்ய தத$_3$ந்தேஅப்யுபஸம்ஹ்ருதம் ।
ஸம்ஸாரிணமநூத்$_3$யாத: பரேசத்வம் விதீ$_3$யதே।। 12

(அ..ம்)

ஆத்மா ஸாக்ஷாத்கரிக்க வேண்டியவர் என்று சொல்லப்பட்டிருப்பது ஸம்ஸாரியா? அல்லது பரமேசுவரரா? பர்த்தா, பார்யை முதலான போகங்களில் பிரீதியென்பதிஞல் ஸம்ஸாரிக்கு ஸூசனமிருப்பதால் ஸம்ஸாரி தான்.

மரணமற்ற தன்மையென்று ஆரம்பித்து, முடிவிலும் அதுவே சொல்லப்பட்டு இருக்கிறது. ஆகையால் ஸம்ஸாரியை அனுவாதம் செய்து பரமாத்மாவாக இருக்கும் தன்மை விதிக்கப்படுகிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

யாஜ்ஞ்யவல்க்யர் **"न वा अरे पत्युः कामाय पतिः प्रियो भवति, आत्मनस्तु कामाय पतिः प्रियो भवति।"**"ஹே மைத்ரேயி! பர்த்தாவினுடைய காமத்திற்காக (பார்யைக்கு) பர்த்தா பிரியனில்லை தன்னுடைய காமத்திற்காகத்தான் பர்த்தா பிரியனுகிருன்" என்பது முதலான வாக்கியங்களால், போகத்தில் பிரீதியுள்ளவனையே சொல்வதிஞல் ஸம்ஸாரியாயிருக்கும் தன்மை தான் குறிப்பிடப்படுகிறது. பர்த்தா, புத்திரன், தனம் முதலியது யாவும் தனக்கு ஸுகம் கொடுப்பதிஞலேயே அவைகளில் பிரீதி ஏற்படுகிறதென்று சொல்லப்படுவதிஞல் அவ்விஷயங்களில் பற்றுதலுள்ளவனைத்தான் சொன்னதாக ஆகும். அது ஸம்ஸாரியான ஜீவன்தான். எவ்வித பற்றுதலுமில்லாத ஈசுவரருக்கு விஷயங்களில் மோகமோ அதிஞல் பிரீதியோ ஏற்படுவதற்கு நிமித்தமேயில்லை. ஆகையால் இங்கே சொல்லப்படுவது ஸம்ஸாரிதான்.

ஸித்தாந்தம் :

யாஜ்ஞ்யவல்க்யர் தன் பார்யைகளாகிய மைத்ரேயீ, காத்யாயனீ இருவருக்கும் தன் சொத்தைப் பிரித்துக் கொடுத்து விட்டு, சன்யாஸம் பெற நினைத்துச் சொன்ன போது, மைத்ரேயீ "यन्नु म इयं भगोः सर्वा पृथिवी वित्तेन पूर्णा स्यात् स्यां नु अहं तेन अमृता आहो न" "சொத்து நிறைந்ததாக இந்த பூமி பூராவும் எனக்கு இருந்தாலும், ஹே பகவன், அதினால் நான் மரணமற்றவளாக ஆவேனா, அல்லது ஆகமாட்டேனா? என்று கேட்டதற்கு அவர் "अमृतत्वस्य तु न आशा अस्ति वित्तेन" "சொத்தினால் மரணமற்ற தன்மை கிடைக்குமென்ற ஆசையே வேண்டாம்" என்று பதில் சொல்லிவருகிறார். அதற்கு அவள் "येन अहं न अमृता स्यां किं अहं तेन कुर्यां, यत् एव भगवान् वेद तत् एव मे ब्रूहि" "எதைக் கொண்டு நான் மரணமற்றவளாக இருக்க மாட்டேனோ, அதை வைத்துக் கொண்டு நான் என்ன செய்ய வேண்டும்? (ஆகையால்) தாங்கள் எதை (மரணமற்ற தன்மைக்குக் காரணமாக) அறிந்திருக்கிறீர்களோ, அதையே எனக்குச் சொல்லுங்கள்" என்கிறாள். இவ்விதம் மரணமற்ற தன்மையைப்பற்றியே ஆரம்பத்தில் சொல்லப்பட்டது. முடிவிலும் "एतावत् अरे खलु अमृतत्वं" "ஹே மைத்ரேயி! இவ்வளவு தான் மரணமற்ற தன்மை" என்று கண்டிருக்கிறது. ஆக ஆரம்பத்திலும், முடிவிலும் போதிக்கப்படுவது ஆத்மஞானம். ஜீவாத்மா விஷயமான ஞானம் ஒரு பொழுதும் மரணமற்ற தன்மைக்குக் காரணமாகாது. ஆகையால் இங்கே கண்டிருக்கும் ஆத்மா பரமாத்மாதான். ஆனால் அந்த பரமாத்மாவை காட்டுவதற்கு போகங்களில் பிரீதியுள்ள ஜீவன் மூலமாகவே காட்ட வேண்டியிருப்பதால், அந்த ஜீவனைக் குறிப்பிடும்படி ஏற்பட்டது. அதினால் ஜீவனே அறியத்தக்கவன் என்று ஆகாது. அது பரமாத்மாதான்.

## ७. प्रकृत्यधिकरणम्

### 7. *பிரகிருத்யதி₄கரணம்*

(ஸூத்ரம் 23 - 27)

**प्रकृतिश्च प्रतिज्ञादृष्टान्तानुपरोधात् ।। २३।।**

ப்ரக்ருதிச்ச ப்ரதிஜ்ஞாத்₃ருஷ்டாந்தாநுபரோதா₄த் 23
(பிரகிருதியும், பிரதிக்ஞையும் திருஷ்டாந்தமும் கெடாமலிருப்பதால்)

**अभिध्योपदेशाच्च।। २४।।**

அபி₄த்₄யோபதே₃சாச்ச 24

(தியானம் உபதேசிக்கப்பட்டிருப்பதாலும்)

साक्षाच्चोभयाम्नानात्।। २५।।

ஸாக்ஷாச்சோப$_4$யாம்நாநாத் 25

(நேராகவே இரண்டும் சொல்லியிருப்பதினாலும்)

आत्मकृते : परिणामात्।। २६।।

ஆத்மக்ருதே: பரிணாமாத் 26

(தானேசெய்வதால், பரிணாமத்தினால்)

योनिश्च हि गीयते।। २७।।

யோனிச்ச ஹி கீ$_3$யதே 27

(யோனி - என்றுமல்லவா சொல்லப்படுகிறது)

பிரஹ்மம் தான் ஜகத் காரணம் என்ருலும், காரணம் என்பதில் குயவனைப் போல நிமித்த காரணம் என்றும், மண்ணைப் போல உபாதான காரணம் என்றும் இரண்டு விதமிருப்பதால் பிரஹ்மம் நிமித்த காரணமா? உபாதான காரணமா? அல்லது இரண்டுமேயா? என்பது இங்கு விஷயம்.

निमित्तमेव ब्रह्म स्यादुपादानं च वीक्षणात्।
कुलालवन्निमित्तं तन्नोपादानं मृदादिवत्।। १३।।
बहु स्यामित्युपादानभावोऽपि श्रुत ईक्षितुः।
एकबुद्ध्या सर्वधीश्च तस्माद्ब्रह्मोभयात्मकम्।। १४।।

நிமித்தமேவ ப்$_3$ரஹ்ம ஸ்யாது$_3$பாதா$_3$நம் ச வீக்ஷணாத் ।
குலாலவந்நிமித்தம் தந்நோபாதா$_3$நம் ம்ருதா$_3$தி$_3$வத் ।। 13
ப$_3$ஹு ஸ்யாமித்யுபாதா$_3$நபா$_4$வோऽபி ச்ருத ஈக்ஷிது: ।
ஏகபு$_3$த்$_3$த்$_4$யா ஸர்வதீ$_4$ச்ச தஸ்மாத்$_3$ப்$_3$ரஹ்மோப$_4$யாத்மகம் ।। 14

(அ..ம்)

பிரஹ்மம் நிமித்த காரணம் மாத்திரம்தானு? உபாதான காரணமுமா? "ஆலோசிப்பது" என்பதினுல் அது குயவனைப்போல நிமித்தமே. மண் முதலியதைப் போல உபாதானம் அல்ல.

"நான் பலவாக ஆவேன்" என்பதினுல் ஆலோசிப்பவருக்கு உபாதனமாய் இருக்கும் தன்மையும் சொல்லப்பட்டிருக்கிறது. ஒன்றை அறிவதினுல் எல்லாவற்றின் அறிவும் (சொல்லப்பட்டிருக்கிறது) ஆகையால் பிரஹ்மம் இரண்டு தன்மைகளையுமுடையது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"तदैक्षत" "அது ஆலோசித்தது" என்று ஸ்ருஷ்டிக்க வேண்டிய விஷயங்களைப்பற்றி பிரஹ்மம் ஸ்ருஷ்டிப்பதற்கு முன்னுல்

ஆலோசித்ததாகச் சொல்லப்படுகிறது. ஆலோசனே என்பது குடத்தை உண்டுபண்ண நினைக்கும் நிமித்த காரணமான குயவனிடத்தில் தான் பார்த்திருக்கிரேம். உபாதான காரணமான மண் முதலியவைகளில் ஆலோசனையைக் கண்டிருப்பதே கிடையாது. ஆகையால் ஜகத்ஸ்ருஷ்டி விஷயமாய் ஆலோசனே செய்ததாகச் சொல்லப்படும் பிரஹ்மம் நிமித்த காரணம் மாத்திரம் தான்.

ஸித்தாந்தம் :

அதே வாக்கியத்தில் என்ன ஆலோசனே செய்தார் என்பதும் சொல்லப்பட்டிருக்கிறது. "बहु स्यां प्रजायेय" "பலவாகஆவேன், நன்ருக உண்டாவேன்" என்பதினுலேயே ஜகத்தை ஸ்ருஷ்டி செய்ய வேறு உபாதான காரணத்தைத் தேடாமல், தானே அவ்விதமாக நினைத்தார் என்பதினுல் அவரே தான் உபாதானகாரணமும், நிமித்தகாரணமும் என்று ஏற்படுகிறது. மேலும் " येनाश्रुतं श्रुतं भवति " "எதினுல் (எதைத் தெரிந்து கொண்டால் கேட்கப்படாததும், கேட்கப்பட்டதாக ஆகுமோ" என்பது முதலான வாக்கியங்களால் பிரஹ்மமாகிய ஒன்றைத் தெரிந்து கொண்டால், கேட்கப்படாமலிருக்கும் ஜகத்தும் கூட கேட்கப் பட்டதாக ஆகிவிடும் என்று ஒன்றின் அறிவினுல் எல்லாவற்றின் அறிவு ஏற்படுவதாகக் காண்கிறது. இது எல்லாவற்றிற்கும் பிரஹ்மம் உபாதான காரணமாயிருந்தால் தான் ஸாத்தியப்படும். உண்டாகும் கார்யங்கள் யாவும் தங்கள் உபாதான காரணத்தை விட்டுத்தனியாக இருக்க முடியாததினுல் ஜகத் பிரஹ்மத்தைத் தவிர வேறுபட்டதில்லையென்று சுலபமாய் சொல்ல முடியும். பிரஹ்மத்தைத் தவிர ஜகத்திற்கு உபாதான காரணமாய் வேறு வஸ்து ஏதேனும் இருந்ததேயானுல் பிரஹ்மத்தை அறிவதினுல் அந்த வஸ்து அறியப்பட்டதாக ஆகாது. அந்த வஸ்துவை அறிந்தால் பிரஹ்மம் அறியப்பட்டதாக ஆகாது. குயவனே அறிந்தால் மண்ணே அறிந்ததாக ஆகாது, மண்ணேயறிந்தாலும் குயவன் அறியப்பட்டவனுக ஆக மாட்டான். ஆகையால் ஒன்றை அறிவதனுல் எல்லாவற்றையும் அறிந்ததாக ஆகாது. ஒன்றை அறிந்தால் எல்லாம் அறிந்ததாக ஆக வேண்டுமானுல் அந்த எல்லாம் என்பது அந்த ஒரு வஸ்துவைவிட வேறு தனித்த பதார்த்தமாக இருக்கக்கூடாது. அவ்விதம் ஸ்வரூபத்தில் தனி வஸ்துவாக இல்லாமலிருந்தும் தனிபோலத் தோன்றுவது உபாதான காரணமாய் இருப்பதில் தான் ஸாத்தியம்.

ஆகையால் பிரஹ்மம் ஜகத்திற்கு நிமித்த காரணம் என்பதுடன் உபாதான காரணமாயுமிருக்கிறது.

# ८. सर्वव्याख्यानाधिकरणम्

## 8. *ஸர்வவியாக்$_2$யானாதி$_4$கரணம்*

(ஸூத்ரம் 28)

**एतेन सर्वे व्याख्याता व्याख्याताः ।। २८ ।।**

ஏதேந ஸர்வே வ்யாக்$_2$யாதா வ்யாக்$_2$யாதா: 28

(இதினால் எல்லாம் வியாக்யானம் செய்யப்பட்டுவிட்டது, வியாக்யானம் செய்யப்பட்டுவிட்டது)

ஜகத்திற்கு பிரஹ்மம் காரணம் என்று சொல்லப்பட்டது. வேதத்திலேயே சில வாக்கியங்களை கவனிக்கும் போது ஜகத் காரணமாக வேறு பதார்த்தங்களும் சொல்லப்படுவதாகத் தோன்றுகிறது. அவ்விதம் வேறு பதார்த்தங்களுக்கும், ஜகத்திற்குக் காரணமாயிருக்கும் தன்மையுண்டா? அல்லது அந்த தன்மை பிரஹ்மத்திற்கு மாத்திரந்தானு? என்று இந்த அதிகரணத்தில் தீர்மானிக்கப்படுகிறது.

**अण्वादेरपि हेतुत्वं श्रुतं ब्रह्मण एव वा।**
**वटधानादिदृष्टान्तादण्वादेरपि तच्छ्रुतम्।। १५।।**
**शून्याण्वादिष्वेकबुद्ध्या सर्वबुद्धिर्न युज्यते।**
**स्युर्ब्रह्मण्यपि धानाद्यास्ततो ब्रह्मैव कारणम्।। १६।।**

அண்வாதே$_3$ரபி ஹேதுத்வம் ச்ருதம் ப்$_3$ரஹ்மண ஏவ வா ।
வடதா$_4$நாதி$_3$த்$_3$ருஷ்டாந்தா$_3$தண்வாதே$_3$ரபி தச்ச்$_2$ருதம் ।। 15
சூன்யாண்வாதி$_3$ஷ்வேகபு$_3$த்$_3$த்$_4$யா ஸர்வபு$_3$த்$_3$தி$_4$ர்ந யுஜ்யதே ।
ஸ்யுர்ப்$_3$ரஹ்மண்யபி தா$_4$நாத்$_3$யாஸ்ததோ ப்$_3$ரஹ்மைவ காரணம் ।। 16

(அ..ம்)

அணு முதலானதிற்குங் கூட (ஜகத்) காரணமாயிருக்கும் தன்மை (வேதத்தில்) சொல்லப்பட்டிருக்கிறதா? அல்லது (அத்தன்மை) பிரஹ்மத்திற்கு மாத்திரம் (சொல்லப்பட்டிருக்கிறதா)? ஆலவிதை முதலான திருஷ்டாந்தங்கள் சொல்லி இருப்பதால், அது (ஜகத்தின் காரணமாய் இருக்கும் தன்மை) அணு முதலியதிற்கும் கூட சொல்லப் பட்டிருக்கிறது.

சூன்யம், அணு முதலானவைகளில் ஏதேனும் ஒன்றின் அறிவினுல் எல்லாவற்றின் அறிவு என்பது பொருத்தாது.விதை முதலிய

திருஷ்டாந்தங்கள் பிரஹ்மத்தினிடத்திலும் பொருந்தும். ஆகையால் (ஜகத்) காரணமாயுள்ளது பிரஹ்மந்தான்.
(வி..ம்)

பூர்வபக்ஷம் :

சாந்தோக்யம் ஆருவது அத்யாயத்தில் உத்தாலகமஹர்ஷி (தன் புத்திரன் சுவேதகேதுவிற்கு) உபதேசிக்கும் போது ஆல விதையைக் கொண்டு வரச் சொல்லி அதை உடைத்துப் பார்க்கச் சொல்கிருர். அதில் எதுவும் தெரியவில்லையாஞலும், அதற்குள்ளேயே பின்ஞல் வெகு விஸ்தாரமாய் உண்டாகி வளரும் ஆலமரம் ஸூக்ஷ்மமாய் அடங்கியிருக்கிறது என்ற திருஷ்டாந்தத்தைச் சொல்லி, இவ்விதமே தான் இந்த விஸ்தாரமான ஜகத்திற்குக் காரணமாயுள்ள பிரஹ்மம், அதிஸூக்ஷ்மமாயிருப்பதால் கண்ணுக்குத் தென்படுவதில்லையென்று எடுத்துக்காட்டுகிருர். ஆல விதையை திருஷ்டாந்தமாகக் காட்டினபடியால் ஜகத்காரணவஸ்து அதையும் விட வெகு சிறியதாயுள்ள பரமாணுதான் என்று சொல்லப்பட்ட தாக ஆகிறது. தவிரவும் "असद्वा इदमग्र आसीत्" "இது முதலில் அஸத்தாக (இல்லாததாக)வேயிருந்தது" என்று வெகு தெளிவாக ஜகத்காரண வஸ்து சூன்யந்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதுவும் தவிர "स्वभावमेके कवयो वदन्ति, कालं तथाऽन्ये" "சிலஅறிவாளிகள் ஸ்வபாவத்தை (ஜகத்காரணமாக) சொல்கிருர்கள், அப்படியே வேறு சிலர் காலத்தைச் சொல்கிருர்கள்" என்று ஸ்வபாவம் காலம் இவைகளுக்கே காரணத்தன்மை காணப்படுகிறது. இவையெல்லாம் வேதத்திலுள்ள வாக்கியங்களானதிஞல், பரமாணு முதலியவைகளுக்கும் ஜகத் காரணத்தன்மையுண்டு.

ஸித்தாந்தம் :

ஒன்றையறிவதிஞல் எல்லாம் அறியப்படுகிறது என்று சொல்லியிருப்ப தை நன்கு கவனித்தால் அந்த ஒன்று மற்ற எல்லா பதார்த்தங்களுக்கும் காரணம் என்றும், அந்த எல்லா பதார்த்தங்களும் அந்த ஒன்றின் கார்யங்கள், அதாவது அதிலிருந்தே உண்டானவைகளென்றும் தெரிகிறது. பரமாணு ஜடமானதிஞல் அதிலிருந்து சேதனமாயுள்ள பிரஹ்மமோ ஜீவர்களோ உண்டாயிருக்க முடியாது. ஆகையால் பரமாணுவின் அறிவிஞல் பிரஹ்மத்தின் ஞானமோ ஜீவர்களுடைய தத்வத்தை பற்றிய ஞானமோ ஏற்பட வழியில்லை. அப்படியே இல்லாத்தன்மையுள்ள சூன்யத்திலிருந்து பிரஹ்மமோ, இந்த

ஜீவர்களோ, ஜகத்தோ ஏற்பட்டிருக்க முடியாததினால், சூன்யத்தையறிவதினால் மற்றது எதையும் அறிய முடியாது.ஆலவிதை திருஷ்டாந்தம் சொன்னது, காரணவஸ்து இந்திரியங்களால் அறிந்து கொள்ள முடியாத ஸூக்ஷ்மமான வஸ்து என்பதற்கு மாத்திரமே தவிர சிறியது என்பதற்கில்லை."அஸத்" என்பது நாமரூபமற்றதென்று அபிப்பிராயத்தில் உபயோகிக்கப் பட்டிருக்கிறதென்பது ஏற்கனவே நான்காவது அதிகரணத்தில் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்வபாவம், காலம் என்கிற பக்ஷங்கள் வேதத்திலேயே பூர்வபக்ஷமாகச் சொல்லப்பட்டிருக்கிறபடியால் அது வேதத்தின் ஸித்தாந்தமாகாது. ஆகையால் பரமாணு முதலியவைகள் ஜகத்காரணமல்ல, பிரஹ்மம்தான் ஜகத்திற்குக் காரணம் என்பது ஸித்தம் .

இவ்விதம் முதல் அத்யாயம் நான்காவது பாதத்தில் அதிகரணங்கள் 8, சுலோகங்கள் 16 (ஸூத்ரங்கள் 28).

நான்கு பாதங்களும் சேர்ந்து அதிகரணங்கள் 39, சுலோகங்கள் 96 (ஸூத்ரங்கள் 135).

*முதல் அத்யாயம் முற்றிற்று.*



# இரண்டாவது அத்யாயம் : முதல் பாதம்

## १.स्मृत्यधिकरणम्

## 1.ஸ்ம்ருத்யதி₄கரணம்

(ஸூத்ரம் 1,2)

**स्मृत्यनवकाशदोषप्रसङ्ग इति चेन्नान्यस्मृत्यनवकाशदोषप्रसङ्गात् ।१।**

ஸ்ம்ருத்யனவகாசதோ₃ஷப்ரஸங்க₃ இதி
சேந்நாந்யஸ்ம்ருத்யனவகாசதோ₃ஷப்ரஸங்கா₃த், .1.

(ஸ்ம்ருதிக்கு இடமில்லையென்ற தோஷமேற்படுமென்றால் இல்லை மற்ற ஸ்ம்ருதிக்கு இடமில்லையென்ற தோஷமேற்படுமானதினால்)

**इतरेषां चानुपलब्धेः ।२।**

இதரேஷாம் சாநுபலப்₃தே₄: .2.

(மற்றவைகள் காணப்படாததினாலும்)

உபநிஷத்துக்களெல்லாவற்றிற்கும் பிரஹ்மத்தில் தான் தாத்பர்யம் என்று முதல் அத்யாயத்தில் சொல்லப்பட்டது. அதற்கு சொல்லக் கூடிய ஆக்ஷேபணைகள் இந்த அத்யாயத்தில் நிராகரிக்கப்படுகின்றன, இந்த அதிகரணத்தில் ஸாங்கியர்களுடைய ஸ்மிருதிக்கு இடமில்லாமல் போய்விடுமே என்று கேட்டுக் கொண்டு ஸமாதானம் சொல்லப்படுகிறது.

**सांख्यस्मृत्यास्ति संकोचो न वा वेदसमन्वये ।**
**धर्मे वेदः सावकाशः संकोचोऽनवकाशया ।।१।।**
**प्रत्यक्षश्रुतिमूलाभिर्मन्वादिस्मृतिभिः स्मृतिः ।**
**अमूला कापिली बाध्या न संकोचोऽनया ततः ।।२।।**

ஸாங்க்₂யஸ்ம்ருத்யாஸ்தி ஸங்கோசோ ந வா வேத₃ஸமந்வயே ।
த₄ர்மே வேத₃: ஸாவகாச: ஸங்கோசோஅனவகாசயா ।। 1
ப்ரத்யக்ஷச்ருதிமூலாபி₄ர்மந்வாதி₃ஸ்ம்ருதிபி₄: ஸ்ம்ருதி: ।
அமூலா காபிலீ பா₃த்₄யா ந ஸங்கோசோஅநயா தத: ।। 2

(அர்த்தம்)

வேதத்தின் ஸமன்வயத்திற்கு (ஒத்ததீர்மானத்திற்கு) ஸாங்கியரின் ஸ்மிருதியினுல் ஸங்கோசம் (ஒடுக்கம்) உண்டா, அல்லது கிடையாதா? தர்ம விஷயத்தில் வேதம் இடமுள்ளதாக இருக்கிறது. வேறு இடமில்லாத ஸாங்கியஸ்மிருதியினுல் (வேதத்திற்கு) ஸங்கோசம் உண்டு.

பிரத்யக்ஷமான வேதத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கும் மனு முதலானவர்களின் ஸ்மிருதிகளால், ஆதாரமற்றதாய் கபிலரால் சொல்லப்படும் ஸ்மிருதி பாதிக்கப்பட்டதேயாகும். ஆகையால் அதனுல் (வேதத்திற்கு) ஸங்கோசம் கிடையாது.

(விளக்கம்)

பூர்வபக்ஷம் :

ஸாங்கிய ஸ்மிருதி வஸ்து தத்வத்தை நிர்ணயிப்பதற்காகவே ஏற்பட்டிருக்கிறது. அது எங்கேயும் அனுஷ்டிக்க வேண்டிய தர்மங்களைப்பற்றி சொல்ல வரவில்லை. வஸ்து தத்வத்தை சொல்வதும் பிசகு என்ருல் அந்த ஸ்மிருதிக்கு இடமேயில்லை என்று ஏற்பட்டு விடும். வேதமோவென்ருல் தர்மம் பிரஹ்மம் இரண்டையும் பற்றி சொல்கிறது. அதில் பிரஹ்மத்தைப்பற்றி சொல்லும் பாகம் பிசகு என்று ஏற்பட்டு விட்டாலும், தர்மத்தைப் பற்றி சொல்லும் பாகம் பாதிக்கப்படாததினுல், அதற்கு இடமிருக்கிறது. ஆகையால் வேதத்தின் பிராமாண்யத்தை தர்ம விஷயமாக மாத்திரம் என்று ஒடுக்கிவிடுவதினுல் அதற்கு தோஷமில்லை. இவ்விதமிருப்பதால் வேறு இடமில்லாமல் போகக் கூடிய ஸாங்கியஸ்மிருதியினுல் வேதத்திற்கு ஒடுக்கம் ஏற்படுவது தான் நியாயம்.

ஸித்தாந்தம் :

பிரஹ்மத்தையே ஜகத்காரணமாகச் சொல்கிற மனுஸ்மிருதி முதலியவை ஏராளமாக இருக்கின்றன. அவை யாவும் பிரத்யக்ஷமாய் வேதத்தையே தங்களுக்கு மூலாதாரமாக வைத்துக் கொண்டு பிரவிருத்திக்கின்றன. ஆகையால் அவைகளுக்கு பலம் அதிகம். ஸாங்கியஸ்மிருதிக்கு ஆதாரமாக வேத வாக்கியம் எதுவும் காணவில்லை. காணப்படுபவைகள் எல்லாம் பிரஹ்மத்தையே சொல்கின்றன என்ற விஷயம் முன்னமேயே எடுத்துக்காட்டப்பட்டது. வேத பலத்துடன் கூடின ஸ்மிருதிகளால் வேத பலமில்லாத கபிலஸ்மிருதி பாதிக்கவே படும். ஆகையால் அதைக் கொண்டு வேதத்தை ஒடுங்கச் செய்வது யுக்தமாகாது.

## २.योगप्रत्युक्त्यधिकरणम्

## 2.யோக₃ப்ரத்யுக்த்யதி₄கரணம்

(ஸூத்ரம் 3)

**एतेन योगः प्रत्युक्तः ।३।**

ஏதேந யோக₃: ப்ரத்யுக்த: .3.

(இதனால் யோகம் பதில் சொல்லப்பட்டுவிட்டது

(நிராகரிக்கப்பட்டது)

பதஞ்ஜலி மஹர்ஷி இயற்றிய யோகசாஸ்திரத்திஞல் வேதத்திற்கு ஸங்கோசம் உண்டாவென்பது இங்கே விஷயம்.

योगस्मृत्यास्ति संकोचो नवा योगो हि वैदिकः ।
तत्वज्ञानोपयुक्तश्च ततस्संकुच्यते तया ।। ३ ।।
प्रमापि योगे तात्पर्यादतात्पर्यान्न सा प्रमा ।
अवैदिके प्रधानादावसंकोचस्तयाप्यतः ।।४।।

யோக₃ஸ்ம்ருத்யாஸ்தி ஸங்கோசோ நவா யோகோ₃ ஹி வைதி₃க:।
தத்வஜ்ஞாநோபயுக்தச்ச ததஸ்ஸங்குச்யதே தயா ।। 3
ப்ரமாபி யோகே₃ தாத்பர்யாத₃தாத்பர்யாந்ந ஸா ப்ரமா ।
அவைதி₃கே ப்ரதா₄நாதா₃வஸங்கோசஸ்தயாப்யத: ।। 4

(அ..ம்)

யோகஸ்மிருதியிஞல் ஸங்கோசம் உண்டா, இல்லையா? யோகம் என்பது வேதத்தையொட்டினது. தத்வத்தை அறிவதற்கு உபயோகமாயுள்ளது. ஆகையால் அதிஞல் ஸங்கோசம் உண்டு.

(யோகஸ்மிருதிக்கு) யோக விஷயத்தில் தாத்பர்யமிருப்பதால் பிரமாணமாக இருந்த போதிலும் வேதவிருத்தமான பிரதானம் முதலிய விஷயத்தில் தாத்பர்யமில்லாததிஞல், அது பிரமாணமாகாது. ஆகையால் அதிஞலும் ஸங்கோசம் கிடையாது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

யோகஸ்மிருதி ஸாங்கியஸ்மிருதியைப் போல அல்ல. அதில் சொல்லப்படும் அஷ்டாங்க யோகம் பிரத்யக்ஷமாக வேதத்திலேயே ச்வேதாசுவதர உபநிஷத் முதலியவிடங்களில் விஸ்தாரமாக சொல்லப்பட்டிருக்கிறபடியால் இது வேதத்தை மூலமாயுடையது. மேலும் வேதமே பிரஹ்மத்தை "दृश्यते त्वग्र्यया बुद्धया" "வெகு கூர்மையான புத்தியிஞல் அறியப்படுகிறது" என்று யோகத்திஞலேயே ஏற்பட வேண்டியதாயுள்ள சித்தத்தின் ஐகாக்ர்யத்தை பிரஹ்ம ஸாக்ஷாத் காரத்திற்கு காரணமாகச் சொல்கிறது. அதுவே தான் யோக சாஸ்திரத்தின் விஷயம். ஆகையால் யோக சாஸ்திரம் பிரமாணமாயுள்ளது. அது பிரதானத்தை ஜகத் காரணமாகச் சொல்கிறது. அதற்கு இடம் கொடுத்தாக வேண்டும். ஆகையால் அதிஞல் வேதத்திற்கு ஸங்கோசம் உண்டு.

ஸித்தாந்தம் :

வேதத்தையனுஸரித்து அஷ்டாங்க யோகத்தை சொல்லும் அம்சத்தில் யோக சாஸ்திரம் பிரமாணமில்லையென்று சொல்லவில்லை. வேதவிரோதமாயுள்ள பிரதானம் முதலியதைச் சொல்லும் அம்சம் தான் பிரமாணமில்லையென்கிறோம். முதல் அம்சம் இரண்டாவது அம்சம் இரண்டுமே யோக சாஸ்திரத்தில் இருப்பதால் இரண்டும் பிரமாணமென்று ஆகிவிடாது. மேலும் அஷ்டாங்க யோகத்தை விஸ்தரித்துச் சொல்வதில் தான் அந்த சாஸ்திரத்திற்கு தாத்பர்யம். "अथ योगानुशासनम्" "இனி யோகத்தைப் பற்றி சொல்லப்படுகிறது" என்று ஆரம்பத்தில் பிரதிக்ஞை செய்துவிட்டு "योगः चित्तवृत्तिनिरोधः" "யோகம் என்பது சித்தத்தின் விருத்திகளை அடக்குதல்" என்று யோகத்திற்குரிய லக்ஷணத்தையும் சொல்லி விட்டு அதையே பின்னால் விஸ்தரித்துச் சொல்வதால் இந்த சாஸ்திரத்திற்கு யோகத்தில் தான் தாத்பர்யம் என்று வியக்தமாய் தெரிகிறது. பிரதானம் முதலியதையெடுத்துச் சொல்வதாக பிரதிக்ஞையும் செய்யவில்லை. பின்னால் யமம் முதலிய ஸாதனங்களை எடுத்துச் சொல்கிற இரண்டாவது பாதத்தில் தள்ள வேண்டியது எது அதற்குக் காரணம் என்ன என்பது முதலியதைச் சொல்லும் போது ஸாங்கியஸ்மிருதியில் கூறிய பிரதானம் முதலியவை பிரஸ்தாவிக்கப் பட்டிருக்கின்றன, அவை சாஸ்திரத்தின் தாத்பர்ய விஷயமாகா. அவைகளில் சாஸ்திரத்திற்கு தாத்பர்யமில்லாததினால் அந்த பாகத்திற்கு பிராமாண்யமும் கிடையாது. ஆகையால் யோகஸ்மிருதியினாலும் வேதத்திற்கு ஸங்கோசம் கிடையாது.

## ३.विलक्षणत्वाधिकरणम्

## 3.விலக்ஷணத்வாதி₄கரணம்

(ஸூத்ரம் 4 - 11)

**न विलक्षणत्वादस्य तथात्वं च शब्दात् ।४।**

ந விலக்ஷணத்வாத₃ஸ்ய ததா₂த்வம் ச சப்₃தா₃த் .4.

(இதற்கு விலக்ஷணமாயிருப்பதால் ( ப்ரஹ்மம் காரணம்) இல்லை, அவ்விதமாக இருப்பது சப்தத்தால்)

**अभिमानिव्यपदेशस्तु विशेषानुगतिभ्याम् ।५।**

அபி₄மாநிவ்யபதே₃சஸ்து விசேஷானுக₃திப்₄யாம் .5.

(அபிமானியைக் குறிப்பிடுவதுதான், வித்யாஸமிருப்பதாலும், கூடவேயிருப்பதாலும்)

**दृश्यते तु ।६।**

த்₃ருச்யதே து .6.

(ஆனால், பார்க்கப்படுகிறதே)

**असदिति चेन्न प्रतिषेधमात्रत्वात् ।७।**

அஸதி$_3$தி சேந்ந ப்ரதிஷேத$_4$மாத்ரத்வாத் .7.
(இல்லாதது என்றால் இல்லை, வெறும்
பிரதிஷேதமானதினால்)

**अपीतौ तद्वत्प्रसङ्गादसमञ्जसम् ।८।**

அபீதௌ தத்$_3$வத்ப்ரஸங்கா$_3$த$_3$ஸமஞ்ஜஸம் .8.
(பிரளயத்தில் அதைப்போல ஆகுமானதினால், சரியல்ல)

**न तु दृष्टान्तभावात् ।९।**

ந து த்$_3$ருஷ்டாந்தபா$_4$வாத் .9.
(ஆனால் இல்லை, திருஷ்டாந்தமிருப்பதால்)

**स्वपक्षदोषाच्च ।१०।**

ஸ்வபக்ஷதோ$_3$ஷாச்ச .10.
(தன் பக்ஷத்திலும் தோஷமானதினால்)

**तर्काप्रतिष्ठानादप्यन्यथाऽनुमेयमितिचेदेवमप्यनिर्मोक्षप्रसङ्गः ।११।**

தர்காப்ரதிஷ்டாநாத$_3$ப்யந்யதா$_2$அநுமேயமிதி-
-சேதே$_3$வமப்யநிர்மோக்ஷப்ரஸங்க$_3$: .11.
(தர்க்கத்திற்கு முடிவில்லாததாலும் வேறுவிதமாய்
அனுமானம் செய்யலாமென்றால் அப்படியானலும்
விடுபடுவதில்லையென்று ஏற்படும்)

பிரஹ்மம் ஜகத்திற்குக் காரணம் என்பது யுக்திக்கு விரோதம் என்ற விஷயம் இங்கு தகர்க்கப்படுகிறது.

**वैलक्षण्याख्यतर्केण बाध्यतेऽथ न बाध्यते ।**
**बाध्यते साम्यनियमात्कार्यकारणवस्तुनोः ।।५।।**
**मृद्घटादौ समत्वेऽपि दृष्टं वृश्चिककेशयोः ।**
**स्वकारणेन वैषम्यं तर्काभासो न बाधकः ।।६।।**

வைலக்ஷண்யாக்$_2$யதர்கேண பா$_3$த்$_4$யதேஅத$_2$ ந பா$_3$த்$_4$யதே ।
பா$_3$த்$_4$யதே ஸாம்யநியமாத்கார்யகாரணவஸ்துநோ: ।। 5
ம்ருத்$_3$க$_4$டாதௌ$_3$ ஸமத்வேஅபி த்$_3$ருஷ்டம் வ்ருச்சிககேசயோ:।
ஸ்வகாரணேந வைஷம்யம் தர்காபா$_4$ஸோ ந பா$_3$த$_4$க: ।। 6

(அ..ம்)

விருத்தமான லக்ஷணங்களோடு இருத்தல் என்ற யுக்தியினுல், (பிரஹ்மம் ஜகத்காரணம் என்பது) பாதிக்கப்படுகிறதா, இல்லையா? கார்ய வஸ்துவிற்கும் (உண்டாவதற்கும்) காரணவஸ்துவிற்கும்

ஸமானமாயிருக்கும் தன்மை வேண்டுமென்ற நியமம் இருப்பதால் பாதிக்கப்படுகிறது.
மண், குடம் முதலியதில் ஸமானமாயிருக்கும் தன்மையிருந்த போதிலும் தேள், ரோமம் இவைகளில் (அது) காணப்படவில்லை - அங்கு தங்களுடைய காரணவஸ்துக்களிடமிருந்து வேறுபடும் தன்மை காணப்படுகிறது. எனவே யுக்தி போலுள்ளது பாதகமாகாது.
(வி..ம்)

பூர்வபக்ஷம் :

அசேதனமான ஜகத், சேதனமான பிரஹ்மத்திலிருந்து உண்டாகாது. ஒன்றுக்கொன்று விருத்தமான லக்ஷணமுடையவைகள். ஆதலால் எது எதிலிருந்து வேறுபட்ட லக்ஷணத்துடன் கூடியதோ அது அதிலிருந்து உண்டாகாது. பசுவிலிருந்து எருமை உண்டாவதில்லை போல என்ற இந்த யுக்தியினால் வேதம் சொல்வது பாதிக்கப்படுகிறது.

ஸித்தாந்தம் :

கார்யமாயிருப்பதும், காரணமாயிருப்பதும் ஒரே வித லக்ஷணத்துடன் இருக்க வேண்டுமென்று சொல்வது தேள் முதலியதில் தவறி விடுகிறது. அசேதனமாயுள்ள (சாண) கோமயத்திலிருந்து சேதனமான தேள் உண்டாகிறது. சேதனமாயிருக்கும் மனிதனிடமிருந்து ரோமம் நகம் முதலான அசேதன வஸ்துக்கள் உண்டாகின்றன. "ஒரு விஷயம் அனுமானம் செய்வதில் மிகவும் கெட்டிக் காரர்களால் அனுமானிக்கப்பட்டாலும், அவர்களை விட கெட்டிக் காரர்களான வேறு மனிதர்களால் அது வேறுவிதமாக காட்டப்பட்டுவிடுகிறது" என்று முன் ஆசார்யர்கள் சொல்லியிருக்கிறார்கள் ஆகையால் வேதத்தை அபேக்ஷிக்காமலிருக்கும் வரட்டுத் தர்க்கம் எவ்விஷயத்திலும் முடிவுள்ளதாக நிலைக்காது. ஆகையால் "விருத்தமான லக்ஷணமுள்ளதால்" என்றுசொல்லப்பட்ட யுக்தி, யுக்திபோல் தோன்றுகிறதே தவிர ஸரியானயுக்தியல்ல. எனவே தர்க்கத்தினால் வேதத்தின் தாத்பர்யம் பாதிக்கப்படாது.

## ४.शिष्टापरिग्रहाधिकरणम्
## 4.சிஷ்டாபரிக்₃ரஹாதி₄கரணம்

(ஸூத்ரம் 12)

**एतेन शिष्टापरिग्रहा अपि व्याख्याताः ।१२।**

ஏதேந சிஷ்டாபரிக்₃ரஹா அபி வ்யாக்₂யாதா: .12.

(இதனால் சிஷ்டர்களால் ஒப்புக்கொள்ளப்படாதவைகளும் கூட வியாக்யானம் செய்யப்பட்டுவிட்டன)

ஸாங்கியஸ்மிருதி, யோகஸ்மிருதி அவர்கள் சொல்லும் யுக்தி இவைகளால் பாதிக்கப்படவில்லையாலும் கணுதஸ்மிருதி, புத்தஸ்மிருதி முதலியவைகளால் பாதிக்கப்படுமாவென்று இங்கு விசாரிக்கப்படுகிறது.

बाधोऽस्ति परमाण्वादिमतैर्नोवा यतः पटः।
न्यूनतन्तुभिरारब्धो दृष्टोऽतो बाध्यते मतैः ।।७।।
शिष्टेष्टाऽपि स्मृतिस्त्यक्ता शिष्टत्यक्तमतं किमु ।
नातो बाधो विवर्ते तु न्यूनत्वनियमो न हि ।।८।।

பா$_3$தோ$_4$அஸ்தி பரமாண்வாதி$_3$மதைர்நோவா யத: பட: ।
ந்யூநதந்துபி$_4$ராரப்$_3$தோ$_4$ த்$_3$ருஷ்டோஅதோ பா$_3$த்$_4$யதே மதை:।। 7
சிஷ்டேஷ்டாஅபி ஸ்ம்ருதிஸ்த்யக்தா சிஷ்டத்யக்தமதம் கிமு ।
நாதோ பா$_3$தோ$_4$ விவர்தே து ந்யூநத்வநியமோ ந ஹி ।। 8

(அ..ம்)

பரமாணு முதலியதைச் சொல்லும் மதங்களினுல் பாதிக்கப்படுவது உண்டா? இல்லையா? சிறியதாயிருக்கிற நூல்களினுலேயே வஸ்திரம் உண்டாக்கப் படுகிறதென்பது எதனுல் பார்க்கப்படுகிறதோ, அதனுல் அந்த மதங்களால் பாதிக்கப்படுகிறது தான்.

சிஷ்டர்களுக்கு ஸம்மதமான ஸ்மிருதியே தள்ளப்பட்டுவிட்டது. (அப்படி இருக்க) சிஷ்டர்களால் விலக்கப்பட்டிருக்கிற மதத்தைப் பற்றி கேட்பானேன்? ஆகையால் அவைகளால் பாதிக்கப்படாது. (காரணம்) சிறியதாயிருக்க வேண்டுமென்ற நியமமோ விவர்த்தம் என்பதில் கிடையாது அல்லவா?

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

கணுதர் என்ற மஹர்ஷி பரமாணுக்கள் தான் ஜகத்திற்குக் காரணமென்று ஸ்மிருதி எழுதியிருக்கிருர். தான் சொல்லும் விஷயத்திற்குரிய யுக்தியும் சொல்கிருர். எப்படி சிறிய அளவையுடைய நூல்களிலிருந்து வஸ்திரம் ஏற்படுகிறதோ, அப்படியே த்வ்யணுகம் முதலானது தன்னை விட சிறியதான அளவையுடைய பரமாணுக்களால் உண்டாகிறது. அப்படியே மகாவிஷ்ணுவின் அவதாரமான புத்த பகவான் அபாவம் (இல்லாமை) தான் ஜகத்திற்குக் காரணம் என்கிருர் அவரும் அதற்கு அனுகூலமான யுக்தியையும் சொல்கிருர், ஜகத்

இருக்கும் தன்மையை உடையதால், அது ஏற்படுவதற்கு முன் காரணமாயிருப்பது இல்லாத் தன்மையாகத்தான் இருந்தது, இருக்க முடியும். இதற்கு திருஷ்டாந்தமாக ஸ்வப்ன பிரபஞ்சம் ஏற்படுவதிற்குக் காரணமாக ஒன்றுமில்லாத தூக்கம் இருப்பது போல என்கிறுர். ஆகையால் இவ்வித பிரபலமாயுள்ள மதங்களினுல் வேதத்திற்கு பாதகம் ஏற்படுகிறது.

ஸித்தாந்தம் :

பிரக்ருதி, புருஷன் முதலியதை பிரதிபாதிக்கிற ஸாங்கியஸ்மிருதியும், யோக ஸ்மிருதியும் புராணங்களையியற்றிய வைதிக சிரேஷ்டர்களால் ஆங்காங்கு எடுத்து உதாஹரிக்கப்பட்டிருந்த போதிலும் கூட வேத விருத்தமான அம்சங்களில் பிரமாணமல்லவென்று தள்ளிவிடப் பட்டிருக்கிறது. எல்லா சிஷ்டர்களாலும் ஒப்புக் கொள்ளப்படாத கணுதர் முதலானவர்களின் மதங்களுக்கு பிராமாண்யம் கிடையாது என்று சொல்லாமலே விளங்கும். பத்மம் முதலான எந்த புராணங்களிலும் இவர்கள் சொல்கிற "த்வ்யணுகம்" முதலான பிரதிக்கிரியைகள் எங்கேயேனும் உதாஹரித்திருப்பது கிடையாது. இதுவும் தவிர "வெறும் யுக்தி சொல்கிறவர்களை வாயால் கூட மரியாதை செய்யக்கூடாது" என்று வெகுவாக நிந்தனையும் இருக்கிறது. காரணம் சிறிய அளவுள்ளதாய் இருக்க வேண்டும் என்ற நியமம் விவாதத்தில் (ஒன்று மற்றொன்ருகத் தோன்றுகிறது என்று சொல்லும் வாதத்தில்) கிடையாது. வெகு தூரத்தில் இருக்கும் மலையிலுள்ள பெரிய மரங்கள் இங்கிருந்து பார்க்கும்போது அருகம்புல் மாதிரித் தோன்றலாம்.இல்லாததில் இருந்து இருப்பது உண்டாகிறது என்பதற்கு திருஷ்டாந்தமாகச் சொன்ன ஸ்வப்னம் சரியான திருஷ்டாந்தமாகாது. ஸ்வப்னம் எப்படி ஏற்கனவே இருந்து வருகிற ஆத்மாவினுடைய அவஸ்தையோ அதைப் போலவே தூக்கமும் அந்த ஆத்மாவின் அவஸ்தைதான். ஆகையால் ஸ்வப்னத்திற்கு முன்னுல் காரணமாயிருப்பது தூக்கமென்ற அவஸ்தையிலிருக்கும் ஆத்மாவாகிய இருக்கும் வஸ்து தான். இல்லாதது காரணம் என்பது பிசகு.ஆகையால் இவ்வித மதங்களால் வேதம் பாதிக்கப்படாது.

# ५.भोक्त्रापत्त्यधिकरणम्

## 5.போ₄க்த்ராபத்த்யதி₄கரணம்

(ஸூத்ரம் 13)

**भोक्त्रापत्तेरविभागश्चेत्स्याल्लोकवत् ।१३।**

போ₄க்த்ராபத்தேரவிபா₄க₃ச்சேத்ஸ்யால்லோகவத் .13.

(போக்தாவாக ஆகிவிடுமானபடியால் பிரிவின்மை என்றால் உலகத்தில்போல இருக்கலாம்)

மற்ற சாஸ்திரங்களால் பாதிக்கப்படவில்லையானாலும் பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களுக்கு விரோதமாகாதா என்று இங்கே விஷயம்.

**अद्वैतं बाध्यते नो वा भोक्तृभोग्यविभेदतः ।**
**प्रत्यक्षादिप्रमासिद्धो भेदोऽसावन्यबाधकः ।।९।।**
**तरङ्गफेनभेदेऽपि समुद्रेऽभेद इष्यते ।**
**भोक्तृभोग्यविभेदेऽपि ब्रह्माद्वैतं तथाऽस्तु तत् ।।१०।।**

அத்₃வைதம் பா₃த்₄யதே நோ வா போ₄க்த்ருபோ₄க்₃யவிபே₄த₃த:।
ப்ரத்யக்ஷாதி₃ப்ரமாஸித்₃தோ₄ பே₄தோ₃அஸாவந்யபா₃த₄க:।। 9
தரங்க₃பே₂நபே₄தே₃அபி ஸமுத்₃ரேஅபே₄த₃ இஷ்யதே ।
போ₄க்த்ருபே₄ாக்யவிபே₄தே₃அபி ப்₃ரஹ்மாத்₃வைதம் ததா₂அஸ்து தத்।।10

(அ..ம்)

போக்தா (அனுபவிப்பவன்) போக்யம் (அனுபவிக்கப்படுவது) என்ற வேறுபாடு இருப்பதினுல் அத்வைதம் (இரண்டாவதற்றிருக்கும் தன்மை) பாதிக்கப்படுகிறதா? இல்லையா? இந்த வேற்றுமை பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களால் ஸித்தமாயிருக்கிறது. (ஆகையால் அது) மற்ருென்றை (வேதத்தின் தாத்பர்யமான அத்வைதத்தை) பாதிக்கிறது. அலை, நுரை என்ற வேறுபாடு இருந்த போதிலும், ஸமுத்திரம் என்பதில் வேற்றுமைமில்லாமை ஒப்புக் கொள்ளப்படுகிறது. அவ்விதமாகவே போக்தா, போக்யம் என்ற வேறுபாடு இருந்தபோதிலும் அந்த பிரஹ்மம் இரண்டாவதற்றதாக இருக்கலாம்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

உலகத்தில் போக்தா (அனுபவிக்கிறவன்) சேதனுகை இருக்கிருன். போக்யம் (அனுபவிக்கப்படுவது) அசேதனமாயிருக்கிறது. இரண்டும் தனித்தனி லக்ஷணங்களுடன் வெவ்வேருக பிரத்யக்ஷம் முதலான

பிரமாணங்களினுல் உலகத்தில் இருப்பதாக அறியப்படுகிறது. அவ்விதமிருக்கும் போது எவ்வித வேற்றுமையுமற்று இரண்டாவதற்றதாக பிரஹ்மம் என்று ஒன்று வேதத்திஞல் சொல்லப் படுகிறதென்ருல் ஸரியாகாது.

ஸித்தாந்தம் :
வேற்றுமை காணப்படுவதால் வஸ்து வேறுபடுகிறதென்பதில்லை. ஸமுத்திரத்தில் அலைகள், நுரைகள், சுழல்கள், குமிழிகள் முதலியவை எல்லாம் தனித்தனி லக்ஷணங்களுடன் தோன்றின போதிலும், ஸமுத்திரம் என்ற முறையில் எப்படி வேற்றுமை எதுவும்கிடையாதோ, அப்படியே ஒன்ருகவேயிருக்கிற பிரஹ்மமாகிற வஸ்துவில் போக்தா என்றும், போக்யம் என்னும் தனித்தனித் தோற்றம் ஏற்படலாம். இவ்விதத் தோற்றத்திஞல் பிரஹ்மத்தில் வேற்றுமை ஏற்பட்டுவிடாது. பிரஹ்மம் என்ற முறையில் இரண்டாவற்றது (அத்வைதம்) போக்தா, போக்யம் என்ற முறையில் இரண்டாவதுள்ளது (த்வைதம்) என்று அந்தந்த முறையை வைத்து வியவஸ்தை செய்யக்கூடுமானதிஞல் வேதத்தின் ஸித்தாந்தத்திற்கு எவ்வித பாதகமுமில்லை.

## ६.आरम्भणाधिकरणम्
## 6.ஆரம்ப$_4$ணாதி$_4$கரணம்
(ஸூத்ரம் 14 - 20)

**तदनन्यत्वमारम्भणशब्दादिभ्यः ।१४।**

தத$_3$நந்யத்வமாரம்ப$_4$ணசப்தா$_3$தி$_3$ப்$_4$ய: .14.

(அதற்கு வேறுபடாத் தன்மை ஆரம்பணம் என்ற சப்தம் முதலியவைகளால்)

**भावे चोपलब्धेः ।१५।**

பா$_4$வே சோபலப்$_2$தே$_4$: .15.

(இருக்கும்போது தெரிவதினாலும்)

**सत्त्वाच्चावरस्य ।१६।**

ஸத்த்வாச்சாவரஸ்ய .16.

(பின்னுள்ளது இருப்பதினாலும்)

**असद्व्यपदेशान्नेति चेन्न धर्मान्तरेण वाक्यशेषात् ।१७।**

அஸத்$_3$வ்யபதே$_3$சாந்நேதி சேந்ந த$_4$ர்மாந்தரேண வாக்யசேஷாத் .17.

(இல்லாமை சொல்லியிருக்கிறபடியால் இல்லை என்றால் அப்படியல்ல, வேறு தர்மத்தினால்,வாக்கிய சேஷத்திலிருந்து)

**युक्तेः शब्दान्तराच्च ।१८।**

யுக்தே: சப்தா$_3$ந்தராச்ச.18.
(யுக்தியிலிருந்தும் வேறு சப்தத்திலிருந்தும்)

पटवच्च ।१९।

படவச்ச .19.
(வஸ்திரம் போலவும்)

तथा च प्राणादि ।२०।

ததா$_2$ ச ப்ராணாதி$_3$ .20.
(பிராணன் முதலியது போலவும்)

भेदाभेदौ तात्त्विकौ स्तो यदि वा व्यावहारिकौ ।
समुद्रादाविव तयोर्बाधाभावेन तात्त्विकौ ।।११।।
बाधितौ श्रुतियुक्तिभ्यां तावेतौ व्यावहारिकौ ।
कार्यस्य कारणाभेदादद्वैतं ब्रह्म तात्त्विकम् ।।१२।।

பே$_4$தா$_3$பே$_4$தௌ$_3$ தாத்விகௌ ஸ்தோ யதி$_3$ வா வ்யாவஹாரிகௌ।
ஸமுத்$_3$ராதா$_3$விவ தயோர்பா$_3$தா$_4$பா$_4$வேந தாத்விகௌ ।। 11
பா$_3$தி$_4$தௌ சுருதியுக்திப்$_4$யாம் தாவேதௌ வ்யாவஹாரிகௌ।
கார்யஸ்ய காரணாபே$_4$தா$_3$த$_3$த்$_3$வைதம் ப்$_3$ரஹ்ம தாத்த்விகம் ।। 12

(அ..ம்)

வேற்றுமை, வேற்றுமையின்மை என்ற இரண்டும் பிரஹ்மத்தில் உண்டு என்றால், அவை வாஸ்தவமாகவே பிரஹ்மத்தின் ஸ்வரூபத்தில் சேர்ந்ததாக இருக்கின்றனவா? அல்லது வியவஹாரத்திற்காகக் கல்பிக்கப்பட்டவைதானா? என்பது இங்கே விஷயம்.

பேதம், அபேதம் இரண்டும் வாஸ்தவமாய் இருக்கின்றவா? அல்லது வியவஹாரத்திற்காக மாத்திரம் இருப்பவைகளா? ஸமுத்திரம் முதலியதில் (பேதம், அபேதம் என்ற) அவைகளுக்கு பாதம் (மறுப்பு) இல்லாததினால் எப்படி வாஸ்தவமானவைகளோ, அப்படியே இங்கேயும். (இங்கு சொல்லப்படும் பேதம், அபேதம் என்ற) இரண்டும் வேதத்தினாலும், புத்தியினாலும் பாதிக்கப்படுகிறது. ஆகையால் அவையிரண்டும் வியவஹாரத்திற்காக மாத்திரம் இருப்பவைகள். கார்யம் காரணத்தைவிட வேறுயில்லாததினால், (ஜகத்தின் காரணமாயுள்ள) பிரஹ்மம் இரண்டாவதற்றது என்பது வாஸ்தவமே.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஸமுத்திரத்திலுள்ள அலை முதலியது ஸமுத்திரத்தைவிட வேறாகவும் தெரிகிறது, வேறில்லையென்றும் தெரிகிறது. ஆகையால் வேற்றுமை,

வேற்றுமையின்மை இரண்டுமே பிரத்யக்ஷமாய் அனுபவிக்கப் படுகிறபடியால், இரண்டுமே வாஸ்தவம்தான். அந்த ஸமுத்திரத்தை முன் அதிகரணத்தில் திருஷ்டாந்தமாகச் சொன்னபடியால், பிரஹ்மத்தில் தோன்றும் போக்தா, போக்யம் என்ற தன்மை, ஒன்ருகவேயிருக்கும் தன்மை ஆக இரண்டு தன்மைகளுமே பிரஹ்மத்தில் வாஸ்தவத்தில் இருப்பவைகள் என்று ஏற்படுகிறது.

ஸித்தாந்தம் :

பேதம், அபேதம் இரண்டும் ஒரே வஸ்துவில் வாஸ்தவமாக இருக்க முடியாது. பிரஹ்மத்தில் பேதம் கிடையாது என்பது "नेह नानाऽस्ति किञ्चन" "இங்கே பலவென்பது கொஞ்சமேனும் கிடையாது" என்று வேதமே மறுப்பதினுல் தெரிகிறது. பேதமும், அபேதமும் ஒன்றுக்கொன்று விரோதமாயிருப்பதால் ஒன்று மற்றொன்றையடித்து விடுமானதினுல், சேர்ந்து இருக்க முடியாது. ஒன்ருகவேயிருக்கிற சந்திரனிடத்தில் இரண்டாகவிருக்கும் தன்மை வாஸ்தவத்தில் இருக்க முடியாது. ஒரே வஸ்துவாயிருந்தாலும் அலை, ஸமுத்திரம் என்று ரூபங்களின் வேற்றுமையால் பேதம், அபேதம் இரண்டுமிருக்கலாம். வாஸ்தவமாக என்று சொன்னது பிரஹ்மத்திற்குப் பொருந்தாது. ஸமுத்திரத்திற்கு ரூபமிருப்பதால் அது ஸாத்தியம். பிரஹ்மத்திற்கோ ரூபமே கிடையாது. இங்கேயும் பிரஹ்ம ரூபமாயும், ஜகத் ரூபமாயும் பார்க்கப்படுகிறதே என்ருல், பிரஹ்மரூபம் ஒரு நாளும் பார்க்கப்படுவதாக ஆகாது. அது சாஸ்திரமொன்றினுலேயே அறிந்து கொள்ளக் கூடிய வஸ்து. இவ்விதம் சுருதி, யுக்தி இரண்டும் விரோதமாயிருப்பதால் பேதம், அபேதம் இரண்டும் வாஸ்தவமென்பது சரியல்ல. அப்படியானுல், வாஸ்தவமாயுள்ள நிலை எது என்ருல், இரண்டற்றதாயுள்ள அத்வைதம் தான் தத்வம் என்கிருேம். கார்யமாயுள்ளது, காரணத்தைவிட வேறில்லாததால் காரணமாக மாத்திரம் இருப்பது வாஸ்தவ நிலை. அப்படியே சுருதியும் மண் முதலான திருஷ்டாந்தங்களைச் சொல்லி காரணமாயிருப்பதற்கே வாஸ்தவத்தன்மை என்று விளக்கிக் காட்டுகிறது. "यथा सोम्य एकेन मृत्पिण्डेन सर्वं मृन्मयं विज्ञातं स्यात्, वाचारम्भणं विकारो नामधेयं, मृत्तिका इत्येव सत्यम् " "ஹே ஸோம்ய! எப்படி ஒரு மண் பிண்டத்தினுல் மண்ணுல் செய்யப் பட்டது எல்லாமே அறியப்பட்டதாக ஆகிறதோ, விகாரம் (கார்யம் உண்டானது) வார்த்தையினுல் (சொல்ல) ஆரம்பிக்கப்படுகிற வெறும் பெயர் தான்

மண் என்ற முறையில் தான் வாஸ்தவமாயுள்ளது" அதாவது, பெரிதாகவிருக்கிற மண் பிண்டம் காரணம், அதன் விகாரங்கள் குடம், தட்டு முதலியன. அங்கே மண் வேறு, குடம் முதலியது வேறு வஸ்து என்று தார்க்கிகர்கள் நினைக்கிறார்கள். அவ்விதம் வேறு வஸ்து அல்லவென்று காட்டுவதற்காகவே அவைகளை "மண்ணின் விகாரம்" என்று சுருதி சொல்கிறது. அவையாவும் மண் ஆகிற வஸ்துவின் வேறு நிலைகளே தவிர, வேறு வஸ்துவல்ல என்று தாத்பர்யம். எப்படி ஒருவனுக்கு பால்யம், யௌவனம், மூப்பு முதலான நிலைகள் வந்தாலும் வாஸ்தவமாயிருப்பது அவன் தானேயோ, அப்படியே குடம், தட்டு முதலான உருவங்களுடன் தோன்றிக் கொண்டிருக்கும் தசைகளிலும் கூட வாஸ்தவமாய் இருக்கும் வஸ்து மண் தான். ஆகையால், அடிப்படையாய் வாஸ்தவ யுள்ள மண் அறியப்பட்டுவிட்டால், அவைகளுடைய வாஸ்தவரூபம் அறியப்பட்டதாக ஆகிவிடுகிறது. அப்படியானால் மண் தான் அறியப்பட்டதாக ஆகுமே தவிர, குடம், தட்டு முதலான ரூபங்கள் அறியப்பட்டதாக ஆகாதே என்று கேட்கலாம். அறியப் படாததினால் என்ன? வஸ்துவேயில்லாத பதார்த்தங்களைப்பற்றி அறிந்து கொள்வதில் என்ன பிரயோஜனம்? அவைகள் விசாரித்து அறியவேண்டிய பதார்த்தங்களே அல்லவே? அப்படியே கண் முன் தோன்றும் குடம், தட்டு முதலியதைப்பற்றி அறிய விசாரம் செய்து பார்த்தால் அங்கே மண்ணைத் தவிர எந்த ஸ்வரூபமும் அகப்படாது. அதனாலே தான் "இது குடம், இது தட்டு " என்று சொல்லப்படுவதெல்லாம் வாக்கால் சொல்லப்படும் வெறும் பெயர்களே தவிர வேறில்லையென்று வேதம் சொல்கிறது. இவ்விதமாக வாஸ்தவமாக வஸ்துத்தன்மையில்லாமல் தோற்றத்தை மாத்திரம் அளிக்கும் பதார்த்தங்கள் "மித்யை" (பொய்) என்பதனின் லக்ஷணத்திற்கு ஒத்து வருவதால், விகாரங்கள் யாவும் அஸத்யம், வாஸ்தவமாயில்லாதது என்று சொல்லப்படுகின்றன. இவ்வித விகாரங்களை பொருட்படுத்தாமல் அவைகளுக்கு வேறாக அவைகள் இடத்திலேயே எப்பொழுதும் இருந்து வரும் மண் ஸத்யம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் மண் விஷயமாகச் சொன்ன நியாயத்தை பிரஹ்ம விஷயத்திலும், குடம் முதலியது விஷயமாகச் சொன்ன நியாயத்தை ஜகத் விஷயத்திலும் பொருத்திக் கொள்ள வேண்டும். ஆகையால் ஜகத் பிரஹ்மத்திலிருந்து வேறில்லாததினால் வாஸ்தவமாய் இருப்பது இரண்டற்ற பிரஹ்மம் தான். இவ்விதம் விசாரம் செய்து தத்வத்தையறியாதவர்கள்

விஷயத்தில் மேலேழுந்த பார்வையில் வேதத்தில் சொல்லப்படும் பிரஹ்மத்தில் இரண்டாவதற்ற தன்மையின் ஞானமும், பிரத்யக்ஷம் முதலியதாய் உலகத்தில் தோன்றிக் கொண்டிருக்கும் பலவென்ற ஞானமும், இருக்குமாதலால் அவர்களுக்கு அலை, ஸமுத்ர திருஷ்டாந்தத்தை போல பேதம், அபேதம் இரண்டும் தோன்றும். நன்கு விசாரித்து அறியும் போது இரண்டாவதற்ற பிரஹ்மம் தான் ஸத்தியம் என்பது துலங்கும். ஆகையால் பேதம், அபேதம் என்பது வியவஹாரதசையிலுள்ளதே தவிர வாஸ்தவமல்ல.

## ७.इतरव्यपदेशाधिकरणम्

## 7.இதரவ்யபதே$_3$சாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 21 - 23)

**इतरव्यपदेशाद्धिताकरणादिदोषप्रसक्तिः ।२१।**

இதரவ்யபதே$_3$சாத்$_3$தி$_4$தாகரணாதி$_3$தோ$_3$ஷப்ரஸக்தி: .21.

(மற்றொன்றுக்கு குறிப்பிடப்படுவதால், ஹிதத்தை செய்யாதது முதலிய தோஷம் ஏற்படும்)

**अधिकं तु भेदनिर्देशात् ।२२।**

அதி$_4$கம் து பே$_4$த$_3$நிர்தே$_3$சாத் .22.

(ஆனால், அதிகமாயுள்ளது பேதத்தை குறிப்பிடுவதால்)

**अश्मादिवच्च तदनुपपत्तिः ।२३।**

அச்மாதி$_3$வச்ச தத$_3$நுபபத்தி: .23.

(கல் முதலியவற்றில் போலவும், அதற்கு பொருத்தமில்லாமை)

ஜகத்தும், பிரஹ்மமும் வாஸ்தவத்தில் ஒரே வஸ்து என்றிருந்தால் ஜீவர்களுக்கு ஸுக துக்கங்களை ஏற்படுத்தும் பரமேசுவரர் தனக்கே ஏற்படுத்திக் கொள்வதாக ஆகாதா? என்பது விஷயம்.

**हिताक्रियादि स्यान्नो वा जीवाभेदं प्रपश्यतः ।**
**जीवाहितक्रिया स्वार्था स्यादेषा न हि युज्यते ।।१३।।**
**अवस्तु जीवसंसारस्तेन नास्ति मम क्षतिः ।**
**इति पश्यत ईशस्य न हिताहितभागिता ।।१४।।**

ஹிதாக்ரியாதி$_3$ ஸ்யாந்நோ வா ஜீவாபே$_4$த$_3$ம் ப்ரபச்யத:।
ஜீவாஹிதக்ரியா ஸ்வார்தா$_2$ ஸ்யாதே$_3$ஷா ந ஹி யுஜ்யதே ।। 13
அவஸ்து ஜீவஸம்ஸாரஸ்தேந நாஸ்தி மம க்ஷதி:।
இதி பச்யத ஈசஸ்ய ந ஹிதாஹிதபா$_4$கி$_3$தா ।। 14

ஜீவனுடன் வேற்றுமைப்படாத தன்மையை நன்ருய் அறிந்திருக்கிறவருக்கு (ஈசுவரருக்கு) ஹிதத்தை செய்து கொள்ளாதது முதலியது ஏற்படுமா? ஏற்படாதா? ஜீவனுக்கு அஹிதத்தைச் செய்வது தன் பொருட்டே ஆகும். இது பொருந்தாதல்லவா?

"ஜீவனுடைய ஸம்ஸாரம் வாஸ்தவத்தன்மையற்றது. அதினுல் எனக்கு கெடுதல் கிடையாது" என்று அறியும் ஈசுவரருக்கு ஹிதம், அஹிதம் இவைகளில் பங்குள்ளவரென்ற தன்மை கிடையாது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பரமேசுவரர் ஸம்ஸாரத்தில் ஈடுபட்டிருக்கும் சில ஜீவர்களுக்கு ஹிதமாயுள்ள வைராக்கியம் முதலியதை ஏற்படுத்திக் கொடுப்பதில்லை. நரகத்திற்குக் காரணமாயிருக்கும் அஹிதமான அதர்மத்தையும் ஏற்படுத்தியிருக்கிருர். இவ்விதம் ஏற்படுத்தும்போதே ஜீவர்களிடமிருந்து வேறுபட்டவரில்லை என்று தன்னையும் அறிந்திருக்கிருர். ஆகையால் அவருக்கு தனக்கே நல்லதை செய்து கொள்ளாமை, கெடுதலை செய்து கொள்ளுதல் என்ற இரண்டு வித தோஷங்களும் ஏற்படும். இதுவோ நியாயமில்லை. புத்திசாலியான எவனும் தனக்கு ஹிதத்தை செய்து கொள்ளாமலும், அஹிதத்தைச் செய்து கொண்டும், இருக்க மாட்டான். அப்படியிருக்க ஸர்வக்ஞராய் எல்லாம் அறிந்த ஈசுவரர் இவ்விதம் செய்கிருர் என்ருல் கொஞ்சமேனும் பொருந்தாது. ஆகையால் அவர் ஜீவர்களிடம் இருந்து வேறுபடாதவர் என்று வைத்துக் கொண்டால் இவ்வித தோஷம் ஏற்படுமானதினுல், பிரஹ்மம் இரண்டாவதற்றது என்பது ஸரியல்ல.

ஸித்தாந்தம் :

ஈசுவரர் ஸர்வக்ஞராய் இருப்பதினுலேயே ஜீவர்களிடம் இருக்கும் ஸம்ஸாரம் வாஸ்தவமில்லையென்பதையும் அவைகளால் தனக்கு எவ்வித அழுக்கும் (ஸம்பந்தமும்) இல்லையென்பதையும் நன்கு அறிந்தவர். அதனுல் மேலே சொன்ன தோஷங்கள் எதுவும் ஈசுவரரிடத்தில் கிடையாது.

## ८.उपसंहारदर्शनाधिकरणम्

## 8.உபஸம்ஹாரத₃ர்சனாதி₄கரணம்

(ஸூத்ரம் 24,25)

**उपसंहारदर्शनान्नेति चेन्न क्षीरवद्धि ।२४।**

உபஸம்ஹாரத₃ர்சனாந்நேதி சேந்ந க்ஷீரவத்₃தி₄ .24.

(எடுத்துக்கொள்வது காணப்படுவதால் இல்லை என்றால் இல்லை பால்போல அல்லவா)

देवादिवदपि लोके ।२५।

தே₃வாதி₃வத₃பி லோகே .25.

(உலகத்தில் தேவர் முதலானவர் போலவும்)

பிரஹ்மம் ஒன்ருகவேயிருக்கையில் கார்யங்கள் மாத்திரம் பலவகைப்படுவது எப்படி என்பது இங்கு விஷயம்.

न संभवेत्संभवेद्वा सृष्टिरेकाद्वितीयतः ।
नानाजातीयकार्याणां क्रमाज्जन्म न संभवि ।।१५।।
अद्वैतं तत्वतो व्रह्म तच्चाविद्यासहायवत् ।
नानाकार्यकरं कार्यक्रमोऽविद्यास्थशक्तिभिः ।।१६।।

ந ஸம்ப₄வேத்ஸம்ப₄வேத்₃வா ஸ்ருஷ்டிரேகாத்₃விதீயத:।
நாநாஜாதீயகார்யாணாம் க்ரமாஜ்ஜந்ம ந ஸம்ப₄வி ।। 15
அத்₃வைதம் தத்வதோ ப்₃ரஹ்ம தச்சாவித்₃யாஸஹாயவத்।
நாநாகார்யகரம் கார்யக்ரமோஅவித்₃யாஸ்த₂சக்திபி₄: ।। 16

(அ..ம்)

ஒன்ருக இரண்டாவதற்றதாக இருப்பதிலிருந்து ஸ்ருஷ்டி ஏற்படக் கூடுமா? கூடாதா? (அதிலிருந்து) பலவித இனங்களைச் சேர்ந்த கார்யங்களுக்கு வரிசையாக உண்டாகுதல் ஸம்பவிக்காது.

பிரஹ்மம் வாஸ்தவத்தில் இரண்டாவதற்றது தான். (ஆனுலும்) அதுவே அவித்யை (மாயை)யின் ஸஹாயத்தையுடையதாய் பலவித கார்யங்களை உண்டு பண்ணுகிறது. கார்யங்களிலுள்ள வரிசை அவித்யை(மாயை)யில் உள்ள சக்திகளால் ஏற்படுகிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"एकम् एव अद्वितीयम्" "ஒன்றே தான், இரண்டாவதற்றது" என்று சொல்லப்படுவதினுல் பிரஹ்மத்திற்கு உள்ளேயோ, அதைப் போலுள்ள வேறு வஸ்துவினுலோ, வேறு இனத்தைச் சேர்ந்த எந்த வஸ்துவினுலோ வேறு பாடு அற்றிருக்கும் தன்மை என்பது தெரிகிறது. ஸ்ருஷ்டிக்கப்பட வேண்டியதாய் உள்ள ஆகாசம், வாயு, அக்னி முதலிய பதார்த்தங்களோ வெவ்வேறு விதமாய் இருக்கின்றன. வெவ்வேறு விதமில்லாத காரண வஸ்துவிலிருந்து உண்டாகும் பதார்த்தங்களில் வெவ்வேருயிருக்கும் தன்மையிருப்பது நியாயமில்லை. ஒரே வஸ்துவிலிருந்து பலவிதமாக கார்யங்கள் ஏற்படலாமென்ருல்

பாலிலிருந்து தயிர், வெண்ணெய் முதலான அநேக விசித்திரமான பதார்த்தங்கள் ஏற்பட முடியுமென்று வந்து விடும். அப்படியோ உலகத்தில் காணுவதில்லை, அது யுக்திக்கும் பொருந்தாது. மேலும் ஆகாசம் முதலியவை வரிசையாக உண்டானதாக வேதம் சொல்கிறது. எல்லாம் ஒன்றிலிருந்தே வருமானுல் வரிசை எதற்கு? அந்த வரிசையை ஏற்படுத்திக் கொடுக்கவும் வேறு எதுவும் கிடையாது. ஆகையால் இரண்டாவதற்ற பிரஹ்மத்திலிருந்து பலவிதமான கார்யங்கள் வரிசையாக உண்டாவது ஸம்பவிக்காது.

ஸித்தாந்தம் :

வாஸ்தவத்தில் பிரஹ்மம் இரண்டாவதற்றதென்று இருந்த போதிலும் அவித்யை (மாயை)யுடன் கூடினதாகவே ஜகத்தை ஸ்ருஷ்டி செய்ததாக வேதம் சொல்கிறது. " मायां तु प्रकृतिं विद्यात् मायिनं तु महेश्वरम् " "மாயையையே காரணமாகவும், மாயையுடன் சேர்ந்தவரை மஹேசுவரராகவும் அறியவும்" என்று காண்கிறது. எடுத்துச் சொல்ல முடியாதது என்ற லக்ஷணத்தைக் கொண்டு மாயை தான் அவித்யை என்பதும், மாயையை ஒப்புக் கொள்வதினுல் பிரஹ்மத்தை விட இரண்டாவது வஸ்து சொல்லப்பட்டதாக ஆகாதாவென்ருல் மாயை வாஸ்தவத்தில் பிரஹ்மத்தை விட்டு தனிப் பதார்த்தமாக இல்லாததினுல் இரண்டாவது வஸ்துவாகாது. ஆகையால் பிரஹ்மம் ஒன்ருகவேயிருந்த போதிலும் அவித்யையின் துணையைக் கொண்டு பலவித கார்யங்களை உண்டு பண்ண முடியும் இவை உண்டாக வேண்டியதைக் காட்டும் வரிசையை ஏற்படுத்திக் கொடுக்க எதுவுமில்லையென்பது சரியல்ல. மாயையில் அடங்கியிருக்கும் பலவித சக்திகளே அந்த வரிசையை ஏற்படுத்திக் கொடுக்கின்றன. ஆகையால் இரண்டற்ற பிரஹ்மத்திலிருந்து பலவித கார்யங்கள் வரிசையாக உண்டாகலாம்.

## ९.कृत्स्नप्रसक्त्यधिकरणम्

## 9.க்ருத்ஸ்நப்ரஸக்த்யதி₄கரணம்

(ஸூத்ரம் 26 - 29)

**कृत्स्नप्रसक्तिर्निरवयवत्वशब्दकोपो वा ।२६।**

க்ருத்ஸ்நப்ரஸக்திர்நிரவயவத்வசப்₃த₃கோபோ வா .26.

(பூராவும் ஆகும்படி ஏற்படும், அல்லது அவயவமற்றதென்ற சப்தத்திற்கு விரோதம்)

**श्रुतेस्तु शब्दमूलत्वात् ।२७।**

ச்ருதேஸ்து சப்₃த₃மூலத்வாத் .27.

(ஆனால் சுருதியிலிருந்து, சப்தத்தை மூலமாயுடையதால்)

आत्मनि चैवं विचित्राश्च हि ।२८।

ஆத்மநி சைவம் விசித்ராச்ச ஹி .28.

(ஆத்மாவினிடத்திலேயும் இவ்விதம் விசித்திரங்களும் இருக்கின்றனவே)

स्वपक्षदोषाच्च ।२९।

ஸ்வபக்ஷதோ₃ஷாச்ச .29.

(தன்பக்ஷத்திலும் தோஷமானதினாலும்)

ஜகத்து பிரஹ்மத்தைவிட வேறில்லையென்பதால், பிரஹ்மம் பூராவுமே ஜகத்தாக ஆகிவிட்டதாவென்பது இங்கு விஷயம்.

न युक्तो युज्यते वाऽस्य परिणामो न युज्यते ।
कात्स्न्याद्ब्रह्मानित्यतापतेरंशात्सावयवं भवेत् ।।१७।।
मायाभिर्बहुरूपत्वं न कात्स्न्यान्नापि भागतः।
युक्तोऽनवयवस्यापि परिणामोऽत्र मायिकः।। १८ ।।

ந யுக்தோ யுஜ்யதே வாஅஸ்ய பரிணாமோ ந யுஜ்யதே।
கார்த்ஸ்ந்யாத₃ப்₃ரஹ்மாநித்யதாப்தேரம்சாத்ஸாவயவம் ப₄வேத்।।17
மாயாபி₄ர்ப₃ஹுரூபத்வம் ந கார்த்ஸ்ந்யாந்நாபி பா₄க₃த:।
யுக்தோஅநவயவஸ்யாபி பரிணாமோஅத்ர மாயிக:।। 18

(அ..ம்)

இதற்கு (பிரஹ்மத்திற்கு) பரிணமம் (மாறுதல்) பொருந்துமா? அல்லது பொருந்தாதா? பொருந்தாது பூராவும் மாறுவதானல் பிரஹ்மத்திற்கு அநித்யத்தன்மையேற்படுமானதினலும் ஒரு அம்சத்தில் மாறுவதானல் (பிரஹ்மம்) அவயவங்களையுடையதென்று ஏற்படுமானதினலும்.

மாயைகளினல் தான் பலரூபமாயிருக்கும் தன்மையேற்படுகிறது. (ஆகையால்) பூராவும் என்பதுமில்லை, அம்சத்தினலென்பதுமில்லை. அவயவ மாற்றத்திற்கும் இங்கே மாயையினல் பரிணமம் ஏற்படுவது நியாயமே.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"बहु स्याम्" "பலவாக ஆவேன்" என்று தீர்மானித்து தானே ஜகத்தாக பிரஹ்மம் மாறிவிட்டதாகச் சொல்லப்படுகிறது. பூரா பிரஹ்மமும் அவ்விதம் மாறுபட்டு விட்டால், பிரஹ்மம் மாறுபடக்கூடிய வஸ்து என்று ஏற்படும். எதெல்லாம் மாறுபடக்கூடியதோ அதெல்லாம் அநித்யம் என்பதே பிரஸித்தம். ஆகையால் பிரஹ்மமும் அநித்யம்

என்று ஏற்பட்டு விடும். பால் தயிராக மாறக் கூடியது எப்படி அநித்யமோ அதைப்போல மேலும் பிரஹ்மம் ஜகத்தாக மாறுதலேடைந்து விட்டால் இப்பொழுது சுத்தமாக பிரஹ்மம் இல்லேயென்று ஏற்படுமானதினுல் அதை ஸாக்ஷாத்கரிக்கப் பிரயத்தினம் செய்வது வீண் என்றும் ஏற்படும். அப்படி இல்லையென்றால் "पादोऽस्य विश्वभूतानि " "உண்டானவைகளெல்லாம் இவரின் கால்பாகம்" என்று சொல்லியிருப்பதால் மாறுதலடைந்தது பிரஹ்மத்தில் ஒரு பாகம் தான் என்று வைத்துக் கொண்டால் பிரஹ்மத்திற்குள் மாறுதலடையக் கூடிய பாகம், மாறுதலடையாத பாகம் என்று தனித்தனி அம்சங்கள் இருப்பதாக ஏற்படும். அவ்விதமானுல் " एकमेव " "பிரஹ்மம் ஒன்றே தான்" என்றும் " निष्कलं" அதனிடத்தில் உறுப்புக்கள் கிடையாதென்றும் சொன்னது பிசகிவிடும்.அத்துடன் எதெல்லாம் அவயவங்களுடையதோ அவையெல்லாம் அநித்யம் என்ற நியாயப்படி பிரஹ்மமும் அநித்யம் என்று ஏற்பட்டுவிடும். ஆகையால் இரண்டு விதமாகவும் பிரஹ்மம் மாறுதலடைகிறது என்று சொல்வதற்கு இடமில்லே. ஆகையால் பிரஹ்மம் ஜகத் காரண வஸ்துவாயிருக்க முடியாது.

ஸித்தாந்தம் :
மாறுதல் வாஸ்தவமாயிருந்தால் சொல்லப்படும் ஆக்ஷேபணேயெல்லாம் ஸரியே. சுருதியோ " इन्द्रो मायाभिः पुरुरूप ईयते " "ஸ்வயம் பிரகாசமான ஈசுவரர் மாயா சக்திகளேக் கொண்டு பல ரூபமுள்ளவராக ஆகிருர்" என்று மாறுதல் என்பது வாஸ்தவமில்லே. மாயையினுல் தோன்றுவது தான் என்று சொல்கிறது. ஆகையால் இங்கே மாறுதல் பூராவாகவா, அம்சத்திலா என்ற கேள்விக்கே இடமில்லே. கயிறு பாம்பாக மாறுவது (தோன்றுவது) போல்தான்; ஆகையால் வேதத்தில் சொல்லப்படும் மாறுதல் (தோற்றம்) நியாயமானது தான்.

## १०.सर्वोपेताधिकरणम्
## 10.ஸர்வோபேதாதி₄கரணம்
(ஸூத்ரம் 30,31)

**सर्वोपेता च तद्दर्शनात् ।३०।**
ஸர்வோபேதா ச தத்₃த₃ர்சநாத் .30.
(எல்லாமுள்ளதும், அவ்விதம் காணுவதால்)

**विकरणत्वान्नेति चेत्तदुक्तम् ।३१।**
விகரணத்வாந்நேதி சேத்தது₃க்தம் .31.

(இந்திரியமில்லாததினால் இல்லை என்றால் அது சொல்லப்பட்டு விட்டது)

பிரஹ்மத்திற்கோ சரீரம் கிடையாதே, அதனிடத்தில் மாயா சக்தி எப்படியிருக்க முடியும்? என்று இங்கு விஷயம்.

नाशरीरस्य मायाऽस्ति यदि वाऽस्ति न विद्यते ।
ये हि मायाविनो लोके ते सर्वेऽपि शरीरिणः ।।१९।।
बाह्यहेतुमृते यद्वन्मायया कार्यकारिता ।
ऋतेऽपि देहं मायैवं ब्रह्मण्यस्तु प्रमाणतः ।।२०।।

நாசரீரஸ்ய மாயாஅஸ்தி யதி₃ வாஅஸ்தி ந வித்₃யதே।
யே ஹி மாயாவிநோ லோகே தே ஸர்வேஅபி சரீரிண:।। 19
பா₃ஹ்யஹேதும்ருதே யத்₃வந்மாயயா கார்யகாரிதா।
ருதேஅபி தே₃ஹம் மாயைவம் ப்₃ரஹ்மண்யஸ்து ப்ரமாணத:।। 20

(அ..ம்)

சரீரமற்றதற்கு மாயை இருக்குமா? அல்லது இருக்காதா? உலகத்தில் எவர்கள் மாயையுள்ளவர்களாக இருக்கிறார்களோ, அவர்கள் எல்லோரும் சரீரமுள்ளவர்களாக இருக்கிறார்கள் என்பது பிரஸித்தம் (ஆகையால்) (சரீரமற்றதிற்கு மாயை) கிடையாது.

வெளிக்காரணங்கள் (ஸாமக்ரிகள்) எதுவுமன்னியில் மாயையினால் கார்யங்களை செய்யும் தன்மை (பதார்த்தங்களை உண்டு பண்ணும் தன்மை) எப்படி இருந்து வருகிறதோ, அவ்விதமே (வேதமாகிற) பிரமாணம் சொல்வதால் பிரஹ்மத்தில் சரீரமில்லாமல் மாயை இருக்கட்டுமே.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

உலகத்தில் இந்திர ஜால வித்யையைக் காட்டிவரும் எல்லோருமே சரீரமுள்ளவர்களாகவே இருப்பதால், சரீரமில்லையானால் மாயையிருக்க முடியாதென்று ஏற்படுகிறது. பிரஹ்மத்திற்கோ சரீரம் கிடையாது. அதனால் அதில் மாயையும் இருக்க முடியாது.

ஸித்தாந்தம் :

உலகத்தில் வீடு முதலியன கட்ட வேண்டுமானால், கட்டுகிறவனுக்கு வேறாயுள்ள மண், கல், மரம் முதலிய அநேக ஸாதனங்கள் தேவைப்படுகின்றன. இந்திர ஜால வித்யைக்காரனுக்கோ இவை எதையும் அபேக்ஷிக்காமல் வீடு முதலியதைக் கட்டி விடுகிறான்.

இவ்விதம் உலகத்திலுள்ள மாயாவிக்கே இவ்வளவு ஸாமர்த்திய மிருக்கும் போது, ஜகத்தையே ஸ்ருஷ்டி செய்யும் ஈசுவரரின் மாயைக்கு சரீரமில்லாமல் ஸ்ருஷ்டிக்கும் ஸாமர்த்தியம் இருப்பதில் என்ன ஆச்சர்யம்? இந்திரஜால வித்யைக்காரனிடம் ஸாமர்த்தியமிருப்பது பிரத்யக்ஷமாய் தெரிகிறதே, பிரஹ்மத்தில் தெரியவில்லையே என்றல் பிரத்யக்ஷப்பிரமாணத்தினல் தெரியவில்லையானலும் அதைவிட மேலான பிரமாணமான வேதம் " मायिनं तु महेश्वरम् " மஹேசுவரர் மாயாவியென்று சொல்வதால் அதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஆகையால் சரீரமில்லையானலும் பிரஹ்மத்தினிடத்தில் மாயா சக்தி இருக்கலாமென்பது ஸித்தம்.

## ११.प्रयोजनवत्त्वाधिकरणम्

### 11.ப்ரயோஜநவத்வாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 32,33)

**न प्रयोजनवत्त्वात् ।३२।**

ந ப்ரயோஜநவத்வாத் .32.

(இல்லை பிரயோஜனமுள்ள தன்மையால்)

**लोकवत्तु लीलाकैवल्यम् ।३३।**

லோகவத்து லீலாகைவல்யம் .33.

(ஆனால் உலகத்தில் போல வெறும் லீலை)

பிரஹ்மமே ஜகத்திற்குக் காரணமென்றும் ஸ்ருஷ்டி செய்வது மாயா சக்தியினல் தானென்றும் வைத்துக் கொண்டாலும் கூட ஸ்ருஷ்டி செய்வதினல் அவருக்கு என்ன பிரயோஜனம்? என்பது இங்கு விஷயம்.

**तृप्तोऽस्त्रष्टाऽथवा स्त्रष्टा न स्त्रष्टा फलवाञ्छने ।**
**अतृप्तः स्यादवाञ्छायामुन्मत्तनरतुल्यता ।।२१।।**
**लीलाश्वासवृथाचेष्टा अनुद्दिश्य फलं यतः ।**
**अनुन्मत्तैर्विरच्यन्ते तस्मात्तृप्तस्तथा सृजेत् ।।२२।।**

த்ருப்தோஅஸ்ரஷ்டாஅத$_2$வா ஸ்ரஷ்டா ந ஸ்ரஷ்டா ப$_2$லவாஞ்சநே।
அத்ருப்த: ஸ்யாத$_3$வாஞ்சா$_2$யாமுந்மத்தநரதுல்யதா ।। 21
லீலாச்வாஸவ்ருதா$_2$சேஷ்டா அநுத்$_3$தி$_3$ச்ய ப$_2$லம் யத:।
அநுந்மத்தைர்விரச்யந்தே தஸ்மாத்த்ருப்தஸ்தஸ்தா$_2$ ஸ்ருஜேத்।।22

(அ..ம்)

திருப்தியுள்ளவன் ஸ்ருஷ்டிக்கிறவனக இருக்க மாட்டான? அல்லது ஸ்ருஷ்டிக்கிறவனக இருப்பான? பலனில் ஆசையிருக்குமானல்

திருப்தியற்ற தன்மை தான் இருக்கும். ஆசையில்லாமலே (ஸ்ருஷ்டிக்கிறுன்) என்றுல் பைத்தியம் பிடித்த மனிதனுக்கு ஸமானமான தன்மை தான் அவனுக்கு.

பைத்தியம் இல்லாதவர்களால் கூட விளையாட்டு, மூச்சு விடுவது, வெறும் சேஷ்டைகள். இவை எவ்வித பலனையும் உத்தேசிக்காமல் செய்யப்படுகின்றன. ஆகையால் அப்படியே பிரஹ்மமும் (எவ்வித பலனையும் உத்தேசிக்காமல்) தான் திருப்தியுடன் இருந்தாலும் ஸ்ருஷ்டிக்கலாம்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

" आनन्दो ब्रह्म " "பிரஹ்மம் ஆனந்த ஸ்வரூபம்" என்பதிலுல் பரமேசுவரர் எப்பொழுதும் திருப்தியடைந்தவரென்று தெரிகிறது. அவ்விதமுள்ளவருக்கு ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்று ஆசைதோன்றிற்று என்றுல் அவருக்கு எப்பொழுதும் திருப்தியுள்ளதென்று சொன்னது பிசகிவிடும். அவர் எவ்வித ஆசையும் இல்லாமல் ஸ்ருஷ்டி செய்தார் என்றுல் " प्रयोजनम् अनुद्दिश्य न मन्दोऽपि प्रवर्तते" "ப்ரயோஜனத்தை உத்தேசிக்காமல் மந்தன் கூட பிரவிருத்திக்க மாட்டான்" என்ற நியாயப்படி பரமேசுவரர் எவ்வித ப்ரயோஜனமுமில்லாமல் ஸ்ருஷ்டிக்கிற பைத்தியக்காரர்கள் போலத் தான் என்று ஏற்படும்.

ஸித்தாந்தம் :

பிரயோஜனத்தை உத்தேசிக்காமல் உலகத்தில் பிரவிருத்தி கிடையாதென்பது சரியல்ல. அரசர்கள் விளையாட்டாக வேட்டையாடப் போகிறுர்கள். சிலர் சதுரங்கம் முதலான விளையாட்டுகளில் ஈடுபடுகிறுர்கள். இவர்களெல்லாம் பைத்தியம் பிடித்தவர்கள் அல்ல. மூச்சு விடுவதும் இழுப்பதும் எல்லாப் பிராணிகளிடத்திலும் இருக்கிறது. அதைச் செய்வதில் பலனையுத்தேசித்தா செய்கிறுர்கள்? குழந்தைகள் எவ்வித ப்ரயோஜனமற்று பலவித சேஷ்டைகளைச் செய்வதையும் ஏராளமாய் பார்க்கிறோம். இவர்களும் பைத்தியம் பிடித்தவர்கள் அல்ல. ஆகையால் பைத்தியமில்லாதவனுய் இருந்தாலும் எவ்வித பலனையும் உத்தேசிக்க அவசியமேயில்லாமல் எப்பொழுதும் திருப்தியுடன் இருந்து வரும் ஈசுவரர் ஜகத்தை ஸ்ருஷ்டி செய்யும் கார்யத்தில் பிரவிருத்திப்பதில் எவ்வித தோஷமுமில்லை.

# १२.वैषम्यनैर्घृण्याधिकरणम्

## 12.வைஷம்யநைர்க்$_4$ருண்யாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 34 - 36)

**वैषम्यनैर्घृण्ये न सापेक्षत्वात्तथाहि दर्शयति ।३४।**

வைஷம்யநைர்க்$_4$ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்ததா$_2$ஹித$_3$ர்சயதி .34.

(வைஷம்யமும் நைர்க்ருண்யமும் இல்லை,
ஸாபேக்ஷமாயிருப்பதால் அப்படியல்லவா காட்டுகிறது)

**न कर्माविभागादिति चेन्नानादित्वात् ।३५।**

ந கர்மாவிபா$_4$கா$_3$தி$_3$தி சேந்நாநாதி$_3$த்வாத் .35.

(பிரிவு இல்லாததால் கர்மா இல்லை என்றால் இல்லை,
ஆதியில்லாததினால்)

**उपपद्यते चाप्युपलभ्यते च ।३६।**

உபபத்$_3$யதே சாப்யுபலப்$_4$யதே ச .36.

(பொருந்துகிறது, காணவும்படுகிறது)

எவ்விதப் ப்ரயோஜனத்தையும் உத்தேசிக்காமலே ஈசுவரர் ஜகத்தை ஸ்ருஷ்டி செய்யட்டும். ஆனல் ஸ்ருஷ்டி செய்வதில் சில பிராணிகளை ஸுகமுள்ளவர் களாகவும், சில பிராணிகளை துக்கமுள்ளவர்களாகவும் தாரதம்யத்துடன் ஸ்ருஷ்டி செய்வதால் அவருக்கு பக்ஷபாதமுண்டு, கருணையற்றவர், என்ற தோஷங்கள் ஏற்படாதா? என்பது இங்கு விஷயம்.

**वैषम्याद्यापतेन्नो वा सुखदुःखे नृभेदतः ।
सृजन्विषम ईशः स्यान्निर्घृणश्चोपसंहरन् ।।२३।।
प्राण्यनुष्ठितधर्मादिमपेक्ष्येशः प्रवर्तते ।
नातो वैषम्यनैर्घृण्ये संसारस्तु न चाऽऽदिमान् ।।२४।।**

வைஷம்யாத்$_3$யாபதேந்நோ வா ஸுக$_2$து$_3$:கே$_2$ ந்ருபே$_4$த$_3$த:।
ஸ்ருஜந்விஷம ஈச: ஸ்யாந்நிர்க்$_4$ருணச்சோபஸம்ஹரந் ।।23
ப்ராண்யநுஷ்டிதத$_4$ர்மாதி$_3$மபேக்ஷ்யேச: ப்ரவர்ததே ।
நாதோ வைஷம்யநைர்க்$_4$ருண்யே ஸம்ஸாரஸ்து நசாஆதி$_3$மான்।।24

(அ..ம்)

(பரமேசுவரருக்கு) வைஷம்யம் (ஸமானமாகயில்லாத் தன்மை அதாவது பக்ஷபாதத்துடனிருத்தல்) முதலானது ஏற்படுமா? ஏற்படாதா? ஜனங்களுக்குள் பேதப்படுத்தி ஸுகத்தையும், துக்கத்தையும் ஸ்ருஷ்டிக்கும் ஈசுவரர் ஸமமாயிருப்பவரல்லவென்று தான் ஏற்படும்.

(கடைசியில் எல்லாரையும் பிரளயத்தில்) ஒடுங்கச் செய்கிறவர், கருணையற்றவராகவும் ஆவார்.

பிராணிகளால் அனுஷ்டிக்கப்பட்ட தர்மம் முதலானதை அபேக்ஷித்தே ஈசுவரர் பிரவிருத்திக்கிறார்.ஆகையால் அவருக்கு வைஷம்யமாவது கருணையின்மையாவது ஏற்படாது. ஸம்ஸாரமோ ஆதியுள்ளதல்ல. (வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஈசுவரர் வெகுஸுகமுள்ளவர்களாக தேவர்முதலானவர்களையும், வெகு துக்கமுள்ளவைகளாக மிருகபக்ஷி முதலியவைகளையும்,நடுத்தரமாக உள்ள மனுஷ்யர்களையும் ஸ்ருஷ்டிக்கிறார். இவ்விதம் பிராணிகளுக்குள் தாரதம்யத்துடன் ஸுகதுக்கங்களை ஏற்படுத்திக் கொடுப்பவர் விஷமராக இல்லாமல் எப்படியிருப்பார்? மேலும் மற்றவர்களை நசுக்குவது வெகு கீழ்பட்ட ஸ்வபாவமுள்ளவர்களால் கூட வெறுக்கப்படும் விஷயம். அப்படியிருக்க எல்லாப் பிராணிகளையும் கொண்ட ஜகத்தையே பிரளயத்தில் நாசம் செய்து விடுகிறவர் தயையற்றவர் என்பதில் என்ன ஸந்தேஹம்? ஆகையால் ஈசுவரர் ஜகத்தை ஸ்ருஷ்டி செய்கிறவரென்று வைத்துக் கொண்டால் இவ்விரண்டு தோஷங்களும் அவருக்கு ஏற்பட்டே தீரும்.

ஸித்தாந்தம் :

பிராணிகளுக்குள் மேல், கீழ், மத்யம் என்ற தாரதம்யத்தையுண்டு பண்ணினது. அவரவர்கள் செய்துள்ள கர்மாக்களேயானதினால், ஈசுவரனிடத்தில் வைஷம்யம் என்ற தோஷத்திற்கு பிரஸக்தியேயில்லை. இவ்விதம் கர்மாவையனுஸரித்து அவர் செய்கிறாரென்றால், அவர் வேறொன்றுக்குக் கட்டுப்பட்டவரென்று ஏற்படுவதால். அவர் ஸ்வதந்திரர் இல்லையென்று ஆகிவிடாது. அவர் அந்தர்யாமீ என்ற முறையிலும், எல்லாவற்றிற்கும் உள்ளிருந்து கொண்டு நியமனம் செய்கிறவரானதால், கர்மாவுக்கும் மேல் அதிகாரியாய் இருக்கிறார். அப்படியானால், ஈசுவரருக்கு வைஷம்யம் கிடையாதென்று சொல்வதற்காக வைஷம்யத்திற்குக் காரணம் கர்மாக்களென்று சொல்லிவிட்டு ஈசுவரருக்கு ஸ்வாதந்திரியம் ஸித்திப்பதற்காக கர்மாக்களை நியமனம் செய்வதே அவர் என்று சொன்னால், அவைகளை பல விதமாக நியமனம் செய்வதால் மறுபடியும் வைஷம்யதோஷம் ஈசுவரரிடத்திலேயே வந்து சேருகிறதல்லவா? சுங்கவரி கொடுக்காமல் தப்பிக்க நினைத்து இரவு பூராவும் வண்டியை வேறு பாதைகளில்

ஓட்டிக் கொண்டு போய் விடியற்காலத்தில் சுங்கவரி வசூலிக்கும் இடத்திற்கே வந்து சேர்ந்து போலல்லவா ஆகிறது? என்று தோன்றலாம். அப்படியல்ல, நியமனம் என்பது அந்தந்த வஸ்துக்களின் சக்திகள் ஒன்றோடு கலந்து விடாமல், அததற்கு ஏற்பட்ட வியவஸ்தையை மீறாமல் பார்த்துக் கொள்வதேயாம். சக்திகளோ மாயையின் அம்சங்கள். அந்த சக்திகள் ஸ்வபாவஸித்தமாக இருப்பதால் அவைகளை ஈசுவரர் ஏற்படுத்துகிறவரல்ல. ஆகையால் கர்மாக்கள் அதன் சொந்த சக்திக்குக் கட்டுப்பட்டு ஸுகதுக்கங்களை ஏற்படுத்துவதில் காரணங்களாயிருந்து வேற்றுமைக்கும் காரணமாயிருப்பதால், அந்த வியவஸ்தையை பரிபாலிக்கும் ஈச்வரனிடத்தில் வைஷம்யம் ஏற்படவில்லை. ஜகத்தையொடுக்குவது கருணையற்ற கார்யமேயாகாது பிரளயம் என்பது தூக்கத்தைப் போலவே துக்கத்திற்குக் காரணமல்ல. மேலும் அந்த ஸமயத்தில் முன்னிருந்த எல்லா துக்கங்களையும் நிவிருத்தி செய்து கொடுப்பதால் பிரளயம் என்பது கருணையால் செய்யப்படுவதே ஆகும். இவ்விதமாக ஸ்ருஷ்டி செய்யும் போது முன் ஸ்ருஷ்டியில் ஜீவர்கள் செய்திருந்த கர்மாக்களை அனுஸரித்தே அவர்களை ஸ்ருஷ்டி செய்வதால் ஈசுவரருக்கு வைஷம்ய தோஷமில்லையென்று வைத்துக் கொள்வோம். அந்த முன் ஸ்ருஷ்டிக்குக் காரணம் அதற்கும் முன்னுள்ள ஸ்ருஷ்டியில் செய்த கர்மாக்கள் என்று சொல்ல வேண்டும். இப்படி கேட்டுக்கொண்டு போனாலும் எல்லாவற்றிற்கும் முதலில் ஒரு ஸ்ருஷ்டி இருந்திருக்குமே அதில் எப்படி ஈசுவரர் ஸ்ருஷ்டி செய்தார்? அதற்கு முன் ஸ்ருஷ்டி இல்லாததினால் கர்மாக்களும் கிடையாது. அப்படியிருக்க ஏன் ஸ்ருஷ்டி செய்தார் என்று கூட கேட்க வேண்டி வரும். அப்பொழுது ஸ்ருஷ்டி செய்த விஷயத்திலாவது எவ்வித கர்மாக்களையும் அபேக்ஷிக்காமல் ஈச்வரர் தானாகவே தாரதம்யத்துடன் ஸ்ருஷ்டித்தார் என்றால் அவருக்கு வைஷம்யம் உண்டு என்று தானே ஏற்படும்? என்றால் அப்படியல்ல. ஸ்ருஷ்டி, ஸ்திதி, பிரளயமென்ற ஸம்ஸார சக்கரத்திற்கு ஆதியும் கிடையாது, முடிவும் கிடையாது. "नान्तो न चादिः" என்று சாஸ்திரம் சொல்கிறது. அதினால் முதல் ஸ்ருஷ்டியென்பதே கிடையாது. ஆகையால் ஈசுவரருக்கு எவ்வித தோஷமும் ஏற்படுவதற்கு இடமில்லை.

# १३.सर्वधर्मोपपत्त्यधिकरणम्

## 13.ஸர்வத₄ர்மோபபத்த்யதி₄கரணம்

(ஸூத்ரம் 37)

**सर्वधर्मोपपत्तेश्च ।३७।**

ஸர்வத₄ர்மோபபத்தேச்ச .37.

(எல்லா தர்மமும் பொருந்துமானதினாலும்)

இவ்விதம் பிரஹ்மம் ஜகத்காரணம் என்று வைத்துக் கொண்டாலும் எவ்வித குணமுமற்ற பிரஹ்மத்தினிடத்தில் ஜகத் காரணத் தன்மையென்ற குணம் எப்படி இருக்க முடியும்? என்பது இங்கு விஷயம்.

**नास्ति प्रकृतिता यद्वा निर्गुणस्यास्ति नास्ति सा ।**
**मृदादेः सगुणस्यैव प्रकृतित्वोपलंभनात् ।।२५।।**
**भ्रमाधिष्ठानताऽस्माभिः प्रकृतित्वमुपेयते ।**
**निर्गुणेऽप्यस्ति जात्यादौ सा ब्रह्म प्रकृतिस्ततः ।।२६।।**

நாஸ்தி ப்ரக்ருதிதா யத்₃வா நிர்கு₃ணஸ்யாஸ்தி நாஸ்தி ஸா।
ம்ருதா₃தே₃: ஸகு₃ணஸ்யைவ ப்ரக்ருதித்வோபலம்ப₄நாத் ।।25
ப்₄ரமாதி₄ஷ்டாநதாஅஸ்மாபி₄: ப்ரக்ருதித்வமுபேயதே।
நிர்கு₃ணேஅப்யஸ்தி ஜாத்யாதௌ₃ ஸா ப்₃ரஹ்ம ப்ரக்ருதிஸ்தத:।।26

(அ..ம்)

நிர்குணமாயிருப்பதற்கு பிரகிருதி (காரணம்) ஆகவிருக்கும் தன்மை கிடையாதா? அல்லது இருக்கலாமா? குணங்களோடுகூடிய மண்முதலியதிற்கே பிரகிருதியாய் இருக்கும் தன்மை காணப்படுவதால் (நிர்குணமான பிரஹ்மத்திற்கு) அது கிடையாது.

பிரகிருதியாயிருக்கும் தன்மையென்பது பிரஹ்மத்திற்கு (தவறுதலான அறிவிற்கு) அடிப்படையாய் இருக்கும்தன்மையென்று எங்களால் ஒப்புக் கொள்ளப் பட்டிருக்கிறது. அது ஜாதி, முதலியதில் போல குணம் இல்லாததிலும் இருக்கும். ஆகையால் பிரஹ்மம் பிரகிருதி.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிரகிருதியாயிருத்தல் என்பது கார்யரூபமாக மாறுதலடையக்கூடிய தன்மை என்று தாத்பர்யம். உலகத்தில் மண் குடமாக மாறுவதைப் பார்த்து மண்ணில் அத் தன்மை இருப்பதாகத் தெரிந்து கொள்கிறோம். இது மாதிரி எங்கேயெல்லாம் பிரகிருதியாயிருக்கும் தன்மைத்

தெரிகிறதோ, அங்கேயெல்லாம் பிரகிருதியாயுள்ள வஸ்து குணங்களுடன் கூடியிருப்பதாகவே பார்த்திருக்கிறோம். ஆகையால் பிரஹ்மமோ எவ்விதகுணமும் அற்றதாய் இருப்பதால், அதனிடம் பிரகிருதியாய் இருக்கும் தன்மை இருக்க முடியாது.

ஸித்தாந்தம் :

எது கார்யரூபமாக மாறுதலடைகிறதோ அது பிரகிருதி என்று சொன்ன லக்ஷணம் ஸரியே. ஆனால் மாறுதல் என்பது இரண்டு விதம். பால் தயிராவது போல, தன் ஸ்வரூபத்தையிழந்து வேறு பதார்த்தமாக ஆவது ஒரு விதம். கயிறு பாம்பாகத் தோன்றுவது போல, தன் ஸ்வரூபத்தை இழக்காமல் அப்படியேயிருந்த போதிலும் வேறு பதார்த்தமாக தோற்றமளிப்பது மற்றொரு விதம். முதல் சொன்ன விதம் ஸகுணமாயுள்ளவைகளில் தான் ஸாத்தியப்படும். இரண்டாவது விதம் ஸகுணத்திலும் ஏற்படலாம் நிர்குணத்திலும் ஏற்படலாம். ஜாதி முதலியவைகளே குணமாயிருப்பதால் அவைகளுக்கு குணமென்று வேறு கிடையாததினால் அவை குணமற்றவை தான். களை மங்கியுள்ள ஒரு பிராஹ்மணரைப் பார்த்து இவர் சூத்திரன் என்று நினைப்பது உலக வியவஹாரத்தில் இருக்கிறது. அவ்விதம் பிரமம் (தவறுதலான எண்ணம்) ஏற்பட்டிருப்பது ஜாதி விஷயமாகத்தான். அந்த பிரமத்திற்கு அடிப்படையாய் உள்ளது அவருடைய ஜாதியென்று ஏற்படுகிறது. ஆக இவ்விதம் குணமற்றது பிரமத்திற்கு அதிஷ்டானமாய் (அடிப்படையாய்) இருக்கலாமென்று காண்பதால், நிர்குணமான பிரஹ்மமும் ஜகத்திற்கு அதிஷ்டானம் என்ற முறையில் பிரகிருதியாயிருக்கலாமென்பது ஸித்தம்.

இவ்விதம் இரண்டாவது அத்யாயம் முதல் பாதத்தில் அதிகரணங்கள் **13** சுலோகங்கள் **26** ( ஸூத்ரங்கள் **37**).

===============================

# இரண்டாவது அத்யாயம் : இரண்டாவது பாதம்

## १. रचनानुपपत्त्यधिकरणम्

### 1. ரசநாநுபபத்த்யதி$_4$கரணம்

(ஸூத்ரம் 1 - 10)

**रचनानुपपत्तेश्च नानुमानम् ।१।**

ரசநாநுபபத்தேச்ச நாநுமாநம் .1.

(ரசனை பொருந்தாததினாலும் அனுமானம் இல்லை)

**प्रवृत्तेश्च ।२।**

ப்ரவ்ருத்தேச்ச .2.

(பிரவிருத்தியிருப்பதினாலும்)

**पयोम्बुवच्चेत्तत्रापि ।३।**

பயோம்பு$_3$வச்சேத்தத்ராபி .3.

(பால் ஜலம் போல் என்றால் அங்கேயும் அவ்வாறே)

**व्यतिरेकानवस्थितेश्चानपेक्षत्वात् ।४।**

வ்யதிரேகாநவஸ்தி$_2$தேச்சாநபேக்ஷத்வாத் .4.

(வேறு இல்லாததினாலும் அபேக்ஷயற்றதினாலும்)

**अन्यत्राभावाच्च न तृणादिवत् ।५।**

அந்யத்ராபா$_4$வாச்ச ந த்ரிணாதி$_3$வத் .5.

(வேறிடத்தில் இல்லாததினாலும் இல்லை புல் முதலியது போல)

**अभ्युपगमेऽप्यर्थाभावात् ।६।**

அப்$_4$யுபக$_3$மேஅப்யர்தா$_2$பா$_4$வாத் .6.

(ஒப்புக்கொண்டாலும்கூட பிரயோஜனமில்லாததினால்)

**पुरुषाश्मवदिति चेत्तत्रापि ।७।**

புருஷாச்மவதி$_3$தி சேத்தத்ராபி .7.

(மனிதன் கல் இவை போல என்றால் அப்படியும் கூட)

**अङ्गित्वानुपपत्तेश्च।८।**

அங்கி$_3$த்வாநுபபத்தேச்ச.8.

(அங்கித்தன்மை பொருந்தாதினாலும்)

**अन्यथाऽनुमितौ च ज्ञशक्तिवियोगात् ।९।**

அன்யதா$_2$அனுமிதௌ ச ஜ்ஞசக்திவியோகா$_3$த் .9.

(வேறுவிதமாக அனுமானம் செய்தாலும் ஞானசக்தி விலகிவிடுமானதினால்)

**विप्रतिषेधाच्चासमञ्जसम् ।१०।**

விப்ரதிஷேதா₄ச்சாஸமஞ்ஜஸம் .10.
(விருத்தமாயிருப்பதாலும் சரியானதல்ல)

இதுவரை ஜகத் காரணமாயுள்ள வஸ்து பிரஹ்மம் என்று காட்டியதுடன் அதற்குள்ள ஆக்ஷேபனேக்கு ஸமாதானமும் சொல்லப்பட்டது. அவ்விதம் இருந்தாலும், மற்ற சாஸ்திரங்களில் ஜகத் காரணமாகச் சொல்லப்படுகிற பிரதானம், பரமாணு முதலியவைகளும் காரணமாய் இருக்கலாமே என்ற ஸந்தேஹமிருக்கக்கூடாதென்ற கருத்துடன் மற்ற மதங்கள் யாவும் நிலைக்கத் தக்கதில்லையென்று எடுத்துக் காட்டுவதற்காக மேலால் ஆரம்பிக்கப் படுகிறது. முதலில் ஸாங்கிய மதத்தை எடுத்துக் கொள்கிறுர்

प्रधानं जगतो हेतुर्नवा सर्वे घटादयः।
अन्विताः सुखदुःखाद्यैर्यतो हेतुरतो भवेत् ।१।
न हेतुर्योग्यरचनाप्रवृत्यादेरसंभवात् ।
सुखाद्या आन्तरा बाह्या घटाद्यास्तु कुतोऽन्वयः ।२।

ப்ரதா₄னம் ஜக₃தோ ஹேதுர்னவா ஸர்வே க₄டாத₃ய:।
அன்விதா: ஸுக₂து₃:கா₂தை₄ர்யதோ ஹேதுரதோ ப₄வேத்।।1
ந ஹேதுர்யோக்₃யரசனாப்ரவ்ருத்த்யாதே₃ரஸம்ப₄வாத்।
ஸுகா₂த்₃யா ஆந்தரா பா₃ஹ்யா க₄டாத்₃தா₃ஸ்து குதோஅந்வய:।।2

(அ..ம்)

ஜகத்திற்குக் காரணம் பிரதானமா? இல்லையா? குடம் முதலானவைகள் எல்லாம், ஸுகம், துக்கம் முதலியவைகளுடன் கூடியே இருக்கின்றன என்பதினுல், அவைகளுக்குக் காரணம் (அப்படியே இருக்க வேண்டுமானதினுல் பிரதானம்) ஆகவிருக்கும்.

நியாயமானதை உண்டு பண்ணுவது (உண்டு பண்ணுவதற்கு வேண்டிய) பிரவிருத்தி முதலியது (பிரதானத்தில்) ஸம்பவிக்காததினுல் (அது) காரணம் அல்ல. ஸுகம் முதலியன உள்ளேயிருக்கின்றன. குடம் முதலியனவோ வெளியில் இருக்கின்றன அப்படியிருக்க அவ்விரண்டிற்கும் தொடர்பு எப்படியிருக்க முடியும்?

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

உலகத்தில் காணப்படுகிற குடம், வஸ்திரம் முதலிய பதார்த்தங்கள் ஜலம் கொண்டு வருதல், உடுத்திக் கொள்ளுதல் முதலான கார்யங்களுக்கு உபயோகப்படுவதால் ஸுகத்தைக் கொடுப்பதாகக் காணப்படுகின்றன. அதே வஸ்துக்கள் வேறு யாராலாவது

அபஹரிக்கப்பட்டுவிட்டால் துக்கத்தைக் கொடுப்பதாகவும் காணப்படுகின்றன. ஸுகம், துக்கம் இரண்டையும் கொடுக்காத ஸமயத்தில் மறந்தே போய் விடுகின்றன. இவ்விதம் ஜகத்திலுள்ள எல்லா பதார்த்தங்களும் ஸுகம், துக்கம், மோகம் என்ற மூன்று வித குணங்களை உடையதாகத் தெரிகிறது. இவைகளில் ஸுகம் என்பது ஸத்வ குணத்தையும், துக்கம் ரஜோ குணத்தையும், மோஹம் தமோ குணத்தையும் சேர்ந்தது. இந்த பதார்த்தங்களுக்கெல்லாம் மூல காரணமாயிருக்கும் வஸ்துவில் இந்த மூன்று குணங்களும் இருந்தாக வேண்டும். அவ்விதம் இந்த மூன்று குணங்களையும் உடையது பிரதானமே. ஆகையால் பிரதானம் தான் ஜகத்திற்குக் காரணம் என்று ஸாங்கியர்கள் எண்ணுகிறார்கள்.

ஸித்தாந்தம் :

ஜகத்தில் தேஹம், இந்திரியம், மனஸ், மலை, காடு, ஸமுத்திரம் முதலிய கணக்கில் அடங்காத விசித்ரமான பதார்த்தங்கள் காணப்படுகின்றன. ஒவ்வொன்றுக்கும் தனித்தனி ஸ்வபாவம், தனித்தனி அமைப்பு முதலியது இருக்கிறது. இவ்விதம் பலவிதமாக உண்டு பண்ணுவதற்கு அசேதனமாயுள்ள பிரதானத்திற்கு ஸாமர்த்தியம் கிடையவே கிடையாது. உலகத்தில் பலவித அரண்மனை முதலியது அதன் அதன் கிரமப்படி கட்ட வேண்டுமானால் வெகு புத்திசாலியாயுள்ள ஒரு சேதனனையே அபேக்ஷிக்கிறதாகக் கண்டிருக்கிறோம். மேலும் ஒரு கார்யத்தை நிறைவேற்றுவதற்கு வேண்டிய பிரவிருத்தியும் ஜடமாயுள்ள எந்த பதார்த்தத்திலுமிராது. கல்லும், மண்ணும் தானே வீடாக அமையாது. வெறும் வண்டி மாடோ, உடலோ ஏதேனும் சேதனனால் தள்ளப் படாதபோனால் அசையாது. ஆகையால் அசேதனமாயுள்ள பிரதானத்தின் இடத்தில் ஜகத்தையுண்டு பண்ணுவதற்கு வேண்டிய எவ்வித யோக்கியதையும் கிடையாது. அந்தப் பிரதானத்தை சேஷ்டிக்கச் செய்வதற்குத் தான் சேதனனான புருஷன் என்று ஒருவனை ஒப்புக் கொள்கிறோமேயென்றால் அந்த புருஷனுக்கு லக்ஷணம் சொல்லும் போது அஸங்கன் (எவ்வித பற்றுதலுமில்லாதவன்) என்று சொன்னால் அவன் பிரதானத்தை சேஷ்டிக்கச் செய்ய மாட்டான். சேஷ்டிக்கச் செய்கிறானென்றால் ஸாங்கியர்களுடைய அஸங்கன் என்ற ஸித்தாந்தத்திற்கு விரோதமாகும். மேலும் உலகத்திலுள்ள குடம் முதலிய பதார்த்தங்கள் ஸுகதுக்க மோஹஸ்வரூபமாக இருக்கின்றனவென்று எது சொல்லப்பட்டதோ அதுவே பிசகு. ஸுகம்,

துக்கம், மோஹம் என்பது எல்லாம் அனுபவிக்கிற சேதனனுடைய மனதிற்குள்ளே இருப்பவைகள். அவை குடம் முதலியவைகளைச் சேர்ந்தவைகளேயல்ல. அப்பதார்த்தங்கள் யாவும் வெளியிலேயே இருப்பவைகள். ஆகையால் பிரதானம் ஜகத் காரணமாகாது.

## २.महद्दीर्घाधिकरणम्

## 2.மஹத்₃தீ₃ர்கா₄தி₄கரணம்

### (ஸூத்ரம் 11)

**महद्दीर्घवद्वा ह्रस्वपरिमण्डलाभ्याम् ।११।**

**மஹத்₃தீ₃ர்க₄வத்₃வா ஹ்ரஸ்வபரிமண்ட₃லாப்₄யாம் .11.**

(ஹ்ரஸ்வம் பரிமண்டலம் இவைகளிலிருந்து பெரியதும் நீளமுள்ளதும் போல)

இனி கணாதரின் மதமாகிய வைசேஷிக மதத்தை இரண்டு அதிகரணங்களில் கண்டிக்கிறார். அந்த மதத்தில் ஈசுவரரை நிமித்த காரணமாகவும், பரமாணுக்களை உபாதான காரணமாகவும் சொல்கிறார்கள். அவ்விதம் அவர்கள் சொல்வதற்கு முக்கிய காரணம் ஜகத்திலுள்ள பதார்த்தங்கள் ஜடமாவிருப்பதால் அவையாவும் ஜடமானதிலிருந்தே உண்டாயிருக்க வேண்டும். அதாவது கார்யத்திற்கும், காரணத்திற்கும் ஒரே விதத் தன்மை இருக்க வேண்டும் என்பது, இந்த அதிகரணத்தில் உங்கள் மதத்திலேயே அப்படியில்லையேயென்று எடுத்துக்காட்டி உங்கள் மதத்தில் காணுவதையே எங்கள் ஸித்தாந்தத்திற்கு திருஷ்டாந்தமாக உபயோகித்துக் கொள்ள முடியுமென்பதைச் சொல்கிறார் :

**नास्ति काणाददृष्टान्तः किं वास्त्यसदृशोद्भवे ।**
**नास्ति शुक्लः पटः शुक्लात्तन्तोरेव हि जायते ।।३।।**
**अणुद्वयणुकमुत्पन्नमनणोः परिमण्डलात् ।**
**अदीर्घाद्द्वयणुकाद्दीर्घं त्र्यणुकं तन्निदर्शनम् ।।४।.**

நாஸ்தி காணாத₃த்₃ருஷ்டாந்த: கிம் வாஸ்த்யஸத்₃ருசோத்₃ப₄வே।
நாஸ்தி சுக்ல: பட: சுக்லாத்தந்தோரேவ ஹி ஜாயதே।।3
அணுத்₃வயணுகமுத்பன்னமனணோ: பரிமண்ட₃லாத்।
அதீ₃ர்கா₄த்₃த்₃வயணுகாத்₃தீ₃ர்க₄ம் த்ருயணுகம் தந்நித₃ர்சனம்।।4

(அ..ம்)

(பிரஹ்மம் ஜகத்காரணமாயிருக்கலாமென்பது) காரணத்தைப்போல் இல்லாதது உண்டாகலாமென்பதற்கு கணாதர்களின் மதத்தில்

திருஷ்டாந்தம் இல்லையா? அல்லது இருக்கிறதா? கிடையாது, வெளுப்பாயுள்ள நூலிலிருந்து வெளுப்பாயுள்ள வஸ்திரம் தானே உண்டாகிறது?

அணுவல்லாத பரிமண்டலத்திலிருந்து த்வ்யணுகம் உண்டாகிறது; நீளமென்ற அளவில்லாத த்வ்யணுகத்திலிருந்து நீளம் என்ற அளவுள்ள த்ர்யணுகம் உண்டாகிறது(என்று அவர்கள் சொல்வதால்) அதுவே (எங்களுக்கு) திருஷ்டாந்தம்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஒருவிதமாயுள்ள காரணத்திலிருந்து, வேறுவிதமாயுள்ள கார்யம் உண்டாகாது. அப்படி உண்டாகலாமென்று காட்டுவதற்கு நாங்கள் ஒப்புக் கொள்ளக் கூடிய திருஷ்டாந்தம் கிடையாது. வெளுப்பாயிருக்கற நூல்களினுலேயே வெளுப்பாயிருக்கும் வஸ்திரம் உண்டாகுமே தவிர, சிவப்பாயிருக்கும் நூல்களிலிருந்து உண்டாவதில்லையென்பது பிரஸித்தம். ஆகையால் சேதன ஈசுவரரிடமிருந்து அசேதனமான ஜகத் உண்டாகலாம் என்பதற்கு நாங்கள் ஒப்புக் கொள்ளக்கூடிய திருஷ்டாந்தம் கிடையாது. முன்னுல் கோமயத்திலிருந்து தேளும், மனிதனிடமிருந்து நக, ரோமங்களும் சொல்லப்பட்டதேயென்றால், அசேதனமான கோமயத்திலிருந்து தேளினுடைய அசேதனமான சரீரமும், மனிதனுடைய அசேதனமான சரீரத்திலிருந்து அசேதனமான நக, ரோமங்களும் உண்டாவது தான் வாஸ்தவமாய் இருப்பதால் அந்த திருஷ்டாந்தங்கள் எங்களுக்கே ஸாதகமே தவிர உங்களுக்கு ஸாதகமில்லை என்று தாத்பர்யம்.

ஸித்தாந்தம் :

கணுதர் மதத்திலிருந்தே திருஷ்டாந்தம் சொல்கிறோம். அவர்கள் மதத்தில் பரமாணு என்பதற்கு அணுபரிமாணம் (அணுவென்ற அளவு) கிடையாது. அதையும் விட ஸூக்ஷ்மமாக பரிமண்டலம் என்று சொல்லும் அளவு தான் உண்டு. ஆனுல் அவ்விதம் அணுபரிமாணமில்லாத பரிமண்டல பரிமாணமுள்ளதாக இருக்கும் இரண்டு பரமாணுக்கள் சேர்ந்து த்வ்யணுகம் (இரட்டையணு) என்று ஆகும் போது அதற்கு அணுபரிமாணம் உண்டு என்கிருர்கள். அதாவது காரணத்தில் இல்லாதது கார்யத்தில் உண்டாகிறது என்கிருர்கள். இது ஒரு திருஷ்டாந்தம். இந்த த்வ்யணுகத்திற்கு அணுபரிமாணம் உண்டே தவிர அதில் நீளம், குட்டையென்று

பேசக்கூடிய அம்சம் எதுவும் கிடையாததினுல் அதில் நீண்டிருக்கும் தன்மை கிடையாது. ஆனுல் இதே த்வ்யணுகங்கள் மூன்று சேர்ந்து கொண்டு த்ர்யணுகம் என்று ஆகிவிட்டால் அதற்கு நீண்டிருக்கும் தன்மையுண்டு என்கிருர்கள். அதாவது காரணத்திலில்லாத நீளத் தன்மை கார்யத்தில் ஏற்படுகிறது. காரணத்திலிருந்த அணுபரிமானம் கார்யத்தில் வருவதுமில்லே. இது இரண்டாவது திருஷ்டாந்தம். இவ்விதமாக காரணத்தன்மை, கார்யத்திற்கு இல்லாமலும் காரணத்தில் இல்லாத தன்மை கார்யத்தில் ஏற்படுவதும் இருக்கலாமென்று அவர்கள் திருஷ்டாந்தங்கள் மூலமாகவே ஏற்படுகிறது. இது மாதிரி வேறு திருஷ்டாந்தங்களேயும் அவர்களுடைய மதத்திலிருந்தே எடுத்துச் சொல்ல முடியும்.

## ३.परमारणुजगदकारणत्वाधिकरणम्

## 3.பரமாரணுஜக₃த₃காரணத்வாதி₄கரணம்

(ஸூத்ரம் 12 - 17)

**उभयथापि न कर्मातस्तदभावः ।१२।**

உப₄யதா₂பி ந கர்மாதஸ்தஹுபா₄வ: .12.

(இரண்டு விதமாகவும் கர்மா இல்லை;ஆகையால் அது இல்லை)

**समवायाभ्युपगमाच्च साम्यादनवस्थितेः ।१३।**

ஸமவாயாப்₄யுபக₃மாச்ச ஸாம்யாத₃நவஸ்தி₂தே:.13.

(ஸமவாயத்தை ஒப்புக்கொள்வதினாலும், ஸமமாயிருக்கும் தன்மையினால் முடிவில்லாததினால்)

**नित्यमेव च भावात् ।१४।**

நித்யமேவ ச பா₄வாத் .14.

(எப்பொழுதுமே இருப்பதினாலும்)

**रूपादिमत्वाच्च विपर्ययो दर्शनात् ।१५।**

ரூபாதி₃மத்வாச்ச விபர்யயோ த₃ர்சனாத் .15.

(ரூபம் முதலியதுள்ளதாலும், விரோதம், பார்க்கப்படுவதால்)

**उभयथा च दोषात् ।१६।**

உப₄யதா₂ ச தோ₃ஷாத் .16.

(இரண்டு விதமாய் தோஷமிருப்பதால்)

**अपरिग्रहाच्चात्यन्तमनपेक्षा ।१७।**

அபரிக்₃ரஹாச்சாத்யந்தமநபேக்ஷா .17.

(அங்கீகரிக்கப்படாததினாலும் மிகவும் அபேக்ஷயின்மை)

பரமாணுக்கள் ஜகத்தில் காரணமாக இருக்க முடியாதென்பது இந்த அதிகரணத்தில் காட்டப்படுகிறது.

जनयन्ति जगन्नोवा संयुक्ताः परमाणवः ।
आद्यकर्मजसंयोगाद्द्व्यणुकादिक्रमाज्जनिः ।।५।।
सनिमित्तानिमित्तादिविकल्पेष्वाद्यकर्मणः।
असंभवादसंयोगे जनयन्ति न ते जगत् ।।६।।

ஜனயந்தி ஜக₃ந்நோவாஸந்யுக்தா: பரமாணவ:।
ஆத்₃யகர்மஜஸம்யோகா₃த்₃த்₃வ்யணுகாதி₃க்ரமாஜ்ஜநி ।।5
ஸநிமித்தாநிமித்தாதி₃விகல்பேஷ்வாத்₃யகர்மண:।
அஸம்ப₄வாத₃ஸம்யோகே₃ ஜனயந்தி ந தே ஜக₃த் ।।6

(அ..ம்)

பரமாணுக்கள் நன்கு சேர்ந்து கொண்டு ஜகத்தை உண்டு பண்ணுகின்றனவா? இல்லையா? முதல் கர்மாவினுல் ஏற்படும் சேர்க்கையினுல் த்வ்யணுகம் முதலான வரிசையாக உண்டாகிறது.
முதல் கர்மா நிமித்தமுள்ளதா? நிமித்தமற்றதா? என்பது முதலான கேள்விகள் ஏற்படும்போது ஸம்பவிக்காது என்பதால் (பரமாணுக்களுக்குள்) சேர்க்கையும் ஏற்படமுடியாததால், அவை ஜகத்தை உண்டு பண்ணுவதில்லை.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

முன்னிருந்த ஜகத் லயமாயிருக்கும் போது ஈசுவரர் எப்பொழுது மறுபடியும் ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்று நினைக்கிருரோ அப்பொழுது பிராணிகளுடைய கர்ம வசத்தினுல் எல்லா பரமாணுக்களிலும் முதல் கர்ம (சேஷ்டை) உண்டாகிறது. அதிலிருந்து ஒரு பரமாணு வேருெரு பரமாணுவுடன் சேர்கிறது. அவ்விதம் சேருவதால் "த்வ்யணுகம்" உண்டாகிறது. மூன்று த்வ்யணுகங்கள் சேரும்போது "த்ர்யணுகம்" உண்டாகிறது. இப்படியே வரிசையாக மேல் மேல் உண்டாகி ஜகத் ஏற்பட்டுவிடுகிறது. ஆகையால் பரமாணுக்கள் சேர்ந்துதான் ஜகத்தை உண்டு பண்ணுகின்றன.

ஸித்தாந்தம் :

"முதல் கர்ம" என்று சொல்லப்பட்டதே அது நிமித்தமுள்ளதா (காரணத்தினுல் ஏற்பட்டதா?) அல்லது நிமித்தமில்லாததா (காரணம் இல்லாமலே ஏற்படுகிறதா?) காரணமில்லாமலே ஏற்படுகிறது என்ருல் நியமனம் செய்ய எதுவுமில்லாததினுல் அது எப்பொழுதுமே பிரளயகாலத்தில் கூட இருந்து கொண்டேயிருக்க வேண்டும். காரணத்தினுல் தான் ஏற்படுகிறது என்ருல் அந்தக் காரணம்

தெரியக்கூடிய செய்கை வடிவமாயுள்ளதா? அல்லது தெரியக்கூடியதில்லாத பிராணிகளுடைய அதிருஷ்டம் என்பதா? தெரியக்கூடியதானால் அது ஏதேனும் பிரயத்தனமாகவிருக்க வேண்டும். அதுவோ சரீரம் ஏற்படுவதற்கு முன்னால் ஸாத்தியமில்லை. சரீரமில்லையானாலும் ஈசுவரரிடம் ஸ்வபாவஸித்தமாக பிரயத்தனம் என்ற அம்சம் இருக்கிறதேயென்றால் அப்படியானால் அது நித்யம் எப்பொழுதுமுள்ளதானதினால், ஏதோவொரு ஸமயத்தில் ஏற்படும் முதல் கர்மாவின் உற்பத்திக்குக் காரணமாய் இருக்கிறது என்று ஆகாது. அப்பொழுது அது ஏற்படவேண்டும் என்று நியமனம் செய்ய எதுவுமில்லாததினால் அதிருஷ்டத்தையே முதல் கர்மாவிற்கு நிமித்தமென்று சொல்வதானால், அந்த அதிருஷ்டம் ஆத்மாக்களை யொட்டியேயிருப்பதால் பரமாணுக்களுடன் ஸம்பந்தப்பட்டவையல்ல. இவ்விதமாக பலவித கேள்விகளுக்கு இடம் கொடுப்பதால் "முதல் கர்ம" என்பதே ஸம்பவிக்காது என்று ஏற்படுவதால் அதைக் காரணமாகக் கொண்டு ஏற்படுவதாகச் சொல்லும் பரமாணுக்கள் சேருதலும் ஸம்பவிக்காது. ஆகையால் பரமாணுக்கள் சேருவதிலிருந்து ஜகத் உண்டாகிறது என்ற மதம் நிராகரிக்கப்பட்டுவிட்டது.

## ४.समुदायाधिकरणम्

## 4.ஸமுதா₃யாதி₄கரணம்

(ஸூத்ரம் 18 - 27)

**समुदाय उभयहेतुकेऽपि तदप्राप्तिः ।१८।**

ஸமுதா₃ய உப₄யஹேதுகேஅபி தத₃ப்ராப்தி:.18.

(ஸமுதாயம் இரண்டுவித ஹேதுவையுடையதாயிருந்தாலும், அது ஏற்படாது)

**इतरेतरप्रत्ययत्वादिति चेन्नोत्पत्तिमात्रनिमित्तात्वात् ।१९।**

இதரேதரப்ரத்யயத்வாதி₃தி சேந்நோத்பத்திமாத்ர நிமித்தாத்வாத் .19.

(ஒன்றுக்கொன்று காரணமாயிருப்பதால் என்றால் சரியல்ல, உத்பத்திக்கு மாத்திரம் நிமித்தமாயிருப்பதால்)

**उत्तरोत्पादे च पूर्वनिरोधात् ।२०।**

உத்தரோத்பாதே₃ ச பூர்வநிரோதா₄த் .20.

(மேலுள்ளது உத்பத்தியாகும்போது முன்னுள்ளது தடைபடுவதாலும்)

**असति प्रतिज्ञोपरोधो यौगपद्यमन्यथा ।२१।**

அஸதி ப்ரதிஜ்ஞோபரோதோ₄ யௌக₃பத்₃யமந்யதா₂ .21.

(இல்லையானால், பிரதிக்ஞைக்கு ஹானி, வேறுவிதமானால் சேர்ந்திருத்தல்)

प्रतिसंख्याऽप्रतिसंख्यानिरोधाप्राप्तिरविच्छेदात् ।२२।

ப்ரதிஸங்க்$_2$யாஅப்ரதிஸங்க்$_2$யாநிரோதா$_4$ப்ராப்திரவிச்சே$_2$தா$_3$த் .22.

(பிரதிஸங்க்யா நிரோதம், அப்பிரதிஸங்க்யா நிரோதம் இவைகள் ஏற்படாது,விட்டுப்போகததினால்)

उभयथा च दोषात् ।२३।

உப$_4$யதா$_2$ ச தோ$_3$ஷாத் .23.

(இரண்டு விதமாயும் தோஷமிருப்பதால்)

आकाशे चाविशेषात् ।२४।

ஆகாசே சாவிசேஷாத் .24.

(ஆகாசத்திலும், விசேஷமில்லாததினால்)

अनुस्मृतेश्च।२५।

அனுஸ்ம்ரிதேச்ச.25.

(அனுசரித்து ஞாபகமிருப்பதினாலும்)

नासतोऽदृष्टात्वात् ।२६।

நாஸதோஅத்$_3$ருஷ்டாத்வாத் .26.

(இல்லாததிலிருந்து உண்டாகாது, பார்க்கப்படாததினால்)

उदासीनानामपि चैवं सिद्धिः ।२७।

உதா$_3$ஸீநாநாமபி சைவம் ஸித்$_3$தி$_4$: .27.

(இவ்விதமானால், உதாஸீனர்களுக்கும் காரியஸித்தி ஏற்படும்)

இனி பௌத்த மதத்தை இரண்டு அதிகரணங்களில் கண்டிக்கிறார். பௌத்தர்களில் சிலர் வெளிப்பதார்த்தங்களின் இருப்பை ஒப்புக் கொள்கிறார்கள். சிலர் வெளிப்பதார்த்தங்களென்பதே கிடையாது, இருப்பதாக வெறும் நினைப்புத் தான் என்கிறார்கள். முதலில் கூறியவர்களுடைய மதம் இந்த அதிகரணத்திற்கு விஷயம். இரண்டாவதாகச் சொன்ன மதம் அடுத்த அதிகரணத்திற்கு விஷயம்.

समुदायावुभौ युक्तावयुक्तौ वाऽणुहेतुकः ।
एकोऽपरः स्कन्धहेतुरित्येवं युज्यते द्वयम् ।।७।।
स्थिरचेतनराहित्यात्स्वयं वाऽचेतनत्वतः ।
न स्कन्धानामणूनां वा समुदायोऽत्र युज्यते ।।८।।

ஸமுதா$_3$யாவுபௌ$_4$ யுக்தாவயுக்தௌ வாஅணுஹேதுக:।
ஏகோஅபர: ஸ்கந்த$_4$ஹேதுரித்யேவம் யுஜ்யதே த்$_3$வயம் ।। 7
ஸ்தி$_2$ரசேதநராஹித்யாத்ஸ்வயம் வாஅசேதநத்வத: ।
ந ஸ்கந்தா$_4$நாமணூநாம் வா ஸமுதா$_3$யோஅத்ர யுஜ்யதே ।। 8

(அ..ம்)
ஸமுதாயங்கள் இரண்டும் பொருத்தமுள்ளவைகளா? அல்லது பொருத்த மற்றவைகளா? ஒன்று அணுக்களைக் காரணமாகயுடையது; மற்றொன்று ஸ்கந்தங்களைக் காரணமாகயுடையது என்று இவ்விதம் இரண்டும் பொருத்தமே.
ஸ்திரமானசேதனன் இல்லாததினாலும், தான் அசேதனமாக இருப்பதினாலும் ஸ்கந்தங்களுடைய ஸமுதாயமோ, அணுக்களுடைய ஸமுதாயமோ இங்கு பொருந்தாது.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
இந்த ஜகத் பூராவும் இரண்டு வித ஸமுதாயங்கள் அடங்கியது. ஒன்று வெளியிலுள்ளது, மற்றொன்று உள்ளேயுள்ளது. வெளியிலுள்ளது பூமி, நதி, ஸமுத்திரம் முதலியது, உள்ளேயுள்ளது மனஸ், அறியப்பயன்படுவது என்பதாகும். இவைகளில் வெளி ஸமுதாயத்திற்குக் காரணம் பரமாணுக்கள், உள் ஸமுதாயத்திற்குக் காரணம் ஐந்து ஸ்கந்தங்கள். அந்த பரமாணுக்கள் நான்கு விதமாயிருக்கின்றன. கெட்டியாயுள்ளவைகள் பிருதிவீ எனப்படும், திரவமாயிருப்பவை அப் எனப்படும், உஷ்ணமாய் இருப்பவை தேஜஸ் எனப்படும், அசைவுள்ளவை வாயு எனப்படும். இந்த நான்கு வித பரமாணுக்களும் ஒன்றாகச் சேருவதினால் வெளி ஸமுதாயம் உண்டாகிறது. ஸ்கந்தங்கள் என்பன "மனஸினால் அறியப்படுகிற சப்தஸ்பர்சம் முதலியவை ரூபஸ்கந்தம், அவை மனஸில் தோன்றுவது விக்ஞானஸ்கந்தம், அவ்விதம் தோன்றுவதால் ஏற்படும் துக்கம் வேதனாஸ்கந்தம், தேவதத்தன் முதலான வெறும் பெயர்கள் ஸம்ஞாஸ்கந்தம், இந்த ஸ்கந்தங்களால் ஏற்படும் வாஸனைகள் ஸம்ஸ்காரஸ்கந்தம்." ஆக ஐந்து. இந்த ஐந்து ஸ்கந்தங்களும் ஒன்று சேருவதினால் உள் ஸமுதாயம் ஏற்படுகிறது. இவ்விதம் ஜகத்திலுள்ள எல்லாவற்றையும் இந்த இரண்டு ஸமுதாயங்களில் அடக்கிவிட முடியுமானதினால், அவை பொருத்தமாயுள்ளவைகளே.

ஸித்தாந்தம் :
அணுக்களாகவிருக்கட்டும், ஸ்கந்தங்களாகவிருக்கட்டும் அவைகள் சேர்ந்து ஒரு கூட்டமாக ஏற்படுவதற்குக் காரணமாக இவைகளைத் தவிர சேதனனாக யாரேனும் உண்டா? அல்லது இவைகளே தானாகவே சேர்ந்து கொள்கின்றனவா? சேதனன் உண்டு என்றால், அவன்

ஸ்திரமாயிருப்பவனு? க்ஷணம் தோன்றியழிந்து போகிறவனு? ஸ்திரமென்ருல், பௌத்த ஸித்தாந்தத்திற்கு நேர் விரோதம். க்ஷணிகம் என்ருல் முதலில் தான் இருந்து கொண்டு அதன் பிறகு இவைகளைக் கூட்டிவிடுகிருன் என்ருல் க்ஷணிகம் என்பது பொய்யாகிவிடும். அப்படியல்ல அவைகள் தாஞகவே சேர்ந்து கொள்ளுகின்றன என்ருல் அணுக்களோ ஸ்கந்தங்களோ இரண்டுமே அசேதனமாயிருப்பதால், அவைகள் இன்னவிதமாக சேர்ந்து கொள்ள வேண்டுமென்று நியமனம் செய்வதற்கு சேதனன் யாருமில்லாமல் அந்தந்த முறைப்படி தாஞக எப்படி சேர்ந்து கொள்ள முடியும்?ஆகையால் இந்த இரண்டு ஸமுதாயங்கள் என்பது யுக்திக்குப் பொருந்தாது.

## ५.अभावाधिकरणम्

## 5.அபா$_4$வாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 28 - 32)

**नाभाव उपलब्धेः ।२८।**

நாபா$_4$வ உபலப்$_2$தே$_4$: .28.

(இல்லாதது இல்லை, அறியப்படுவதால்)

**वैधर्म्याच्च न स्वप्नादिवत् ।२९।**

வைத$_4$ர்ம்யாச்ச ந ஸ்வப்நாதி$_3$வத் .29.

(வைதர்ம்யமிருப்பதினாலும் ஸ்வப்னம் முதலியதைப்போல அல்ல)

**न भावोऽनुपलब्धेः ।३०।**

ந பா$_4$வோஅநுபலப்$_2$தே: .30.

(இருப்பு இல்லை, அறிதல் இல்லாததினால்)

**क्षणिकत्वाच्च ।३१।**

க்ஷணிகத்வாச்ச .31.

(க்ஷணிகமாயிருப்பதினாலும்)

**सर्वथानुपपत्तेश्च।३२।**

ஸர்வதா$_2$நுபபத்தேச்ச.32.

(எம்முறையிலும் உபபத்தி (யுக்தி) இல்லாததினாலும்)

வெளிபதார்த்தமே கிடையாது எல்லாம் நினைப்பே என்று சொல்லும் பௌத்தர்களின் மதம் இங்கு கண்டிக்கப்படுகிறது.

**विज्ञानस्कन्धमात्रत्वं युज्यते वा न युज्यते।**
**युज्यते स्वपदृष्टन्ताद्बुद्ध्यैव व्यवहारतः ।।९।।**
**अबाधात्स्वप्नवैषम्यं बाह्यार्थस्तूपलभ्यते ।**

बहिर्वदिति तेऽप्युक्तिर्नातो धीरर्थरूपभाक् ।।१०।।

விஜ்ஞாநஸ்கந்த$_4$மாத்ரத்வம் யுஜ்யதே வா ந யுஜ்யதே.।
யுஜ்யதே ஸ்வபத்$_3$ருஷ்டந்தாத்$_3$பு$_3$த்$_3$த$_4$யைவ வ்யவஹாரத:।। 9
அபா$_3$தா$_4$த்ஸ்வப்னவைஷம்யம் பா$_3$ஹ்யார்த$_2$ஸ்தூபலப்$_4$யதே।
ப$_3$ஹிர்வதி$_3$தி தேஅப்யுக்திர்னாதோ தீ$_4$ரர்த$_2$ரூபபா$_4$க் ।। 10

(அ..ம்)

விக்ஞானஸ்கந்தம் மாத்திரம் தான் உண்டென்பது பொருந்துமா? பொருந்தாதா? (ஸ்வப்னத்தில்) புத்தியினுல் மாத்திரமே வியவஹாரம் இருந்து வருவதால், ஸ்வப்ன திருஷ்டாந்தத்தைக் கொண்டு (இந்த மதம்) பொருந்தக் கூடியது தான்.

(ஸ்வப்னம் விழித்துக் கொண்டவுடன்) பாதிக்கப்படுவதால் ஸ்வப்னத்திலிருந்து விழிப்பு நிலை வேறுபட்டுள்ளது. வெளி பதார்த்தமோ பார்க்கப் படுகிறது. மேலும் "வெளியிலுள்ளது போல" என்று நீ சொல்வதுமே (அது இருப்பதற்கும் பிரமாணம்). ஆகையால் விஷயங்களின் ரூபத்தை தரிப்பது புத்தியல்ல.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

வெளியில் ஜகத்தில் பொருட்கள் இல்லையானுல் வியவஹாரம் ஏற்படாது என்பது பிசகு. எவ்வித வெளிப் பிரபஞ்சமுமில்லாமல், ஸ்வப்னம் காணும் போது வியவஹாரத்திற்கு வேண்டிய ஸகல பதார்த்தங்களையும் புத்தியே கல்பித்துக் கொண்டு வியவஹாரம் நடக்கவில்லையா? அப்படியே விழிப்பு ஸமயத்திலும் வெளிப் பிரபஞ்சமில்லாமலே புத்தியினுலேயே எல்லா வியவஹாரம் நடக்கக் கூடியதால், வெளிப் பிரபஞ்சம் என்று புத்தியைத் தவிர வேருக ஒத்துக்கொள்ள அவசியமில்லை. விக்ஞானஸ்கந்த என்ற புத்தி ஒன்றே போதுமானது.

ஸித்தாந்தம் :

ஸ்வப்னம் விழித்துக்கொண்டவுடன் பாதிக்கப்பட்டுவிடுகிற படியால் அதை திருஷ்டாந்தமாகச் சொன்னது ஸரியல்ல. விழிப்பு காலத்திலுள்ள வியவாஹாரத்திற்கு எங்கேயும் பாதமேற்படுவதைக் காண்கிறேமில்லை. தூங்கிவிட்டோ, ஸ்வப்னம் கண்டுவிட்டோ விழித்துக்கொண்டு பார்க்கும் போது முன் இருந்த பதார்த்தங்கள் அப்படியே இருப்பதை நன்கு காண்கிறேம். வெளி பதார்த்தங்களிருக்கின்றன என்பதற்கு பிரமாணம் கிடையாதென்று

சொல்ல முடியாது, அவை தென்படுவதே பிரமாணமாகும். ஆனதினால் நமக்கு வெளியிலேயே இருப்பதாக நன்கு தென்படுகின்றன. வெளியில் இருப்பதாகத் தென்படவில்லை. வெளியில் இருப்பது போலத் தென்படுகிறது, என்று நீ சொல்வாயேயானால் அவ்விதம் சொல்வதே வெளிப்பதார்த்தங்களின் இருப்புக்குப் பிரமாணமாகும். வெளியில் எங்கேயும் எந்த பதார்த்தமும் ஒரு நாளும் கிடையாது, என்றிருந்தால் அதனுடைய அறிவே யாருக்கும் ஏற்பட்டிருக்க முடியாததினால் அதை சுட்டிக்காட்டி "அதைப்போல இது" என்று திருஷ்டாந்தமாகச் சொல்வது கொஞ்சமேனும் பொருத்தமேயாகாது. ஆகையால் வெளி பதார்த்தங்களுக்கு இருப்பு இருப்பதால் விக்ஞானம் மாத்திரம் தான் என்பது பொருத்தமில்லை.

## ६.एकस्मिन्नसम्भवाधिकरणम्

## 6.ஏகஸ்மிந்நஸம்ப$_4$வாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 33 - 36)

**नैकस्मिन्नसम्भवात् ।३३।**

நைகஸ்மிந்நஸம்ப$_4$வாத் .33.

(ஒன்றில் ஸம்பவிக்காததினால், இல்லை)

**एवं चात्माऽकात्स्न्र्यम् ।३४।**

ஏவம் சாத்மாஅகாத்ஸ்ர்ந்யம் .34.

(இதுபோலவே ஆத்மாவிற்கு பூர்ணமாயில்லாமையும்)

**न च पर्यायादप्यविरोधो विकारादिभ्यः ।३५।**

ந ச பர்யாயாத$_3$ப்யவிரோதோ$_4$ விகாராதி$_3$ப்$_4$ய: .35.

(முறையே மாறி மாறி என்றாலும் கூட விரோதமற்றதாக ஆகாது, விகாரம் முதலியவைகள் ஏற்படுமானதால்)

**अन्त्यावास्थितेश्चोभयनित्यत्वादविशेषः ।३६।**

அந்த்யாவாஸ்தி$_2$தேச்சோப$_4$யநித்யத்வாத$_3$விசேஷ:.36.

(கடைசியிலுள்ளது நித்யமானதால் இரண்டும் நித்யமாகுமாதலால் வித்யாஸமில்லை)

இவ்விதம் பௌத்தர்களின் இரண்டு வித மதங்களையும் நிராகரித்து விட்டு இப்பொழுது ஜைன மதத்தைக் கண்டிக்கிறார். அம்மதத்தில் ஏழு பதார்த்தங்களும் ஏழு நியாயங்களும் சொல்லப்படுகின்றன. அவை ஸரியாவென்று இந்த அதிகரணத்தில் விசாரிக்கப்படுகிறது.

**सिद्धिः सप्तपदार्थनां सप्तभंगीनयात्र वा ।**
**साधकन्यायसद्भावात्तेषां सिद्धौ किमद्भुतम् ।। ११।।**

**एकस्मिन् सदसत्वादिविरुद्धप्रतिपादनात् ।**
**अपन्यायः सप्तभंगी न च जीवस्य सांशता ।। १२।।**

ஸித்$_3$தி$_4$: ஸப்தபதா$_3$ர்த$_2$நாம் ஸப்தப$_4$ங்கீ$_3$நயாந்ந வா।
ஸாத$_4$கந்யாயஸத்$_3$பா$_4$வாத்தேஷாம் ஸித்$_3$தௌ$_4$ கிமத்$_3$பு$_4$தம்।। 11
ஏகஸ்மிந் ஸத$_3$ஸத்வாதி$_3$விருத்$_3$த$_4$ப்ரதிபாத$_3$நாத் ।
அபந்யாய: ஸப்தப$_4$ங்கீ$_3$ ந ச ஜீவஸ்ய ஸாம்சதா ।। 12

(அ..ம்)

ஸப்தபங்கீயென்ற நியாயமிருப்பதால், ஏழு பதார்த்தங்களுக்கு இருப்பு ஏற்படுகிறதா, இல்லையா? ஸாதித்துக் கொடுக்கக்கூடிய நியாயமிருப்பதால் அவை ஸித்திக்கின்றன என்பதில் என்ன ஆச்சர்யம்? ஒரே வஸ்துவில் இருப்பு இல்லாமை முதலான விருத்தமானதை பிரதிபாதிப்பதால் ஸப்தபங்கீ ஸரியான நியாயமல்ல. ஜீவன் அம்சமுடையவனென்ற தன்மையும் கிடையாது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஜைனர்களுடைய மதப்படி ஜீவன், ஜீவனல்லாதது என்று இரண்டு பதார்த்தங்கள். அவைகளில் ஜீவன், சேதனன், சரீரத்தின் அளவை உடையவன், அவயவங்களையுடையவன், ஜீவனல்லாதது என்பது ஆறு விதம்......

(1) ஜடமாயுள்ள பூமி ,மலை, நதி முதலியன
(2) "ஆஸ்ரவம்" விஷயங்களையுத்தேசித்து ஜீவனை ஓடச்செய்வதாகிய இந்திரியங்களின் கூட்டம்
(3) "ஸம்வரம்" விவேகத்தை மறைத்து விடுகிற அவிவேகம் முதலியன
(4) "நிர்ஜரம்" காம க்ரோதம் முதலியதை பாக்கியில்லாமல் ஜரிக்கச் செய்கிற (ஒழித்து விடுகிற) ஜைன சாஸ்திரத்தில் சொல்லிய தபஸ்
(5) "பந்தம்" நான்கு வித புண்யம், நான்கு வித பாபம் ஆகிய எட்டு வித கர்மாக்களால் ஏற்படுகிற பிறப்பு, இறப்பு என்ற பரம்பரை
(6) "மோக்ஷம்" இந்த எட்டு வித கர்மாக்களிலிருந்தும் வெளிப்பட்டு ஜீவன் எப்பொழுதும் மேலேயே போய்க் கொண்டிருத்தல்.

ஜீவனும் இந்த ஆறும் சேர்ந்து ஏழு பதார்த்தங்கள். இவைகளுடைய ஸ்வரூபம் "ஸப்த பங்கீ" என்ற முறைப்படி ஏழாகச் சொல்லப்படுகிறது, (1) இருக்கலாம், இருக்கிறது (2) இருக்கலாம், இல்லை (3) இருக்கலாம் இருக்கிறது இல்லை (4) இருக்கலாம், சொல்லக்கூடாதது (5) இருக்கலாம் இருக்கிறது, சொல்லக்கூடாதது (6) இருக்கலாம், இல்லை, சொல்லக் கூடாதது (7) இருக்கலாம், இருக்கிறது, இல்லை, சொல்லக்கூடாதது என்று ஏழு விதம். (இந்த ஏழு விதத்திலும் ஸ்யாத் (இருக்கலாம்) என்பது பொதுவாயிருப்பதால் இந்த மதத்திற்கே "ஸ்யாத்வாதம்" என்ற பெயர் ஏற்பட்டு விட்டது) இவ்விதம் பதார்த்தங்களின் ஸ்வரூபத்தைச் சொல்வதால் வேறு எந்த மதம் எப்படிச் சொன்னாலும் நாங்களும் அப்படியே சொல்கிறோம் என்று சொல்வதற்கு உதவுமாதலால் எதிரிகள் யாரையும் ஜயித்து விடலாம். ஆகையால் உத்தமமான நியாயமான வழியில் இந்த மதம் அமைந்திருக்கிறது.

ஸித்தாந்தம் :

அந்த மதவாதிகள் சொல்வது நியாயமே ஆகாது. ஒரே பதார்த்தம் இருக்கவுமிருக்கலாம், இல்லாமலுமிருக்கலாம் என்றால் இருப்பும், இல்லாமையும் நேர் விரோதமாயிருப்பதால் ஒரே வஸ்துவில் இருக்கவே முடியாது. வஸ்துவின் தத்வம் ஒரே விதமாயிருக்குமே தவிர, இது மாதிரி விருத்தமான பல விதமாய் இருக்க முடியாது. ஆகையால் அவர்கள் சொல்வது பொருத்தமேயில்லை. மேலும் ஜீவன் அவயவங்களுள்ளவன், சரீர அளவுள்ளவன் என்றும் சொல்வதால் அவன் நித்யனாக இருக்க முடியாது. நித்யனில்லையென்றால் மோக்ஷம் யாருக்கு? (அவர்கள் சொல்கிறபடி மோக்ஷம் என்பது மேலே போய்க் கொண்டேயிருப்பது என்றால் அது முடிவான நிலையுமாகாது).

## ७.पत्यधिकरणम्

## 7.பத்யதி₄கரணம்

(ஸூத்ரம் 37 - 41)

**पत्युरसामञ्जस्यात् ।३७।**

பத்யுரஸாமஞ்ஜஸ்யாத் .37.

(பதிக்கு ஸாமஞ்ஜஸ்யம் (பொருத்தம்) இல்லாததினால்)

**सम्बन्धानुपपत्तेश्च ।३८।**

ஸம்ப₃ந்தா₄நுபபத்தேச்ச.38.

(ஸம்பந்தம் பொருத்தமில்லாததினாலும்)

अधिष्ठानानुपपत्तेश्च ।३९।
அதி₄ஷ்டா₂நாநுபபத்தேச்ச.39.
(அதிஷ்டானம் பொருந்தாதினாலும்)
करणवच्चेन्न भोगादिभ्यः ।४०।
கரணவச்சேந்ந போ₄கா₃தி₃ப்₄ய: .40.
(இந்திரியங்களைப்போல என்றால், சரியில்லை,
போகம் முதலானது ஏற்படுமானதினால்)
अन्तवत्त्वमसर्वज्ञता वा ।४१।
அந்தவத்வமஸர்வஜ்ஞுதா வா .41.
(முடிவுள்ள தன்மை, அல்லது ஸர்வக்ஞனாக இல்லாத்தன்மை)

ஈசுவரர் ஜகத்திற்கு நிமித்த காரணமாகவும், உபாதான காரணமாகவும் இருக்கிருரென்று முன்னுல் சொல்லப்பட்டது. அதை ஆக்ஷேபித்து சைவாகமங்களிடம் ஈடுபட்ட சிலர் நிமித்த காரணம் மாத்திரம் தான் என்கிருர்கள். அவர்களுடைய மதம் இங்கே கண்டிக்கப்படுகிறது.

तटस्थेश्वरवादो यः स युक्तोऽथ न युज्यते ।
युक्तः कुलालदृष्टान्तान्नियन्तृत्वस्य संभवात् ।।१३।।
न युक्तो विषमत्वादिदोषाद्वैदिक ईश्वरे ।
अभ्युपेते तटस्थत्वं त्याज्यं श्रुतिविरोधतः ।।१४।।

தடஸ்தே₂ச்வரவாதோ₃ ய: ஸ யுக்தோஅத₂ ந யுஜ்யதே।
யுக்த: குலாலத்₃ருஷ்டாந்தாந்நியந்த்ரித்வஸ்ய ஸம்ப₄வாத் ।।13
ந யுக்தோ விஷமத்வாதி₃தே₃ாஷாத்₃வைதி₃க ஈச்வரே।
அப்₄யுபேதே தடஸ்த₂த்வம் த்யாஜ்யம் ச்ருதிவிரோத₄த ।।14

(அ..ம்)

இது தடஸ்தராயுள்ள (நிமித்த மாத்திரராயுள்ள) ஈசுவரரைச் சொல்லும் மதம். அது யுக்தமா? அல்லது யுக்தமில்லையா? குயவன் என்ற திருஷ்டாந்தத்திஞல் நியமனம் செய்யும் தன்மை பொருந்துமாதலால், (இந்த மதம்) யுக்தம் தான்.

விஷமமாய் (பக்ஷபாதத்துடன்) இருக்கும் தன்மை முதலான தோஷம் இருப்பதால் (இந்த மதம்) யுக்தமில்லை. வேதத்தில் கண்ட ஈசுவரரை ஒப்புக்கொள்ளும் விஷயத்தில் தடஸ்தமாயிருத்தல் வேதத்திற்கு விரோதமாய் இருப்பதால் தள்ளிவிட வேண்டியதாகும்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

சேதனனுயுள்ள குயவன் ஜடமாயுள்ள உபாதான காரணமாயுள்ள மண்ணை எடுத்துக் கொண்டு ஜடமாயுள்ள தண்டம், சக்கிரம் முதலியவைகளை நியமனம் செய்து கொண்டு குடத்தை செய்கிருன். குயவன் சேதனனுய் இருப்பதினுலும், நியமனம் செய்கிறவனுயிருப்ப தினுலும், உபாதான காரணமாக மாட்டான். அப்படியே ஈசுவரரும் சேதனராயிருப்பதால், ஜடமாயுள்ள ஜகத்திற்கு உபாதான காரணமாக இருக்க மாட்டார். குயவன் போல வெறும் நிமித்த காரணம் தான்.

ஸித்தாந்தம் :

ஈசுவரர் வெறும் நிமித்த காரணமாயிருந்து எல்லாவற்றையும் தன் இஷ்டப்படியே செய்கிறவராயிருந்தால், பக்ஷபாதம், தயையின்மை என்ற தோஷம் ஏற்படுமானதினுல் வேதத்தின் பிரமாணத்தைக் கொண்டு அவர் பிராணிகளுடைய கர்மாக்களையபேக்ஷித்தே செய்கிருரென்று முன்னுலேயே சொல்லியிருக்கிறேம். மேலும் "बहुस्यां प्रजायेय" "நான் பலவாக ஆவேன், உண்டாவேன்" என்ற வாக்கியம் வியக்தமாக அவரே தான் ஜகத்திற்கு உபாதான காரணம் என்று சொல்லும் வாக்கியத்திற்கு விரோதமாக அவர் உபாதான காரணமல்லவென்பது உசிதமாகாது. ஆகையால் வேதத்தை பிரமாணமா்க ஒப்புக் கொள்கிறவர் யாவரும் ஈசுவரர் இரண்டு வித காரணமும் தான் என்று ஒப்புக் கொள்ள வேண்டும். கர்மாவை எதிர்பார்த்தே அவர் ஸ்ருஷ்டி செய்வதால் ஒருவரது தடஸ்ததன்மையை வேண்டுமானுலும் விடலாம். எப்படியும் தடஸ்தர் மாத்திரமென்று சொல்வது சரியல்ல.

## ८.उत्पत्यसम्भवाधिकरणम्

## 8.உத்பத்யஸம்ப$_4$வாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 42 - 45)

**उत्पत्यसम्भवात् ।४२।**

உத்பத்யஸம்ப$_4$வாத் .42.

(உத்பத்தி ஸம்பவிக்காததினால்)

**नच कर्तुः करणम् ।४३।**

நச கர்து: கரணம் .43

(கர்த்தாவிடமிருந்து கருவியும் (உண்டாவது) இல்லை)

**विज्ञानादिभावे वा तदप्रतिषेधः ।४४।**

விஜ்ஞாநாதி$_3$பா$_4$வே வா தத$_3$ப்ரதிஷேத$_4$: .44.

(ஞானம் முதலியது இருந்தாலும் அது தடுக்கப்படாது)

विप्रतिषेधाच्च ।४५।
விப்ரதிஷேதா₄ச்ச .45.
(விரோதம் இருப்பதாலும்)

வேதத்தை பிரமாணமாக ஒப்புக் கொண்ட போதிலும் சைவ ஆகமத்திலுள்ள பிடிமானத்தினுல் சொல்லிய வாதத்தை முன் அதிகரணத்தில் கண்டித்தது போல பாஞ்ராத்ர ஆகமத்தில் பிடிமானமுள்ள "பாகவதர்"களின் மதத்தை இந்த அதிகரணத்தில் கண்டிக்கிருர்.

जीवोत्पत्त्यादिकं पाञ्चरात्रोक्तं युज्यते न वा ।
युक्तं नारायणव्यूहतत्समाराधनादिवत् ।। १५।।
युज्यतामविरुद्धांशो जीवोत्पत्तिर्न युज्यते ।
उत्पन्नस्य विनाशित्वे कृतनाशादिदोषतः ।।१६।।

ஜீவோத்பத்த்யாதி₃கம் பாஞ்சராத்ரோக்தம் யுஜ்யதே ந வா।
யுக்தம் நாராயணவ்யூஹதத்ஸமாராத₄நாதி₃வத் ।। 15
யுஜ்யதாமவிருத்₃தா₄ம்சோ ஜீவோத்பத்திர்ந யுஜ்யதே।
உத்பந்நஸ்ய விநாசித்வே க்ருதநாசாதி₃தோ₃ஷத: ।।16

(அ..ம்)

பாஞ்சாரத்ர ஆகமத்தில் சொல்லப்படுகிற ஜீவனுடைய உத்பத்தி முதலியது யுக்தமா, இல்லையா? நாராயணர் அவருடைய வ்யூஹங்கள் அவரை ஆராதிப்பது முதலியது எப்படி யுக்தமோ அதைப் போலவே (ஜீவனுடைய உத்பத்தி முதலியதும்) யுக்தம்.

(வேதத்திற்கு) விருத்தமில்லாத அம்சம் யுக்தமாகலாம். ஜீவனுடைய உத்பத்தியென்பது பொருந்தாது. உண்டாவதிற்கு நசிக்கும் தன்மை இருப்பதால் செய்ததற்கு நாசம் முதலான தோஷங்கள் ஏற்படுமானதினுல்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"பகவான் வாஸுதேவர் ஒருவரே ஜகத்திற்குஉபாதான காரணமும், நிமித்த காரணமும். அவரை ஆராதித்து தியானித்து அறிந்து விட்டால் ஸம்ஸாரக் கட்டு அறுந்து விடும். அந்த வாஸுதேவரிடத்திலிருந்து ஸங்கர்ஷணர் என்ற பெயருடைய ஜீவன் உண்டாகிருன். அந்த ஜீவனிடமிருந்து பிரத்யும்னன் என்றுள்ள மனஸ் உண்டாகிறது, அந்த மனஸிலிருந்து அநிருத்தன் என்று சொல்லப்படும் அஹங்காரம் உண்டாகிறது. இந்த வாஸுதேவர், ஸங்கர்ஷணர், பிரத்யும்னன்,

அநிருத்தன் என்ற நால்வரும் ஸர்வாத்மஸ்வரூபமாயுள்ள வ்யூஹங்கள்" என்கிறார்கள். இவர்கள் சொல்வதில் ஜகத்தின் இருவித காரணமாயுள்ள பகவானை ஆராதிக்க வேண்டியது, தியானிக்க வேண்டியது, ஸாக்ஷாத்கரிக்க வேண்டியது என்பதெல்லாம் எப்படி பிரமாணமாக ஒப்புக் கொள்ளப்படுகிறதோ, அப்படியே ஜீவனுடைய உத்பத்தி முதலியதைச் சொல்வதையும் பிரமாணமாக ஒப்புக் கொள்ள வேண்டியது தான் நியாயம்.

ஸித்தாந்தம் :

வாஸுதேவரையும் அவருடைய ஆராதனை முதலியதையும் ஒப்புக் கொள்வதற்குக் காரணம் அவை வேதத்திற்கு விருத்தமில்லை. அவைகளை ஒப்புக்கொள்வதினால் வேத விருத்தமான அம்சங்களையும் ஒப்புக்கொள்ள வேண்டுமென்று சொல்வது யுக்தமில்லை. எதெல்லாம் உலகில் உண்டாகிறதோ, அதற்கெல்லாம் அவசியம் நாசம் உண்டு என்பதை யாரும் மறுக்க முடியாது. ஸ்ருஷ்டியாரம்பத்தில் ஒரு ஜீவன் புதிதாக ஏற்பட்டு தர்மாதர்மங்களை ஏராளமாய் அனுஷ்டித்து வந்து கொண்டிருக்கிறபோது பிரளயம் ஏற்பட்டு விட்டால், அவன் நாசத்தை அடைவானாதினால் அவன் செய்த தர்மாதர்மங்களுக்கு பலன் ஏற்படாமல் அவைகளும் நசித்துவிடும்.மேலும் ஸ்ருஷ்டியாரம்பத்தில் புதிதாக உண்டாகும் ஜீவனுக்கும் ஸுகதுக்க அனுபவமிருக்குமாதலால், அவ்விதம் உண்டாவதற்கு முன்னால் அவனே இல்லாததால், இந்த ஸுகதுக்கங்களுக்குக் காரணமன்னியிலேயே ஏற்படுதல் சொல்லப்பட வேண்டியதாகும். இவ்விதமாக செய்ததற்கு பலன் இல்லை, செய்யாததற்கு பலன் என்ற தோஷங்கள் ஏற்படும். ஆகையால் ஜீவனுக்கு உத்பத்தி சொல்வது யுக்திக்குப் பொருந்தாது.

இவ்விதம் இரண்டாவது அத்யாயம் இரண்டாவது பாதத்தில் அதிகரணங்கள் 8 சுலோகங்கள் 16 (ஸூத்ரங்கள் 45).

==============================

# இரண்டாவது அத்யாயம் : மூன்றுவது பாதம்

## १. वियदधिकरणम्

1. வியத$_3$தி$_4$கரணம்

(ஸூத்ரம் 1 - 7)

**न वियदश्रुतेः ।१।**

ந வியத$_3$ச்ருதே: .1.

(ஆகாசம் (உண்டாக)வில்லை, சொல்லப்படாததினால்)

**अस्ति तु ।२।**

அஸ்தி து .2.

(ஆனால் இருக்கிறது)

**गौण्यसंभवात् ।३।**

கௌண்யஸம்ப4வாத் .3.

(கௌணீ ஸம்பவிக்காததினால்)

**शब्दाच्च ।४।**

சப்$_3$தா$_3$ச்ச .4.

(சப்தத்தினாலும்)

**स्याच्चैकस्य ब्रह्मशब्दवत् ।५।**

ஸ்யாசசைகஸ்ய ப்$_3$ரஹ்மசப்$_2$த$_3$வத் .5.

(ஒன்றுக்கே இருக்கலாம், பிரஹ்ம சப்தம் போல)

**प्रतिज्ञाहानिरव्यतिरेकाच्छब्देभ्यः ।६।**

ப்ரதிஜ்ஞாஹாநிரவ்யதிரேகாச்ச$_2$ப்$_2$தே$_3$ப்$_4$ய: .6.

(பிரதிக்ஞைக்கு ஹானியில்லை,
வேறில்லாததினால் சப்தங்களிலிருந்து)

**यावद्विकारं तु विभागो लोकवत् ।७।**

யாவத்$_3$விகாரம் து விபா$_4$கோ$_3$ லோகவத் .7.

(ஆனால், வேறுபட்ட பொருட்கள் யாவும் விகாரமானவை
(உண்டாகும் தன்மையுடையன), உலகத்தில் போல)

முன் பாதங்களில் யுக்திக்கும் மற்ற சாஸ்திரங்களுக்கும் (ஈசுவரரே ஜகத் காரணம் என்று சொன்னது) விரோதமாக இருக்கலாமோவென்று கவனித்து எவ்வித விரோதமுமில்லை என்று தீர்மானிக்கப்பட்டது. இனி மேலுள்ள இரண்டு பாதங்களில் வேத வாக்கியங்களிலேயே வித்யாஸம் இருப்பதாகத் தோன்றக்கூடியதற்கு ஸமாதானம் சொல்கிறுர். முதலில் இந்த அதிகரணத்தில் ஆகாச விஷயமாய் விசாரிக்கிறுர்.

त्व्योम नित्यं जायते वा हेतुत्रयविवर्जनात् ।
जनिश्रुतेश्च गौणत्वान्नित्यं व्योम न जायते ।। १ ।।
एकज्ञानात्सर्वबुद्धेर्विभक्तत्वाज्जनिश्रुतेः ।
विवर्ते कारणैकत्वाद्ब्रह्मणो व्योम जायते ।।२।।

வ்யோம நித்யம் ஜாயதே வா ஹேதுத்ரயவிவர்ஜநாத்।
ஜநிச்ருதேச்ச கௌ₃ணத்வாந்நித்யம் வ்யோம ந ஜாயதே ।। 1
ஏகஜ்ஞாநாத்ஸர்வபு₃த்₃தே₄ர்விப₄க்தத்வாஜ்ஜநிச்ருதே: ।
விவர்தே காரணைகத்வாத்₃ப்₃ரஹ்மணோ வ்யோம ஜாயதே।। 2

(அ..ம்)

ஆகாசம் நித்யமா (எப்பொழுதுமுள்ளதா)? அல்லது உண்டாவதா? மூன்று காரணங்களுமில்லாததினாலும், உண்டாவதாகச் சொல்லும் சுருதி வாக்கியம் கௌணமாதலாலும், ஆகாசம் நித்யம் தான் உண்டாகிறதில்லை.

ஒன்றின் ஞானத்தினால் எல்லாம் அறியப்படுமென்று சொல்லி இருப்பதினாலும், பிரிந்திருப்பதினாலும், உண்டாவதாக சுருதியிருப்பதாலும், விவர்த்தத்தில் காரணம் ஒன்றேதானானதினாலும், ஆகாசம் பிரஹ்மத்தினிடம் இருந்து உண்டாகிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

எந்த வஸ்து உண்டாவதானாலும் 1. ஸமவாயி காரணம் (கார்யத்திலும் கூடவே வருவதாய், குடத்திற்கு மண் போல உபாதான காரணம்) 2.அஸமவாயி காரணம் (கார்யம் ஏற்பட ஒத்தாசை செய்வதாய், நூற்களின் சேர்க்கை) 3. நிமித்த காரணம் (கார்யத்துடன் கூடவே வராமல் கார்யத்தை உண்டு பண்ணுவதற்கு வேண்டிய ஸாமர்த்தியமுள்ளதாய், குயவன் தண்டம், சக்கரம் நிமித்த காரணம்) என்று மூன்று வித காரணங்களை அபேக்ஷிக்கிறது. ஆகாச விஷயத்தில் இந்த மூன்று காரணங்களும் இருப்பதாக எடுத்துக் காட்ட முடியாது. உண்டானதாக வேதம் சொல்கிறதேயென்றால், குடமும் இருக்கிறது, ஆகாசமும் இருக்கிறது, இருக்கிறதென்ற குணம் இரண்டிடத்திலும் இருப்பதால் அந்த குணத்தை வைத்துக் கொண்டு அவ்விதம் சொல்லப்பட்டிருக்கிறது. (ஒருவன் மிகவும் புத்திசாலியாய் இருந்தால் இவன் பிரஹஸ்பதியின் அவதாரம் என்று சொல்வதுபோல) ஆகையால், ஆகாசத்திற்கு ஆதியும் கிடையாது, அந்தமும் கிடையாது, அது உண்டாவதில்லை.

ஸித்தாந்தம் :

ஒன்றையறிவதினுல் எல்லாமறியப்படும் என்ற விஷயம் எல்லா உபநிஷத்துக்களிலும் கோஷிக்கப்பட்டிருக்கிறது. மண்ணினுல் செய்யப் படும் குடம் மண்ணையறிவதினுல் அறியப்படுவது போல, பிரஹ்மத்தின் கார்யமான எல்லா பதார்த்தங்களும் காரணமான பிரஹ்மத்தையறிவதினுல் அறியப்படும் என்று சொல்வது தான் உசிதமாகும். அப்படி சொல்ல வேண்டுமானுல், பிரஹ்மத்தின் கார்யமாக எல்லா பதார்த்தங்களும் இருந்தால் தான் சொல்ல முடியும். ஆகையினுலேயே ஆகாசம் என்பது பிரஹ்மத்தினிடத்திலிருந்து உண்டான பதார்த்தம் என்று ஏற்படுகிறது. ஆகையால் ஆகாசத்திற்கு உத்பத்தியுண்டு. மேலும், ஆகாசம் குடத்தைப் போல பிரிவுபட்ட பதார்த்தமானதினுல் உண்டாகித்தானிருக்க வேண்டும். வாயு, தேஜஸ் முதலியவைகளிலிருந்து ஆகாசம் வேறுபட்டது என்பது பிரஸித்தமே. அப்படியே பிரஹ்மமும், ஆகாசம் முதலியவைகளிலிருந்து வேறுபட்டிருப்பதால் பிரஹ்மத்திற்கும் உத்பத்தியிருக்க வேண்டாமா? என்று கேட்கத் தோன்றலாம். பிரஹ்மமே எல்லா பதார்த்தங்களாகவிருப்பதால் அது வேறுபட்டதென்று சொல்ல முடியாது. தைத்திரீய உபநிஷத்தில் "आत्मन: आकाश: संभत:" "ஆத்மாவினிடமிருந்து ஆகாசம் உண்டாயிற்று" என்று வியக்தமாய் சொல்லும்போது, அதற்கு கௌணமாகவேறு அர்த்தம் கல்பிக்க எவ்வித அவசியமும் கிடையாது. உத்பத்தியென்ருல் மூன்று காரணங்களிருக்க வேண்டுமென்று சொன்னது புதிதாக குடம் போல ஆரம்பிக்கப்படும் பதார்த்தங்கள் விஷயமாக மாத்திரம் பொருத்தமேயொழிய, கயிற்றில் பாம்பு போலவுள்ள விவர்தத்தைச் சொல்வதில் அவ்வித காரணங்கள் அவசியமில்லை. அதிஷ்டானமாயுள்ள ஒரே காரணம் போதுமானது. இவ்வித நியாயங்களால் காரணமாயுள்ள பிரஹ்மத்தினிடத்திலிருந்து ஆகாசம் உண்டாகிறது என்பது ஸித்தம்.

## २ मातरिश्वाधिकरणम्

## 2 மாதரிச்வாதி₄கரணம்

(ஸூத்ரம் 8)

**एतेन मातरिश्वा व्याख्यात: ।८।**

ஏதேந மாதரிச்வா வ்யாக்₂யாத: .8.

(இதனால் வாயு வியாக்யானம் செய்யப்பட்டுவிட்டது)

வாயுவிற்கு உத்பத்தியுண்டா என்பது இங்கு விஷயம்.

वायुर्नित्यो जायते वा छान्दोग्येऽजन्मकीर्तनात् ।
सैषाऽनस्तमिता देवतेत्युक्तेर्न च जायते ।। ३ ।।
श्रुत्यन्तरोपसंहाराद्गौण्यनस्तमयश्रुतिः ।
वियद्वज्जायते वायुः खरूपंब्रह्मकारणम् ।।४।।

வாயுர்நித்யோ ஜாயதே வா சா₂ந்தோ₃க்₃யேஅஜந்மகீர்தநாத்।
ஸைஷாஅநஸ்தமிதா தே₃வதேத்யுக்தேர்ந ச ஜாயதே ।। 3
ச்ருத்யந்தரோபஸந்ஹாராத்₃கௌ₃ண்யநஸ்தமயச்ருதி:।
வியத்₃வஜ்ஜாயதே வாயு: க₂ரூபம்ப்₃ரஹ்மகாரணம் ।। 4

(அ..ம்)
வாயு நித்யமா? அல்லது உண்டாகிறதா? சாந்தோக்யத்தில் பிறப்பு சொல்லப்படாததினாலும், "அந்த இந்த தேவதை நாசமற்றது" என்று சொல்லியிருப்பதினாலும் (வாயு) உண்டாவதில்லை.
வேறு சுருதியிலிருப்பதையும் சேர்த்துக் கொள்ள வேண்டியிருப்பதினால் நாசமற்றதென்ற சுருதி கௌணம் தான். ஆகாசம் போலவே வாயுவும் உண்டாகிறது. ஆகாச ரூபமாயிருக்கும் பிரஹ்மம் அதற்குக் காரணம்.
(வி..ம்)

பூர்வபக்ஷம் :
சாந்தோக்ய உபநிஷத்தில் ஸ்ருஷ்டியைப் பற்றிச் சொல்லும் போது தேஜஸ், அப், அன்னம் என்று மூன்றுக்கே உத்பத்தி சொல்லப்பட்டு இருக்கிறது. இங்கே ஆகாசத்திற்காவது வாயுவிற்காவது உத்பத்தி சொல்லவில்லையானதினால், தைத்திரீய வாக்கியத்தை கௌணம் என்று தான் வைத்துக் கொள்ள வேண்டும். மேலும் பிரஹதாரண்யக உபநிஷத்தில் வியக்தமாக "सा एषाऽनस्तमिता देवता यद्वायुः" "வாயு என்று எதுவோ அந்த இந்த தேவதை நாசமற்றது" என்று சொல்லப்பட்டிருக்கிறது. உத்பத்தியிருக்குமேயானால் நாசமற்றதாய் இராது. ஆகையால் வாயுவிற்கு உத்பத்தி கிடையாதென்று ஏற்படுகிறது. ஆகையால் வாயு உண்டாவதில்லை.

ஸித்தாந்தம் :
சாந்தோக்யத்தில் சொல்லவில்லையானாலும், வேறிடத்தில் சொல்லப் பட்டதை சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று "குணோபஸம்ஹாரம்" என்ற நியாயப்படி, தைத்திரீயத்தில் சொல்லியிருப்பதும் இதில் சொல்லப்பட்டதே ஆகும். நாசமற்றதென்று சொல்லும் சுருதியானது

வாயுவின் உபாஸனையைச் சொல்லுமிடத்தில் வருவதால் வாயுவை ஸ்துதி செய்வதற்காகச் சொல்லப் பட்டது தான். ஆகையால் ஆகாசத்திற்கு உத்பத்தியுண்டென்று சொல்வதற்காக முன் சொன்ன நியாயங்கள் யாவையும் வாயு விஷயமாகவும் உபயோகித்துக் கொள்ள வேண்டும். "आकाशात् वायुः" "ஆகாசத்திலிருந்து வாயு" என்று சொல்லியிருப்பதால் வாயுவிற்குக் காரணமாயிருப்பது ஆகாசம் என்று தான் ஏற்படுகிறது; வாயுவிற்கு பிரஹ்மம் காரணமில்லை, அப்படியிருக்க, பிரஹ்மத்தைத் தெரிந்தால் அதன் கார்யமில்லாத வாயு தெரியப்பட்டதாக ஆகாது, என்று ஏற்படாதா? என்றால் வெறும் ஆகாசம் வாயுவிற்குக் காரணமல்ல, பிரஹ்மமே ஆகாச ரூபமாக ஆகிக் கொண்டு பிறகு வாயுவிற்குக் காரணமாகிறபடியால், பிரஹ்மமே தான் வாயுவிற்கும் காரணம். முன் முன் உண்டான பதார்த்தத்தன்மையை அடைந்துள்ள பிரஹ்மமே பின் பின் உண்டாகும் பதார்த்தங்களுக்குக் காரணங்களாக இருப்பதால் எல்லாவற்றிற்கும் காரணம் பிரஹ்மமேதான். ஆகையால் வாயுவும் உண்டாகிறது.

## ३.असम्भवाधिकरणम्

## 3.அஸம்ப₄வாதி₄கரணம்

(ஸூத்ரம் 9)

**असंभवस्तु सतोऽनुपपत्तेः ।९।**

**அஸம்ப₄வஸ்து ஸதோஅநுபபத்தே: .9.**

**(ஸத்வஸ்துவிற்கோ உத்பத்தி கிடையாது, பொருந்தாததினால்)**

வாயுவிற்குக் காரணமாயுள்ள ஆகாசம் உண்டாகிறது என்றது போல ஆகாசத்திற்குக் காரணமாயுள்ள பிரஹ்மமும் உண்டாகிறதா? என்பது விஷயம்.

सद्ब्रह्म जायते नो वा कारणत्वेन जायते ।
यत्कारणं जायते तद्वियद्वाय्वादयो यथा ।।५।।
असतोऽकारणत्वेन खादीनां सत उद्भवात् ।
व्याप्तेरजादिवाक्येन बाधात्सन्नैव जायते ।।६।।

ஸத்₃ப்₃ரஹ்ம ஜாயதே நோ வா காரணத்வேந ஜாயதே।
யத்காரணம் ஜாயதே தத்₃வியத்₃வாய்வாத₃யோ யதா₂ ।। 5
அஸதோஅகாரணத்வேந கா₂தீ₃நாம் ஸத உத்₃ப₄வாத்।
வ்யாப்தேஸஜாதி₃வாக்யேந பா₃தா₄த்ஸந்நைவ ஜாயதே।। 6

(அ..ம்)

"ஸத்" என்ற பிரஹ்மம் உண்டாகிறதா? அல்லது உண்டாகிறதில்லையா? எது காரணமாயிருக்கிறதோ, அது உண்டாகிறது, ஆகாசம் வாயு முதலியது (காரணமாயிருந்தும் உண்டாகின்றன அதைப்) போல என்று காரணமாய் இருக்கும் தன்மையினுல் (பிரஹ்மம்) உண்டாகிறது. அஸத் (இருப்பற்றது) என்பதற்குக் காரணமாயிருக்கும் தன்மை கிடையாததினுலும், ஆகாசம் முதலானவைகளுக்கு "ஸத்" வஸ்துவிலிருந்து உத்பத்தி என்பதினுலும், (காரணமாயிருப்பதற்கும், உத்பத்தி இருப்பதாகச் சொன்ன) வியாப்தி (துடர்ச்சி) "பிறப்பற்றது" என்பது முதலான வாக்கியத்தினுல் பாதிக்கப்படுவதாலும், "ஸத்" உண்டாவதே கிடையாது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"ஸத்" என்ற பிரஹ்மத்திலிருந்து, ஜகத் உண்டானதாகச் சொல்லப்படுகிறது. அப்படியே ஆகாசத்திலிருந்து வாயு, வாயுவிலிருந்து தேஜஸ், தேஜஸில் இருந்து அப், அப்பிலிருந்து பிருதிவீ, என்று வரிசையாகச் சொல்லப்படுகிறது. அவைகளில் பின்பின் வருவதற்குக் , காரணமாயுள்ள முன்முன் உள்ள ஆகாசம் முதலியவைகளும் உண்டான பதார்த்தங்களாகவேயிருக்கின்றன. ஆகையால் காரண வஸ்துக்கள் யாவும் உண்டானவைகள் என்று தெரிகிறது. ஆகையால் ஆகாசத்திற்குக் காரணமாயுள்ள பிரஹ்மமும் உண்டான வஸ்துவாகத்தானிருக்க வேண்டும். ஆகையால் பிரஹ்மமும் உண்டாகிறது.

ஸித்தாந்தம் :

பிரஹ்மமாகிற ஸத்வஸ்து உண்டாவதில்லை. அதை உண்டு பண்ணக் கூடியதாக வேறு வஸ்து இருக்குமென்று காட்டவே முடியாது. அப்படியொரு வஸ்து உண்டென்றுல் அது அஸத்தா? அல்லது ஸத்தா? அது அஸத்தாகவிருந்தால், தனக்கே இருப்பு இல்லாததினுல் அது இன்னென்றுக்குக் காரணமாகயிருக்க முடியாது. தவிரவும் அஸத்வஸ்துவில் இருந்து ஒரு பதார்த்தம் ஏற்படமுடியுமானுல் அதுவும் அஸத்தாகவேயிருக்க வேண்டுமே தவிர ஸத்தாகவிருக்க முடியாது. வேதமும் "कथं असत: सत् जायेत" "அஸத்திலிருந்து எப்படி ஸத் பிறக்கும்"? என்று சொல்கிறது. பிரஹ்மமோஸத், அதற்குக் காரணம் அஸத்தாகயிருக்க முடியாது. அப்படியானுல் இது

வேண்டாம், பிரஹ்மத்திற்குக் காரணமாயுள்ளது ஸத் வஸ்து என்றே வைத்துக் கொள்ளலாமே? என்றால், ஸத்திற்கு ஸத் காரணம் என்று தனக்குத் தானே காரணம் என்று ஏற்படும். அதுவோ பொருந்தாது. அர்த்தமற்ற பேச்சு. ஆகாசம் முதலியதை பிரஹ்மத்திற்குக் காரணமென்று சொல்லலாமோ என்றால் அவைகளே பிரஹ்மத்திலிருந்து உண்டாகிற பதார்த்தங்களாய் இருப்பதால் தங்களுக்கே காரணமாயுள்ள வஸ்துவிற்குத் தாங்களே காரணமாயிருக்க முடியாது. எது எது காரணமோ அது அது உண்டாகிறது என்று சொன்ன வியாப்தி "स वा एष महान् अज आत्मा" "அந்த இந்த ஆத்மா பெரியவர், பிறப்பற்றவர்" என்ற வேத வாக்கியத்தினால் பிரஹ்ம விஷயமாய் அடிபட்டு விடுகிறது. ஆகையால் ஸத்தாயுள்ள பிரஹ்மம் உண்டாவதில்லை.

## ४.तेजोऽधिकरणम्

## 4.தேஜோஅதி₄கரணம்

### (ஸூத்ரம் 10)

**तेजोऽतस्तथाह्याह ।१०।**

தேஜோஅதஸ்ததா₂ஹ்யாஹ .10.

(தேஜஸ் இதிலிருந்து, அப்படியல்லவா சொல்கிறது)

தேஜஸ் நேராக பிரஹ்மத்தினிடத்திலிருந்தே உண்டாகிறதா? என்பது இங்கு விஷயம்.

**ब्रह्मणो जायते वह्निर्वायोर्वा ब्रह्मसंयुतात् ।**
**तत्तेजोऽसृजतेत्युक्तेर्ब्रह्मणो जायतेऽनलः ।।७।।**
**वायोरग्निरिति श्रुत्या पूर्वश्रुत्येकवाक्यतः ।**
**ब्रह्मणो वायुरूपत्वमापन्नादग्निसंभवः ।।८।।**

ப்₃ரஹ்மணோ ஜாயதே வஹ்நிர்வாயோர்வா ப்₃ரஹ்மஸந்யுதாத்।
தத்தேஜோஅஸ்ருஜதேத்யுக்தேர்ப்₃ரஹ்மணோ ஜாயதேஅநல:।। 7
வாயோரக்₃னிரிதி ச்ருத்யா பூர்வச்ருத்யேகவாக்யத:।
ப்₃ரஹ்மணோ வாயுருபத்வமாபந்நாத₃க்₃னிஸம்ப₄வ:।। 8

(அ..ம்)

தேஜஸ் பிரஹ்மத்தினிடத்திலிருந்து உண்டாகிறதா? அல்லது, பிரஹ்மத்துடன் சேர்ந்த வாயுவினிடமிருந்தா? அது (பிரஹ்மம்) தேஜஸை ஸ்ருஷ்டித்தது என்று சொல்லியிருப்பதால், பிரஹ்மத்தினிடமிருந்து தேஜஸ் உண்டாகிறது.

"வாயுவிலிருந்து அக்னி" என்ற வாக்கியத்தினுல் முந்தின சுருதியுடன் ஒரே வாக்கியமாயிருப்பதால், வாயு ரூபத்தையடைந்திருக்கும் பிரஹ்மத்தினிடம் இருந்து தேஜஸுக்கு உத்பத்தி.
(வி..ம்)

பூர்வபக்ஷம் :
சாந்தோக்ய உபநிஷத்தில் "அது (பிரஹ்மம்) தேஜஸை ஸ்ருஷ்டித்தது" "तत् तेजोऽसृजत" என்று சொல்லியிருப்பதால் தேஜஸ் பிரஹ்மத்திலிருந்து உண்டானதாகத் தெரிகிறது. தைத்திரீயத்தில் "वायोः अग्निः" "வாயுவிலிருந்து தேஜஸ்" என்று சொல்லியிருப்பதில் கண்ட ஐந்தாம் வேற்றுமைக்கு காரணத்தைச் சொல்லும் தன்மையென்று வைத்துக் கொள்ள வேண்டாம். (இந்த வீட்டிலிருந்து ஐந்தாவது வீடு என்பது போல) "அப்புறம்" என்று அர்த்தம் செய்து கொள்ளலாம். அதாவது வாயுவை ஸ்ருஷ்டித்து விட்டுப் பிறகு தேஜஸை (பிரஹ்மமே) ஸ்ருஷ்டித்தது என்று எடுத்துக் கொள்ளலாம். ஆகையால் பிரஹ்மத்தில் இருந்து நேரே தான் தேஜஸ் உண்டானது.

ஸித்தாந்தம் :
"आत्मनः आकाशः संभूतः, आकाशात् वायुः, वायोः अग्निः" "ஆத்மாவிடமிருந்து ஆகாசம் உண்டாயிற்று, ஆகாசத்திலிருந்து வாயு, வாயுவிலிருந்து அக்னி" என்று வாக்கியங்கள் அமைந்திருக்கையில், முதல் வாக்கியத்திலும், அடுத்த வாக்கியத்திலும், ஐந்தாம் வேற்றுமை காரணத்தைச் சொல்கிறதென்று நன்கு தெரிகிறபோது, மூன்றுவது வாக்கியத்தில் வேறுவித அர்த்தம் சொல்வது உசிதமாகாது. ஆகையால் இங்கேயும் வாயு, தேஜஸின் உபாதான காரணம் என்றே தான் அர்த்தம். முன் எடுத்துக் காட்டினபடி வாயு ரூபத்தை அடைந்திருக்கும் பிரஹ்மத்தினிடமிருந்து தேஜஸ் உண்டாயிற்று என்று ஏற்படுகிறது.

## ५.अबधिकरणम्

## 5.அப₃தி₄கரணம்

(ஸூத்ரம் 11)

**आपः ।११।**

ஆப:.11.

(ஜலம்)

தேஜஸிலிருந்து ஜலமா. பிரஹ்மத்திலிருந்தே ஜலமா? என்பது விஷயம்.

**ब्रह्मणोऽपां जन्म किं वा वह्नेर्नाग्नेर्जलोद्भवः ।**
**विरुद्धत्वान्नीरजन्म ब्रह्मणः सर्वकारणात् ।।९।।**
**अग्नेराप इति श्रुत्या ब्रह्मणो वह्नयुपाधिकात् ।**
**अपां जनिर्विरोधस्तु सूक्ष्मयोर्नाग्निनीरयोः ।।१०।।**

ப்3ரஹ்மணோஅபாம் ஜந்ம கிம் வா வஹ்நேர்நாக்3னேர்ஜலோத்3ப4வ:।
விருத்3த4த்வாந்நீரஜந்ம ப்3ரஹ்மண: ஸர்வகாரணாத்।। 9
அக்3னேராப இதி ச்ருத்யா ப்3ரஹ்மணோ வஹ்ந்யுபாதி4காத்।
அபாம் ஜநிர்விரோத4ஸ்து ஸூக்ஷ்மயோர்நாக்3னிநீரயோ:।। 10

(அ..ம்)
பிரஹ்மத்திலிருந்து ஜலத்தின் உத்பத்தியா? அல்லது, அக்னியிலிருந்தா? (ஜலமும் அக்னியும் ஒன்றுக்கொன்று) விரோதமாயிருப்பதால், அக்னியில் இருந்து ஜலம் உண்டாகாது. எல்லாவற்றிற்கும் காரணமான பிரஹ்மத்தில் இருந்து தான் ஜலத்தின் உத்பத்தி.
"அக்னியிருந்து ஜலம்" என்ற சுருதியினுல், அக்னியை உபாதியாயுடைய பிரஹ்மத்திலிருந்து தான் ஜலத்தின் உத்பத்தி. விரோதம் என்பதோ ஸூக்ஷ்மதசையிலிருக்கும் அக்னிக்கும் ஜலத்திற்கும் கிடையாது.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
சாந்தோக்யத்தில் "**तत् अपोऽसृजत**" "அது (பிரஹ்மம்) ஜலத்தை ஸ்ருஷ்டித்தது" என்றும் தைத்திரீயத்தில் "**अग्नेःआपः**" "அக்னியிலிருந்து ஜலம்" என்றும் சொல்லப்படுகிறது. முதல் வாக்கியத்திற்கு, முன் சொன்ன நியாயங்களை அனுஸரித்து, அக்னிரூபம் தரித்து பிரஹ்மத்திலிருந்தே ஜலம் உண்டாயிற்று என்று வைத்துக் கொண்டாலும் இரண்டிடங்களிலும் அக்னியிலிருந்தே ஜலம் உண்டானதாக ஆகிறது. அக்னியில் ஸ்வபாவமும் ஜ்லத்தின் ஸ்வபாவமும் நேர் விரோதமாயிருக்கின்றன. அக்னி ஜலத்தை வற்ற வடித்து விடும், ஜலம் அக்னியை அணைத்து விடும். அப்படியிருக்க அக்னியிலிருந்து ஜலம் உண்டானதாகச் சொல்வது பொருந்தாது.

ஸித்தாந்தம் :
நம் கண்ணுக்குப் புலப்படுகிற பஞ்சீகிருதமான ஸ்தூலமாயுள்ள அக்னிக்கும் ஜலத்திற்கும் விரோதம் தெரிந்த போதிலும், வேதத்தினுல் மாத்திரம் அறியக்கூடியதான ஸூக்ஷ்மமாயுள்ள அக்னிக்கும்,

ஸூக்ஷ்மமாயுள்ள ஜலத்திற்கும் விரோதமுண்டென்று கல்பிப்பது உசிதமாகாது. மேலும் உலகத்திலேயே உஷ்ணம் அதிகமாகவிருக்கும் ஸமயத்தில் ஜலரூபமான வியர்வை ஏற்படுவதையும், மழை பெய்வதையும் பார்க்கிறோம். ஆகையால் இரண்டு சுருதி வாக்கியங்களிலிருந்தும் தேஜோ ரூபத்தையடைந்துள்ள பிரஹ்மத்தினிடமிருந்து ஜலம் உண்டாகிறது என்பதே ஸித்தாந்தம்.

## ६.पृथिव्यधिकाराधिकरणम्

## 6.ப்ரிதி$_2$வ்யதி$_4$காராதி$_4$கரணம்

(ஸூத்ரம் 12)

**पृथिव्यधिकाररूपशब्दान्तरेभ्यः ।१२।**

ப்ரிதி$_2$வ்யதி$_4$காரரூபசப்$_3$தா$_3$ந்தரேப்$_4$ய: .12.

(பிருதிவீ, அதிகாரம் ரூபம் வேறு சப்தம் இவைகளிலிருந்து)

சாந்தோக்யத்தில் "ता: अन्नं असृजन्त" "அது (ஜலம்) அன்னத்தை ஸ்ருஷ்டித்தது" என்று சொல்கிறவிடத்தில் அன்னம் என்றால் என்ன? என்பது இங்கே விஷயம்.

**ता अन्नमसृजन्तेति श्रुतमन्नं यवादिकम् ।**
**पृथिवी वा यवावेव लोकेऽन्नत्वप्रसिद्धितः ।।११।।**
**भूताधिकारात्कृष्णस्य रूपस्य श्रवणादपि ।**
**तथाद्भ्यः पृथिवीत्युक्तेरन्नं पृथ्व्यन्नहेतुतः ।।१२।।**

தா அன்னமஸ்ருஜந்தேதி ஷ்ருதமந்நம் யவாதி$_3$கம்।
ப்ரிதி$_2$வீ வா யவாவே$_4$வ லோகேஅன்னத்வப்ரஸித்$_3$தி$_4$த:।। 11
பூ$_4$தாதி$_4$காராத்க்ருஷ்ணஸ்ய ரூபஸ்ய ச்ரவணாத$_3$பி।
ததா$_2$த்$_3$ப$_4$ய: ப்ரிதி$_2$வீத்யுக்தேரந்நம் ப்ருத்$_2$வ்யன்னஹேதுத:।। 12

(அ..ம்)

"அது அன்னத்தை ஸ்ருஷ்டித்தது" என்று சொல்லப்பட்டிருக்கிற அன்னம், யவம் முதலானதா? அல்லது பிருதிவீயா? (யவம் முதலியதிலேயே) உலகத்தில் அன்னமென்ற பிரஸித்தியிருப்பதால், யவம் முதலியது தான்.

பூதங்களைச் சொல்லிவிடும் பிரகரணமாயிருப்பதாலும், கருப்புரூபம் சொல்லப்படுவதாலும், அப்படியே "ஜலத்திலிருந்து பிருதிவீ" என்று வேதவாக்கியமிருப்பதாலும், அன்னம் என்பது பிருதிவீதான், அன்னத்திற்குக் காரணமாயிருப்பதால்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :
"அது அன்னத்தை ஸ்ருஷ்டித்தது" என்று ஜலத்திலிருந்து அன்னத்திற்கு உத்பத்தி சொல்லப்படுகிறது. அன்னம் என்ற சப்தம் உலகத்தில் நெல், யவம் முதலிய சாப்பிடப்படும் தான்யங்கள் விஷயமாகவே ப்ரஸித்தமாக உபயோகிக்கப்படுவதால் இங்கேயும் அன்னம் என்பது யவம் முதலியது தான்.

ஸித்தாந்தம் :
இங்கு ஐந்து மஹா பூதங்களாகிய ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம், பிருதிவீ இவைகளின் ஸ்ருஷ்டியைச் சொல்லியதும் ஸந்தர்ப்பமாக இருப்பதால், இங்கு அன்னம் என்பது பிருதிவீதான். மேலும், "यत् अग्नेः रोहितं रूपं तेजसः तत् रूपं, यत् शुक्लं तत् अपां, यत् कृष्णं तत् अन्नस्य" "எது அக்னியின் சிவப்பான ரூபமோ அது தேஜஸின் ரூபம், எது வெளுப்போ அது ஜலத்தினுடையது, எது கருப்போ அது அன்னத்தினுடையது" என்று சொல்லப்பட்டிருக்கிறது. பூமியில் தான் கருப்புரூபம் ஏராளமாய்க் காணப்படுகிறது, நெல், யவம் முதலானதில் காணப் படுவதில்லை. தவிரவும் "अद्भ्यः पृथिवी" "ஜலத்திலிருந்து பிருதிவீ" என்று வியக்தமாகவே தைத்திரிய சுருதி சொல்வதாலும் அன்னம் என்பது பிருதிவீதான். அன்னம் என்ற சப்தம் பிருதிவீ என்ற அர்த்தத்தில் எப்படி ப்ரவிருத்திக்கும் என்று ஸந்தேஹிக்க வேண்டாம். கார்யத்தையும் காரணத்தையும் ஒன்றுபடுத்தி ("அவன் கலப்பையால் ஜீவிக்கிறான்" என்று "கலப்பையென்ற கருவியைக் கொண்டு நிலத்தை உழுது சாகுபடி செய்து வரும் தான்யத்தை அன்னமாக்கி சாப்பிட்டு ஜீவிக்கிறான்" என்ற அர்த்தத்தில் சொல்வது போல) அன்னத்திற்குக் காரணமாயிருக்கும் தன்மையை வைத்து பிருதிவீயை இங்கே அன்னம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இங்கு சொன்ன "அன்னம்" பிருதிவீதான்.

## ७.तदभिध्यानाधिकरणम्
## 7.தத₃பி₄த்₄யாநாதி₄கரணம்
(ஸூத்ரம் 13)

**तदभिध्यानादेव तु तल्लिङ्गात् सः ।१३।**

தத₃பி₄த்₄யாநாதே₃வ து தல்லிங்கா₃த் ஸ: .13.

(அதை ஆலோசிப்பதினாலேயேதான் அவர், அவருக்குள்ள லிங்கமிருப்பதால்)

ஆகாசம் முதலான ரூபத்தையடைந்த பிரஹ்மத்திலிருந்து மேல் ஸ்ருஷ்டியென்று சொன்னது சரிதானுவென்று இங்கு விசாரிக்கப்படுகிறது.

**व्योमाद्याः कार्यकर्तारो ब्रह्म वा तदुपाधिकम् ।**
**व्योम्नो वायुर्वायुतोऽग्निरित्युक्तेः खादिकर्तृता ।।१३।।**
**ईश्वरोऽन्तर्यमयतीत्युक्तेर्व्योमाद्युपाधिकम् ।**
**ब्रह्म वाय्वादिहेतुः स्यात्तेज आदीक्षणादपि ।।१४।।**

வ்யோமாத்$_3$யா: கார்யகர்தாரோ ப்$_3$ரஹ்ம வா தது$_3$பாதி$_4$கம் ।
வ்யோம்நோ வாயுர்வாயுதோஅக்$_3$னிரித்யுக்தே: கா$_2$தி$_3$கர்த்ருதா ।। 13
ஈச்வரோஅந்தர்யமயதீத்யுக்தேவ்ர்யோமாத்$_3$யுபாதி$_4$கம் ।
ப்$_3$ரஹ்ம வாய்வாதி$_3$ஹேது: ஸ்யாத்தேஜ ஆதீ$_3$க்ஷணாத$_3$பி ।। 14

(அ..ம்)

கார்யங்களை ஸ்ருஷ்டி செய்வது ஆகாசம் முதலானவைகளா? அல்லது அவைகளை உபாதியாயுடைய பிரஹ்மமா? ஆகாசத்திலிருந்து வாயு, வாயுவிலிருந்து அக்னி என்று சொல்லியிருப்பதால் ஆகாசம் முதலியதிற்கே ஸ்ருஷ்டி செய்யும் தன்மை.

"ஈசுவரர் உள்ளிருந்து நியமனம் சொல்கிருர்" என்று சொல்லப்பட்டிருக்கிற படியால், ஆகாசம் முதலியதை உபாதியாயுடைய பிரஹ்மம் தான் வாயு முதலியவற்றுக்கு காரணம். தேஜஸ் முதலானது ஆலோசித்தது என்று சொல்லியிருப்பதினுலும்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

முன் முன் சொன்ன கார்யத்தை உபாதியாகவுடைய பிரஹ்மத்திலிருந்து பின் பின் சொன்ன கார்யங்கள் உண்டாகின்றன என்று ஸித்தாந்தமாக வைத்துக் கொண்டு சொன்னது யுக்தமல்ல. "**आकाशात् वायुः वायोः अग्निः**" "ஆகாசத்திலிருந்து வாயு, வாயுவிலிருந்து அக்னி" என்று வரிசையான பிரஹ்மத்தைப்பற்றி எவ்வித பிரஸ்தாவமுமில்லாமல் அந்தந்த ஆகாசம் முதலியது தானுகவே ஸ்ருஷ்டி செய்ததாகக் காண்கிறது. அப்படியிருக்க அங்கே பிரஹ்மத்தை நுழைக்க நினைப்பது உசிதமில்லை.

ஸித்தாந்தம் :

"**यः आकाशं अन्तरो यमयति, यो वायुं अन्तरो यमयति** "

"எவர் ஆகாசத்தை உள்ளிருந்து நியமனம் செய்கிறுரோ" எவர் வாயுவை உள்ளிருந்து நியமனம் செய்கிறுரோ" என்று எல்லா பதார்த்தங்களிலும் உள்ளிருந்து நியமனம் செய்வதாக பிரஹ்மத்தைப்பற்றி பிரஹதாரண்யக உபநிஷத்தில் அந்தர்யாமி பிராஹ்மணத்தில் விஸ்தாரமாகச் சொல்லி இருப்பதால், ஆகாசம் முதலியதிற்கு ஸ்வாதந்திரியம் (தானுகவே செய்யும் தன்மை) மறுக்கப்பட்டிருக்கிறது. அப்படியே, சாந்தோக்யத்திலும் "तत् तेज ऐक्षत, ता आप: ऐक्षन्त" "அது தேஜஸ் ஆலோசித்தது, அந்த ஜலம் ஆலோசித்தது" என்று தேஜஸ் முதலியதிற்கு ஆலோசனையை முன்னிட்டு ஸ்ருஷ்டி செய்ததாகக் காண்கிறது. இந்த ஆலோசனையென்பது சேதனமான பிரஹ்மத்தில் ஸம்பந்தமில்லாத வெறும் ஜடமான தேஜஸ் முதலியதிற்கு ஸம்பவிக்காது. ஆகையால் ஆகாசம் முதலியதை உபாதியாயுடைய பிரஹ்மத்திற்க்குத் தான் ஜகத்தின் காரணமாயிருக்கும் தன்மை.

## ८.विपर्ययाधिकरणम्

## 8.விபர்யயாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 14)

**विपर्ययेणातु: क्रमोऽत उपपद्यते च ।१४।**

விபர்யயேணாது: க்ரமோஅத உபபத்$_3$யதே ச .14.

(இதிலிருந்து மாறுதலாகத்தான் வரிசை, பொருத்தமும் கூட)

பிரஹ்மத்திலிருந்து ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம், பிருதிவீ என்ற வரிசையாக உண்டாவதாக சொல்லப்பட்டது. லயமாகும் போது அதே வரிசையா? என்று விஷயம்.

सृष्टिक्रमो लये ज्ञेयो विपरीतक्रमोऽथवा ।
क्लृप्तं कल्प्याद्वरं तेन लये सृष्टिक्रमो भवेत् ।।१५।।
हेतावसति कार्यस्य न सत्त्वं युज्यते ततः ।
पृथिव्यप्स्विति चोक्तत्वाद्विपरीतक्रमो लये ।।१६।।

ஸ்ருஷ்டிக்ரமோ லயே ஜ்ஞேயோ விபரீதக்ரமோஅத$_2$வா।
க்ல்ருப்தம் கல்ப்யாத்$_3$வரம் தேந லயே ஸ்ருஷ்டிக்ரமோ ப$_4$வேத்।। 15
ஹேதாவஸதி கார்யஸ்ய ந ஸத்த்வம் யுஜ்யதே தத:।
ப்ருதி$_2$வ்யப்ஸ்விதி சோக்தத்வாத்$_3$விபரீதக்ரமோ லயே।। 16

(அ..ம்)
லயத்தில் ஸ்ருஷ்டியிலுள்ள வரிசையென்று தெரிந்து கொள்ள வேண்டுமா? அல்லது நேர்மாறுன வரிசையென்ரு? ஏற்பட்டிருப்பது ஏற்படுத்த வேண்டியதை விட சிலாக்கியம், ஆகையால் (ஏற்கனவே ஏற்பட்டதாயிருக்கிற) ஸ்ருஷ்டியிலுள்ள வரிசையே லயத்தினில் இருக்கும்.
காரணமாயிருப்பது இல்லாமல் போய்விடும் போது, கார்யத்திற்கு இருப்பு என்பது பொருந்தாது என்பதினுலும், "பிருதிவீ ஜலத்தில்" என்று சொல்லப் பட்டிருப்பதினுலும், லயத்தில் நேர்மாறுன வரிசைதான்.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
ஒரு வரிசை முன்னுலேயே ஏற்பட்டிருக்கும்போது, அதை விட்டு விட்டு வேறு வரிசையை கல்பிப்பது நியாயமாகாது. ஆகையால் ஸ்ருஷ்டியிலுள்ள வரிசைப்படித்தான் லயத்திலும் வரிசையிருக்கும். அதாவது, முதலில் ஆகாசம், பிறகு வாயு, அதன் பிறகு தேஜஸ் என்ற முறைப்படியிருக்கும்.

ஸித்தாந்தம் :
முதலில் காரணம் லயமாகிவிட்டால், உபாதான காரணமற்ற கார்யங்கள் க்ஷணமாவது இருக்குமென்பது ஒரு நாளும் ஸம்பவிக்காது. மண் போய் குடமும், நூல் எரிந்து போய் வஸ்திரமும் இருக்க முடியுமென்பது கிடையாது. மேலும் புராணத்தில் "जगत्प्रतिष्ठा देवर्षे पृथिव्यप्सु प्रलीयते। ज्योतिष्याप: प्रलीयन्ते ज्योति: वायौ प्रलीयते।। वायु: प्रलीयते व्योम्नि तच्चाव्यक्ते प्रलीयते" "ஹே தேவரிஷே! ஜகத்தின் ஏற்பாடு இப்படி பிருதிவீ ஜலத்தில் லயமடைகிறது, தேஜஸில் ஜலம் லயமடைகிறது, தேஜஸ் வாயுவில் லயமடைகிறது, வாயு ஆகாசத்தில் லயமடைகிறது அதுவும் அவ்யக்தத்தில் லயிக்கிறது" என்று ஸ்ருஷ்டி வரிசைக்கு நேர்மாறுன வரிசை சொல்லப் பட்டிருக்கிறது. ஆகையால் ஸ்ருஷ்டிக்கிரமத்திற்கு விபரீதமாய் பிருதிவீ, ஜலம் முதலியதென்ற வரிசையில் தான் லயம்.

## ९.अन्तराविज्ञानाधिकरणम्

## 9.அந்தராவிஜ்ஞாநாதி₄கரணம்

(ஸூத்ரம் 15)

अन्तरा विज्ञानमनसी क्रमेण तल्लिङ्गादिति चेन्नाविशेषात् ।१५।
அந்தரா விஜ்ஞாநமனஸீ க்ரமேண தல்லிங்கா$_3$தி$_3$தி சேந்நாவிசேஷாத் .15.
(மத்தியில் புத்தியும் மனஸும் வரிசையாக அதற்கு லிங்கம் இருப்பதால் என்றால், இல்லை, வித்தியாஸமில்லாததினால்)

பஞ்சபூத ஸ்ருஷ்டியின் கிரமம் சொல்லப்பட்டதே தவிர பிராணன், மனஸ், இந்திரியங்கள் இவையுண்டாகும் கிரமம் சொல்லவில்லையே? அவைகளில் ஸ்ருஷ்டி எவ்விதம்? என்று இங்கு விசாரிக்கப்படுகிறது. அவை உண்டாகிற பதார்த்தங்களா? நித்யமாய் எப்பொழுதும் உள்ளவைகளாவென்பது இதே அத்யாயம் நான்காவது பாதத்தில் விசாரிக்கப்படும். இங்கு அவையும் உண்டாகின்றன என்பதை ஸித்தாந்தமாக வைத்துக் கொண்டு, உண்டாகும் வரிசை மாத்திரம் விசாரிக்கப்படுகிறது.

किमुक्तक्रमभङ्गोऽस्ति प्राणाद्यैर्नास्ति वाऽस्ति हि।
प्राणाक्षमनसां ब्रह्मवियतोर्मध्य ईरणात् ।।१७।।
प्राणाद्या भौतिका भूतेष्वन्तर्भूताः पृथक्क्रमम् ।
नेच्छन्त्यतो न भङ्गोऽस्ति प्राणादौ न क्रमः श्रुतः ।।१८।।

கிமுக்தக்ரமப$_4$ங்கோ$_3$அஸ்தி ப்ராணாத்$_3$யைர்நாஸ்தி வாஅஸ்தி ஹி।
ப்ராணாக்ஷமனஸாம் ப்$_3$ரஹ்மவியதோர்மத்$_4$ய ஈரணாத்।। 17
ப்ராணாத்$_3$யா பௌ$_4$திகா பூ$_4$தேஷ்வந்தர்பூ$_4$தா: ப்ருத$_2$க்க்ரமம்।
நேச்ச$_2$ந்த்யதோ ந ப$_4$ங்கோ$_3$அஸ்தி ப்ராணாதௌ$_3$ ந க்ரம:ச்ருத:।। 18

(அ..ம்)

பிராணன் முதலியவைகளால் முன் சொன்ன வரிசைக்கு பங்கம் உண்டா, அல்லது இல்லையா? பிரஹ்மத்திற்கும் ஆகாசத்திற்கும் மத்தியில் பிராணன், இந்திரியங்கள், மனஸ் இவை சொல்லப்பட்டிருப்பதால் பங்கம் உண்டுதான்.

பிராணன் முதலியவை பூதங்களால் ஏற்படுகிறவைகள், அவைகளிலேயே உள்ளடங்கினவைகள், தங்களுக்கென்று தனியாக வரிசையை அபேக்ஷிக்கிறதில்லை. ஆகையால் க்ரமபங்கம் இல்லை. மேலும், பிராணன் முதலியதின் விஷயத்தில் வரிசை சொல்லப்படவில்லை.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

முண்டகோபநிஷத்தில் "एतस्मात् जायते प्राणो मनः सर्वेन्द्रियाणि च। खं वायुः ज्योतिः आपः पृथिवी विश्वस्य धारिणी ।।" இதிலிருந்து பிராணன் உண்டா

கிறது, அப்படியே மனஸ், எல்லா இந்திரியங்களும், ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம் எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டிருக்கிற பிருதிவீ (இவைகளும் உண்டாகின்றன) என்று சொல்லப்பட்டிருக்கிறது. இங்கே ஆகாசம் முதலானவைகளுக்கு முன்னால் பிராணன், மனஸ், இந்திரியங்கள் சொல்லப்பட்டிருப்பதால், பிரஹ்மத்தில் இருந்து ஆகாசமென்று முன் சொன்ன வரிசைக்கு பங்கமேற்படுகிறது.

ஸித்தாந்தம் :
**"अन्नमयं हि सोम्य मनः, आपोमयः प्राणः, तेजोमयी वाक्"** "ஹே ஸோம்ய! மனஸ் அன்னத்தினால் உண்டாகும் பதார்த்தம், ஜலத்தினால் உண்டாவது பிராணன், தேஜஸினால் உண்டாவது வாக்கு" என்று சொல்லியிருப்பதால், பிராணன், மனஸ், இந்திரியங்கள் பூதங்களுடைய மாறுபாடுகள் என்ற முறையில் அந்த பூதங்களுக்கு உள்ளேயே அடங்கினவைகள் ஆனதினால் அவைகளுக்கு தனியாக வரிசை வேண்டியது இல்லை. மேலும், **"आकाशात् वायुः, वायोः अग्निः"** "ஆகாசத்திலிருந்து வாயு, வாயுவிலிருந்து அக்னி" என்றெல்லாம் வரிசைக்கிரமமாக எப்படி சொல்லப்பட்டிருக்கிறதோ, அதைப் போல இங்கே வரிசைக் கிரமம் எதுவும் சொல்லப்படவில்லை. பொதுவாக எல்லாம் உண்டாகின்றன என்று மாத்திரம் தான் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்த முண்டகோபநிஷத் வாக்கியத்தினால், முன் தீர்மானித்துள்ள கிரமத்திற்கு பங்கம் இல்லை.

## १०.चराचरव्यपाश्रयाधिकरणम्

### 10.சராசரவ்யபாச்ரயாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 16)

**चराचरव्यपाश्रयस्तु स्यात्तद्व्यपदेशो भाक्तस्तद्भावभावित्वात् ।१६।**

சராசரவ்யபாச்ரயஸ்து ஸ்யாத்தத்$_3$வ்யபதே$_3$சோ பா$_4$க்தஸ்தத்$_3$பா$_4$வபா$_4$வித்வாத் .16

(சராசரத்தை ஆசிரயித்துதான் கௌணமான அவ்வித வியபதேசம் இருக்கும், அது இருக்கும்போது இருப்பதால்)

எல்லா பதார்த்தங்களுக்கும் பிரஹ்மத்திலிருந்து உத்பத்தி என்பதினால் பிரஹ்மம் ஜகத் காரணம் என்று இதுவரை எடுத்துக் காட்டினபடியால், ஜகத்தில் இருக்கிற ஜீவன் என்பதும் பிரஹ்மத்திலிருந்து உண்டான பதார்த்தமா? என்று இங்கு விசாரிக்கப்படுகிறது.

**जीवस्य जन्ममरणे वपुषो वाऽऽत्मनो हि ते ।**

जातो मे पुत्र इत्युक्तेर्जातकर्मादितस्तथा ।।१९।।
मुख्ये ते वपुषो भाक्ते जीवस्यैते अपेक्ष्य हि ।
जातकर्म च लोकोक्तिर्जीवापेतेति शास्त्रतः ।।२०।।

ஜீவஸ்ய ஜந்மமரணே வபுஷோ வாஆத்மநோ ஹி தே।
ஜாதோ மே புத்ர இத்யுக்தேர்ஜாதகர்மாதி$_3$தஸ்ததா$_2$।। 19
முக்$_2$யே தே வபுஷோ பா$_4$க்தே ஜீவஸ்யைதே அபேக்ஷ்ய ஹி।
ஜாதகர்ம ச லோகோக்திர்ஜீவாபேதேதி சாஸ்த்ரத:।। 20

(அ..ம்)

பிறப்பு இறப்பு இரண்டும் ஜீவனுக்கா? சரீரத்திற்கா? "எனக்கு புத்திரன் பிறந்திருக்கிருன்" என்று (உலகத்தில்) சொல்வதினுலும், அப்படியே (சாஸ்திரத்தில்) ஜாதகர்மா முதலியது சொல்லியிருப்பதினுலும், அவை இரண்டும் ஆத்மாவுக்குத் தான்.

அவையிரண்டும் சரீரத்திற்குத்தான் முக்கியமாயுள்ளவை, ஜீவனுக்கு உபசாரமாய்ச் சொல்லப்படுபவை. (சரீரத்திற்குரிய) அவைகளையபேக்ஷித்து (சாஸ்திரத்தில்) ஜாதகர்மாவும், உலகப் பேச்சும் ஏற்பட்டிருக்கின்றன. "ஜீவனுல் விடப்பட்ட" என்று சாஸ்திரம் சொல்வதால்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"எனக்கு புத்திரன் பிறந்திருக்கிருன்" என்ற உலக வியவஹாரத்திலுைம், சாஸ்திரத்திலேயே பிறந்தவுடன் ஜாதகர்மா முதலான ஸம்ஸ்காரங்கள் விதிக்கப்பட்டிருப்பதினுலும், பிறப்பு, இறப்பு என்பது ஜீவனுக்குத்தான் என்று ஏற்படுகிறது.

ஸித்தாந்தம் :

ஜீவனுக்கு மரணம் வாஸ்தவமென்று வைத்துக் கொண்டால் அவன் ஜீவித்திருக்கும் போது செய்துள்ள நல்ல செய்கைகள், கெட்ட செய்கைகள் இவைகளுக்கெல்லாம் பலன் ஏற்படுவதற்கு இடமில்லாமலே போய்விடும். அப்படியே ஜீவனுக்கு புதிதாக பிறப்பது என்பது வாஸ்தவமாயிருந்தால், அவன் இப்பொழுது அனுபவிக்கப் போகிற ஸுகதுக்கங்களுக்குக் காரணம் கிடையாதென்றும் ஏற்பட்டுவிடும். இவ்விதமாக செய்தது வீண் போகுதல், செய்யாதது பலன் கொடுத்தல், என்று இரண்டு வித தோஷங்கள் ஏற்படும் ஆகையால் ஜனனம், மரணம் இரண்டும் சரீரத்திற்கே தவிர, ஜீவனுக்கு கிடையாது. ஆனுல் தேஹத்தையும் ஜீவனையும் பிரித்து அறியாம

லிருக்கும் தசையில், தேஹத்திற்குரிய தர்மங்கள் ஜீவனுக்கே யிருப்பதாகத் தோன்றுகிறது. இது வாஸ்தவமில்லை. தோற்றமே யானதினால் கௌணமென்றும் மித்யையென்றும் சொல்லப்படுகிறது. இவ்விதம் உபசாரமாக ஜீவனுக்குச் சொல்லப்படும் ஜனன மரணத்தை வைத்துக் கொண்டு உலகத்திலும், கர்ம சாஸ்திரத்திலும் வியவஹாரம் ஏற்பட்டிருக்கிறது. வாஸ்தவமான தத்வத்தைச் சொல்லும் உபநிஷத்திலோ "जीवापेतं वाव किलेदं म्रियते, न जीवो म्रियते" "ஜீவனால் விடப் பட்டு இருக்கும் இது (சரீரம்) அல்லவா மறிக்கிறது? ஜீவன் மறிப்பதில்லை" என்று மரணமென்பது ஜீவன் விலகிக் கொண்ட சரீரத்திற்கேதானென்றும் ஜீவனுக்கு மரணம் கிடையாதென்பதையும் வியக்தமாய் காண்கிறோம். ஆகையால் ஜனனமரணம் சரீரத்திற்குத்தான். ஜீவனுக்கு இல்லை.

## ११.आत्माधिकरणम्

## 11.ஆத்மாதி₄கரணம்

(ஸூத்ரம் 17)

**नात्माऽश्रुतेर्नित्यत्वाच्च ताभ्यः ।१७।**

நாத்மாஅச்ருதேர்நித்யத்வாச்ச தாப்₄ய: .17.

(ஆத்மா (உண்டாவது) இல்லை, சிரவணமில்லாததினால் அவைகளிலிருந்து நித்யமாயிருப்பதாலும்)

ஜீவனுக்கு ஜனனமே கிடையாது என்றால், அவன் எப்பொழுதும் இருக்கிறவன் என்று ஏற்படுகிறது. அப்படியே மரணமும் கிடையாது என்றால், பிரளயத்திலும் நாசமடையாமலிருக்கிறவன் என்று ஏற்படுகிறது. அப்படியானால் ஜகத்தை ஸ்ருஷ்டி செய்வதற்கு முன்னால் பிரஹ்மம் "एकमेव" "ஒன்று மாத்திரமே" "अद्वितीयं" "இரண்டாவதற்றதாக இருந்தது" என்ற வாக்கியம், ஜீவன் இருக்கும் போது, எப்படி வாஸ்தவமாகும்? என்பது இங்கு விஷயம்.

**कल्पादौ ब्रह्मणो जीवो वियद्वज्जायते न वा।**
**सृष्टेः प्रागद्वयत्वोक्तेर्जायते विस्फुलिङ्गवत् ।।२१।।**
**ब्रह्माद्वयं जातबुद्धौ जीवत्वेन विशेत्स्वयम् ।**
**औपाधिकं जीवजन्म नित्यत्वं वस्तुतः श्रुतम् ।।२२।।**

கல்பாதௌ₃ ப்₃ரஹ்மணோ ஜீவோ வியத்₃வஜ்ஜாயதே ந வா।
ஸ்ருஷ்டே: ப்ராக₃த்₃வயத்வோக்தேர்ஜாயதே விஸ்பு₂லிங்க₃வத்।। 21
ப்₃ரஹ்மாத்₃வயம் ஜாதபு₃த்₃தௌ₄ ஜீவத்வேன விசேத்ஸ்வயம்।
ஔபாதி₄கம் ஜீவஜன்ம நித்யத்வம் வஸ்துத: ச்ருதம்।। 22

(அ..ம்)
கல்பத்தின் ஆரம்பத்தில் பிரஹ்மத்தினிடமிருந்து ஆகாசம் போல, ஜீவன் உண்டாகிருனு, இல்லையா? ஸ்ருஷ்டிக்கு முன்னுல் (பிரஹ்மத்திற்கு) இரண்டாவதற்றதன்மை சொல்லியிருப்பதால், (ஜீவன்) உண்டாகிருன், தீப்பொறிபோல.
பிரஹ்மம் இரண்டாவதற்றது தான். (ஆனுல்) ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கும் புத்தியில் ஜீவத்தன்மையுடன் தானே புகுந்து கொள்கிறது. (ஆகையால்) ஜீவனுக்கு உத்பத்தி என்பது உபாதியைக் கொண்டும், நித்யத் தன்மை வாஸ்தவமாகவும் சொல்லப்படுகிறது.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் ஜீவன் உண்டாகிறதில்லையென்ருல், ஸ்ருஷ்டிக்கு முன் பிரஹ்மம் ஒன்ருகவே இரண்டாவதற்றதாக இருந்தது என்று சொல்வது பிசகாகிவிடும். மேலும் சுருதியே "यथाऽग्नेः क्षुद्राः विस्फुलिङ्गाः व्युच्चरन्ति, एवमेतस्मादात्मनः सर्वे प्राणाः, सर्वे लोकाः, सर्वे वेदाः, सर्वाणि भूतानि, सर्व एव आत्मानो व्युच्चरन्ति" "எப்படி அக்னியிலிருந்து சிறு தீப்பொறிகள் நன்கு வெளிவருகின்றனவோ, அவ்விதம் இந்த ஆத்மாவிலிருந்து எல்லா பிராணன்களும், எல்லா உலகங்களும், எல்லா வேதங்களும், எல்லா பூதங்களும், இந்த எல்லா ஜீவர்களும், நன்ருக வெளிக்கிளம்புகின்றன" என்று வியக்தமாய் ஜீவனுடைய உத்பத்தியை எடுத்தும் சொல்லியிருக்கிறது.ஆகையால் கல்பத்தின் ஆரம்பத்தில் ஆகாசம் முதலியது எப்படி உண்டாகியதோ அப்படியே ஜீவனும் பிரஹ்மத்தினிடமிருந்து உண்டாகிருன்.

ஸித்தாந்தம் :
எது இரண்டாவதற்ற பிரஹ்மம் என்று சொல்லப்பட்டதோ, அதுவே புத்தி ஸ்ருஷ்டிக்கப்பட்டவுடன் அதில் பிரதிபலித்து ஜீவன் என்ற உருவத்துடன் பிரவேசிக்கிறது. "तत् सृष्ट्वा तदेवानुप्राविशत्" "அதை ஸ்ருஷ்டி செய்து விட்டு அதையே அனுஸரித்து புகுந்தார் "என்றும், "अनेन जीवेन आत्मना अनुप्रविश्य" "இந்த ஜீவன் என்ற ஸ்வரூபமாகப் பிரவேசித்து" என்றும், சொல்லப்படுவதால் பிரஹ்மமே தான் ஜீவன் என்ற ரூபத்துடனிருக்கிறதென்பதால் ஜீவன் புதிதாக உண்டாகிறதற்கு அவசியமேயில்லை. ஜீவன் உண்டாகாததினுல் பிரஹ்மத்தின் இரண்டாவதற்ற தன்மைக்குக் கெடுதலுமில்லை. தீப்பொறி போலவென்று சொன்னது உபாதிகளை ஸம்பந்தித்துத் தோன்றக்கூடிய

உத்பத்தியைக் கருதி சொல்லப்பட்டது தான். வாஸ்தவத்தில் ஜீவன் உண்டாகிறவனுைல் செய்ததிற்கு நாசம் முதலான தோஷங்கள் முன்னமே காட்டப்பட்டிருக்கின்றன. வாஸ்தவத்தில் ஜீவன் நித்யமாயுள்ளவன் என்பதை "नित्यो नित्यानां चेतनः चेतनानाम् " "நித்யமாய் உள்ளவைகளுக்கெல்லாம் நித்யமானது, சேதனமாய் உள்ளவைகளுக்கெல்லாம் சேதனமானது" என்பது முதலான வாக்கியங்கள் சொல்லுகின்றன. "न जायते म्रियते वा, अजो नित्यः शाश्वतोऽयम्" "இவர் பிறப்பதில்லை, இறப்பதுமில்லை. பிறப்பற்றவர், எப்பொழுதுமுள்ளவர், சாசுவதமாயிருப்பவர்" என்ற வாக்கியங்களும் அவ்விதமே சொல்கின்றன. ஆகையால் கல்ப ஆரம்பத்தில் ஜீவனுக்கு உத்பத்தி கிடையாது.

## १२.ज्ञाधिकरणम्

## 12.ஜ்ஞாதி₄கரணம்

(ஸூத்ரம் 18)

ज्ञोऽत एव ।१८।

ஜ்ஞோஅத ஏவ .18.

(இதனாலேயே ஞானஸ்வரூபர்)

பிரஹ்மமே ஜீவன் என்பதால் ஜீவனும் சைதன்ய ஸ்வரூபனு? அல்லது புத்தியில் பிரவேசிப்பதினுலேயே ஜீவனுவதால் புத்தியுடன் சேருவதினுல் ஜீவனிடம் சைதன்யமேற்படுகிறதா? என்பது விஷயம்.

अचिद्रूपोऽथ चिद्रूपो जीवोऽचिद्रूप इष्यते ।
चिदभावात्सुषुप्त्यादौ जाग्रच्चिन्मनसा कृता ।।२३।।
ब्रह्मत्वादेव चिद्रूपश्चित्सुषुप्तौ न लुप्यते ।
द्वैतादृष्टिर्द्वैतलोपान्नहि द्रष्टुरिति श्रुतेः ।।२४।।

அசித்₃ரூபோஅத₂ சித்₃ரூபோ ஜீவோஅசித்₃ரூப இஷ்யதே।
சித₃பா₄வாத்ஸுஷுப்த்யாதௌ₃ ஜாக்₃ரச்சிந்மனஸா க்ருதா।। 23
ப்₃ரஹ்மத்வாதே₃வ சித்₃ரூபச்சித்ஸுஷுப்தௌ ந லுப்யதே।
த்₃வைதாத்₃ருஷ்டிர்த்₃வைதலோபான்னஹி த்₃ருஷ்டுரிதி ச்ருதே:।। 24

(அ..ம்)

ஜீவன் சைதன்ய ஸ்வரூபனில்லையா? அல்லது சைதன்யஸ்வரூபனு? நல்ல தூக்கம் முதலானதில், அறிவு இல்லாததினுல் (ஜீவன்) சைதன்ய ஸ்வரூபன் அல்லவென்று கருதப்படுகிறது. விழிப்பு ஸமயத்திலுள்ள அறிவு மனஸினுல் ஏற்படுகிறது.

பிரஹ்மமாகவிருப்பதினாலேயே (ஜீவன்) சைதன்ய ஸ்வரூபன்; நல்ல தூக்கத்தில் சைதன்யம் போய்விடவில்லை; (அப்பொழுது) இரண்டாவது பார்க்கப்படாமல் இருப்பது இரண்டாவது இல்லாததினால், "பார்ப்பவனுக்கு (இல்லாமை) கிடையாதல்லவா" என்று சுருதி சொல்வதால்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

நல்ல தூக்கம், மூர்ச்சை, ஸமாதி என்ற நிலைகளில் அறிவு இல்லாததினாலும் ஜீவன் மாத்திரம் இருந்து வருவதினாலும் ஜீவனுடைய ஸ்வரூபம் அறிவற்றது என்று தெரிகிறது. அப்படியானால் விழித்துக் கொள்ளும் போது அறிவு எப்படியிருக்கிறது என்றால், ஆத்மாவிற்கும், மனஸிற்கும் சேர்க்கையேற்படும் போது அறிவு என்ற குணம் உண்டாகிறது என்று தார்க்கிகர்கள் சொல்கிறார்கள்.

ஸித்தாந்தம் :

அது பிசகு. அறிவு ஸ்வரூபமாயுள்ள பிரஹ்மமே ஜீவ ரூபத்துடன் பிரவேசித்தது என்பதால் ஜீவன் அறிவு ஸ்வரூபன் தான். நல்ல தூக்கம் முதலிய நிலைகளில் சைதன்யம் போய்விடவில்லை. அந்த நிலைகளுக்கும் ஸாக்ஷியாயிருந்து கொண்டு இருக்கவேயிருக்கிறான். அப்படி ஸாக்ஷியாக இல்லையானால் விழிப்பு வந்தவுடன் "நான் தூக்கத்தில் இருந்தேன் மூர்ச்சையில் இருந்தேன்" என்று ஞாபகம் வருவது ஸாத்தியமாகாது. அப்படியானால், தூக்கம் முதலான நிலைகளில் ஏன் இரண்டாவது பதார்த்தம் எதுவும் தெரியவில்லையென்றால், இரண்டாவது பதார்த்தங்கள் மறைந்ததால் என்று சொல்கிறோம். வேதமும் "यत् वै तत् न पश्यति पश्यन् वै तत् न पश्यति, न हि द्रष्टुः दृष्टेः विपरिलोपो विद्यतेऽविनाशित्वात्, न तु तत् द्वितीयं अस्ति ततोऽन्यत् विभक्तं यत् पश्येत्" "அவன் அப்பொழுது பார்க்கவில்லையென்பது எதுவோ, அவன் அப்பொழுது பார்கிறவனாயிருந்து கொண்டே பார்க்கவில்லை. ஏனென்றால், நாசமடையும் தன்மையற்றதால், பார்க்கிறவனுடைய பார்வைக்கு இல்லாமையென்பது கிடையாது. ஆனால் அப்பொழுது அவனை விட வேறாக வேறுபட்டதாக எதை பார்க்க வேண்டுமோ அவ்வித இரண்டாவதான பதார்த்தம் அங்கு இல்லை" என்று சொல்கிறது. அதாவது அங்கே நல்ல தூக்கத்தில் ஜீவன் எதையும் பார்ப்பதில்லையென்று எது உலகத்தில் உள்ளவர்களால் சொல்லப்படுகிறதோ, அது சரியல்ல. பார்த்துக் கொண்டேயிருக்கும்

ஜீவன் அப்பொழுதும் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறுன். ஆனுல் பார்க்கவில்லையென்று பிராந்தியினுல் சொல்லப் படுகிறுன். அந்த பார்த்தல் எப்படியென்றதற்குக் காரணம் சொல்லப் படுகிறது. பார்க்கும் ஸ்வபாவத்தை உடைய ஆத்மாவின் ஸ்வரூபமாய்யுள்ள பார்வை ஒரு நாளும் நாசமடையும் தன்மையற்றதால் அதற்குக் கேடு கிடையவே கிடையாது. தவிரவும் அந்த ஸமயத்தில் அறிவு கிடையாது என்று சொல்வதற்குத்தான் ஸாக்ஷி யார்? யாரும் அறியாத அறிவின் இல்லாமைக்கு இருப்புண்டு என்ருல் அர்த்தமற்ற பேச்சு. ஆகையால் அந்த அறிவின் இல்லாமையையும் அறிகிறவனுக ஒரு சைதன்யம் இருந்தாக வேண்டும். அதை மறுக்க முடியாது. அப்படியானுல் பார்க்கவில்லை என்று உலகத்தார் சொல்வதற்கு என்ன காரணம் என்ருல் அப்பொழுது பிரஹ்ம சைதன்யத்தைத் தவிர வேருக செய்கை, செய்ய உதவும் வஸ்துக்கள், செய்கையின் பலன், என்ற உருவம் கொண்ட ஜகத்தென்று பெயரையுடைய தனித்து வேறுபட்டதாய் உள்ள இரண்டாவது பதார்த்தம் எதுவோ அது அப்பொழுது அதன் காரணவஸ்து இல்லாமலிருப்பதால் தெரியவில்லை. ஆகையால் அப்பொழுது விழிப்பு ஸமயத்திலிருப்பது போல, பார்க்கிறவன் பார்க்கப்படுவது பார்ப்பது என்ற வியவஹாரம் இல்லாததினுல், அவன் பார்க்கவில்லையென்று உலகத்தார் பிரமிக்கிருர்கள். ஆகையால் ஜீவன் சைதன்யஸ்வரூபமாயிருப்பவனே தான்.

## १३.उत्क्रान्त्यधिकरणम्

## 13.உத்க்ராந்த்யதி$_4$கரணம்

(ஸூத்ரம் 19 - 32)

**उत्क्रान्तिगत्यागतीनाम् ।१९।**

உத்க்ராந்திக$_3$த்யாக$_3$தீநாம் .19.

(வெளிக்கிளம்புவது, போவது, வருவது இவைகளுக்கு)

**स्वात्मना चोत्तरयोः ।२०।**

ஸ்வாத்மநா சோத்தரயோ: .20.

(தன் ஸ்வரூபத்துடனே மேலுள்ள இரண்டுக்கும்)

**नाणुरतच्छ्रुतेरिति चेन्नेतराधिकारात् ।२१।**

நாணுரதச்ச்$_2$ருதேரிதி சேந்நேதராதி$_4$காராத் .21.

(அணுவல்ல, அணுத்தன்மைக்கு விபரீதமான பரிமாணம் சொல்லியிருப்பதால், என்றால், அப்படியல்ல மற்றவரின் பிரகரணமானதினால்)

**स्वशब्दोन्मानाभ्यां च ।२२।**

ஸ்வசப்$_3$தோ$_3$ந்மாநாப்$_4$யாம் ச .22.
(தன் சப்தம், சிறிய அளவு இவைகளாலும்)

**अविरोधश्चन्दनवत् ।२३।**

அவிரோத$_4$ச்சந்த$_3$நவத் .23.
(விரோதமில்லை, சந்தனம்போல)

अवस्थितिवैशेष्यादिति चेन्नाभ्युपगमाद्धृदि हि ।२४।

அவஸ்தி$_2$திவைசேஷ்யாதி$_3$தி சேந்நாப்$_4$யுபக$_3$மாத்$_3$த்$_4$ருதி$_3$ ஹி .24
(இருப்பில் விசேஷமிருப்பதால் என்றால் இல்லை,
ஒப்புக்கொள்வதால்)

**गुणाद्वा लोकवत् ।२५।**

கு$_3$ணாத்$_3$வா லோகவத் .25.
(குணத்தினாலவது, உலகத்தில்போல)

**व्यतिरेको गन्धवत् ।२६।**

வ்யதிரேகோ க$_3$ந்த$_4$வத் .26.
(வேறு, கந்தம் போல)

**तथा च दर्शयति ।२७।**

ததா$_2$ ச த$_3$ர்சயதி .27.
(அப்படியேயும் காட்டுகிறது)

**पृथगुपदेशात् ।२८।**

ப்ருத$_2$கு$_3$பதே$_3$சாத் .28.
(தனியாக உபதேசிப்பதால்)

**तद्गुणसारत्वात्तु तद्व्यपदेशः प्राज्ञवत् ।२९।**

தத்$_3$கு$_3$ணஸாரத்வாத்து தத்$_4$வ்யபதே$_3$ச: ப்ராஜ்ஞவத் .29.
(ஆனால், அதன் குணத்தை ஸாரமாயுள்ளதால்,
அந்த வியபதேசம், பிராக்ஞனுக்குப்போல)

**यावदात्मभावित्वाच्च न दोषस्तद्दर्शनात् ।३०।**

யாவதா$_3$த்மபா$_4$வித்வாச்ச ந தோ$_3$ஷஸ்தத்$_3$த$_3$ர்சனாத் .30.
(தான் இருக்கும்வரையிருப்பதாலும் தோஷமில்லை,
அவ்விதம் காண்பதால்)

**पुंस्त्वादिवत्त्वस्य सतोऽभिव्यक्तियोगात् ।३१।**

பும்ஸ்த்வாதி$_3$வத்த்வஸ்ய ஸதோஅபி$_4$வ்யக்தியோகா$_3$த் .31.
(புருஷத்தன்மை முதலியதைப்போலவே இவனுக்கு
இருப்பது வெளிப்படுவது பொருந்துவதால்)

**नित्योपलब्ध्यनुपलब्धिप्रसङ्गोऽन्यतरनियमो वाऽन्यथा ।३२।**

நித்யோபலப்$_3$த்$_4$யனுபலப்$_3$தி$_4$ப்ரஸங்கோ$_3$அன்யதரநியமோ
வாஅன்யதா$_2$ .32.
(வேறுவிதமானால் எப்போழுதும் அறிவு அறியாமை ஏற்படும்,
ஏதேனும் ஒன்றுக்கு நியமனமாவது)

ஜீவன் பிரஹ்மமேயாஞல் அவன் சரீரத்திலிருந்து வெளிக்கிளம்புகிறது வேறு லோகங்களுக்கும் போவது முதலியது எப்படி ஸாத்தியப்படும். அதிஞல் அவன் சிறியவஞக இருக்க வேண்டாமா? என்பது இங்கே விஷயம்.

जीवोऽणुः सर्वगो वा स्यादेषोऽणुरिति वाक्यतः ।
उत्क्रान्तिगत्यागमनश्रवणाच्चाणुरेव सः ।। २५ ।।
साभासबुद्ध्याणुत्वेन तदुपाधित्वतोऽणुता ।
जीवस्य सर्वगत्वं तु स्वतो ब्रह्मत्वतः श्रुतम् ।।२६।।

ஜீவோஅணு: ஸர்வகோ₃ வா ஸ்யாதே₃ஷோஅணுரிதி வாக்யத:।
உத்க்ராந்திக₃த்யாக₃மனச்ரவணாச்சாணுரேவ ஸ:।। 25
ஸாபா₄ஸபு₃த்₃த்₄யாணுத்வேன தது₃பாதி₄த்வதோஅணுதா।
ஜீவஸ்ய ஸர்வக₃த்வம் து ஸ்வதோ ப்₃ரஹ்மத்வத: ச்ருதம்।। 26

(அ..ம்)

ஜீவன் அணுவாயிருக்கலாமா? அல்லது எங்குமுள்ளவஞகவா? "இவன் அணு" என்ற வாக்கியத்திஞலும், வெளிக்கிளம்புதல், போகுதல், வருதல் எல்லாம் சொல்லப்படுவதாலும் அவன் அணுவே தான்.

ஆபாஸத்துடன் கூடின புத்தியிஞல் அணுத்தன்மையேற்படுவதால், அதை உபாதியாகவுடையதால் அணுத்தன்மை. ஆஞல் தன் நிலேயிலோ பிரஹ்மமாகவேயிருக்கும் தன்மையையுடையதால் ஜீவனுக்கு எங்கும் இருக்கும் தன்மை சொல்லப்பட்டிருக்கிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"एषोऽणुः आत्मा चेतसा वेदितव्यः" "இந்த ஆத்மா அணு, மனஸிஞல் அறிய வேண்டியவர்" என்று அணுத்தன்மை சொல்லியிருக்கிறது. மேலும் "अस्मात् शरीरात् उत्क्रामति" "இந்த சரீரத்திலிருந்து மேலே கிளம்புகிருன்" என்று கிளம்புதலும் "चन्द्रमसं एव ते सर्वे गच्छन्ति" "அவர்கள் எல்லாரும் சந்திரனேயே அடைகிருர்கள்" என்று போகுதலும், "तस्मात् लोकात् पुनः एति" "அந்த உலகத்திலிருந்த மறுபடியும் வருகிருன்" என்று வருதலும் சொல்லப் பட்டிருக்கின்றன. இந்த கிளம்புதல் முதலியவை எங்குமுள்ளவனிடம் பொருந்தாது. மத்யம பரிமாணம் (சரீரத்தில் அளவு) உள்ளவனென்று வைத்துக் கொண்டால் இவையாவும் பொருந்தும் ஆஞலும் அணு என்று சொல்லும் சுருதிக்கு விரோதப்படும். அத்துடன் அவ்வித அளவுள்ளது என்ருல்,

நித்யமாயிருக்கும் தன்மை பொருந்தாது. அந்த ஜீவன் அநித்யன் என்றே ஏற்பட்டுவிடும் அணுவிற்கோ நாசம் கிடையாது. ஆகையால் ஜீவன் அணு தான்.

ஸித்தாந்தம் :

சைதன்யத்தின் பிரதிபிம்பத்துடன் கூடிய புத்தி எங்குமுள்ளதல்ல. அதை ஜீவன் உபாதியாக வைத்துக் கொண்டிருப்பதால் இவனுக்கும் அணுத்தன்மை, வெளிக்கிளம்புதல் முதலியது பொருந்துகிறது. ஆனால் இந்த உபாதி ஸம்பந்தமற்று சொந்த நிலையில் ஜீவன் பிரஹ்மமாகவே இருப்பதால் எங்குமுள்ளவனே. "स वा एष महान् अज आत्मा" "அந்த இந்த ஆத்மா பெரியவர், பிறப்பற்றவர்" "सर्वव्यापी सर्वभूतान्तरात्मा""எல்லாவவற்றையும் வியாபித்திருக்கும் தன்மையுள்ளவர், எல்லா பிராணிகளின் உள்ளேயுமிருக்கும் ஆத்மா" என்பது முதலானதில் எங்குமுள்ள தன்மை சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ஜீவன் எங்குமுள்ளவன்.

## १४. कर्त्रधिकरणम्

### 14. கர்த்ரதி₄கரணம்

(ஸூத்ரம் 33 - 39)

**कर्ता शास्त्रार्थवत्त्वात् ।३३।**

கர்தா சாஸ்த்ரார்த₂வத்த்வாத் .33.

(கர்த்தா, சாஸ்திரம் பயனுள்ளதாயிருப்பதால்)

**विहारोपदेशात् ।३४।**

விஹாரோப₃தேசாத் .34.

(விஹாரம் உபதேசிக்கப்படுவதால்)

**उपादानात् ।३५।**

உபாதா₃நாத் .35.

(எடுத்துக்கொள்வதால்)

**व्यपदेशाच्च क्रियायां न चेन्निर्देशविपर्ययः ।३६।**

வ்யபதே₃சாச்ச க்ரியாயாம் ந சேந்நிர்தே₃சவிபர்யய: .36.

(கிரியையில் குறிப்பிடுவதாலும், இல்லையானால் குறிப்பிடுவது மாறியிருக்கும்)

**उपलब्धिवदनियमः ।३७।**

உபலப்₃தி₄வத₃நியம: .37.

(அறிவில் போல நியமம் இல்லை)

**शक्तिविपर्ययात् ।३८।**

சக்திவிபர்யயாத் .38.

(சக்தி வேறுபடுமானதினால்)

**समाध्यभावाच्च ।३९।**

ஸமாத்$_4$யபா$_4$வாச்ச .39.

(ஸமாதியில்லாமல் போய்விடுமானதினாலும்)

ஜீவன் எங்குமுள்ளவனுனல் அவனிடம் சலனரூபமான கர்மா எப்படிப் பொருந்தும்? என்பது விஷயம்.

**जीवोऽकर्ताऽथवा कर्ता धियः कर्तृत्वसंभवात् ।**
**जीवकर्तृतया किं स्यादित्याहुस्सांख्यमानिनः ।।२७।।**
**करणत्वात्र धीः कर्त्री यागश्रवणलौकिकाः ।**
**व्यापारा न विना कर्त्रा तस्माज्जीवस्य कर्तृता ।।२८।।**

ஜீவோஅகர்தாஅத$_2$வா கர்தா தி$_4$ய: கர்த்ருத்வஸம்ப$_4$வாத்।
ஜீவகர்த்ருதயா கிம் ஸ்யாதி$_3$த்யாஹுஸ்ஸாம்ரவ்யமானின:।। 27
கரணத்வாந்ந தீ$_4$: கர்த்ரீ யாக$_3$ச்ரவணலௌகிகா:।
வ்யாபாரா ந வினா கர்த்ரா தஸ்மாஜ்ஜீவஸ்ய கர்த்ருதா।। 28

(அ..ம்)

ஜீவன் செய்பவனு? அல்லது செய்யாதவனு? புத்திக்கு செய்யும் தன்மை பொருந்தக் கூடியதால் ஜீவனுக்கும் செய்யும் தன்மை என்பதினுல் என்ன கிடைக்கிறது? என்று ஸாங்கிய மத அபிமானிகள் சொல்கிருர்கள்.

கருவியாயிருப்பதால் புத்தி செய்வது இல்லை. யாகம், சிரவணம், உலகஸம்பந்தமானவை என்ற வியாபாரங்கள் செய்கிறவனன்னியில் இருக்க முடியாது. ஆகையால் ஜீவனுக்குச் செய்யும் தன்மை.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிரதானத்தின் கார்யமான புத்திக்கு மாறுதலடையும் தன்மையுள்ளதால் செய்கைகளைச் செய்யும் தன்மை அதற்குப் பொருந்தும். எவ்வித பற்றுதலும் இல்லாத "असङ्गो ह्ययं पुरुषः" "இந்தப் புருஷன் ஸங்கமற்றவன்" என்று சொல்லப்படுகிற ஆத்மாவினிடம் பொருந்தாது. ஆகையால் செய்வது புத்தியே தவிர ஜீவன் இல்லை என்று ஸாங்கியர் எண்ணுகிருர்கள்.

ஸித்தாந்தம் :

கருவியாயிருக்கும் தன்மையுடன் ஏற்பட்டிருக்கிற புத்திக்கும் செய்யும் சக்தியை, கல்பிப்பது ஸாத்தியமில்லை. கோடாலி கருவியாக மாத்திரம் இருக்குமே தவிர அது தானுகவே வெட்டுதல் என்ற செய்கையைச்

செய்வது காணப்படுவதில்லை. மேலும், புத்திக்கும் செய்யும் தன்மையைக் கொடுப்போமேயானால் அதற்கு வேறு கருவியை கல்பிக்க வேண்டிவரும். கருவியும், கர்த்தாவும் ஒன்ருகவிருக்க முடியாது. எப்பொழுதும் கருவி ஜடம், கர்த்தா சேதனன். கர்த்தாவே கிடையாது என்றும் சொல்லிவிட முடியாது. சாஸ்திரத்திலேயே கர்ம காண்டத்தில் யக்ஞயாகாதிகளை செய் என்றும், மேல் காண்டத்தில் சிரவண, மனனம் முதலியது செய்ய வேண்டுமென்றும் பற்பல வியாபாரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. உலகத்திலும் கிருஷி முதலான அநேக வியாபாரங்கள் செய்ய வேண்டியதாயிருக்கின்றன. இவை யாவும் கர்த்தாவை அபேக்ஷித்துக் கொண்டேயிருக்கின்றன. ஆகையால் ஜீவன் தான் கர்த்தா, வெறும் புத்தியல்ல.

## १५.तक्षाधिकरणम्

## 15.தக்ஷாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 40)

**यथा च तक्षोभयथा ।४०।**

யதா$_2$ ச தக்ஷோப$_4$யதா$_2$ .40.

(தச்சனைப் போலவும் இரண்டுவிதமாக)

ஜீவன் எங்குமுள்ளவனுனதினுல் சலனமற்றவன், சாஸ்திர உலக வியாபாரங்களைச் செய்கிறவன் என்ற இந்த இரண்டும் எப்படி ஒருவனிடத்தில் இருக்க முடியும்? என்று இந்த அதிகரணத்தில் காட்டுகிறுர்:

**कर्तृत्वं वास्तवं किं वा कल्पितं वास्तवं भवेत् ।**
**यजेतेत्यादिशास्त्रेण सिद्धस्याबाधितत्वतः ।। २९ ।।**
**असङ्गोहीति तद्बाधात्स्फटिके रक्ततेव तत् ।**
**अध्यस्तं धीचक्षुरादिकरणोपाधिसन्निधेः ।।३०।।**

கர்த்ருத்வம் வாஸ்தவம் கிம் வா கல்பிதம் வாஸ்தவம் ப$_4$வேத்।
யஜேதேத்யாதி$_3$சாஸ்த்ரேண ஸித்$_3$த$_4$ஸ்யாபாதி$_4$தத்வத:।। 29
அஸங்கோ$_3$ஹீதி தத்$_3$ப$_3$தா$_4$த்ஸ்பதிகே ரக்ததேவ தத்।
அத்$_4$யஸ்தம் தீ$_4$சக்ஷுராதி$_3$கரணோபாதி$_4$ஸந்நிதே$_4$:।। 30

(அ..ம்)

(ஜீவனுடைய) கர்த்தாவாயிருக்கும் தன்மை வாஸ்தவமா? அல்லது கல்பிக்கப் படுவது தானு? "யாகம் செய்யவும்" என்று சாஸ்திரத்தினுல்

ஏற்பட்டுள்ள செய்யும் தன்மைக்கு பாதிக்கப்படும் தன்மையில்லாததி ஞல் வாஸ்தவமாகத் தான் இருக்கும்.
"(அவன்) அஸங்கன் அல்லவா?" என்பதிஞல் அது பாதிக்கப்படுவதால், ஸ்படிகத்தில் சிவப்பாயிருக்கும் தன்மை போல அது (செய்யும் தன்மை) புத்தியின் கண் முதலான கருவிகளான உபாதிகளின் முன்னிலையில் (ஜீவனிடத்தில்) ஏற்றப்படுவது தான்.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
வேதத்திலேயே கர்ம காண்டத்தில் ஜீவனுக்கு கர்மங்கள் விதிக்கப் பட்டிருப்பதால், அதை வாஸ்தவமில்லையென்று சொல்வதற்கு எவ்வித நியாயமுமில்லாததிஞல், அவனுக்கு செய்யும் தன்மை வாஸ்தவமாகவே உள்ளது தான்.

ஸித்தாந்தம் :
ஜீவனுக்கு செய்யும் தன்மையுடன் ஸம்பந்தமுள்ளதாக சொன்னதை பாதித்து வேதத்திலேயே "असङ्गो ह्ययं पुरुषः""இந்த புருஷன் ஸங்கமற்றவன் அல்லவா?" என்று வாக்கியமிருக்கிறது. ஆகையால் அந்த தன்மை ஜீவனுக்கு வாஸ்தவமாய் இல்லை. எப்படி செம்பருத்திப்பூவின் ஸமீபத்தில் இருக்கும் ஸ்படிகத்தில் தோன்றும் சிவப்பாயிருக்கும் தன்மை வாஸ்தவமில்லாமல் ஏற்றப்பட்டதோ, அவ்வாறே புத்தியின் ஸமீபத்திலிருப்பதால் செய்யும் தன்மை ஆத்மாவினிடத்தில் ஏற்றப்படுகிறது. அதஞல் செய்யும் தன்மை ஜீவனிடத்தில் கல்பிதமே தவிர வாஸ்தவமில்லை.

## १६.परायत्ताधिकरणम्

16.பராயத்தாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 41,42)

परात्तु तच्छ्रुतेः ।४१।

பராத்து தச்ச்$_2$ருதே: .41.

(ஆனால், பரனிடமிருந்து,அவ்விதம் சொல்வதால்)

कृतप्रयत्नापेक्षस्तु विहितप्रतिषिद्धावैयर्थ्यादिभ्यः ।४२।

க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து

விஹிதப்ரதிஷித்$_3$தா$_4$வையர்த்$_2$யாதி$_3$ப்$_4$ய: .42.

(ஆனால், செய்த பிரயத்தனத்தை அபேக்ஷிக்கிறவர், விதிக்கப்பட்டது, தடுக்கப்பட்டது இவைகளுடைய வீணாகப்போகாதிருத்தல் முதலியவைகளிலிருந்து)

ஸ்வாபத்தில் செய்யும் தன்மையில்லாத ஜீவனைச் செய்யும் படிச்செய்வது எது? என்பது இங்கே விஷயம்.

प्रवर्तकोऽस्य रागादिरीशो वा रागतः कृषौ ।
दृष्टा प्रवृत्तिर्वैषम्यमीशस्य प्रेरणे भवेत् ।।३१।।
सस्येषु वृष्टिवज्जीवेष्वीशस्याविषमत्वतः ।
रागोऽन्तर्याम्यधीनोऽत ईश्वरोऽस्य प्रवर्तकः ।।३२।।

ப்ரவர்தகோஅஸ்ய ராகா₃தி₃ரீஷோ வா ராகத: க்ருஷௌ।
த்₃ருஷ்டா ப்ரவ்ரித்திர்வைஷம்யமீசஸ்ய ப்ரேரணே ப₄வேத்।। 31
ஸஸ்யேஷு வ்ருஷ்டிவஜ்ஜீவேஷ்வீசஸ்யாவிஷமத்வத:।
ராகோ₃அந்தர்யாம்யதீ₄னோஅத ஈச்வரோஅஸ்ய ப்ரவர்தக:।। 32

(அ..ம்)

இவனுக்கு (ஜீவனுக்கு) பிரவர்த்தகன் (பிரவிருத்தி செய்யச் செய்பவன்) ராகம் முதலியதா? அல்லது ஈசுவரரா? கிருஷியில் பிரவிருத்தி ராகத்தினுல் காணப்படுகிறது. (அப்படியே இங்கேயும் இருக்கும்) ஈசுவரர் பிரேரணை செய்கிருரென்ருல் அவருக்கு வைஷம்யம் (ஸமமாயில்லாத்தன்மை) ஏற்படும்.

பயிர்கள் விஷயத்தில் மழையைப் போல, ஜீவர்கள் விஷயத்தில் ஈசுவரருக்கு விஷமமாயிருக்கும் தன்மை இல்லாததினுல், ராகமும் அந்தர்யாமிக்கு (உள்ளிருந்து) நியமனம் செய்யும் ஈசுவரருக்கு அடங்கியுள்ளது, அதனுல் இவனுக்கு பிரவர்த்தகன் ஈசுவரர்தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

உலகத்தில் கிருஷி முதலிய பிரவிருத்திகளைச் செய்கிற உழவன் முதலியவர்களை பிரவிருத்திக்கச் செய்வது ராகம் முதலியது என்பது நன்கு பார்க்கப்படுகிறது. ஆகையால் ஜீவனை பிரவிருத்திக்கச் செய்வதும், ராகம் முதலியதாகவேயிருக்கும். அப்படிக்கன்னியில் ஈசுவரர்தான் பிரவிருத்திக்கச் செய்கிறவர் என்ருல், சிலரை தர்ம கார்யங்களிலும், சிலரை அதர்ம கார்யங்களிலும் ஏவுகிருர் என்று வருமானதினுல் அவருக்கு இருக்க வேண்டிய நடுநிலைமை கெட்டு வைஷம்யம், பக்ஷபாதம் உண்டென்று ஏற்படுவதைத் தடுக்க முடியாது. ஆகையால் ஈசுவரர் பிரவர்த்தகர் இல்லை.

ஸித்தாந்தம் :
ஈசுவரர் மழை போலவிருப்பதால் அவரிடத்தில் வைஷம்யம் என்ற தோஷத்திற்கு இடமேயில்லை. பயிர்கள் விருத்தியாவதற்கு மழை காரணமாயிருந்த போதிலும் நெல்,யவம் முதலிய தான்யங்கள் வேறுபடுவதற்குக் காரணம் அந்தந்த விதைகளே தவிர மழை காரணமாகாது. எல்லா பயிர்களுக்கும் பொதுவான காரணமாயிருக்கும் தன்மை தான் மழைக்கு உண்டு. அப்படியே அந்தந்த ஜீவன்கள் அவரவர்களுக்கு ஏற்றபடி பிரவிருத்திக்கட்டும் என்று பொதுவாக அனுமதி கொடுப்பதால், பொதுவாய் உள்ள பிரவர்த்தகத் தன்மைதான் அவரிடம் உண்டு. அவ்விதம் பொதுவான பிரவர்த்தகராக மாத்திரமிராமல் விசேஷ கார்யங்களில் பிரவர்த்தகராயிருந்தாலும் கூட அவருக்கு வைஷம்யம் ஏற்படாது. ஏனென்றால், அவ்வித விசேஷ பிரவிருத்திக்குக் காரணம் அவரவர்களுடைய வாஸனைகளே தவிர, ஈசுவரர் இல்லை. முன் செய்துள்ள கர்மாக்களின் வாஸனைகளே அவர்களை இப்பொழுதுப் பிரவிருத்திக்கச் செய்கிறது. முன் செய்த கர்மாக்கள் ஸுகதுக்க ரூபமான பலனைத் தானேகொடுக்கும். இன்னொரு கர்மாவிற்குக் காரணமாக ஆகுமா? என்றால் வாஸ்தவம். ஆனால் ஸுகதுக்க ரூபமான பலனைக் கொடுப்பதற்காக ஜீவனை ஏதேனும் கார்யத்தைச் செய்யுமாதலால் வேறு கர்மாவும் ஏற்பட்டுவிடுகிறது. ஆகையால் கர்மாவுக்கு பலன் கொடுக்க வேறு கர்மாவும் தேவைப்படும். இவ்விதமாக கர்மாக்களும் வாஸனைகளுமே கர்மாவிற்குக் காரணமாய் இருப்பதால் எல்லாம் அதனதன் தன்மைப்படி நடக்கட்டும் என்று அனுமதிக்கும் ஈசுவரருக்கு வைஷம்யம் எப்படி வரும்? உலகத்தில் ராகம் பிரவிருத்திக்கச் செய்கிறதாகக் காணப்படுகிறது என்று எது சொல்லப்படுகிறதோ, அது அப்படியேயிருக்கட்டும். அதனால் ஈசுவரருடைய பிரவர்த்தகத் தன்மைக்கு எவ்வித கெடுதலுமில்லை. ஏனென்றால் அந்தர்யாமியாயிருக்கிற ஈசுவரரால் அந்த ராகமும் கூட நியமிக்கப்படுவதாகவேயிருக்கிறது. ஆகையால் ஜீவனுக்கு பிரவர்த்தகர் ஈசுவரரே.

## १७.अंशाधिकरणम्
## 17.அம்சாதி₄கரணம்
(ஸூத்ரம் 43 - 53)

**अंशो नानाव्यपदेशादन्यथा चापि दाशकितवादित्वमधीयत एके ।४३।**

அம்சோ நாநாவ்யபதே$_3$சாத$_3$ந்யதா$_2$ சாபி
தா$_3$சகிதவாதி$_3$த்வமபி$_4$தீ$_4$யத ஏகே .43.
(அம்சம், பலவாக குறிப்பிட்டிருப்பதால், வேறுவிதமாகவும்கூட
தாசன்,கிதவன் முதலானவர்களின் தன்மையைச் சிலர்
சொல்கிறார்கள்)

मन्त्रवर्णाच्च ।४४।
மந்த்ரவர்ணாச்ச .44.
(மந்திரவர்ணத்திலிருந்தும்)

अपिच स्मर्यते ।४५।
அபிச ஸ்மர்யதே .45.
(ஸ்மரிக்கவும் படுகிறது)

प्रकाशादिवन्नैवं परः ।४६।
ப்ரகாசாதி$_3$வந்நைவம் பர:.46.
(பிரகாசம் முதலியதைப்போல, இவ்விதமில்லை பரமாத்மா)

स्मरन्ति च ।४७।
ஸ்மரந்தி ச .47.
(ஸ்மரிக்கவும் செய்கிறார்கள்)

अनुज्ञापरिहारौ देहसम्बन्धाज्ज्योतिरादिवत् ।४८।
அநுஜ்ஞாபரிஹாரௌ தே$_3$ஹஸம்பந்தா$_4$ச்ச்யோதிராதி$_3$வத் .48.
(அனுமதியும் பரஹாரமும் தேஹத்தின் ஸம்பந்தத்தினால்
ஜ்யோதிஸ் முதலியதைப்போல)

असन्ततेश्चाव्यतिकरः ।४९।
அஸந்ததேச்சாவ்யதிகர: .49.
(துடர்பு இல்லாததினாலும் கலப்பில்லை)

आभास एव च ।५०।
ஆபா$_4$ஸ ஏவ ச .50.
(ஆபாஸம்தான் என்பதினாலும்)

अदृष्टानियमात् ।५१।
அத்$_3$ருஷ்டாநியமாத் .51.
(அதிருஷ்டத்தில் நியமம் இல்லாததினால்)

अभिसन्ध्यादिष्वपि चैवम् ।५२।
அபி$_4$ஸந்த்$_4$யாதி$_3$ஷ்வபி சைவம் .52.
(அபிஸந்தி முதலியவைகளிலும் இப்படியே)

प्रदेशादिति चेन्नान्तर्भावात् ।५३।
ப்ரதே$_3$சாதி$_2$தி சேந்நாந்தர்பா$_4$வாத் .53.
(இடத்தினால் என்றால் இல்லை, உள்ளேயிருப்பதால்)

ஈசுவரர் ஜீவனுக்குப் பிரவர்த்தகர் என்ருல், அவ்விருவரும் வெவ்வேறு என்று ஏற்படாதா? அப்படியானுல் பிரஹ்மம் இரண்டாவதற்றது என்பது எப்படி? என்று விசாரிக்கப்படுகிறது.

**किं जीवेश्वरसाङ्कर्यम् व्यवस्था वा श्रुतिद्वयात् ।**
**अभेदभेदविषयात्साङ्कर्यं न निवार्यते ।। ३३ ।।**
**अंशोऽवच्छिन्न आभास इत्यौपाधिककल्पनैः ।**
**जीवेशयोर्व्यवस्था स्याज्जीवानां च परस्परम् ।।३४।।**

**கிம் ஜீவேத்வரஸங்கர்ய வ்யவஸ்தா$_2$ வா ச்ருதித்$_3$வயாத்।**
**அபே$_4$த$_3$பே$_4$த$_3$விஷயாத்ஸாங்கர்யம் ந நிவார்யதே।। 33**
**அம்சோஅவச்சி$_2$ன்ன ஆபா$_4$ஸ இத்யௌபாதி$_4$ககல்பனை:।**
**ஜீவேசயோர்வ்யவஸ்தா$_2$ ஸ்யாஜ்ஜீவாநாம் ச பரஸ்பரம்।। 34**

(அ..ம்)

ஜீவனுக்கும் ஈசுவரருக்கும் கலப்பா? அல்லது தனித்தனியென்று வியவஸ்தை உண்டா? வேறில்லையென்றும், வேறு என்றும் இரண்டு விஷயமாகவும், இரண்டு வித வாக்கியங்களிருப்பதால் கலப்பு பரிஹரிக்க முடியாது. (அதனுல் வியவஸ்தை கிடையாது).

அம்சம், அவச்சின்னம், ஆபாஸம் என்று உபாதிகளால் ஏற்பட்ட கல்பனைகளால் ஜீவனுக்கும் ஈசுவரருக்கும் வியவஸ்தை உண்டு, அப்படியே ஜீவர்களுக்குள் ஒவ்வொருவருக்கும் (வியவஸ்தை உண்டு).

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"तत् त्वं असि" "அதுவே நீ"என்றது முதலான சுருதி ஜீவனுக்கும் ஈசுவரருக்கும் அபேதத்தைச் சொல்கிறது. "आत्मा वा अरे द्रष्टव्यः""ஆத்மா அறியப்பட வேண்டியது" என்பது முதலிய சுருதி அறிகிறவன், அறியப்படுவது என்ற முறையில் பேதத்தைச் சொல்கிறது. அப்படி இருப்பதால், பேதசுருதியிருப்பதால் ஜீவனே கிடையாதென்று சொல்லிவிட முடியாது, அபேத சுருதியிருப்பதால் ஈசுவரருக்கு வேருக ஜீவன் உண்டென்று சொல்லவும் முடியாது. ஆகையால் வாஸ்தவமாய் இருந்து வருகிற ஜீவனுக்கு ஈசுவரருடன் கலந்து போகுதல் என்பதைத் தடுக்க முடியாது. எல்லா ஜீவர்களும் ஈசுவரருடன் அபேதம் என்பதால் ஜீவர்களுக்குள்ளும் ஒருவருக்கொருவர் கலப்பு இருந்தே தீரும். ஆகையால் இரண்டற்ற பிரஹ்மத்தைச் சொல்லும் மதத்தில் உலக விஷயமாய் எவ்வித வியவஸ்தையும் இருக்க முடியாது.

ஸித்தாந்தம் :

பசு மாட்டிற்கும் எருமைக்கும் எப்படி அத்தியந்த பேதமிருக்கிறதோ, அவ்விதம் ஜீவனுக்கும் ஈசுவரருக்கும் வாஸ்தவமாகபேதம் கிடையாதென்று இருந்த போதிலும், வியவஹாரதசையில் உபாதிகளால் கல்பிக்கப்படும் பேதம் இருக்கலாம். அந்த பேதத்தை மூன்று விதமாக எடுத்துச் சொல்கிறார்கள்.

1. அம்சம் :
"ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः"
"ஜீவர்களின் உலகத்தில் சாசுவதமாய் ஜீவனுயிருப்பவன் என்னுடைய அம்சம்" என்பதினுல் அம்சத்தன்மை அறியப்படுகிறது

2. அவச்சின்னம் :
குறுக்கப்பட்டது " समानः सन् उभौ लोकौ अनुसंचरति ""அவன் ஸமான மாயிருந்து இரண்டு லோகங்களேயும் அனுஸரித்து ஸம்சரிக்கிருன்" என்று விக்ஞானமயமான ஜீவனுக்கு விக்ஞானமென்று சொல்லப்படுகிற புத்தியோடு கூட ஒரே அளவுள்ளவனுகக் கண்டிருப்பதால், குடத்திலடங்கிய ஆகாசம் போல குறுக்கப்பட்ட தன்மை அறியப்படுகிறது.

3. ஆபாஸம் :
பிரதிபிம்பமாகத் தோற்றம் "एक एव हि भूतात्मा भूते भूते व्यवस्थितः। एकधा बहुधा चैव दृश्यते जलचन्द्रवत्" "ஒன்றுகவேயிருக்கிற எல்லா பூதங்களின் ஆத்மா ஒவ்வொரு பூதத்திலும் இருந்து கொண்டு ஒன்றுகவும் பலவாகவும், உலகங்களில் சந்திரன் போல காணப்படுகிருர்" என்று ஜீவனுக்கு ஆபாஸத்தன்மை (பிரதிபிம்பமாயிருப்பது) அறியப்படுகிறது. ஆகையால் எவ்விதத்திலும் பிரஹ்மத்தைச் சொல்கிறவருக்கு ஜீவனுக்கும், ஈசுவரருக்கும் வியவஸ்தை சொல்வது ஸுலபமாமேயாகும். ஜீவர்களுக்கு உள்ளேயோ அநேக ஜல பாத்திரங்களில் பிரதிபிம்பிக்கும் பல ஸூர்யப் பிரதிபிம்பங்கள் போல வியவஹாரதசையில் வியவஸ்தை சொல்வது இன்னமும் ஸுலபம். ஆகையால் இந்த மதத்தில் எவ்வித தோஷமும் கிடையாது.

இவ்விதம் இரண்டாவது அத்யாயம் மூன்ருவது பாதத்தில் அதிகரணங்கள் 17 சுலோகங்கள் 34 (ஸூத்ரங்கள் 53).

==============================

## *இரண்டாவது அத்யாயம் : நான்காவது பாதம்*

## १. प्राणोत्पत्त्यधिकरणम्

### 1. ப்ராணோத்பத்த்யதி₄கரணம்

(ஸூத்ரம் 1 - 4)

**तथा प्राणाः ।१।**

ததா₂ ப்ராணா: .1.

(அப்படியே பிராணன்கள்)

**गौण्यसम्भवात् ।२।**

கௌ₃ண்யஸம்ப₄வாத் .2.

(கௌணம் என்பது ஸம்பவிக்காததினால்)

**तत्प्राक्श्रुतेश्च ।३।**

தத்ப்ராக்ஷ்ருதேச்ச .3.

(அது முன்னால் சொல்லப்பட்டிருப்பதாலும்)

**तत्पूर्वकत्वाद्वाचः ।४।**

தத்பூர்வகத்வாத்₃வாச: .4.

(அதை முன்னிட்டிருப்பதால் வாக்குக்கு)

இந்த பாதத்தில் பிராணன் முதலிய தத்வங்கள் விசாரிக்கப்படுகின்றன. இந்திரியங்களுக்கு உத்பத்தியுண்டா? என்பது இந்த அதிகரணத்தின் விஷயம்.

**किमिन्द्रयाण्यनादीनि सृज्यन्ते वा परात्मना ।**
**सृष्टेः प्रागृषिनाम्नैषां सद्भावोक्तेरनादिता ।।१।।**
**एकबुद्धया सर्वबुद्धेर्भौतिकत्वाज्जनिश्रुतेः ।**
**उत्पद्यन्तेऽथ सद्भावः प्रागवान्तरसृष्टितः ।।२।।**

கிமிந்த்₃ரயாண்யநாதீ₃நி ஸ்ருஜ்யந்தே வா பராத்மனா।
ஸ்ருஷ்டே: ப்ராக்₃ருஷிநாம்நைஷாம் ஸத்₃பா₄வோக்தேரநாதி₃தா ।। 1
ஏகபு₃த்₃த₄யா ஸர்வபு₃த்₃தே₄ர்பௌ₄திகத்வாஜ்ஜநிச்ருதே:।
உத்பத்₄யந்தேஅத₂ ஸத்₃பா₄வ: ப்ராக₃வாந்தரஸ்ருஷ்டித: ।। 2

(அ..ம்)

இந்திரியங்கள் ஆதியற்றவைகளா? அல்லது பரமாத்மாவினுல் ஸ்ருஷ்டிக்கப் படுகின்றனவா? ஸ்ருஷ்டிக்கு முன்னுலேயே ரிஷிகள் என்ற பெயரால் இவைகளின் இருப்பு சொல்லப்பட்டிருப்பதால் இவைகளுக்கு ஆதியற்ற தன்மை தான்.

ஒன்றை அறிவதால் எல்லாம் அறியப்படுவதாகச் சொல்வதாலும், பூதங்களின் கார்யங்களாயிருப்பதினாலும், உண்டானதாக சுருதி இருப்பதினாலும் (அவை) உண்டாகின்றன. (அவைகளுக்குச் சொல்லப்படும்) இருப்போ மத்தியில் ஏற்படும் ஸ்ருஷ்டிக்கு முன்னால் (என்று தாத்பர்யம்).

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"ऋषयो वाव तेऽग्रे सत् आसीत् । तदाहुः के ते ऋषयः इति । प्राणा वाव ऋषयः।" "ஸத் முன்னால் அந்த ரிஷிகளாக இருந்தது, அங்கே அந்த ரிஷிகள் யார் என்று கேட்டார்கள். பிராணன்கள் (இந்திரியங்கள்) தான் ரிஷிகள்" என்ற வேதவாக்கியத்தினால் ஸ்ருஷ்டிக்கு முன்னமேயே இந்திரியங்கள் இருந்ததாகத் தெரிவதால் அவைகளுக்கு ஆதியற்ற தன்மை தான்.

ஸித்தாந்தம் :

இந்திரியங்கள் உண்டாவதில்லையென்று வைத்துக் கொண்டால் ஒன்றை அறிந்தால் எல்லாம் அறியப்பட்டதாக ஆகும் என்பது பொருந்தாது. மேலும் "अन्नमयं हि सोम्य मनः, आपोमयः प्राणः, तेजोमयी वाक्" "ஹே ஸோம்ய! அன்னத்தினால் செய்யப்பட்டது மனஸ், ஜலத்தினால் செய்யப்படுவது பிராணன், தேஜஸினால் ஏற்படுவது வாக்கு" என்று இந்திரியங்களுக்கு பூதங்களிலிருந்து ஏற்படும் தன்மை சொல்லப் பட்டிருக்கிறது. இதையும் தவிர வெகு ஸ்பஷ்டமாக "एतस्मात् जायते प्राणः मनः सर्वेन्द्रियाणि च" "இதிலிருந்து பிராணன் உண்டாகிறது, அப்படியே மனஸும் எல்லா இந்திரியங்களும்" என்று இந்திரியங்களுக்கு உத்பத்தி சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ருஷ்டிக்கு முன்னால் ரிஷியென்ற பெயருடன் இந்திரியங்கள் இருந்ததாகச் சொல்லப்படுகிறதேவென்றால், அங்கு சொல்லப்படும் ஸ்ருஷ்டி கல்ப ஆரம்பத்தில் உள்ள ஸ்ருஷ்டியல்ல, மத்தியில் ஏற்படும் ஸ்ருஷ்டியென்று விளக்கிக் கொள்ள வேண்டும். ஆகையால் இந்த இந்திரியங்களும் பரமாத்மாவினிடமிருந்து தான் உத்பத்தி ஆகின்றன.

## २.सप्तगत्यधिकरणम्

## 2.ஸப்தக₃த்யதி₄கரணம்

(ஸூத்ரம் 5,6)

**सप्त गतेर्विशेषितत्वाच्च ।५।**

ஸப்த க₃தேர்விசேஷிதத்வாச்ச .5.

(ஏழு, அறியப்படுவதினாலும், குறிப்பிடப்பட்டிருப்பதினாலும்)

## हस्तादयस्तु स्थितेऽतो नैवम् ।६।

ஹஸ்தாத₃யஸ்து ஸ்தி₂தேஅதோ நைவம் .6.
(ஆனால் கை முதலியவைகள், இருப்பதில், இதனால் இவ்விதமல்ல)

இந்திரியங்களின் எண்ணிக்கை இங்கு விஷயம்.

सप्तैकादश वाऽक्षाणि सप्त प्राणा इति श्रुतेः ।
सप्त स्युर्मूर्धनिष्ठेषु छिद्रेषु च विशेषणात् ।।३।।
अशीर्षण्यस्य हस्तादेरपि वेदे समीरणात् ।
ज्ञेयान्येकादशाक्षाणि तत्तत्कार्यानुसारतः ।।४।।

ஸப்தைகாத₃ச வாஅக்ஷாணி ஸப்த ப்ராணா இதி ச்ருதே:।
ஸப்த ஸ்யுர்மூர்த₄நிஷ்டே₂ஷு சி₂த்₃ரேஷு ச விசேஷணாத்।।3
அசீர்ஷண்யஸ்ய ஹஸ்தாதே₃ரபி வேதே₃ ஸமீரணாத்।
ஞேயான்யேகாத₃சாக்ஷாணி தத்தத்கார்யானுஸாரத:।।4

(அ..ம்)

இந்திரியங்கள் ஏழா? பதினொன்று? "सप्त प्राणाः प्रभवन्ति" "ஏழு இந்திரியங்கள் உண்டாகின்றன" என்று பொதுவான சுருதியிருப்பதினாலும், சிரஸிலுள்ள துவாரங்களில் என்று குறிப்பிட்டு இருப்பதாலும், ஏழாகத்தான் இருக்கும்.

சிரஸிலில்லாத கை முதலியதும் கூட வேதத்தில் சொல்லப்படுவதால் அததன் செயல்களையனுஸரித்து இந்திரியங்கள் பதினொன்று என்று தான் அறிய வேண்டியது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"ஏழு இந்திரியங்கள் உண்டாகின்றன" என்று சுருதியுடன் "सप्तवै शीर्षण्याः प्राणाः" "சிரஸிலுள்ள இந்திரியங்கள் ஏழுதான்" என்று சிரஸிலுள்ள துவாரங்களில் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டிருப்பதால் இந்திரியங்கள் ஏழு தான்.

ஸித்தாந்தம் :

சிரஸில் உள்ளவைகளைத் தவிர கை முதலானவேறு இந்திரியங்களும் வேதத்தில் சொல்லப்படுகின்றன. "हस्तौ चादातव्यं च, उपस्थश्च आनन्दयितव्यम् च, पायुश्च विसर्जयितव्यम् च, पादौ च गन्तव्यम् च" "இரண்டு கைகளும் எடுக்க வேண்டியதும், உபஸ்தமும் ஆனந்திக்க வேண்டியதும், பாயுறும் வெளிப்படுத்த வேண்டியதும், இரு கால்களும் போக வேண்டியதும்" என்று, மேலும் வேதத்திலிருந்தே அததன் செயல்களாகிய பார்த்தல்,

கேட்டல், முகர்தல், ருசித்தல், தொடுதல், பேசுதல், எடுத்தல், போகுதல், ஆனந்தித்தல், வெளிப்படுத்தல், தியானித்தல் ஆகிய பதினேரு வியாபாரங்கள் தெரிவதால் அவைகளுக்குக் கருவிகளாக இந்திரியங்களும் பதினென்று என்று தான் ஒப்புக் கொள்ள வேண்டும்.

## ३.प्राणाणुत्वाधिकरणम्
## 3.ப்ராணாணுத்வாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 7)

**अणवश्च ।७।**

அணவச்ச ..7..

(அணுக்களும்)

இந்திரியங்களின் அளவு இங்கு விஷயம்.

**व्यापीन्यणूनि वाक्षाणि सांख्या व्यापित्वमूचिरे ।**
**वृत्तिलाभस्तत्र तत्र देहे कर्मवशाद्भवेत् ।।५।।**
**देहस्य वृत्तिमद्भागेष्वेवाक्षत्वं समाप्यताम् ।**
**उत्क्रान्त्यादि श्रुतेस्तानि ह्यणूनि स्युरदर्शनात् ।।६।।**

வ்யாபீந்யணூநி வாக்ஷாணி ஸாங்க்$_2$யா வ்யாபித்வமூசிரே।
வ்ருத்திலாப$_4$ஸ்தத்ர தத்ர தே$_3$ஹே கர்மவஷாத்$_3$ப$_4$வேத்।। 5
தே$_3$ஹஸ்ய வ்ரித்திமத்$_3$பாகே$_3$ஷ்வேவாக்ஷத்வம் ஸமாப்யதாம்।
உத்க்ராந்த்யாதி$_3$ ச்ருதேஸ்தாநி ஹ்யணூநி ஸ்யுரத$_3$ர்சனாத்।। 6

(அ..ம்)

இந்திரியங்கள் வியாபகமானவைகளா? அல்லது அணுக்களா? ஸாங்கியர்கள் வியாபகமேவென்று சொல்கிறுர்கள். அந்த அந்த சரீரத்தில் கர்ம வசத்தினுல் (அவைகளுக்கு) செயல்படுவது ஏற்படும். இந்திரியத்தன்மை சரீரத்திலிருந்து வருகிற செயலுடன் கூடிய பாகங்களிலேயே முடித்து விடப்பட வேண்டும். வெளிக்கிளம்புதலைச் சொல்லும் சுருதியிருப்பதால், அவை பார்க்கப்படாததினுல் அணுக்கள் என்று ஆகின்றன.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

இந்திரியங்கள் ஸர்வ வியாபகங்கள். அவை அந்த அந்த சரீரத்துடன் ஸம்பந்தப்படும் போது அந்தந்த ஜீவனுல் செய்யப்பட்டுள்ள (முன் செய்துள்ள) கர்மாக்களையனுஸரித்து அவை வேலை செய்கின்றன என்று ஸாங்கியர் சொல்லுகிறுர்கள். அந்தந்த கர்மாவின் பலனை

हस्तादयस्तु स्थितेऽतो नैवम् ।६।
ஹஸ்தாத₃யஸ்து ஸ்தி₂தேஅதோ நைவம் .6.
(ஆனால் கை முதலியவைகள், இருப்பதில், இதனால் இவ்விதமல்ல)

இந்திரியங்களின் எண்ணிக்கை இங்கு விஷயம்.

सप्तैकादश वाऽक्षाणि सप्त प्राणा इति श्रुतेः ।
सप्त स्युर्मूर्धनिष्ठेषु छिद्रेषु च विशेषणात् ।।३।।
अशीर्षण्यस्य हस्तादेरपि वेदे समीरणात् ।
ज्ञेयान्येकादशाक्षाणि तत्तत्कार्यानुसारतः ।।४।।

ஸப்தைகாத₃ச வாஅக்ஷாணி ஸப்த ப்ராணா இதி ச்ருதே:।
ஸப்த ஸ்யுர்மூர்த₄நிஷ்டே₂ஷு சி₂த்₃ரேஷு ச விசேஷணாத்।।3
அசீர்ஷண்யஸ்ய ஹஸ்தாதே₃ரபி வேதே₃ ஸமீரணாத்।
ஜ்ஞேயான்யேகாத₃சாக்ஷாணி தத்தத்கார்யானுஸாரத:।।4

(அ..ம்)
இந்திரியங்கள் ஏழா? பதினொன்றா? "सप्त प्राणाः प्रभवन्ति" "ஏழு இந்திரியங்கள் உண்டாகின்றன" என்று பொதுவான சுருதியிருப்பதினாலும், சிரஸிலுள்ள துவாரங்களில் என்று குறிப்பிட்டு இருப்பதாலும், ஏழாகத்தான் இருக்கும்.
சிரஸிலில்லாத கை முதலியதும் கூட வேதத்தில் சொல்லப்படுவதால் அததன் செயல்களையனுஸரித்து இந்திரியங்கள் பதினொன்று என்று தான் அறிய வேண்டியது.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
"ஏழு இந்திரியங்கள் உண்டாகின்றன" என்று சுருதியுடன் "सप्तवै शीर्षण्याः प्राणाः" "சிரஸிலுள்ள இந்திரியங்கள் ஏழுதான்" என்று சிரஸிலுள்ள துவாரங்களில் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டிருப்பதால் இந்திரியங்கள் ஏழு தான்.

ஸித்தாந்தம் :
சிரஸில் உள்ளவைகளைத் தவிர கை முதலானவேறு இந்திரியங்களும் வேதத்தில் சொல்லப்படுகின்றன. "हस्तौ चादातव्यं च, उपस्थश्च आनन्दयितव्यम् च, पायुश्च विसर्जयितव्यम् च, पादौ च गन्तव्यम् च" "இரண்டு கைகளும் எடுக்க வேண்டியதும், உபஸ்தமும் ஆனந்திக்க வேண்டியதும், பாயுறும் வெளிப்படுத்த வேண்டியதும், இரு கால்களும் போக வேண்டியதும்" என்று, மேலும் வேதத்திலிருந்தே அததன் செயல்களாகிய பார்த்தல்,

கேட்டல், முகர்தல், ருசித்தல், தொடுதல், பேசுதல், எடுத்தல், போகுதல், ஆனந்தித்தல், வெளிப்படுத்தல், தியானித்தல் ஆகிய பதினேரு வியாபாரங்கள் தெரிவதால் அவைகளுக்குக் கருவிகளாக இந்திரியங்களும் பதினொன்று என்று தான் ஒப்புக் கொள்ள வேண்டும்.

## ३.प्राणाणुत्वाधिकरणम्

## 3.ப்ராணாணுத்வாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 7)

**अणवश्च ।७।**

அணவச்ச ..7..

(அணுக்களும்)

இந்திரியங்களின் அளவு இங்கு விஷயம்.

**व्यापीन्यणूनि वाक्षाणि सांख्या व्यापित्वमूचिरे ।**
**वृत्तिलाभस्तत्र तत्र देहे कर्मवशाद्भवेत् ।।५।।**
**देहस्य वृत्तिमद्भागेष्वेवाक्षत्वं समाप्यताम् ।**
**उत्क्रान्त्यादि श्रुतेस्तानि ह्यणूनि स्युरदर्शनात् ।।६।।**

வ்யாபீந்யணூநி வாக்ஷாணி ஸாங்க்$_2$யா வ்யாபித்வமூசிரே।
வ்ருத்திலாப$_4$ஸ்தத்ர தத்ர தே$_3$ஹே கர்மவஷாத்$_3$ப$_4$வேத்।। 5
தே$_3$ஹஸ்ய வ்ரித்திமத்$_3$பாகே$_3$ஷ்வேவாக்ஷத்வம் ஸமாப்யதாம்।
உத்க்ராந்த்யாதி$_3$ ச்ருதேஸ்தாநி ஹ்யணூநி ஸ்யுரத$_3$ர்சனாத்।। 6

(அ..ம்)

இந்திரியங்கள் வியாபகமானவைகளா? அல்லது அணுக்களா? ஸாங்கியர்கள் வியாபகமேவென்று சொல்கிருர்கள். அந்த அந்த சரீரத்தில் கர்ம வசத்தினுல் (அவைகளுக்கு) செயல்படுவது ஏற்படும். இந்திரியத்தன்மை சரீரத்திலிருந்து வருகிற செயலுடன் கூடிய பாகங்களிலேயே முடித்து விடப்பட வேண்டும். வெளிக்கிளம்புதலைச் சொல்லும் சுருதியிருப்பதால், அவை பார்க்கப்படாததினுல் அணுக்கள் என்று ஆகின்றன.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

இந்திரியங்கள் ஸர்வ வியாபகங்கள். அவை அந்த அந்த சரீரத்துடன் ஸம்பந்தப்படும் போது அந்தந்த ஜீவனுல் செய்யப்பட்டுள்ள (முன் செய்துள்ள) கர்மாக்களையனுஸரித்து அவை வேலை செய்கின்றன என்று ஸாங்கியர் சொல்லுகிருர்கள். அந்தந்த கர்மாவின் பலனைக்

கொடுப்பதற்கு எவ்வளவு மட்டில் என்ன விதமாக வேலை செய்ய வேண்டுமோ அந்த மட்டில் அவ்விதம் செயலாற்றுகின்றனவே தவிர, அவை ஸ்வபாவத்தில் ஒவ்வொன்றும் வியாபகமாயுள்ளதேயென்கிருர்கள்.

ஸித்தாந்தம் :

அது ஸரியல்ல. தேஹத்தில் செயல்படும் பாகத்திலிருந்தே வியவஹாரம் ஸித்திக்கக்கூடியதாயிருக்கையில், செயல்படாமல் வியாபகமாயிருக்கும் தன்மையை இந்திரியங்களுக்கு கல்பிப்பதற்கு எவ்வித நியாயமுமில்லே, வீண் சிரமம். மேலும் வேதமானது ஜீவனுக்கு உத்கிராந்தி (வெளிக்கிளம்புதல்) வேறு லோகம் போகுதல், அங்கிருந்து வருதல் எல்லாவற்றையும் சொல்வது. ஜீவன் ஸர்வவியாபகமாக இருப்பதால் பொருந்தாதென்று, உத்கிராந்தி முதலியது ஸித்திக்கும் பொருட்டு, அவனுக்கு இந்திரியங்களே உபாதிகளென்று சொல்லி அவ்வித உபாதியுடன் கூடின ஜீவனுக்கு அவை ஸம்பவிக்கலாமென்று முன்னுல் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. அப்படி இருக்க, அந்த உபாதிகளான இந்திரியங்கள் ஒவ்வொன்றும் ஸர்வ வியாபகமென்ருல், உத்கிராந்தி முதலியது வாஸ்தவமாய் எப்படி ஸம்பவிக்க முடியும்? ஆகையால், இந்திரியங்கள் வியாபகங்கள் அல்ல. அவைகளே அணுவென்று சொன்னதும் சிறியது என்ற அர்தத்திலில்லே, மத்யம பரிமாணமுள்ள பதார்த்தங்கள் எப்படி பார்க்கப்படுகின்றனவோ அவைகளேப் போல இவைகளே பார்க்க முடியாது, வெகு ஸூக்ஷ்மமானவை என்றே அர்த்தம்.

## ४.प्राणश्रैष्ट्याधिकरणम्

### 4.ப்ராணச்ரைஷ்ட்யாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 8)

श्रेष्ठश्च ।८।

ச்ரேஷ்ட$_2$ச்ச .8.

(சிரேஷ்டனும்)

பிராணனுக்கு உத்பத்தியுண்டா? என்று விசாரம்.

मुख्यःप्राणः स्यादनादिर्जायते वा न जायते ।
आनीदिति प्राणचेष्टा प्राक्सृष्टेः श्रूयते यतः ।।७।।
आनीदिति ब्रह्मसत्वं प्रोक्तं वातनिषेधनात् ।
एतस्माज्जायते प्राण इत्युक्तेरेष जायते ।।८।।

முக்$_2$ய:ப்ராண: ஸ்யாத$_3$நாதி$_3$ர்ஜாயதே வா ந ஜாயதே ।

ஆநீதி₃தி ப்ராணசேஷ்டா ப்ராக்ஸ்ருஷ்டே: ச்ருயதே யத:॥ 7
ஆநீதி₃தி ப்₃ரஹ்மஸத்வம் ப்ரோக்தம் வாதநிஷேத₄னாத்।
ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராண இத்யுக்தேரேஷ ஜாயதே॥ 8

(அ..ம்)

முகத்திலிருக்கும் பிராணன் ஆதியற்றதா? அல்லது உண்டாகிறதா? ஸ்ருஷ்டிக்கு முன்னலேயே "ஆநீத்" (மூச்சுவிட்டது) என்று பிராணனுடைய செயல் சொல்லப்படுவதால், (பிராணன்) உண்டாவதில்லை.

"ஆநீத்" என்று பிரஹ்மத்தின் இருப்பு தான் சொல்லப்பட்டது, வாயு மறுக்கப்பட்டிருப்பதால், "இதிலிருந்து பிராணன் உண்டாகிறது" என்று சொல்லப்பட்டிருப்பதால், இது (பிராணன்) உண்டாகிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

முகத்துவாரத்தில் ஸஞ்சரித்துக் கொண்டு மூச்சு விடச் செய்து கொண்டிருக்கும் வாயு எதுவோ, அதுவே பிராணன் எனப்படுகிறது. "நாஸ தாஸீத்" என்ற ஸூக்தத்தில் "ஆநீத்" என்ற சப்தத்திஞல் மூச்சு விடுவது சொல்லப்படுவதால், ஸ்ருஷ்டிக்கு முன்னலேயே பிராணனடைய சேஷ்டை இருந்ததாகத் தெரிவதால் பிராணனுக்கு ஆதி கிடையாது. அது ஸ்ருஷ்டி காலத்தில் ஸ்ருஷ்டிக்கப் படுவதில்லை.

ஸித்தாந்தம் :

"ஆநீத்" என்ற சப்தம் பிராணனுடைய வியாபாரத்தைச் சொல்லவில்லை. "आनीत् अवातं" "வாயுவன்னியில் இருப்புடனிருந்தது" என்று மாத்திரம் தான் அர்த்தமாகும், வாயு இல்லை என்று வியக்தமாய் சொல்லி இருப்பதால், ஸ்ருஷ்டிக்கு முன்னல் இது ஸத் மாத்திரமாகவே இருந்தது என்பது போலுள்ள வாக்கியங்கள் உடைய அர்த்தத்திற்கு ஸமானமான அர்த்தத்தையே இந்த வாக்கியம் சொல்வதால் அப்பொழுது பிரஹ்மத்தின் இருத்தலேயே சொல்கிறது. மேலும், வேதமே ஸ்பஷ்டமாக "एतस्मात् जायते प्राण:" "இதிலிருந்து பிராணன் உண்டாகிறது" என்று பிராணனுக்கு உத்பத்தியை சொல்கிறது. ஆகையால் இந்திரியங்களைப் போலவே பிராணனும் உண்டாகிறது.

# ५. वायुक्रियाधिकरणम्

## 5. வாயுக்ரியாதி₄கரணம்

(ஸூத்ரம் 9 - 12)

**न वायुक्रिये पृथगुपदेशात् ।९।**

ந வாயுக்ரியே ப்ருத₂கு₃பதே₃சாத் .9.

(வாயுவோ கிரியையோ அல்ல, வேறாக உபதேசித்திருப்பதால்)

**चक्षुरादिवत्तु तत्सहशिष्ट्यादिभ्यः ।१०।**

சக்ஷுராதி₃வத்து தத்ஸஹசிஷ்ட்யாதி₃ப்₄ய: .10.

(ஆனால் கண் முதலியதைப்போல, அவைகளுடன் சேர்த்து சொல்லியிருப்பது முதலியவைகளால்)

**अकरणत्वाच्च न दोषस्तथाहि दर्शयति ।११।**

அகரணத்வாச்ச ந தோ₃ஷஸ்ததா₂ஹி த₃ர்சயதி .11.

(கருவித்தன்மையில்லாததாலும் தோஷமில்லை, அப்படியே காட்டுகிறது)

**पञ्चवृत्तिर्मनोवद्व्यपदिश्यते ।१२।**

பஞ்சவ்ருத்திர்மனோவத்₄வ்யபதி₃ச்யதே .12.

(ஐந்து விருத்திகளுள்ளதாக, மனஸைப்போல் சொல்லப்படுகிறது)

அப்படியானால் பிராணன் என்பது ஐந்து பூதங்களில் சேர்ந்த வாயு மாத்திரம் தானா? அல்லது இது வேறு தத்வமா? என்பது இங்கு விஷயம்.

**वायुर्वाऽक्षक्रियावान्यो वा प्राणः श्रुतितोऽनिलः ।**
**सामान्येन्द्रियवृत्तिर्वा सांख्यैरेवमुदीरणात् ।।९।।**
**भाति प्राणो वायुनेति भेदोक्तेरेकताश्रुतिः ।**
**वायुजत्वेन सामान्यवृत्तिर्नाक्षेष्वतोऽन्यता ।।१०।।**

வாயுர்வாஅக்ஷக்ரியாவாந்யோ வா ப்ராண: ச்ருதிதோஅநில:।
ஸாமாந்யேந்த்₃ரியவ்ரித்திர்வா ஸாங்க்₂யைரேவமுதீ₃ரணாத்।। 9
பா₄தி ப்ராணோ வாயுநேதி பே₄தோ₃க்தேரேகதாஷ்ருதி:।
வாயுஜத்வேந ஸாமாந்யவ்ருத்திர்நாக்ஷேஷ்வதோஅந்யதா।। 10

(அ..ம்)

பிராணன் என்பது வாயுவேதானா? அல்லது இந்திரியங்களின் சேஷ்டையா? அல்லது வேறு ஏதேனுமா? சுருதி வாக்கியத்தினால், வாயு தான் அல்லது ஸாங்கியர் இவ்விதம் சொல்வதால், இந்திரியங்களுடைய பொதுவான செய்கையாயிருக்கலாம்.

"பிராணன் வாயுவினுல் பிரகாசிக்கிறது" என்று வேறுபடுத்திச் சொல்லியிருப்பதால், ஒன்ருகச் சொல்லும் சுருதி வாயுவிலிருந்து உண்டாகும் தன்மையால் (என்று வைத்துக் கொள்ள வேண்டும்). இந்திரியங்களிடத்தில் பொதுவான செயல் கிடையாது. ஆகையால் வேறு தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

வெளியிலுள்ள வாயு தான், புல்லாங்குழல் துவாரத்தில் நுழைவது போல வாய் துவாரத்தில் நுழைந்து கொண்டிருப்பது பிராணன் என்ற பெயரால் குறிப்பிடப்படுகிறது. ஆகையால் பிராணன் என்பது வாயுவைத் தவிர வேறு தத்வமில்லை. வேதமும் "य: प्राण: स वायु:" "எது பிராணனே, அது வாயு" என்று சொல்கிறது. அல்லது ஒரே கூட்டில் இருந்து வருகிற அநேக பக்ஷிகள் தாங்கள் சேர்ந்து அசையும் போது கூட்டையே எப்படி அசைத்து விடுகின்றனவோ, அவ்விதமே பதினேரு இந்திரியங்களும் தங்கள் தங்கள் செயல் மூலமாகவே சரீரத்தைச் சேஷ்டிக்கும்படி செய்யுமாதலால், அவ்விதம் ஏற்படும் எல்லா இந்திரியங்களாலும் சரீரத்தில் உண்டாகிற அசைவு என்பது எதுவோ, அதுவே பிராணன் என்றிருக்கலாம். அப்படியே ஸாங்கியர்களும் "இந்திரியங்களுடைய பொதுவான செயல் பிராணன் முதலான ஐந்து வாயுக்கள்" என்கிருர்கள். எப்படியும் பிராணன் என்பது தனித் தத்வமாகாது.

ஸித்தாந்தம் :

சாந்தோக்யம் மூன்ருவது அத்யாயத்தில் நான்கு பாதமுள்ள பிரஹ்மத்தின் உபாஸனையைப் பற்றி சொல்லும் போது "प्राण एव ब्रह्मण: चतुर्थ: पाद:, स वायुना ज्योतिषा भाति" "பிராணன் தான் பிரஹ்மத்தின் நான்காவது பாதம், அது வாயுவாகிற பிரகாசத்தினுல் பிரகாசிக்கிறது" என்று கண்டிருப்பதால், அனுக்ரஹிக்கப்படும் ஆத்யாத்மிகமான பிராணனுக்கும் அனுக்ரஹம் செய்கிற ஆதிதைவிகமான வாயுவிற்கும் பேதம் ஸ்பஷ்டமாகவே குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆகையால் "எது பிராணனே, அது வாயு" என்ற சுருதி காரணத்திற்கும் கார்யத்திற்கும் வேற்றுமையில்லையென்பதைக் கொண்டு சொன்னதாக எடுத்துக் கொள்ள வேண்டும். ஸாங்கியர்களால் எது சொல்லப்பட்டதோ அது ஸரியில்லை, இந்திரியங்களுக்குள் பொதுவான ஸமானமான செயல் கிடையாததினுல் கூட்டிலுள்ளபக்ஷிகள் அசைவது ஒரே

விதமாயிருப்பதால், கூட்டின் அசைவிற்கு அனுகூலமாக இருக்கிறது.அவ்விதம் கண் பார்ப்பது, காது கேட்பது, கால் போவது முதலான இந்திரியங்களுடைய வியாபாரங்கள் ஒரே விதமாய் இருக்கவுமில்லை, அவை சரீரத்தை சேஷ்டிக்கச் செய்ய அனுகூலங்களும் அல்ல. ஆகையால் மிஞ்சுவது, பிராணன் என்பது வேறு தத்வம் தான் என்று.

## ६.श्रेष्ठाणुत्वाधिकरणम्

### 6.ச்ரேஷ்டாணுத்வாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 13)

अणुश्च ।१३।

அணுச்ச .13.

(அணுவும்)

பிராணனுக்கு அளவு எவ்விதம்? என்று இங்கு விசாரிக்கப்படுகிறது.

**प्राणोऽयं विभुरल्पो वा विभुः स्यात्प्लुष्युपक्रमे ।**
**हिरण्यगर्भपर्यन्ते सर्वदेहे समोक्तितः ।।११।।**
**समष्टिव्यष्टिरूपेण विभुरेवाधिदैविकः ।**
**अध्यात्मिकोऽल्पः प्राणः स्याददृश्यश्च यथेन्द्रियम् ।।१२।।**

ப்ராணோஅயம் விபு$_4$ரல்யோ வா விபு$_4$: ஸ்யாத்ப்லுஷ்யுபக்ரமே।
ஹிரண்யகர்ப$_4$பர்யந்தே ஸர்வதே$_3$ஹே ஸமோக்தித:।। 11
ஸமஷ்டிவ்யஷ்டிரூபேண விபு$_4$ரேவாதி$_4$தை$_3$விக:।
அத்$_4$யாத்மிகோஅல்ப:ப்ராண:ஸ்யாத$_3$த்$_3$ருச்யச்ச யதே$_2$ந்த்$_3$ரியம்।। 12

(அ..ம்)

இந்தப் பிராணன் வியாபகமா? அல்லது சிறியதா? ப்லுஷி ( சிறியபூச்சி ) முதல் ஹிரண்யகர்ப்பர் வரை எல்லா தேஹத்திலும் ஸமமாயுள்ளதென்று சொல்லி இருப்பதால் வியாபகம் தான்.

ஸமஷ்டி, வியஷ்டி என்ற ரூபத்தினுல், ஆதிதைவிகமாயிருக்கும் பிராணன் வியாபகம் தான், அத்யாத்மிகமாயிருப்பது சிறியதே. இந்திரியம் எப்படியோ அப்படியே பார்க்க முடியாததும் கூட.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

**"समः प्लुषिणा, समो मशकेन, समो नागेन, समः एभिः त्रिभिः लोकैः, समोऽनेन सर्वेन"**

"சிறியபூச்சிக்கு ஸமானம், கொசுவுடன் ஸமானம், யானையுடன் ஸமானம், இந்த மூன்று உலகங்களுடன் ஸமானம், இது

எல்லாவற்றுடனும் ஸமானம்" என்று பிராணனைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. ப்லுஷி என்பது கொசுவையும் விட சின்ன தேஹத்தையுடைய கரையான் என்ற ஜீவ ஜந்து. அதிலிருந்து ஆரம்பித்து எல்லா ஸ்வரூபமாயுமிருக்கிற ஹிரண்யகர்ப்பர் வரையுள்ள எல்லா தேஹங்களிலும் அந்தந்த தேஹங்களுக்கு ஸமானமாய் இருப்பது என்றால், பிராணன் வியாபகமாய்த் தான் இருக்க வேண்டும்.

ஸித்தாந்தம் :

"**वायुः एव व्यष्टिः, वायुः समष्टिः**" "வாயு தான் வியஷ்டி (தனித்தனியாயுள்ளவர்) வாயு ஸமஷ்டி (பொதுவாயுள்ளவர்)" என்று சொல்லியிருப்பதால் ஸமஷ்டி ரூபமாயும், வியஷ்டி ரூபமாயும் இருக்கிற ஆதிதைவிகமான ஹிரண்யகர்ப்பருடைய பிராணனுக்கு வியாபகத் தன்மை இருக்கட்டும். அந்த வியாபகத் தன்மை தான் "ப்லுஷியோடு ஸமானம்" என்பது முதலான சுருதியில் உபாஸனை செய்ய வேண்டியதற்காக விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. ஆத்யாத்மிக பிராணனோவென்றால் இந்திரியங்களைப் போல பார்க்க முடியாதது, சிறியதும் கூட.

## ७.ज्योतिराद्यधिकरणम्

### 7.ஜ்யோதிராத்₃யதி₄கரணம்

(ஸூத்ரம் 14 - 16)

**ज्योतिराद्यधिष्ठानं तु तदामननात् ।१४।**

ஜ்யோதிராத்₃யதி₄ஷ்டா₂நம் து ததா₃மனநாத் .14.

(அக்னி தேவதை முதலானதை அதிஷ்டானமாக உடையது அவ்விதமே சொல்லியிருப்பதால்)

**प्राणवता शब्दात् ।१५।**

ப்ராணவதா சப்₃தா₃த் .15.

(பிராணனுள்ளவனுடன், சப்தத்தினால்)

**तस्य च नित्यत्वात् ।१६।**

தஸ்ய ச *நித்யத்வாத்* .16.

(அவனுக்கு நித்யத்தன்மையிருப்பதாலும்)

இந்திரியங்களுக்கு அனுக்ரஹம் செய்வதாக ஆதிதைவிகமாக தேவதைகளை ஒப்புக் கொள்ள வேண்டுமா? என்பது இங்கு விஷயம்.

**स्वतन्त्रा देवतन्त्रा वा वागाद्याः स्युः स्वतन्त्रता ।**
**नोचेद्वागादिजो भोगो देवानां स्यान्नचात्मनः ।।१३।।**
**श्रुतमग्न्यादितन्त्रत्वं भोगोऽग्न्यादेस्तु नोचितः ।**

देवदेहेषु सिद्धत्वाज्जीवो भुङ्क्ते स्वकर्मणा ।।१४।।

ஸ்வதந்த்ரா தே₃வதந்த்ரா வா வாகா₃த்₃யா: ஸ்யு:ஸ்வதந்த்ரதா।
நோசேத்₃வாகா₃தி₃ஜோ போ₄கோ₃ தே₃வானாம்ஸ்யாந்நசாத்மன:।।13
ஷ்ருதமக்₃ன்யாதி₃தந்த்ரத்வம் போ₄கோ₄அக்₃ன்யாதே₃ஸ்து நோசித:।
தே₃வதே₃ஹேஷு ஸித்₃த₄த்வாஜ்ஜீவோ பு₄ங்க்தே ஸ்வகர்மணா।। 14

(அ..ம்)

வாக்கு முதலியவை ஸ்வதந்திரமாயுள்ளவைகளா? அல்லது தேவர்களுக்கு உள்பட்டவைகளா? ஸ்வதந்திரம் தான், அப்படியில்லையானால், வாக்கு முதலியதால் ஏற்படும் போகம் தேவர்களுக்கு என்று ஏற்பட்டு விடும் (அந்த போகம்) ஆத்மாவுக்கு இல்லை (என்றும் ஏற்பட்டு விடும்).

அக்னி முதலான தேவர்களுக்கு வாக்கு போன்றவை உள்பட்டிருக்கும் தன்மை வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தேவர்களுடைய சரீரத்திலேயே போகம் ஸித்தித்திருப்பதால், (இந்த) போகமோ அக்னி முதலான தேவர்களுக்கு உசிதமாகாது. ஜீவன் தான் தன்னுடைய கர்மானுஸாரமாக (போகத்தை) அனுபவிக்கிறுன்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

இந்திரியங்கள் தேவர்களுக்குக் கட்டுப்பட்டு வேலை செய்கிறவைகளாய் இருந்தால், அந்த வேலையைச் செய்யும் படிச் செய்கிற தேவர்களுக்குத் தான் அதனுல் ஏற்படும் பலனுகிய போகத்தின் அனுபவம் இருக்கும். அப்படியானுல் இந்த இந்திரியங்களையுடைய ஜீவனுக்கு போகம் ஏற்பட நியாயமில்லை. ஆகையால் இந்திரியங்கள் தேவர்களுக்கு பாத்திரமென்பது பொருந்தாது, ஆகையால் அவை ஸ்வதந்திரமே தான்.

ஸித்தாந்தம் :

"अग्नि: वाक् भूत्वा मुखं प्राविशत्" "அக்னி வாக்காக ஆகி வாயில் பிரவேசித்தார்" என்பது முதலிய வாக்கியங்களால் வாக்கு முதலான இந்திரியங்களுக்கு, அக்னி முதலான தேவர்களால் அனுக்ரஹிக்கப்படும் தன்மை சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்திரியங்களுடைய செயல்கள் தேவர்களுக்குக் கட்டுப்பட்டவை தான். இதனுல் தேவர்களுக்கு போகம் செய்யும் தன்மை ஏற்பட்டு விடாது. ஏனென்ருல், எவ்வளவோ பெரிய புண்ய கர்மாக்களைச் செய்து தேவர்களாக இருக்கும் நிலமையையடைந்து இருப்பவர்களுக்கு இந்த

இந்திரியங்கள் கொடுக்கக் கூடிய மிகவும் கீழ்பட்ட போகமுண்டென்பது மிகவும் உசிதமில்லாதது. தேவதா சரீரத்திலேயே அவர்களுக்கு உத்தமமான போகம் ஸித்தமாயிருப்பதால், மனுஷ்யன் முதலான ஜீவர்களோ தேவர்களால் ஏவப்பட்டு சேஷ்டிக்கும் இந்திரியங்களால் கொண்டு வரப்படும் போகத்தை அவரவர்கள் செய்த கர்மாக்களின் பல(ன்)ரூபமாக அனுபவிக்கிறார்கள் என்பது பொருத்தமாகும். ஆகையால் இந்திரியங்கள் தேவர்களுக்கு பரதந்திரமாயிருப்பவை தான்.

## ८.इन्द्रियाधिकरणम्

## 8.இந்த்$_3$ரியாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 17 - 19)

**त इन्द्रियाणि तद्व्यपदेशादन्यत्र श्रेष्ठात् ।१७।**

த இந்த்$_3$ரியாணி தத்$_3$வ்யபதே$_3$சாத$_3$ந்யத்ர ச்ரேஷ்டா$_2$த் .17.

(அந்த இந்திரியங்கள் சிரேஷ்டனுக்கு வேறாக அவை குறிப்பிடப்பட்டிருப்பதால்)

**भेदश्रुतेः ।१८।**

பே$_4$த$_3$ஷ்ருதே: .18.

(பேதம் சொல்லப்பட்டிருப்பதால்)

**वैलक्षण्याच्च ।१९।**

வைலக்ஷண்யாச்ச .19.

(விருத்தமான லக்ஷணமிருப்பதாலும்)

இந்திரியங்கள் பிராணனைத் தவிர வேறு தத்வங்களா? ப்ராணனே தானு? என்பது இங்கே விஷயம்.

**प्राणस्य वृत्तयोऽक्षाणि प्राणात्तत्वान्तराणि वा ।**
**तद्रूपत्वश्रुतेः प्रणानाम्नोक्तत्वाच्च वृत्तयः ।।१५।।**
**श्रमाश्रमादिभेदोक्तेर्गौणे तद्रूपनामनी ।**
**आलोचकत्वेनान्यानि प्राणो नेताऽक्षदेहयोः ।।१६।।**

ப்ராணஸ்ய வ்ருத்தயோஅக்ஷாணி ப்ராணாத்தத்வாந்தராணி வா।
தத்$_3$ரூபத்வச்ருதே: ப்ரணநாம்நோக்தத்வாச்ச வ்ருத்தய:।। 15
ச்ரமாச்ரமாதி$_3$பே$_4$தோ$_3$க்தேர்கௌ$_3$ணே தத்$_3$ரூபநாமநீ।
ஆலோசகத்வேனான்யானி ப்ராணோ நேதாஅக்ஷதே$_3$ஹயோ:।।16

(அ..ம்)

இந்திரியங்கள் பிராணனுடைய விருத்திகள் (வியாபாரங்கள், செயல்கள்) தானு? அல்லது பிராணனை விட வேருயுள்ள தத்வங்களா?

அதன் (பிராணனின்) ரூபமாயிருப்பதாகச் சொல்லியிருப்பதாலும், பிராணன் என்ற பெயரினுலேயே அவை சொல்லப்பட்டிருப்பதினுலும், (பிராணனுடைய) விருத்திகள்தான்.
இந்திரியங்களுக்கு சிரமம், (பிராணனுக்கு) சிரமமில்லாமை முதலான வேறுபாடு சொல்லப்பட்டிருப்பதால், அதன் ரூபமென்பதும், அதே பெயரையுடையதும் கௌணம் (உபசாரமாகச் சொல்லப்படுவது). தனித்தனியே அறிகிறவைகள் என்பதினுல் (அவை) வேறு. பிராணன், இந்திரியங்களையும் சரீரத்தையும் நடத்துவது (ஆகையால் அவை வேறு தத்வங்கள் தான்).
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
" **हन्त अस्य एव सर्वे रूपं असाम इति ते एतस्य एव सर्वे रूपं अभवन्** " "இதனுடையரூபமாக நாம் எல்லாரும் இருப்போம் என்று, அவையெல்லாம் இதன் ரூபமாகவே ஆகின" என்று இந்திரியங்களுக்கு பிராண ரூபமாயிருக்கும் தன்மை சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் "**म्रियमाणस्य नाद्यापि प्राणा: निर्गच्छन्ति**" "மறித்துக் கொண்டிருக்கிறவனுடைய பிராணன்கள் இன்னமும் வெளியேறவில்லை" என்பது முதலானவிடங்களில் இந்திரியங்கள் உலகத்திலேயே பிராணன் என்ற சப்தத்தினுல் வியவஹரிக்கப்படுகிறது. அப்படியே வேதத்திலும் "**न वै वाच:,न चक्षूंषि, न श्रोत्राणि, न मनांसि, इति आचक्षते, प्राणा इति एव आचक्षते**" "வாக்குக்கள் என்று சொல்வதில்லை, கண்கள் என்று சொல்வதில்லை, காதுகள் என்று சொல்வதில்லை, மனஸ்கள் என்று சொல்வதில்லை, பிராணன்கள் என்றே சொல்கிருர்கள்" என்று இந்திரியங்களுக்கு பிராணன் என்ற பெயருள்ள தன்மையைச் சொல்கிறது. ஆகையால் இந்திரியங்கள் பிராணனைத் தவிர வேறு தத்வங்கள் அல்ல.

ஸித்தாந்தம் :
"**तानि मृत्यु: श्रमो भूत्वोपयेमे, तस्माच्छ्राम्यत्येव वाक्**" "மிருத்யு சிரம ரூபமாக ஆகி அவைகளிடம் போயிற்று, அதனுல் வாக்கு சிரமத்தையே அடைகிறது" என்பது முதலான வாக்கியங்களால் வாக்கு முதலிய இந்திரியங்களுக்கு தம்தம் விஷயங்களில் பிரவிருத்திபப்தினுல் சிரமம் ஏற்படுவதைச் சொல்லிவிட்டு "**अथेममेव नाऽऽप्नोद्योऽयं मध्यम: प्राण:, य: संचरश्चासंचरश्च न व्यथते**" "எது இந்த மத்தியிலுள்ள பிராணனே, எது ஸஞ்சரித்தாலும் ஸஞ்சரிக்காமல் இருந்தாலும் சிரமத்தையடைவதில்லையோ, இதை மாத்திரம் (மிருத்யு) நெருங்கவில்லை" என்று

பிராணனுக்கு மாத்திரம் தன் செயலைச் செய்வதில் சிரமம் கிடையாதென்பதைச் சொல்கிறது. இந்திரியங்களுக்கும், பிராணனுக்கும் இது ஒரு வித்யாஸம். அப்படியே பிராணனுக்கும், இந்திரியங்களுக்குமுள்ள ஸம்வாதத்தில் வாக்கு முதலியது வெளிக்கிளம்பினதால் மரணமோ, உள் புகுந்ததால் எழுந்திருப்பதோ ஏற்படவில்லையென்றும், பிராணன் வெளிக் கிளம்பினுல் மரணமும், உள் புகுந்தால் எழுந்திருப்பதும், ஏற்படுகிறது என்றும் காட்டப்பட்டிருக்கிறது. இவ்விதமாக பல வித்தியாஸங்கள் சொல்லப்பட்டிருப்பதால் வாக்கு முதலியவைகளுக்கு பிராணனுடைய ரூபம் என்றும் பிராணனுடையபெயர் என்றும் சொன்னது கௌணம் தான், பிராணனையனுஸரித்து நடப்பதால், வேலைக்காரனையே யஜமானன் என்று சொல்வது போல. இந்திரியங்களுக்கும், பிராணனுக்கும் வியவஹாரத்திலும் பேதம் ஏராளமாய் இருக்கின்றது. இந்திரியங்கள் தம் தம் விஷயங்களை மாத்திரம் கிரஹிக்கும் விஷயத்தில் சக்தியுள்ளவை, பிராணனே எல்லா இந்திரியங்களையும் தேஹத்தையுமே சேஷ்டிக்கச் செய்யும் தன்மையுள்ளது. ஆகையால் பலவிதமாய் வேறுபாடுகள் இருப்பதால் இந்திரியங்கள் பிராணனை விடத் தனித்து வேருயுள்ள தத்வங்கள் தான்.

## ९.संज्ञामूर्तिक्लृप्त्यधिकरणम्

## 9.ஸஞ்ஜ்ஞாமூர்திக்ல்ருப்த்யதி$_4$கரணம்

(ஸூத்ரம் 20 - 22)

**संज्ञामूर्तिक्लृप्तिस्तु त्रिवृत्कुर्वत उपदेशात् ।२०।**

ஸஞ்ஜ்ஞாமூர்திக்ல்ருப்திஸ்து த்ரிவ்ரித்குர்வத உபதே$_3$சாத் .20.

(ஆனால் ஸம்ஞாமூர்த்திகளை ஏற்படுத்துவது த்ரிவிருத் செய்கிறவருடையது உபதேசிப்பதால்)

**मांसादिभौमं यथाशब्दमितरयोश्च ।२१।**

மாந்ஸாதி$_3$பௌமம் யதா$_2$சப்$_3$த$_3$மிதரயோச்ச .21.

(மாம்ஸம் முதலியது பிருதிவீயால் ஏற்படுவது, மற்ற இரண்டிற்கும் சப்தப்படி)

**वैशेष्यात्तु तद्वादस्तद्वादः ।२२।**

வைசேஷ்யாத்து தத்$_3$வாத$_3$ஸ்தத்$_3$வாத$_3$: .22.

(ஆனால், வைசேஷ்யத்தினால் அவ்விதம் சொல்வது அவ்விதம் சொல்வது)

ஐந்து மஹா பூதங்களை ஸ்ருஷ்டி செய்தது ஈசுவரராக இருந்த போதிலும் அவைகளைக் கலந்து பார்க்கக் கூடிய நிலையில் ஏற்படுத்தி

அவைகளுக்கு ரூபம் கொடுத்து பெயரிடுவதெல்லாம் ஜீவன் தானே? என்பதற்கு பதில் இந்த அதிகரணத்தில் கொடுக்கப்படுகிறது.

नामरूपव्याकरणे जीवः कर्ताऽथवेश्वरः ।
अनेन जीवेनेत्युक्तेर्व्याकर्ता जीव इष्यते ।।१७।।
जीवान्वयः प्रवेशेन सन्निधेः सर्वसर्जने ।
जीवोऽशक्तश्शक्त ईश उत्तमोक्तिस्तथेक्षितुः ।।१८।।

நாமரூபவ்யாகரணே ஜீவ: கர்தாஅத$_2$வேச்வர:।
அனேன ஜீவேனேத்யுக்தேர்வ்யாகர்தா ஜீவ இஷ்யதே।। 17
ஜீவான்வய: ப்ரவேசேன ஸந்நிதே$_4$: ஸர்வஸர்ஜனே।
ஜீவோஅசக்தச்சக்த ஈச உத்தமோக்திஸ்ததே$_2$க்ஷிது:।। 18

(அ..ம்)

பெயர் ரூபம் இவைகளை தெளிவாய் ஏற்படுவதில் செயல்படுபவர் ஜீவனா? அல்லது ஈசுவரரா? "இந்த ஜீவனால்" என்று சொல்லியிருப்பதால், ஜீவன் தான் அவ்விதம் செய்பவர் என்று எண்ணப்படுகிறது.

"ஜீவன்" என்ற சப்தத்திற்கு அன்வயம் (ஸம்பந்தம்) பிரவேசம் என்பதுடன், அதுவே ஸமீபத்திலிருப்பதால். மேலும், எல்லாவற்றையும் ஸ்ருஷ்டிக்கிறது என்ற விஷயத்தில் ஜீவன் சக்தியற்றவன், ஈசுவரரோ சக்தியுள்ளவர். அப்படியே, பார்க்கிறவருக்கு உத்தமபுருஷப்பிரயோகம் ("நான்" என்று) சொல்லியிருக்கிறது. (அதிலும் ஈசுவரர் தான்).

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"अनेन जीवेनाऽऽत्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि" "இந்த ஜீவன் என்ற ஆத்மாவாக உள்ளே புகுந்து கொண்டு நாம ரூபங்களை தெளிவாய் செய்வேன்" என்று ஜீவனையே ஸ்ருஷ்டியுடன் ஸம்பந்தப்படுத்தி இருப்பதால், அனுபவிக்கக் கூடியதாயிருக்கிற பௌதிகங்களாகிய மலை முதலியதிற்கு நாம ரூபங்களைக் கல்பிக்கும் செயலுள்ளவர் ஜீவன் தான்.

ஸித்தாந்தம் :

"ஜீவனாக புகுந்து கொண்டு" என்று சொல்லியிருப்பதால் பிரவேசம் என்பதுடன் தான் ஜீவன் என்பது ஸம்பந்தப்படும், அதுவே ஸமீபத்தில் இருப்பதால். "ஜீவனாகயிருந்து தெளிவாய் செய்வேன்" என்று அர்த்தம் செய்வதானால் வெகுதூரம் உள்ளதை இழுத்து

ஸம்பந்தப்படுத்த வேண்டியதாகும். அது நியாயமல்ல. மேலும் ஜீவனுக்கு நதி மலை முதலியவைகளை ஸ்ருஷ்டி செய்து அவைகளுக்கு ரூபம் கொடுத்துப் பெயரிட வேண்டியத்திற்குள்ள சக்தி கிடையாது. ஈசுவரருக்கோ "पराऽस्य शक्तिः विविधा एव श्रूयत" "இவருடைய சக்தி உத்தமம் ஆனதாயும் பல விதமாயும் உள்ளதாக சொல்லப்படுகிறது" என்ற படி எல்லா வித சக்தியும் பொருந்தியவராதலால் அவர் அவ்விதம் ஸ்ருஷ்டிக்க முடியும். மேலும் "सेयं देवता ऐक्षत .... अनेन जीवेन आत्मना अनुप्रविश्य नामरुपे व्याकरवाणि इति" "அந்த இந்த தேவதை (ஈசுவரர்) இந்த ஜீவன் என்ற ஆத்மாவினுல் உள் புகுந்து நாமரூபங்களை நன்கு செய்வேன்" என்று பார்த்தது (நினைத்தது, ஆலோசித்தது)" என்ற வாக்கியத்தில் "நன்கு செய்வேன்" என்று காணும் உத்தமபுருஷன் "நான்" என்பது பார்த்தவரையே குறிக்குமே தவிர வேறு எதையும் குறிக்காது. ஆகையால் அங்குள்ள "நான்" என்பது ஸ்ருஷ்டி செய்ய உத்தேசித்த ஈசுவரரைக் காட்டும் என்பது தான் பொருத்தமாகும். அப்படியானுல், உலகத்தில் குயவன் மண்ணையெடுத்து அதற்கு ஒரு உருவம் ஏற்படுத்தி அதற்கு குடம் என்று பெயரிடுகிருரோ? அவன் நாம ரூபம் கல்பிக்கிறவனில்லையா? என்ருல் அவன் அவ்விதம் செய்வதும் ஈசுவரர் உடைய பிரேரணையினுல் தான் என்கிருேம். ஈசுவரர் எவ்விதம் பிரேரணை செய்கிருரென்பது முந்தின பாதத்தில் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் எல்லாவற்றையும் செய்வது ஈசுவரர் தான் என்பது ஸித்தம்.

இவ்விதம் இரண்டாவது அத்யாயம் நான்காவது பாதத்தில் அதிகரணங்கள் 9 சுலோகங்கள் 18 (ஸூத்ரங்கள் 22).

இரண்டாவது அத்யாயம் நான்கு பாதங்களும் சேர்ந்து அதிகரணங்கள் 47 சுலோகங்கள் 94.

*இரண்டாவது அத்யாயம் முற்றிற்று.*



## *மூன்றுவது அத்யாயம் : முதல் பாதம்*

# १.तदन्तरप्रतिपत्यधिकरणम्

## 1.தத3ந்தரப்ரதிபத்யதி4கரணம்

(ஸூத்ரம் 1 - 7)

**तदन्तरप्रतिपत्तौ रंहति संपरिष्वक्तः प्रश्ननिरूपणाभ्याम् ।।१।।**

தத3ந்தரப்ரதிபத்தௌ ரம்ஹதி ஸம்பரிச்வக்த:
ப்ரச்நநிரூபணாப்4யாம் 1

( வேறு தேஹத்தையடையும்போது நன்கு சூழப்பட்டவனாய் போகிறான்,கேள்வியிலிருந்தும் நிரூபணத்திலிருந்தும்)

**त्र्यात्मकत्वात्तु भूयस्त्वात् ।।२।।**

த்ர்யாத்மகத்வாத்து பூ4யஸ்த்வாத் 2

(மூன்று தன்மையுமுள்ளதால்தான், அதிகமானதினால்)

**प्राणगतेश्च ।।३।।**

ப்ராணக3தேச்ச 3

(பிராணன்களுக்கு கதியிருப்பதினாலும்)

**अग्न्यादिगतिश्रुतेरिति चेन्न भाक्तत्वात् ।।४।।**

அக்3நயாதி3க3திச்ருதேரிதி சேந்ந பா4க்தத்வாத் 4

(அக்னி முதலியதையடைவதாக சுருதியிருப்பதினால் என்றால் அப்படியல்ல, பாதகமாயிருப்பதால் )

**प्रथमेऽश्रवणादिति चेन्न ता एव ह्युपपत्तेः ।।५।।**

ப்ரத2மேஅச்ரவணாதி3தி சேந்ந தா ஏவ ஹ்யுபபத்தே: 5

(முதலில் சொல்லாததினால் என்றால் சரியல்ல அவைதானல்லவா பொருத்தமாயிருப்பதால்)

**अश्रुतत्वादिति चेन्नेष्टादिकारिणां प्रतीतेः ।।६।।**

அச்ருதத்வாதி3தி சேந்நேஷ்டாதி3காரிணாம் ப்ரதீதே: 6

(சொல்லப்படாததினால் என்றால், அப்படியல்ல, யாகம் முதலியது செய்தவர்களுக்கு பிரதீதியிருப்பதால்)

**भाक्तं वानात्मवित्त्वात्तथाहि दर्शयति ।।७।।**

பா4க்தம் வாநாத்மவித்த்வாத்ததா2ஹி த3ர்சயதி 7

(பாக்தம் தான், ஆத்மவித் இல்லாததினால் அப்படியே காட்டுகிறது)

ஸாதனாத்யாயம் என்று பொதுவாகச் சொல்லப்படுகிற இந்த அத்யாயத்தில் மிகவும் அவசியமான ஸாதனமாகிய வைராக்கியம் ஏற்படுவதற்காக, ஜீவன் ஸம்ஸாரதசையில் அல்லற்பட்டு மரணமடைந்து மற்ற லோகங்கள் போய் மறுபடியும் திரும்பி வந்து, ஜனனமடைவது எல்லாம் இந்த பாதத்தில் விஸ்தாரமாக

விசாரிக்கப்படுகிறது. சரீரத்தை விட்டு எப்படி வெளிக் கிளம்புகிருன் என்பது இந்த அதிகரணத்தின் விஷயம்.

अवेष्टितो वेष्टितो वा भूतसूक्ष्मैः पुमान् व्रजेत् ।
भूतानां सुलभत्वेन यात्यवेष्टित एव सः ।। १ ।।
बीजानां दुर्लभत्वेन निराधारेन्द्रियागतेः ।
पञ्चमाहुतितोक्तेश्च जीवस्तैर्याति वेष्टितः ।। २ ।।

அவேஷ்டிதோ வேஷ்டிதோ வா பூ₄தஸூக்ஷ்மை:புமான் வ்ரஜேத்।
பூ₄தானாம் ஸுலப₄த்வேன யாத்யவேஷ்டித ஏவ ஸ: ।।1
பீ₃ஜாநாம் து₃ர்லப₄த்வேன நிராதா₄ரேந்த்₃ரியாக₃தே: ।
பஞ்சமாஹுதிதோக்தேச்ச ஜீவஸ்தைர்யாதி வேஷ்டித: ।। 2

(அர்த்தம்)

பூத ஸூக்ஷ்மங்களிஞல் சூழப்படாமல் ஜீவன் போகிருஞ? அல்லது சூழப்பட்டவஞகவா? பூதங்கள் ஸுலபமாய் கிடைக்குமானதால், சூழப் படாமல் தான் அவன் போகிருன்.

பீஜங்கள் கிடைக்கக்கூடியது இல்லாததிஞலும், ஆதாரமற்று இந்திரியங்களுக்கு போவது ஸாத்தியமில்லை ஆனதிஞலும், ஐந்தாவது ஆஹுதியென்று சொல்லியிருப்பதாலும், அவைகளால் (பூத ஸூக்ஷ்மங்களால்) சூழப்பட்டு தான் ஜீவன் போகிருன்.

(விளக்கம்)

பூர்வபக்ஷம் :

முந்தின பாதத்தில் பிராணன் முதலான உபாதிகளுடன் கூடினவன் ஜீவன் என்று சொல்லப்பட்டது. அவன் வேறு சரீரம் எடுக்க வேண்டிய தருணத்தில் இந்த சரீரத்தை விட்டு விலகும்போது பிராணன் முதலான உபாதிகளும் கூடவே தான் அவனுடன் போயாக வேண்டுமென்று ஏற்படுகிறது. ஆஞல் அவனுக்குப் பின் ஏற்பட வேண்டியதாயிருக்கிற ஸ்தூல சரீரத்திற்கு விதையாக உபயோகப்படும் படி இங்கிருந்து அவன் ஏதேனும் ஸ்தூல பூதங்களின் ஸூக்ஷ்மாம்சங்களை எடுத்துக் கொண்டு போக வேண்டுமா என்ருல், ஜகத்தில் எங்கு போஞலும் ஆகாசம் முதலான ஐந்து பூதங்களும் இருக்குமானதிஞல் இங்கிருந்து கொண்டு போவதற்கு அவசியமேயில்லை. எது அங்கே கிடையாதோ அதைத் தானே கொண்டு போவது நியாயமாகும்? ஆகையால் அவன் பூத ஸூக்ஷ்மங்களால் சூழப்பட்டவஞகப் போவதில்லை.

ஸித்தாந்தம் :

வெறும் பூதங்கள் மாத்திரம் எங்கும் கிடைக்குமென்றிருந்த போதிலும்

அங்கு புதிதாய் ஏற்பட வேண்டிய சரீரத்திற்கு விதையாக உபயோகப்படும் படிக்கு உள்ளவைகள் எங்கும் அகப்படாது. ஆகையால் இங்கிருந்து கொண்டு போக வேண்டியது தான். (எங்கும் ஆகாசம், காற்று, வெய்யில், மழை, பூமி இருந்தாலும் ஏதேனும் ஒரு பயிர் ஏற்பட வேண்டுமானுல் அதற்குரிய விதை அபேக்ஷிக்கப்படுவது போல).மேலும் ஜீவன் போகும் போது அவனுடைய உபாதிகளான இந்திரியங்களும் போக வேண்டும். அவைகளுக்கு ஸ்தூலமாயுள்ள பூதத்தின் ஆதாரமில்லாமல் போகுதல் ஸம்பவிக்காது. ஏனென்ருல் ஜீவித்துக் கொண்டிருக்கும் போது இந்த ஸ்தூல சரீரத்தை ஆசிரயித்துக் கொண்டிருப்பதாகவே அவைகளை பார்த்திருக்கிருேமே தவிர, ஆதாரமாக பூத ஸூக்ஷ்மங்களும் போகத் தான் வேண்டும். வேதமும் "पञ्चम्यां आहुतौ आप: पुरुषवचसो भवन्ति" "ஐந்தாவது ஆஹுதியில் அப்புக்கள் புருஷன் என்று சொல்லக்கூடியதாக ஆகின்றன" என்கிறது. அதாவது, உபாஸனைக்காக த்யுலோகம் (ஸ்வர்க்கம்) பர்ஜன்யம் (மழை) பிருதிவீ (பூமி) புருஷன் (ஆண்) யோஷித் (பெண்) என்று ஐந்து பதார்த்தங்கள் அக்னிகள் என்று கல்பிக்கப்படுகின்றன. ஸ்வர்க்கம் போய் திரும்பிவரும் ஜீவன் இந்த ஐந்து அக்னிகளில் ஆஹுதி செய்யப் படுவதாக கல்பிக்கப்படுகிருன். அதாவது, யாகம் முதலான புண்ணிய கர்மாக்களை செய்திருக்கிற ஜீவன் ஸ்வர்க்கம் போய், அங்கு அனுபவிப்பதினுல் புண்ணியம் செலவழிந்து விட்டதும் பர்ஜன்யத்தில் விழுந்து மழை வழியாக, பூமிக்கு வந்து, அன்னம் வழியாக ஒரு புருஷனையடைந்து அவனுடைய ரேதஸ் வழியாகஅவனுடைய ஸ்திரீயின் சரீரத்தில் புகுந்து கொண்டு, சரீரத்தை எடுத்துக் கொள்கிருன். ஆகையால் அப்புக்கள் என்ற வார்த்தையால் குறிக்கப்படும், புதிதான சரீரத்திற்கு பீஜமாய் உதவுகிற ஐந்து பூதங்களும் ஜீவனுேடு கூடவே ஸ்வர்க்கம் முதலான ஐந்து இடங்களுக்கும் போய்விட்டு, ஐந்தாவது ஸ்தானமான ஸ்திரீயினிடத்தில் சரீரமாக ஆகி, புருஷன் என்று சொல்லக் கூடிய நிலமையை அடைகின்றன என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. ஆகையால் பீஜங்களால் சூழப்பட்டவனுகத்தான் ஜீவன் பரலோகம் செல்லுகிருன்.

## २.कृतात्ययाधिकरणम्

## 2.க்ருதாத்யயாதி₄கரணம்

(ஸூத்ரம் 8 - 11)

**कृतात्ययेऽनुशयवान्दृष्टस्मृतिभ्यां यथेतमनेवं च ।।८।।**

க்ருதாத்யயேஅனுசயவான்த்ருஷ்டஸ்ம்ரிதிப்$_4$யாம் யதே$_2$தமனேவம் ச 8

(செய்தது முடிந்தவுடன் அனுசயத்துடன் சுருதி ஸ்மிருதிகளிலிருந்து, போனபடி அப்படியில்லாமலும்)

**चरणादिति चेन्नोपलक्षणार्थेति कार्ष्णाजिनिः ।।९।।**

சரணாதி$_3$தி சேன்னோபலக்ஷணார்தே$_2$தி கார்ஷ்ணாஜி$_3$னி: 9

(நடத்தை என்றிருப்பதால் என்றால், அப்படியல்ல, உபலக்ஷணமாக என்று கார்ஷ்ணாஜினி )

**आनर्थक्यमिति चेन्न तदपेक्षत्वात् ।।१०।।**

ஆனர்த$_2$க்யமிதி சேன்ன தத$_3$பேக்ஷத்வாத் 10

(வீணாகும் தன்மை என்றால் அப்படியல்ல, அதை அபேக்ஷிக்கிறபடியால்)

**सुकृतदुष्कृते एवेति तु बादरिः ।।११।।**

ஸுக்ருதது$_3$ஷ்க்ருதே ஏவேதி து பாத$_3$ரி: 11

(பாதரியோ, புண்ணிய பாபங்களே தான் என்று)

ஜீவன் தன்னுடன் கொண்டு போகும் கர்மாக்களுக்குரிய போகங்களை ஸ்வர்க்கத்திலேயே அனுபவித்து விடுகிறபடியால் அவனுக்கு கர்மா எதுவும் மிச்சமிராதாகையால், அவனுக்கு மறுபடியும் இங்கே வருவது எப்படி ஏற்படலாம் என்பது இந்த அதிகரணத்தின் விஷயம்.

**स्वर्गावरोही क्षीणानुशयः सानुशयोऽथवा ।**
**यावत्संपातवचनात्क्षीणानुशय इष्यते ।। ३ ।।**
**जातमात्रस्य भोगित्वादैकभव्ये विरोधतः ।**
**चरणश्रुतितः सानुशयः कर्मान्तरैरयम् ।। ४ ।।**

ஸ்வர்கா$_3$வரோஹீ க்ஷீணாநுஷய: ஸாநுசயோஅத$_2$வா ।
யாவத்ஸம்பாதவசநாத்க்ஷீணானுசய இஷ்யதே ।। 3
ஜாதமாத்ரஸ்ய போ$_4$கி$_3$த்வாதை$_3$கப$_4$வ்யே விரோத$_4$த: ।
சரணச்ருதித: ஸானுசய: கர்மாந்தரைரயம் ।। 4

(அ..ம்)

ஸ்வர்க்கத்திலிருந்து இறங்குகிறவன் கர்மா பூராவும் சிலவு செய்து மிச்சமில்லாமல் இருப்பவனா? அல்லது மிச்சமுள்ள கர்மாவையுடையவனா? "எதுவரை கர்மாவோ" என்று சொல்லியிருப்பதால் மிச்சமில்லாதவன் தான் என்று எண்ணப்படுகிறது. பிறந்தவுடனேயே அனுபவிக்கும் தன்மையிருப்பதாலும், ஒரே ஸமயத்தில் எல்லாம் (அனுபவிக்கப்படுகிறது) என்பது விரோதம் ஆனதினாலும்,

சரணச்சுருதியில் சொல்லப்படுவதாலும், வேறு கர்மாக்களினுல் மிச்சமுள்ளவனுகவே இவன் இருக்கிருன்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஜீவனுடன் கூடவேயிருப்பதால் கர்மாக்களின் மீதம் அனுசயம் என்று சொல்லப்படுகிறது. ஸ்வர்க்கத்திலிருந்து இறங்குகிறவனுக்கு இந்த அனுசயம் இருக்க முடியாது. அனுசயத்தின் பலன் பூராவும் அங்கே ஸ்வர்க்கத்திலேயே அனுபவிக்கப்பட்டுவிட்டதால் திரும்பி வருவதைப் பற்றி சொல்லும் சுருதியும் "यावत् संपातं उषित्वा अथ एतं एव अध्वानं पुनः निवर्तते" "எதுவரை ஸம்பாதமோ அதுவரை வஸித்து விட்டு பிறகு இந்த வழியாகவே மறுபடியும் திரும்பி வருகிருன்" என்று சொல்கிறது. எந்த கர்மாவினுல் ஸ்வர்க்கம் போகிருனே அது "ஸம்பாதம்" எனப்படுகிறது. அந்த ஸம்பாதத்தை மீருமல் அதாவது பாக்கியில்லாமல் கர்ம பலனையனுபவித்துவிட்டு பிறகு என்று அர்த்தமாகிறது. ஆகையால் கர்மா மிச்சமில்லாமல் தான் இறங்குகிருன் என்று ஏற்படுகிறது.

ஸித்தாந்தம் :

ஸ்வர்க்கத்தையடைய வேண்டியதற்காகவுள்ளதாய அனுஷ்டிக்கப் பட்ட கர்மா பூராவுமே அங்குள்ள போகத்தினுல் சிலவழிந்துவிட்டது என்ருலும் அனுபவிக்கப்படாததாக முன் சேர்ந்துள்ள பாபங்களும், புண்யங்களும் ஏராளமாக இவனுக்கு இருக்கின்றன. அவ்விதம் மீதமேயில்லையென்ருல், இங்கே இப்பொழுதே பிறந்துள்ள சிசுவிற்கு இந்த ஜன்மாவில் அனுஷ்டிக்கப் பட்டதான தர்மமோ, அதர்மமோ எதுவும் கிடையாததினுல் ஸுக துக்க அனுபவமும் இருக்க முடியாது. ஆனுல் சிசுக்களுக்கு பிறந்தது முதல் ஸுக, துக்க அனுபவமிருப்பதை நன்கு காண்கிருேம். அது கர்மாக்களில்லாமல் ஏற்படாது. அவ்வித கர்மாக்கள் இந்த ஜன்மாவிலேயோ இல்லை. ஆகையால் முன் ஜன்மாக்களில் செய்த கர்மாக்களின் மிச்சம் என்று தான் சொல்ல வேண்டும். ஒரு ஜன்மத்தில் அனுஷ்டிக்கப்பட்ட கர்மாக்கள் யாவும் அடுத்த ஒரே ஜன்மாவில் அனுபவிக்கப்பட்டு தீர்ந்து விடுகின்றன என்று சிலர் சொல்கிருர்கள், அது சரியல்ல. இந்திரன் முதலானவர்களின் பதவியை அடைவிக்கும்படிச் செய்யக் கூடிய அசுவமேதம் முதலான புண்ய கர்மாக்களுக்கும், பன்றி முதலான ஜன்மாக்களைக் கொடுக்கக் கூடிய பாப கர்மாக்களுக்கும், ஒரே ஸமயத்தில் பலனைக் கொடுப்பதென்பது ஸம்பவிக்காது. ஆகையால் மீதமுள்ள கர்மாக்கள்

எல்லாவற்றிற்கும் ஒரே ஜன்மா என்பது விருத்தமான கொள்கை. ஒரு ஜன்மத்தில் அனுஷ்டிக்கப்பட்ட கர்மாக்களில், ஜ்யோதிஷ்டோமம் முதலான சில கர்மாக்களின் பலன் ' ஸ்வர்க்க அனுபவ மூலமாக கிடைத்து விட்ட போதிலும், மீதமுள்ள கர்மாக்கள் ஏன் மீதமிராது? "எதுவரை ஸம்பாதமோ" என்று சொன்னது "ஸ்வர்க்கத்தைக் கொடுத்த கர்மா எது வரையோ" என்று தான் அர்த்தமாகுமே தவிர, மற்ற கர்மாக்களை சொன்னதாக ஆகாது. மேலும் ஸ்வர்க்கத்திலிருந்து இறங்கி ஐந்தாவது ஆஹுதியில் சரீரத்தை எடுத்துக் கொள்ளும் ஜீவர்களுக்கு அந்த சரீரத்தையெடுத்துக் கொள்ள வேண்டியதற்குக் காரணமாயுள்ள புண்ய பாபங்கள் இருப்பதையும் சுருதி சொல்கிறது. "य इह रमणीयचरणाः अभ्याशो ह यत् ते रमणीयां योनिं आपद्येरन्, ब्राह्मणयोनिं वा, क्षत्रिययोनिं वा, वैश्ययोनिं वा । अथ य इह कपूयचरणाः आभ्याशो ह यत् ते कपूयां योनिं आपद्येरन् श्वयोनिं वा, शकरयोनिं वा, चाण्डालयोनिं वा" "எவர்கள் இங்கே நல்ல நடத்தையுள்ளவர்களோ, அவர்கள் சீக்கிரமாகவே நல்ல ஜன்மாவை அடைவார்கள். பிராஹ்மண ஜன்மாவையோ, க்ஷத்திரிய ஜன்மாவையோ, வைசிய ஜன்மாவையோ, அல்லது எவர்கள் கெட்ட நடத்தையுள்ளவர்களோ அவர்கள் சீக்கிரமாகவே, கெட்ட ஜன்மாவை அடைவார்கள். நாய் ஜன்மாவையோ, பன்றி ஜன்மாவையோ, சண்டாள ஜன்மாவையோ" என்று, நல்ல நடத்தையுள்ளவர் என்பது புண்ய கர்மா செய்தவர், கெட்ட நடத்தையுள்ளவர் என்பது பாப கர்மா செய்தவர். இவ்விதமாக, அனுசயத்துடன் கூடினவர்களாகவே தான் இறங்குகிறுர்கள். ஸ்வர்க்கம் போய்விட்டுத் திரும்புகிறவர்களும் கூட என்பது ஸித்தமாகிறது.

## ३.अनिष्टादिकार्यधिकरणम्

## 3.அனிஷ்டாதி₃கார்யதி₄கரணம்

(ஸூத்ரம் 12 - 21)

**अनिष्टादिकारिणामपि च श्रुतम् ।।१२।।**

அனிஷ்டாதி₃காரிணாமபி ச ச்ருதம் 12

(பாபம் முதலியது செய்தவர்களுக்கும் கூட சொல்லப்பட்டிருக்கிறது)

**संयमने त्वनुभूयेतरेषामारोहावरोहौ तद्गतिदर्शनात् ।।१३।।**

ஸம்யமனே த்வனுபூ₄யேதரேஷாமாரோஹாவரோஹௌ தத்₃கதித₃ர்சனாத் 13

(மற்றவர்களுக்கோ, யமபட்டணத்தில் அனுபவித்துவிட்டு ஏறுவதும், இறங்குவதும் அங்கு போவதாகக் காண்கிறபடியால்)

स्मरन्ति च ।।१४।।

ஸ்மரந்தி ச 14

(ஸ்மிருதிகளுமிருக்கின்றன)

अपि च सप्त ।।१५।।

அபி ச ஸப்த 15

(ஏழும் கூட)

तत्रापि च तद्व्यापारादविरोधः ।।१६।।

தத்ராபி ச தத்₃வ்யாபாராத₃விரோத₄: 16

(அங்கேயும்கூட அவருடைய வியாபாரமிருப்பதால் விரோதமில்லை)

विद्याकर्मणोरिति तु प्रकृतत्वात् ।।१७।।

வித்₃யாகர்மணோரிதி து ப்ரக்ருதத்வாத் 17

(உபாஸனை, கர்மா இரண்டிற்கும் என்பதுதான், அவைகளே பிரகிருதமானதினால்)

न तृतीये तथोपलब्धेः ।।१८।।

ந த்ரிதீயே ததோ₂பலப்தே₄: 18

(மூன்றாவதில் இல்லை, அவ்விதம் காணுவதால்)

स्मर्यतेऽपि च लोके ।।१९।।

ஸ்மர்யதேஅபி ச லோகே 19

(ஸ்மரிக்கப்படுகிறது, உலகத்திலும்கூட)

दर्शनाच्च ।।२०।।

த₃ர்சனாச்ச 20

(காணப்படுவதினாலும்)

तृतीयशब्दावरोधः संशोकजस्य ।।२१।।

த்ருதீயசப்தா₃வரோத₄: ஸம்சோகஜ₃ஸ்ய 21

(புழுக்கத்தினால் உண்டாவதற்கு மூன்றாவது சப்தத்தில் அடக்கம்)

ஸ்வர்க்க லோகம் போய் திரும்பி வருகிறவர்களுக்குச் சொல்லப்படும் கிரமப் படித்தானு பாபம் செய்தவர்களுக்கும் போய் வரும் கிரமம்? என்பது இங்கே விசாரிக்கப்படுகிறது.

चन्द्रं याति न वा पापी ते सर्व इति वाक्यतः ।
पञ्चमाहुतिलाभार्थं भोगाभावेऽपि यात्यसौ ।।५।।
भोगार्थमेव गमनमाहुतिर्व्यभिचारिणी ।
सर्वश्रुतिः सुकृतिनां याम्ये पापिगतिः श्रुता।।६।।

சந்த்₃ரம் யாதி ந வா பாபீ தே ஸர்வ இதி வாக்யத: ।
பஞ்சமாஹுதிலாபா₄ர்த்த₂ம் போ₄காபா₄வேஅபியாத்யஸௌ।। 5

போ₄கா₃ர்த₂மேவ க₃மனமாஹூதிர்வ்யபி₄சாரிணீ ।
ஸர்வச்ருதி: ஸுக்ருதிநாம் யாம்யே பாபிக₃தி: ச்ருதா ॥ 6

(அ..ம்)

பாபம் செய்தவன் சந்திரனை அடைகிறுனு, இல்லையா? "அவர்கள் எல்லாரும்" என்று வாக்கியமிருப்பதாலும், ஐந்தாவது ஆஹூதி கிடைப்பதற்காகவும், போகமில்லையாலுைம் இவன் போகிறுன். போவது என்பது போகத்திற்காகத்தான். ஆஹூதி பிசகக் கூடியது. "எல்லாரும்" என்று சொன்னது புண்யம் செய்தவர்களுக்காக. பாபம் செய்தவர்களுக்குப் போக்கு யமலோகத்தில் என்று சொல்லப்பட்டிருக்கிறது

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"ये वै के च अस्मात् लोकात् प्रयान्ति, चन्द्रमसं एव ते सर्वे गच्छन्ति" "எவர்கள் இந்த உலகத்தில் இருந்து போகிறுர்களோ, அவர்கள் எல்லாரும் சந்திரனையே அடைகிறுர்கள்" என்று வேதம் சொல்வதால் சந்திரலோகம் என்று சொல்லப்படுகிற ஸ்வர்க்கத்திற்கு பாபிகளுக்கும் போகுதல் உண்டு என்று ஏற்படுகிறது. பாபிகளுக்கு அங்கே எவ்வித போகமும் கிடையாதென்ற போதிலும் திரும்பி வந்து ஐந்தாவது ஆஹூதியில் சரீரம் எடுக்க வேண்டியிருப்பதால், ஸ்வர்க்கத்தையும் சேர்த்துக் கொண்டால் தான் ஐந்து என்பது கிடைக்குமாதலால், அவர்களுக்கும் ஸ்வர்க்கம் போகுதல் ஒப்புக் கொள்ள வேண்டியது தான்

ஸித்தாந்தம் :

ஸ்வர்க்கம் போவது என்பதே போகத்திற்காகத் தான். அப்படியிருக்க போகமில்லாமல் அங்கு போகுதல் எதற்காக? ஐந்தாவது ஆஹூதியென்பது கிடைக்க வேண்டாமாவென்றுல், அந்த ஐந்து என்ற நியமம் இருந்தாக வேண்டுமென்பதில்லை, பிசகுவதுமுண்டு. துரோணுசார்யார் மரக்காலிலும், அகஸ்தியர் குடத்திலும் பிறந்தார்கள். அவர்கள் விஷயத்தில் ஸ்திரீ என்ற ஆஹூதியில்லை. ஸீதை பூமியிலிருந்தும், துரௌபதி அக்னியிலிருந்தும் பிறந்தார்கள். அவர்கள் விஷயத்தில் புருஷன், ஸ்த்ரீ என்ற இரண்டு ஆஹூதிகளுமில்லை. ஆகையால் ஐந்து என்பது நியமமில்லை."அவர்கள் எல்லாரும்" என்பது "புண்யம் செய்தவர் எல்லாரும்" என்று தான் அர்த்தம். மேலும் பாபிகளுக்கு "**वैवस्वतं संगमनं जनानां**" யமனுடைய லோகம் போகுதல்

வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் பாபிகளுக்கு ஸ்வர்க்கம் போவது கிடையாது.

## ४.साभाव्यापत्त्यधिकरणम्

## 4.ஸாபா₄வ்யாபத்த்யதி₄கரணம்

(ஸூத்ரம் 22)

**साभाव्यापत्तिरुपपत्तेः ।।२२।।**

ஸாபா₄வ்யாபத்திருபபத்தே: 22

(போலிருக்கும் தன்மையை அடைவது, பொருத்தமானதினால்)

ஸ்வர்க்கத்திலிருந்து இறங்குகிறவர்கள் ஆகாசம் வாயு முதலியதைத் தாண்டிக் கொண்டு பூமிக்கு வரும் போது அவர்களும் ஆகாசம் முதலியதாகவே ஆகிவிடுகிறார்களா? என்பது இங்கு விஷயம்.

**वियदादिस्वरूपत्वं तत्साम्यं वाऽवरोहिणः ।**
**वायुर्भूत्वेत्यादिवाक्यात्तत्तद्भावं प्रपद्यते ।।७।।**
**खवत्सूक्ष्मो वायुवशो युक्तो धूमादिभिर्भवेत् ।**
**अन्यस्यान्यस्वरूपत्वं न मुख्यमुपपद्यते ।।८।।**

வியதா₃தி₃ஸ்வரூபத்வம் தத்ஸாம்யம் வாஅவரோஹிண: ।
வாயுர்பூ₄த்வேத்யாதி₃வாக்யாத்தத்தத்₃பா₄வம் ப்ரபத்₃யதே ।। 7
க₂வத்ஸூக்ஷ்மோ வாயுவசோ யுக்தோ தூ₄மாதி₃பி₄ர்ப₄வேத் ।
அந்யஸ்யாந்யஸ்வரூபத்வம் ந முக்₂யமுபபத்₃யதே ।। 8

(அ..ம்)

இறங்குகிறவனுக்கு ஆகாசம் முதலியவைகளின் ஸ்வரூபமாகவேயாகும் தன்மையா? அல்லது அவைகளுக்கு ஸமானமாயிருக்கும் தன்மையா? "வாயுவாக ஆகி" என்பது முதலான வாக்கியமிருப்பதால் அததுகளாக ஆவதையே அடைகிறான்.

ஆகாசம் போல ஸூக்ஷ்மமாகவும், வாயுவின் வசமாகவும், புகை முதலியவைகளுடன் சேர்ந்ததாகவும் ஆகிறான். ஒரு வஸ்துவிற்கு வேறு வஸ்துவின் ஸ்வரூபத்தையுடைய தன்மையென்பது, முக்யமான அர்த்தத்தில் பொருந்தாது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஸ்வர்க்கத்திலிருந்து இறங்கி வரும் முறை வேதத்தில் "**अथ एतं एव अध्वानं पुन: निवर्तते यथा एतं आकाशं, आकाशाद्वायु, वार्युभूत्वा धूमो भवति धूमो भूत्वा अभ्रं भवति, अभ्रं भूत्वा मेघो भवति, मेघो भूत्वा प्रवर्षति**" "பிறகு எந்த வழியாக போகப்பட்டதோ அதே வழியாக மறுபடியும் திரும்புகிறான்.

ஆகாசத்தை அடைகிறுன். ஆகாசத்திலிருந்து வாயுவை (அடைகிறான்), வாயுவாக ஆகி புகையாக ஆகிறுன். புகையாக ஆகி ஜலத்தை சுமந்த மேகமாக ஆகிறுன். ஜலத்தை சுமந்து மேகமாகி மழை பெய்யும் மேகமாக ஆகிறுன். மழை பெய்யும் மேகமாகி நன்கு பெய்கிறுன்" என்று சொல்லப் பட்டிருக்கிறது. "எப்படிப் போனுனோ அப்படியே" என்று அர்த்தம். இங்கே ஸ்வர்க்கத்திலிருந்து இறங்கும் ஜீவனுக்கு, "வாயுவாக ஆகி" என்பது முதலியதால் அததன் தன்மையையே அடைவதாகச் சொல்லியிருப்பதால், ஆகாசம் முதலியவைகளின் ஸ்வரூபத்தையேயுடையவனுக ஆகிறுன் என்று ஏற்படுகிறது.

ஸித்தாந்தம் :

ஒரு வஸ்துவிற்கு மற்ற வஸ்துவின் ஸ்வரூபம் ஏற்படுகிறதென்று ஸம்பவிக்கக் கூடாததால், ஆகாசத்தை அடைவது என்பது ஆகாசத்தைப் போல ஸூக்ஷ்மமான ரூபம் என்று தான் தாத்பர்யம். வாயுவாக ஆவது என்பது வாயுவிற்கு வசமாயிருப்பது தான். அப்படியே புகை முதலானவைகளாக ஆவது என்பது அவைகளுடன் சேர்ந்திருப்பது என்று தான் அர்த்தம் என்று இதுவே தீர்மானம்.

## ५.नातिचिराधिकरणम्

## 5.நாதிசிராதி₄கரணம்

(ஸூத்ரம் 23)

**नातिचिरेण विशेषात् ।।२३।।**

நாதிசிரேண விசேஷாத் 23

(அதிக தாமதமன்னியில், விசேஷம் சொல்லியிருப்பதால்)

இறங்கி வருவது வேகமாகவா, ஸாவகாசமாக, தாமதித்துத் தாமதித்தா? என்பது இங்கு விஷயம்.

**व्रीह्यादेः प्राग्विलंबेन त्वरया वाऽवरोहति ।**
**तत्रानियम एव स्यान्नियामकविवर्जनात् ।।९।।**
**दुःखं व्रीह्यादिनिर्याणमिति तत्र विशेषितः ।**
**विलम्बस्तेन पूर्वत्र त्वराऽर्थादवसीयते ।।१०।।**

வ்ரீஹ்யாதே₃: ப்ராக்₃விலம்பே₃ன த்வரயா வாஅவரோஹதி ।
தத்ராநியம ஏவ ஸ்யான்நியாமகவிவர்ஜநாத் ।। 9
து₃க்க₂ம் வ்ரீஹ்யாதி₃நிர்யாணமிதி தத்ர விசேஷித: ।
விலம்ப₃ஸ்தேன பூர்வத்ர த்வராஅர்தா₂த₃வஸீயதே ।। 10

(அ..ம்)
நெல் முதலியதிற்கு முன்னல் தாமதித்து இறங்குகிருனு? அல்லது வேகமாய் இறங்குகிருனு? (இப்படித்தான் என்று) நியமனம் செய்யக்கூடியது இல்லாததினுல், அவ்விஷயத்தில் நியமம் கிடையாது என்றே ஏற்படுகிறது.
நெல் முதலியதிலிருந்து வெளிக் கிளம்புதல் சிரமம் என்று அங்கே குறிப்பிடப் பட்டிருக்கிறது, அதினுல் அங்கே தாமதித்து. அதினுல் (அவ்விதம் சொல்லி இருப்பதால்) முன்னல் வேகமாயிருத்தல் தானுகவே அர்த்தத்தில் இருந்து தீர்மானிக்கப்படுகிறது.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
மழையாக பெய்வதைச் சொல்லிவிட்டு, "त इह व्रीहियवा ओषधिवनस्पतयः तिलमाषा इति जायन्ते"என்று சொல்லியிருக்கிறது."இங்கே அவர்கள் நெல், யவம், புல், பூண்டு, பெரிய மரங்கள், எள்ளு, உளுந்து என்று பிறக்கிருர்கள்" என்பதிலிருந்து ஆகாசம் முதல் நெல் முதலியதாக ஆகும் வரை ஆகாசம் முதலியவைகளில் தாமதமுண்டா அல்லது வேகமாகவே வந்து விடுகிருர்களா என்று தீர்மானிக்க எவ்வித காரணமும் காணுதபடியால் நியமம் இல்லை. அப்படியும் இருக்கலாம் இப்படியும் இருக்கலாம் என்று தான் ஏற்படுகிறது.

ஸித்தாந்தம் :
நெல் முதலியதாக ஆவதைச் சொல்லிவிட்டுப் பிறகு "अतो वै खलु दुर्निष्पपतरम्" இங்கிருந்து வெளியில் வருவது மிகவும் சிரமம்" என்று நெல் முதலிய தன்மையிலிருந்து வெளிப்படுவது சிரமமென்று சொல்லும் சுருதி அவைகளில் தாமதமேற்படுமென்பதைக் குறிப்பிடுகிறது. இதினுல் இதற்கு முன்னல் வேகமாக என்று தீர்மானமாகிறது.

## ६.अन्याधिष्ठिताधिकरणम्

## 6.அந்யாதி$_4$ஷ்டி$_2$தாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 24 - 27)

**अन्याधिष्ठिते पूर्ववदभिलापात् ।।२४।।**

அந்யாதிஷ்டி$_2$தே பூர்வவத$_3$பி$_4$லாபாத் 24

(அன்யர்களால் அதிஷ்டிதமாயிருப்பவைகளில், முன்போல சொல்லியிருப்பதால்)

**अशुद्धमिति चेन्न शब्दात् ।।२५।।**

அசுத்$_3$த$_4$மிதி சேன்ன சப்$_3$தா$_3$த் 25
(அசுத்தம் என்றால் இல்லை, சப்தமிருப்பதால்)

**रेतः सिग्योगोऽथ ॥२६॥**

ரேத: ஸிக்$_3$யோகோ$_3$அத$_2$ 26
(பிறகு ரேதஸ்ஸிக்குடன் சேர்க்கை)

**योनेः शरीरम् ॥२७॥**

யோநே: சரீரம் 27
(யோனியிலிருந்து சரீரம்)

நெல் முதலான பயிரில் ஜீவன் இருப்பானென்ருல் இவனே அந்தப் பயிராயிருக்கிற ஜீவனுக இருக்கிருன் என்று தாத்பர்யமா? என்பதை இங்கே விளக்குகிருர்.

**व्रीह्यादौ जन्म तेषां स्यात्संश्लेषो वा जनिर्भवेत् ।**
**जायन्त इति मुख्यत्वात्पशुहिंसादिपापतः ॥११॥**
**वैधात्र पापसंश्लेषः कर्मव्यापृत्यनुक्तितः ।**
**श्वविप्रादौ मुख्यजनौ चरणव्यापृतिः श्रुता ॥१२॥**

வ்ரீஹ்யாதௌ$_3$ ஜன்ம தேஷாம் ஸ்யாத்ஸம்ச்லேஷோ வா ஜநிர்ப$_4$வேத்।
ஜாயந்த இதி முக்யத்வாத்பசுஹிம்ஸாதி$_3$பாபத: ।। 11
வைதா$_4$ன்ன பாபஸம்ச்லேஷ: கர்மவ்யாப்ருத்யநுக்தித:।
ச்வவிப்ராதௌ$_3$ முக்யஜநௌ சரணவ்யாப்ருதி: ச்ருதா ।। 12

(அ..ம்)

அவர்களுக்கு (ஸ்வர்க்கம் போய்விட்டு இறங்குகிறவர்களுக்கு) நெல் முதலியதில் பிறப்பு உண்டா? அல்லது அவைகளுடன் ஒட்டுதல் மாத்திரமா? "பிறக்கிருர்கள்" என்பதற்கு முக்கியமான அர்த்த மானதிஞல், பிறப்பே இருக்கும். (யாகத்தில்) பசுவை ஹிம்ஸை செய்தல் முதலான பாபத்தின் பலனுக.

(பசு ஹிம்ஸை முதலியது) விதிக்கப்பட்டிருப்பதால், பாபத்தின் ஸம்பந்தம் கிடையாது. (நெல் முதலிய ஜன்மா எடுப்பதற்கு எந்த) கர்மாவும் வேலே செய்வதாக சொல்லாததிஞலும் (அவைகளில் பிறப்பதில்லே). நாய், பிராஹ்மணர் முதலானதில் முக்கியமாயுள்ள பிறப்பு சொல்வதில் நடத்தையின் வேலே சொல்லப்பட்டிருக்கிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஆகாசம் முதலானவ்வகளில் வெறும் ஸம்பந்தம் தான் என்று சொன்னது போல நெல் முதலியவைகளில் சொல்லக்கூடாது இங்கே ஸ்பஷ்டமாக "जायन्ते" "பிறக்கிருர்கள்" என்ற வார்த்தையே

காண்கிறது. அதற்கு முக்கியார்த்தம் ஜன்மாவெடுப்பது தான். ஆகையால் நெல் முதலியதாக ஜன்மா எடுக்கிருர்கள் என்று தான் ஏற்படுகிறது. ஆனுல் அவ்விதம் ஜன்மா எடுப்பதற்கு இவர்களிடம் பாபமில்லேயே, இவர்கள் புண்ணிய கர்மாக்களை அனுஷ்டித்து விட்டு அதன் பலனுக ஸ்வர்க்கம் போய் அனுபவித்து விட்டு திரும்பி வருகிறவர்களல்லவா என்று கேட்டால், இவர்கள் ஸ்வர்க்கம் போவதற்கு ஸாதனமான யாகங்களைச் செய்யும் போது பசுக்களை ஹிம்ஸித்திருக்கிருர்கள். வேறு பல பாபங்களும் ஸம்பவித்திருக்கும். அவைகளின் பலனுக இவ்விதம் நெல் முதலியதாக ஜன்மா எடுக்கும்படி ஏற்படுகிறது. ஆகையால் அவைகளில் ஜன்மா என்பது முக்கியார்த்தத்தில் தான்.

ஸித்தாந்தம் :

யாகாதிகள் ஸம்பந்தமாக ஏற்படும் பசு ஹிம்ஸை முதலியது வேதத்திலேயே விதிக்கப்பட்டிருப்பதால், அவைகளைச் செய்வதால் பாபம் கிடையாது. அதனுல் இந்த ஜன்மா என்பது பொருந்தாது. ஆகையால் நெல் முதலியதுடன் கூடவிருப்பது மாத்திரம் தான். மேலும் அவைகளில் முக்கியமான ஜன்மா சொல்லப்படுமானுல் அது ஏற்படுவதற்கு எந்த கர்மா என்ன வியாபாரம் செய்தது என்று சொல்ல வேண்டும். அப்படியொன்றும் சொல்லப்படவில்லை. வாஸ்தவமான ஜன்மா எங்கே ஏற்படவேண்டுமோ அங்கே அதற்குக் காரணமாயுள்ள கர்மா சொல்லப்பட்டிருக்கிறது. "நல்ல நடத்தையுள்ளவர்களுக்கு பிராஹ்மணர் முதலான பிறப்பு, கெட்ட நடத்தையுள்ளவர்களுக்கு நாய் முதலான பிறப்பு" என்று அங்கே தான் வாஸ்தவமான ஜன்மா.ஆகையால் ஸ்வர்க்கத்திலிருந்து இறங்குகிறவர்களுக்கு நெல் முதலியதில் ஒட்டியிருத்தல் மாத்திரம் தான்.

இந்த முதல் பாதத்தில் அதிகரணங்கள் 6, சுலோகங்கள் 12 (ஸூத்ரங்கள் 27).

========================================

# १.संध्याधिकरणम्

## 1.ஸந்த்$_4$யாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 1 - 6)

**संध्ये सृष्टिराह हि ।।१।।**

ஸந்த்$_4$யே ஸ்ருஷ்டிராஹ ஹி 1
(ஸந்த்யத்தில் ஸ்ருஷ்டி, சொல்லியிருக்கிறதே)

**निर्मातारं चैके पुत्रादयश्च ।।२।।**

நிர்மாதாரம் சைகே புத்ராத$_3$யச்ச 2
(சிலர் உண்டுபண்ணுகிறவனாகவும், புத்திரன் முதலியவையும்)

**मायामात्रं तु कार्त्स्न्येनानभिव्यक्तस्वरूपत्वात् ।।३।।**

மாயாமாத்ரம் து கார்த்ஸ்நயேநாநபி$_4$வ்யக்தஸ்வரூபத்வாத் 3
(மாயா மாத்திரம்தான், பூராவாக வியக்தமான
ஸ்வரூபமுள்ளதாக இல்லாததால்)

**सूचकश्च हि श्रुतेः आचक्षते च तद्विदः ।।४।।**

ஸூசகச்ச ஹி ச்ருதே: ஆசக்ஷதே ச தத்$_3$வித$_3$: 4
(ஸூசகமும்தான், சுருதியினால், அதை அறிந்தவர்களும்
சொல்கிறார்கள்)

**पराभिध्यानात्तु तिरोहितं ततो ह्यस्य बन्धविपर्ययौ ।।५।।**

பராபி$_4$த்$_4$யாநாத்து திரோஹிதம் ததோ ஹ்யஸ்ய
ப$_3$ந்த$_4$விபர்யயௌ 5
(மறைந்திருந்தது பரனை தியானிப்பதினால்
(ஆவிர்பாவமடைகிறது)அவரிடமிருந்து அல்லவா
இவனுக்கு பந்தமும் மோக்ஷமும்)

**देहयोगाद्वा सोऽपि ।।६।।**

தே$_3$ஹயோகா$_3$த்வா ஸோஅபி 6
(தேஹத்தின் சேர்க்கையினால்தான் அதுவும்)

இந்த பாதத்தில் ஜீவனுடைய ஸ்வரூபத்தையும் ஈசுவரருடைய ஸ்வரூபத்தையும், விளக்கிக் காட்டுகிறார். இந்த அதிகரணத்தில் ஜீவனின் ஸ்வப்னாவஸ்தை விசாரிக்கப்படுகிறது.

**सत्या मिथ्याऽथवा स्वप्नसृष्टिः सत्या श्रुतीरणात् ।
जाग्रद्देशाविशिष्टत्वादीश्वरेणैव निर्मिता ।। १ ।।
देशकालाद्यनौचित्याद्बाधितत्वाच्च सा मृषा ।
अभावोक्तेर्द्वैतमात्रसाम्याज्जीवानुवादतः ।। २ ।।**

ஸத்யா மித்₂யாஅத₂வா ஸ்வப்னஸ்ருஷ்டி: ஸத்யா ச்ருதீரணாத் ।
ஜாக்₃ரத்₃தே₃விஷிசிடத்வாதீ₃ச்வரேணைவ நிர்மிதா ।। 1
தே₃சகாலாத்யநௌசித்யாத்₃பா₃தி₄தத்வாச்ச ஸா ம்ருஷா ।
அபா₄வோக்தேர்த்₃வைதமாத்ரஸாம்யாஜ்ஜீவாநுவாத₃த: ।। 2

(அ..ம்)

ஸ்வப்னத்தில் ஸ்ருஷ்டி செய்வது வாஸ்தவமாயுள்ளதா? அல்லது மித்யையா (பொய்யான தோற்றமா)? சுருதியினுல் சொல்லப்பட்டு இருப்பதாலும், ஜாக்ரத்திலுள்ள தேசத்திற்கு வித்யாஸப் படாததினுலும், ஈசுவரராலேயே ஸ்ருஷ்டிக்கப்படுகிற வாஸ்தவமாக உள்ளது தான்.

தேசம், காலம் முதலியது உசிதமாயில்லாததினுலும், பாதிக்கப்பட்டு வருகிற படியாலும், இல்லையென்று சொல்லியிருப்பதாலும், ஜாக்ரத், த்வைத அனுபவித்ததற்கு ஸமானமாயிராததினுலும், ஜீவனை சொல்லியிருப்பதாலும் அது பொய்யே.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"अथ रथान् रथयोगान् पथः सृजते" "பிறகு ரதங்களையும், ரதத்தில் பூட்டியுள்ளவைகளையும் (குதிரைகளையும்) வழிகளையும் ஸ்ருஷ்டிக்கிருன்" என்று ஸ்வப்னத்தில் ரதம் முதலியவைகளுக்கு ஸ்ருஷ்டி சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ஜாக்கிரத் வியவஹாரதசையில் ஆகாசம் முதலியவைகளின் ஸ்ருஷ்டி எப்படி வாஸ்தவமாய் உள்ளதோ, அப்படியே தான் இதுவும் இருப்பது நியாயம். மேலும், ஜாக்கிரத்திலுள்ள தேச காலங்களுக்கும் ஸ்வப்னத்திலுள்ள தேசகாலங்களுக்கும் எவ்வித வித்யாஸங்களையும் நாம் காணவில்லை. அப்பொழுது போஜனம் முதலியது எப்படி திருப்தி முதலியதைக் கொடுக்கின்றனவோ, அவ்விதமே இப்பொழுதும் ஸ்வப்னத்தில் அதனதன் பலனைக் கொடுக்கின்றன.ஆகையால் ஸ்வப்ன ஸ்ருஷ்டி வாஸ்தவமாயுள்ளது, ஈசுவரரால் ஸ்ருஷ்டிக்கப்படுவதால், ஆகாசம் முதலியதின் ஸ்ருஷ்டியைப் போல என்று அனுமானப்பிரமாணத்தினுல் தீர்மானிக்கலாம்.

ஸித்தாந்தம் :

அப்படியல்ல. ஸ்வப்ன ஸ்ருஷ்டி பொய்தான். அங்கே உசிதமான தேசம், காலம் முதலியது இருக்க முடியாது. கேசத்தின் ஆயிரத்திலொரு பங்கு அளவுள்ள நாடிகளின் மத்தியில் மலை, நதி,

ஸமுத்திரம் முதலியவைகளுக்கு வேண்டிய இடம் கிடையாது. நடு இரவில் தூங்கிக் கொண்டு இருக்கிறவனுக்கு ஸூர்யகிரஹணம் பார்ப்பதற்குத் தக்க காலமும் கிடையாது. உபநயனமேயாகாத பாலனுக்கு புத்திரன் பிறந்து ஸந்தோஷப் படுவது என்பது முதலியதிற்குள்ள உசிதமான நிமித்தங்களும் கிடையாது. மேலும் ஸ்வப்னத்தில் பார்க்கப்படும் வஸ்துக்கள் விழித்துக் கொண்ட பிறகு பாதிக்கப்படுகின்றன என்பதுடன் ஸ்வப்னத்திலேயே பாதிக்கப் படுவதையும் பார்க்கிறோம். ஒன்று மரம் என்று தீர்மானமாய்த் தோன்றிக் கொண்டிருக்கையிலேயே சில ஸமயம் அப்பொழுதே மலையாக மாறிவிடும். ஸ்வப்ன ஸ்ருஷ்டியை சுருதி சொல்வது, வாஸ்தவம். ஆனால் அது வாஸ்தவமாக இருப்பற்றது என்பதைச் சேர்த்தே சொல்கிறது. "न तत्र रथा:, न रथयोगा:, न पन्थानो भवन्ति । अथ रथान् रथयोगान् पथ: सृजते" "அங்கே ரதங்கள் கிடையாது, ரதத்தில் பூட்டியிருப்பவைகளும் கிடையாது, வழிகளும் கிடையாது. பிறகு ரதங்களையும், ரதத்தில் பூட்டியிருப்பவைகளும், வழிகளையும் ஸ்ருஷ்டிக்கிறான்" என்று. அதனால் வாஸ்தவத்தில் இருப்பதற்ற ரதம் முதலியவை கிளிஞ்சலில் வெள்ளி போல தோன்றுகின்றன என்று தான் சுருதியின் தாத்பர்யம். ஜாக்கிரத்திற்கு ஸமானமாயிருக்கிறதென்று சொன்னதும் சரியல்ல. உசிதமற்ற தேசம், காலம் முதலான ஏராளமான அம்சங்களில் ஸமானமற்ற தன்மை இருப்பதால், ஈசுவரரால் ஸ்ருஷ்டிக்கப்படுகிறதென்று சொன்னதும் பிசகு. "य एष सुप्तेषु जागर्ति कामं कामं पुरुषो निर्मिमाण:" "தூங்கும் போது எந்த இவன் விழித்துக் கொண்டிருக்கிறானோ அந்த புருஷன் இஷ்டமானதையெல்லாம் நிர்மானம் செய்கிறான்" என்று ஸ்வப்னத்தை நிர்மானம் செய்யும் தன்மை ஜீவனுடையதேயென்று வேதமே எடுத்துக் காட்டுகிறது. ஆகையால் ஸ்வப்ன ஸ்ருஷ்டி பொய் தான்,

## २.तदभावाधिकरणम्

### 2.த₃தபா₄வாதி₄கரணம்

(ஸூத்ரம 7,8)

**तदभावो नाडीषु तच्छ्रुतेरात्मनि च ।।७।।**

தத₃பா₄வோ நாடீ₃ஷு தச்ச்₂ருதேராத்மநி ச ..7..

(அதன் இல்லாமை நாடிகளிலும் ஆத்மாவிலும், அப்படி சொல்லியிருப்பதால்)

अतः प्रबोधोऽस्मात् ।।८।।
அத: ப்ரபோ$_3$தோ$_4$அஸ்மாத் 8
(அதினால் இதிலிருந்து விழிப்பு)

இதில் ஸுஷுப்தி அவஸ்தை விசாரிக்கப்படுகிறது.

नाडीपुरीतद्ब्रह्मणि विकल्प्यन्ते सुषुप्तये ।
समुच्चितानि वैकार्थ्याद्विकल्प्यन्ते यवादिवत् ।। ३ ।।
समुच्चितानि नाडीभिरुपसृप्य पुरीतति ।
हृत्स्थे ब्रह्मणि यात्यैक्यं विकल्पे त्वष्टदोषता ।। ४ ।।

நாடீ$_3$புரீதத்$_3$ப்$_3$ரம்ஹாணி விகல்ப்யந்தே ஸுஷுப்தயே ।
ஸமுச்சிதாநி வைகார்த்$_2$யாத்$_3$விகல்ப்யந்தே யவாதி$_3$வத் ।। 3
ஸமுச்சிதாநி நாடீ$_3$பி$_4$ருபஸ்ருப்ய புரீததி ।
ஹ்ருத்ஸ்தே ப்$_3$ரஹ்மணி யாத்யைக்யம் விகல்பே த்வஷ்டதோ$_3$ஷதா ।। 4

(அ..ம்)

ஸுஷுப்தியின் பொருட்டு நாடிகள், புரீதத், பிரஹ்மம் என்று மூன்றும் விகல்பிக்கப்படுகின்றனவா (ஏதேனும் ஒன்று என்று)? அல்லது மூன்றும் சேர்ந்து என்று சொல்லப்பட்டிருக்கிறதா? ஒரே உத்தேசத்தை யுடையதால், யவம் முதலியதைப் போல விகல்பப்படுகின்றன.

மூன்றும் சேர்ந்துதான் நாடிகள் வழியாக புரீததின் ஸமீபம் போய், ஹ்ருதயத்திலுள்ள பிரஹ்மத்தில் ஒன்றாக ஆகும் தன்மையை அடைகிறது. விகல்பம் என்றாலோ எட்டு தோஷங்கள் ஏற்படும்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"आसु तदा नाडीषु सृप्तो भवति" "அப்பொழுது இந்த நாடிகளில் போனவனாக ஆகிறான்" என்று சொல்லும் சுருதியில், ஸுஷுப்தி காலத்தில் நாடிகளில் பிரவேசம் தெரிகிறது. "ताभिः प्रत्यवसृप्य पुरीतति शेते" அவைகளால் நெருங்கிப் போய் புரீதத்தில் படுத்துக் கொள்கிறான்" என்ற சுருதியில் புரீதத் என்பதில் அவனுக்கு ஆசிரயமாயிருக்கும் தன்மை துவங்குகிறது. "य एषोऽन्तर्हृदय आकाशः तस्मिन् शेते" "ஹ்ருதயத்திற்கு உள்ளே எந்த இந்த ஆகாசமோ, அதில் படுத்துக் கொள்கிறான்" என்றுள்ள வேறு சுருதியில் ஆகாசமென்று சொல்லப்படுகிற பிரஹ்மத்தை ஆசிரயித்திருப்பதாகத் தெரிகிறது. ஆக நாடிகள், புரீதத், பிரஹ்மம் என்று மூன்றுமே ஸுஷுப்தியென்ற ஒரே பிரயோஜனத்தையுத்தேசித்து சொல்லப் பட்டிருப்பதால், இவைகளில் ஏதேனும் ஒன்று என்று விகல்பம் என்பது தான் உசிதம். புரோடாசமென்ற ஒரே பிரயோஜனத்தையுத்தேசித்து"व्रीहिभिर्यजेत

,यवैर्यजेत""நெல்கனிகளால் யஜிக்கவும், யவங்களால் யஜிக்கவும்" என்றவிடத்தில் எப்படி ஏதேனும் ஒன்றினல் என்று விகல்பமே நிச்சயிக்கப்பட்டிருக்கிறதோ அப்படியே ,இங்கேயும் ஸுஷுப்தி என்ற பிரயோஜனம் ஒன்ருகவேயிருப்பதால் விகல்பம் தான் நியாயமாகும். ஆகையால், சில ஸமயம் புரீதத்தில் தூங்குகிருன், சில ஸமயம் நாடிகளில் தூங்குகிருன், சில ஸமயத்தில் பிரஹ்மத்தில் தூங்குகிருன், என்று ஏதேனுமொன்றில் விகல்பம் தான்.

ஸித்தாந்தம் :

ஒரே பிரயோஜனமென்பது சரியல்ல. தனித்தனி உபயோகம் ஸுலபமாய் காட்ட முடியுமானதினல், எப்படியென்ருல் கண் முதலான இந்திரியங்களில் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கும் ஜீவனுக்கு தூங்குவதற்காக ஹ்ருதயத்திலிருக்கும் பிரஹ்மத்தை அடைவதற்கு வேண்டிய வழிகளாக நாடிகள் இருந்து வருகின்றன. அதனுல் தான் "அவைகளால் நெருங்கிப் போய்" என்று மூன்ரும் வேற்றுமையால் நாடிகளுக்கு ஸாதனமாயிருக்கும் தன்மை சொல்லப்பட்டிருக்கிறது. ஹ்ருதயத்தைச் சுற்றியிருக்கும் புரீதத் என்பது அரண்மனை போல் உள்ள மறைவான இருப்பிடம். அதற்குள் உட்காருவதற்குள்ள கட்டில் போல் தூங்கும் ஆதாரமாயிருப்பது பிரஹ்மம். எப்படி ஒருவன் வெளியில் ஸஞ்சரித்துக் கொண்டிருந்தவன் வாசல் வழியாக நுழைந்து அரண்மனையில் கட்டிலில் படுத்துக்கொள்வானே அவ்விதமே ஜீவன் நாடிகள் வழியாக நுழைந்து புரீதத்தில் பிரஹ்மத்தின் இடத்தில் படுத்துக் கொள்கிருன் என்பதால் அம்மூன்றுக்கும் தனித்தனி பிரயோஜனம் இருப்பதால், மூன்றும் சேர்ந்தே இருக்க வேண்டியது தான்.ஸுஷுப்தியில் கட்டில் போலுள்ள பிரஹ்மத்தில் ஜீவன் படுத்திருக்கிருன் என்ருல் பிரஹ்மம் ஆதாரம் ஜீவன் ஆதேயம் என்று தனித்தனியாக தெரியவில்லையேயென்ருல், ஒன்ருகவிருப்பதால் என்று சொல்கிரோம். ஜலம் நிறைந்த குடம் குளத்து ஜலத்தில் போட்டு அமிழ்ந்து கிடந்தால் எப்படி தனியாகத் தெரியாதோ அதைப்போலவே (குடம் போலுள்ள) அந்த காரணமாகிற உபாதியுடன் கூடின ஜீவன் அக்ஞானமாகிற (குளம்போலுள்ள)) உபாதியுடன் கூடின ஈசுவரரிடத்தில் அமிழ்ந்து கிடப்பதால் தனியாகத் தெரியவில்லை. இதனுல் தான் "**सता सोम्य तदा संपन्नो भवति**" "ஹே ஸோம்ய! அப்பொழுது ஸத் வஸ்துவுடன் ஒன்ருக ஆகிவிடுகிருன்" என்று வேறு சுருதியில் ஜீவனுக்கு பிரஹ்மத்துடன் ஒன்ருகிவிடும் தன்மை

சொல்லப்பட்டிருக்கிறது. நாடிகள், புரீதத், பிரஹ்மம் இவைகளில் ஏதேனும் ஒன்று விகல்பம் என்றால் எட்டு தோஷங்கள் உண்டாகுமானதினால் அது சரியானதில்லை. எப்பொழுது ஜீவன் நாடிகளில் தூங்குகிறானோ, அப்பொழுது புரீதத் பிரஹ்மம் இவைகளைச் சொல்லும் வாக்கியங்களுக்கு பிராமாண்யமில்லை என்று தள்ளி விடும்படி ஏற்படும். நாடிகளில் தூங்கும் போது புரீதத் பிரஹ்மவாக்யத்துக்கு உள்ள பிராமாண்யம் விடப்படுவது - 1 இல்லாத அப்ராமாண்யத்தை ஏற்றுக்கொள்வது - 2 மறுபடி புரீதத் பிரஹ்மத்தில் தூங்கும்போது முன்விட்ட பிராமாண்யத்தை ஸ்வீகரிப்பது - 3 ஏற்றுக் கொண்டுள்ள அப்ராமாண்யத்தைவிடுவது - 4 ஆக 4 தோஷங்கள். இவ்விதமே நாடி வாக்யத்துக்கும் பிராமாண்ய த்யாகம் - 1 அப்ராமாண்ய ஸ்வீகாரம் - 2 விடப்பட்ட பிராமாண்ய ஸ்வீகாரம் - 3 ஸ்வீகரித்த அப்ராமாண்ய த்யாகம் - 4 ஆக எட்டு தோஷங்கள் ஏற்படும். அவைகளில் சொல்லாததற்கு பிராமாண்யம் கொடுத்ததாகவும் ஆகும். மறுபடியும் புரீதத்திலும் பிரஹ்மத்திலும் தூங்குகிறான் என்றால் புரீதத் பிரஹ்ம வாக்கியங்களுக்கு நிராகரித்த பிராமாண்யத்தை ஒப்புக் கொண்டதாக ஆகும். முன் ஒப்புக் கொண்ட பிராமாண்யமின்மையைக் கைவிட்டதாகவும் ஆகும். ஆக கிடைத்ததை விடுதல், கிடைக்காததை ஒப்புக் கொள்ளுதல், விட்டதை எடுத்துக்கொள்ளுதல், ஒப்புக் கொண்டதை தள்ளுதல் என்று நான்கு தோஷங்கள் ஏற்படும். இதே மாதிரி புரீதத்தில் தூங்குகிறான் என்றால், அப்பொழுதும் நான்கு தோஷங்கள் ஏற்படும். ஆக எட்டு தோஷங்கள் ஸம்பவிக்குமானதினால் விகல்பம் என்பது சரியல்ல. ஆகையால் ஸமுச்சயம் (எல்லாம் சேர்ந்து) என்பது தான் நியாயம்.

# ३.कर्मानुस्मृतिशब्दविध्यधिकरणम्

## 3.கர்மாநுஸ்ம்ருதிசப்த₃வித்₄யதி₄கரணம்

(ஸூத்ரம் 9)

स एव तु कर्मानुस्मृतिशब्दविधिभ्यः ॥९॥

ஸ ஏவ து கர்மாநுஸ்ம்ருதிசப்₃த₃விதி₄ப்₄ய: 9

(அவனேதான், கர்மா அனுஸ்மிருதி, சப்தம், விதி இவைகளிலிந்து)

தூங்கியெழுந்திருப்பவன் யார்? என்பது விஷயம்.

यः कोऽप्यनियमेनात्र बुध्यते सुप्त एव वा ।
उदबिन्दुरिवाशक्तेर्नियन्तुं कऽपि बुध्यते ॥ ५ ॥

कर्माविद्यापरिच्छेदादुदबिन्दुविलक्षणः ।
स एव बुध्यते शास्त्रात्तदुपाधेः पुनर्भवात् ।। ६ ।।

ய: கோஅப்யநியமேனாத்ர புத்$_4$யதே ஸுப்த ஏவ வா ।
உத$_3$பி$_3$ந்து$_3$ரிவாஷுக்தேர்நியந்தும் கோஅபி பு$_3$த்$_4$யதே ।। 5
கர்மாவித்$_4$யாபரிச்சே$_2$தா$_3$து$_3$த$_3$பி$_3$ந்து$_3$விலக்ஷண: ।
ஸ ஏவ பு$_3$த்யதே சாஸ்த்ராத்தது$_3$பாதே$_4$: புனர்ப$_4$வாத் ।। 6

(அ..ம்)

இங்கு நியமமன்னியில் யாரேனும் ஒருவன் விழித்துக் கொள்கிருஞ, அல்லது தூங்கினவனேதாஞ? ஜலத்துளிபோல, நியமனம் செய்ய முடியாததிஞல் யாரோதான் விழித்துக்கொள்கிருன்.

கர்மம், அவித்யை என்பவைகளால் துண்டுபட்டிருப்பதால், ஜலத்துளிக்கு வேறுபட்டவன். அவனுடைய உபாதி மறுபடியும் இருப்பதாலும், சாஸ்திரத்திஞலும், அவனேதான் விழித்துக் கொள்கிருன்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஸமுத்திரத்தில் போட்டுவிட்ட ஜலத்துளி எதுவோ, அதையே மறுபடியும் நியமமாக எடுப்பது ஸாத்தியமில்லை. அதே மாதிரி தூங்கும் போது ஜீவன் பிரஹ்மத்தைஅடைகிறானென்ருல், எழுந்திருக்கும்போது அவனே தான் விழித்துக்கொள்கிருன் என்று நியமனம் செய்ய முடியாது. ஆகையால் யாரோ ஒருவன் எழுந்திருக்கிருன் என்பது தான் பொருத்தம்.

ஸித்தாந்தம் :

அந்த திருஷ்டாந்தம் சரியல்ல. சைதன்ய ஸ்வரூபஞயிருக்கும் ஜீவன் கர்மம், அவித்யை இவைகளால் சூழப்பட்டவஞக பிரஹ்மத்தில் முழுகுகிருன். ஜலத்துளி அப்படி எதிஞலும் சூழப்பட்டு ஸமுத்திரத்தில் விழவில்லை. கங்கா ஜலம் நிரம்பிய ஒரு தங்கக்குடத்தை, வாயையையும் நன்கு அடைத்து விட்டு, ஸமுத்திரத்தில் போட்டுவிட்டு மறுபடியும் எடுக்கப்படுமாஞல், அங்குள்ள கங்கா ஜலம் முன்னிருந்ததேயென்று நன்கு அறிய முடியும். அதுபோலவேதான் ஜீவன் பிரஹ்மத்தில் லயிப்பது.அதஞல் சுருதியும் "ते इह व्याघ्रोवा सिंहो वा वृको वा वराहोवा कीटो वा पतङ्गो वा दंशो वा मशको वा यत् यत् भवन्ति तत् तदाभवन्ति" "அவை இங்கே வேங்கைப்புலியோ, ஸிம்ஹமோ, ஓநாயோ, வராஹமோ, புழுவோ, பக்ஷியோ, கடிக்கும் ஜந்துவோ, கொசுவோ

எதுஎதுவாக இருக்கின்றனவோ அது அதுவாகவே ஏற்படுகின்றன" என்று வேங்கை முதலான ஜீவர்கள் தூங்குவதற்கு முன்னால் எந்த எந்த சரீரத்தை அடைந்திருந்திருந்தனவோ, தூக்கத்திற்குப் பிறகும் அதே ஜீவர்கள் விழித்துக் கொள்ளும் போது அந்தந்த சரீரத்தையே அடைகிறார்கள் என்று சொல்கிறது.தூக்கத்தில் பிரஹ்மத்தையடைந்த ஜீவனுக்கு முக்தியடைந்தவனைப் போல மறுபடியும் எழுந்திருப்பது கிடையாதென்று சொல்வது பொருந்தாது. இவனைத் தனிப்படுத்திக் காட்டக்கூடிய உபாதி இருந்து கொண்டே இருப்பதால் இவனுக்கு மறுபடியும் எழுந்திருப்பது உண்டு. ஆகையால் எவன் தூங்குகிறானோ அவனே தான் விழித்துக் கொள்கிறான்.

# ४.मुग्धेऽर्धसंपत्त्यधिकरणम्

## 4.முக்$_3$தே$_4$அர்த$_4$ஸம்பத்த்யதி$_4$கரணம்

(ஸூத்ரம் 10)

**मुग्धेऽर्धसंपत्तिः परिशेषात् ।।१०।।**

முக்$_3$தே$_4$அர்த$_4$ஸம்பத்தி: பரிசேஷாத் 10

(மோஹமடைந்தவன் விஷயத்தில் பாதி ஸம்பத்தி, மிஞ்சுவதால்)

இங்கு மூர்ச்சை என்ற அவஸ்தை விசாரிக்கப்படுகிறது.

**किं मूर्छैका जाग्रदादौ किं वाऽवस्थान्तरं भवेत् ।**
**अन्याऽवस्था न प्रसिद्धा तेनैका जाग्रदादिषु ।। ७ ।।**
**न जाग्रत्स्वप्नयोरेका द्वैताभावान्न सुप्तता ।**
**मुखादिविकृतेस्तेनावस्थाऽन्या लोकसम्मता ।। ८ ।।**

கிம் மூர்ச்சை$_2$கா ஜாக்$_3$ரதா$_3$தௌ$_3$ கிம்வாஅவஸ்தா$_2$ந்தரம் ப$_4$வேத் ।
அந்யாஅவஸ்தா$_2$ ந ப்ரஸித்$_3$தா$_4$ தேநைகா ஜா$_3$க்$_3$ரதா$_3$தி$_3$ஷு ।। 7
ந ஜாக்$_3$ரத்ஸ்வப்ன்யோரேகா த்$_3$வைதாபா$_4$வாந்ந ஸுப்ததா ।
முகா$_2$தி$_3$விக்ருதேஸ்தேநாவஸ்தா$_2$அன்யா லோகஸம்மதா ।। 8

(அ..ம்)

மூர்ச்சை என்பது ஜாக்கிரத் முதலியதில் ஒன்றா? அல்லது, வேறு அவஸ்தையாகுமா? வேறு அவஸ்தை பிரஸித்தமாயில்லை. ஆகையால் ஜாக்கிரத் முதலியவைகளுக்குள் ஒன்று தான்.

இரண்டாவது பதார்த்தம் பிரகாசிக்காததினால் ஜாக்கிரத், ஸ்வப்னம் இவைகளில் ஒன்று அல்ல. முகம் முதலானது விகாரப்பட்டிருப்பதால் ஸுஷுப்தியுமில்லை. ஆகையால் வேறு அவஸ்தை தான். உலகத்திலும் ஒப்புக் கொள்ளப்பட்டதே.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஜாகிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்று அவஸ்தைகளைத் தவிர வேறு எந்த அவஸ்தையும் பிரஸித்தமாக இல்லாததினால், மூர்ச்சையென்பதை இந்த மூன்றுக்குள் தான் உள்ளடக்கவேண்டும்.

ஸித்தாந்தம் :

இரண்டாவது பதார்த்தத்தின் அறிவேயில்லாததினால் வெளி பிரபஞ்சத்தைப் பார்க்கும் ஜாக்கிரத், உள் பிரபஞ்சத்தைப் பார்க்கும் ஸ்வப்னம், என்ற இரண்டிலும் மூர்ச்சை சேராது. நன்கு தூங்குகிறவன் பிரஸன்னமான முகத்துடன், ஸமமாக மூச்சு விட்டுக்கொண்டு, சரீரம் அசையாமல் இருக்கிறான். மூர்ச்சையடைந்திருப்பவனோ விகாரமான முகத்தை உடையவனாக, ஸமமாக மூச்சு விடாமல் சரீரத்தில் நடுக்கம் முதலியது உள்ளவனாக காணப்படுகிறான். இவ்விதம் நன்கு வித்யாஸமிருப்பதால் மூர்ச்சை ஸுஷுப்தியும் ஆகாது. ஆகையால் இந்த மூன்றிலும் சேர்க்க முடியாததினால், மூர்ச்சை வேறு அவஸ்தையென்று தான் ஒப்புக்கொள்ள வேண்டும். ஜாக்கிரத், ஸ்வப்னம், ஸுஷுப்தி என்ற மூன்றும் ஒவ்வொரு நாளும் ஏற்படுவதால் அவைகளுக்கு பிரஸித்தியாயிருப்பது போல குழந்தைகளுக்குக் கூட தெரியக்கூடிய பிரஸித்தி எப்பொழுதேனும் ஏற்படக்கூடிய மூர்ச்சைக்குக் கிடையாது தான். ஆனாலும் பெரியோர்கள் அதை அறிந்து வைத்தியம் செய்கிறார்கள். ஆகையால் அது வேறு தனியாயுள்ள அவஸ்தை. இவ்விதம் நான்கு அதிகரணங்களினால் "த்வம்" (நீ) என்ற பதத்தின் அர்த்தம் சோதிக்கப்பட்டது. ஸ்வப்ன ஸ்ருஷ்டியானது பொய்யாக விருப்பதால், ஸுகதுக்க அனுபவம் செயல்படுவது முதலியதெல்லாம் தென்பட்டாலும் கூட ஜீவன் அவைகளில் பற்றில்லாதவன் என்று காட்டப்பட்டது. ஸுஷுப்தியிலோ பிரஹ்மத்துடன் ஒன்றுகிற தென்பதினால் அதே பற்றற்ற தன்மை விளக்கப்பட்டது. விழிக்கும் போது அவனே எழுந்திருக்கிறான் என்பதினால் அவனுக்கு அநித்யத்தன்மையிருக்கலாமோயென்ற ஸந்தேஹம் விலக்கப்பட்டது. மூச்சு விடுவது முதலிய எல்லா வியவஹாரங்களும் நின்று போனாலும் ஜீவன் மூர்ச்சையில் நசித்து விடுவதில்லையென்பதினால், மரணத்தில் நாசமிருக்கலாமேயென்ற ஸந்தேஹமும் நிவிருத்தி செய்யப் பட்டது. ஆகையால் ஜீவன் பற்றற்றவனாய் நித்யமாய் இருப்பவன் என்று ஏற்பட்டது.

# ५.उभयलिङ्गाधिकरणम्

## 5.உப$_4$யலிங்கா$_3$தி$_4$கரணம்

(ஸூத்ரம் 11 - 21)

**न स्थानतोऽपि परस्योभयलिङ्गं सर्वत्र हि ।।११।।**

ந ஸ்தா$_2$நதோஅபி பரஸ்யோப$_4$யலிங்கம் ஸர்வத்ர ஹி 11

(ஸ்தானத்தினாலும் பரபிரஹ்மத்திற்கு இரண்டு லிங்கம் இல்லை, எங்குமே )

**न भेदादिति चेन्न प्रत्येकमतद्वचनात् ।।१२।।**

ந பே$_4$தா$_3$தி$_3$தி சேந்ந ப்ரத்யேகமதத்$_3$வசநாத் 12

(பேதத்தினால் இல்லை என்றால் அப்படியல்ல, ஒவ்வொன்றிலும் அபேதம் சொல்லியிருப்பதால்)

**अपि चैवमेके ।।१३।।**

அபி சைவமேகே 13

(மேலும், இப்படியே சிலர்)

**अरूपवदेव हि तत्प्रधानत्वात् ।।१४।।**

அரூபவதே$_3$வ ஹி தத்ப்ரதா$_4$நத்வாத் 14

(ரூபமற்றதுதான் அல்லவா அதையே பிரதானமாய் உடையதால்)

**प्रकाशवच्चावैयर्थ्यम् ।।१५।।**

ப்ரகாசவச்சாவையர்த்$_2$யம் 15

(பிரகாசம் போலவும், பிரயோஜனமற்றதில்லையானதினால்)

**आह च तन्मात्रम् ।।१६।।**

ஆஹ ச தந்மாத்ரம் 16

(அதுமாத்திரம்தான் என்று சொல்லியுமிருக்கிறது)

**दर्शयति चाथो अपि स्मर्यते ।।१७।।**

த$_3$ர்ஷயதி சாதோ$_2$ அபி ஸ்மர்யதே 17

(காட்டவும் காட்டுகிறது. மேலும் ஸ்மரிக்கப்படுகிறது)

**अत एव चोपमा सूर्यकादिवत् ।।१८।।**

அத ஏவ சோபமா ஸூர்யகாதி$_3$வத் 18

(இதினாலேயேதான் உபமானம் ஸூர்ய பிரதிபிம்பம் முதலியதைப்போல)

**अम्बुवदग्रहणात्तु न तथात्वम् ।।१९।।**

அம்பு$_3$வத$_3$க்ரஹணாத்து ந ததா$_2$த்வம் 19

(ஜலம்போல கிரஹிக்கப்படாததினால் அவ்விதத் தன்மை இல்லை)

**वृद्धिह्रासभाक्त्वमन्तर्भावादुभयसामञ्जस्यादेवम् ।।२०।।**

வ்ருத்$_3$தி$_4$ஹ்ராஸபா$_4$க்த்வமந்தர்பா$_4$வாதுப$_4$யஸாமஞ்ஜஸ்யாதே$_3$வம் 20

(வளர்தல் குறைதல் என்பதையுடைய தன்மை உள்ளே இருப்பதால் இரண்டும் பொருத்தமாயிருப்பதால் இவ்விதம்)

दर्शनाच्च ।।२१।।

த₃ர்சநாச்ச 21

(காண்பதினாலும்)

இனிவரும் நான்கு அதிகரணங்களில் பிரஹ்மம் விசாரிக்கப்படுகிறது. முதலில் இந்த அதிகரணத்தில் பிரஹ்மத்திற்கு உருவமுண்டா? என்பது விஷயம்.

ब्रह्म किं रूपि चारूपं भवेन्नीरूपमेव वा ।
द्विविधश्रुतिसद्भावाद् ब्रह्म स्यादुभयात्मकम् ।। ९ ।।
नीरूपमेव वेदान्तैः प्रतिपाद्यमपूर्वतः ।
रूपं त्वनूद्यते भ्रान्तमुभयत्वं विरुध्यते ।। १० ।।

ப்₃ரஹ்ம கிம் ரூபி சாரூபம் ப₄வேந்நீரூபமேவவா ।
த்₃விவித₄ ச்ருதி ஸத்₃பா₄வாத்₃ ப்₃ரஹ்ம ஸ்யாது₃ப₄யாத்மகம் ।। 9
நீரூபமேவ வேதா₃ந்தை: ப்ரதிபாத்₃யமபூர்வத: ।
ரூபம் த்வநூத்₃யதே ப்₄ராந்தமுப₄யத்வம் விருத்₄யதே ।। 10

(அ..ம்)

பிரஹ்மம் ரூபமுள்ளதாகவும் ரூபமற்றதாகவும் இருக்கிறதா? அல்லது ரூபமற்றது மாத்திரம்தானா? இரண்டு விதமாகவும் சுருதிகள் இருப்பதால் பிரஹ்மம் இரண்டு விஷயமாயுமிருப்பதாக ஆகும்.

அபூர்வமானதினால் (வேறு பிரமாணங்களினால் அறிய முடியாததினால்) உபநிஷத்துக்களினால் பிரதிபாதிக்கப்பட்டிருப்பது ரூபமற்றது தான். பிராந்தியினால் தோன்றும் ரூபமோ அனுவதிக்கப்படுவதுதான். இரண்டு விதமாகவும் இருப்பது விருத்தமாகும்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"तत् एतत् चतुष्पात् ब्रह्म" "அந்த இந்த பிரஹ்மம் நான்கு பாதங்களையுடையது" என்பது முதலான சுருதிகள் பிரஹ்மத்தை ரூபமுள்ளதாக வர்ணிக்கின்றன. "अस्थूलम् अनणु" "ஸ்தூலமுமில்லை, அணுவுமில்லை" என்பது முதலான சுருதிகள் பிரஹ்மத்தை ரூபமற்றதாக வர்ணிக்கின்றன. ஆகையால் வாஸ்தவத்தில் பிரஹ்மம் இரண்டு விதமாகவும் இருக்கிறது.

ஸித்தாந்தம் :

வேறு எந்த பிரமாணத்திலும், எது ஸித்திக்காதோ அதுவே சாஸ்திரத்திற்கு விஷயமாகுமானதினால், ரூபமற்றது என்பது தான் சாஸ்திரத்தினால் பிரதி பாதிக்கப்படும் தத்வமாகும். "பூமி முதலியது உண்டானதாகவிருப்பதால் உண்டாக்கினவொருவரையுடையதே" என்ற அனுமானத்தினால் உலகத்தை ஸ்ருஷ்டி செய்தவர் என்பது போலுள்ள ரூபத்தையுடைய பிரஹ்மம் அறியக்கூடியதாகையால், அதைச் சொல்ல சாஸ்திரம் தேவையில்லை. அவ்வித பிரஹ்மம் உபாஸனைக்காக வேதத்திலேயே அனுவதிக்கப்பட்டு இருந்த போதிலும் அதிலேயே தாத்பர்யமாக வேதம் பிரதிபாதிக்கவில்லை. மேலும் இரண்டு விதமாயுமிருக்குமென்பது பொருந்தாது. அனுமானத்தினால் ஸித்திக்கும் ரூபமுள்ள தன்மையும், சாஸ்திரத்தினால் ஸித்திக்கும் ரூபமற்ற தன்மையும் ஒன்றுக்கொன்று நேர் விரோதமாயிருப்பதால் ஒரே வஸ்துவில் இருக்க முடியாது.

ஏதேனும் ஒன்று வாஸ்தவமில்லாததாகத் இருக்க வேண்டும். ஆகையால் தாத்பர்ய விஷயமில்லாத ரூபமுள்ள தன்மையென்பது பிராந்தியினால் ஏற்படுகிறது. தாத்பர்ய விஷயமாயுள்ள ரூபமற்ற தன்மையென்பது தான் வாஸ்தவம். ஆகையால் பிரஹ்மம் வாஸ்தவத்தில் ரூபமற்றது.

## ६.प्रकृतैतावत्त्वाधिकरणम्

## 6.ப்ரக்ருதைதாவத்த்வாதி₄கரணம்

(ஸூத்ரம் 22 - 30)

**प्रकृतैतावत्त्वं हि प्रतिषेधति ततो ब्रवीति च भूयः ।।२२।।**

ப்ரக்ருதைதாவத்த்வம் ஹி ப்ரதிஷேத₄தி ததோ ப்₃ரவீதி ச பூ₄ய: 22
(பிரகிருதமான இவ்வளவு என்பதையல்லவா மறுக்கிறது, பின்னாலும் மறுபடியும் சொல்கிறது)

**तदव्यक्तमाह हि ।।२३।।**

தத₃வ்யக்தமாஹ ஹி 23
(அது அவ்யக்தம் என்று சொல்கிறதல்லவா )

**अपि च संराधने प्रत्यक्षानुमानाभ्याम् ।।२४।।**

அபி ச ஸம்ராத₄னே ப்ரத்யக்ஷானுமானாப்₄யாம் 24
(ஸம்ராதனத்திலும்கூட, பிரத்யக்ஷஅனுமானங்களிலிருந்து)

**प्रकाशादिवच्चावैशेष्यं प्रकाशश्च कर्मण्यभ्यासात् ।।२५।।**

ப்ரகாசாதி₃வச்சாவைசேஷ்யம் ப்ரகாசச்ச கர்மண்யப்₄யாஸாத் 25
(பிரகாசம் முதலியதைப்போலவே வேற்றுமையில்லை, பிரகாசம்

கர்மாவில், அப்பியாஸத்திலிருந்து)

अतोऽनन्तेन तथा हि लिङ्गम् ।।२६।।

அதோஅனந்தேந தத$_{2}$ஹி லிங்கம் 26

(ஆகையால் எல்லையற்றதுடன் அப்படியே லிங்கம்)

उभयव्यपदेशात्त्वहिकुण्डलवत् ।।२७।।

உப$_{4}$யவ்யபதே$_{3}$சாத்த்வஹிகுண்டலவத் 27

(இரண்டும் சொல்லியிருப்பதினாலோ, பாம்பு வட்டம் போல)

प्रकाशाश्रयवद्वा तेजस्त्वात् ।।२८।।

ப்ரகாசாச்ரயவத்$_{3}$வா தேஜஸ்த்வாத் 28

(பிரகாசத்தின் ஆசிரயம்போலவாவது, தேஜஸ்ஸாக இருப்பதால்)

पूर्ववद्वा ।।२९।।

பூர்வவத்$_{3}$வா 29

(முன் சொன்னதைப்போலவாவது)

प्रतिषेधाच्च ।।३०।।

ப்ரதிஷேதா$_{4}$ச்ச 30

(தடுப்பதினாலும்)

பிரஹ்மத்தைச் சொல்லும் போது வேதம் "இது அல்ல", "இது அல்ல" என்று இரண்டு தடவை சொல்வதால் பிரஹ்மமும் மறுக்கப்பட்டதாக ஆகுமா? என்பது இங்கு விஷயம்.

ब्रह्मापि नेति नेतीति निषिद्धमथवा न हि ।
द्विरुक्त्या ब्रह्मजगती निषिध्येते उभे अपि ।। ११ ।।
वीप्सेयमिति शब्दोक्ता सर्वदृश्यनिषिद्धये ।
अनिदं सत्यसत्यं च ब्रह्मैकं शिष्यतेऽवधिः ।। १२ ।।

ப்ரஹ்மாபி நேதி நேதீதி நிஷித்$_{3}$த$_{4}$மத$_{2}$வா ந ஹி ।
த்$_{3}$வருக்த்யா ப்$_{3}$ரஹ்மஜக$_{3}$தீ நிஷித்$_{4}$யேதே உபே$_{4}$ அபி ।। 11
வீப்ஸேயமிதி சப்தோ$_{3}$க்தா ஸர்வத்$_{3}$ருச்யநிஷித்$_{3}$த$_{4}$யே ।
அநித$_{3}$ம் ஸத்யஸத்யம் ச ப்$_{3}$ரஹ்மைகம் சிஷ்யதேஅவதி$_{4}$: ।।12

(அ..ம்)

"இது அல்ல, இது அல்ல" என்பதினுல் பிரஹ்மமும் நிஷேதிக்கப்படுகிறதா? அல்லது நிஷேதிக்கப்படவில்லையா? இரண்டு தடவை சொல்லியிருப்பதால், பிரஹ்மம் ஜகத் இரண்டும் கூட நிஷேதிக்கப்படுகின்றன.

இந்த திரும்பச் சொல்லுதல் "இது" என்ற சப்தத்தினுல் சொல்லப்படுகிற எல்லா (அறியப்படும்) பதார்த்தங்களையும் நிஷேதிப்பதற்காக. "இது" என்பதல்லாததாய், ஸத்யத்திற்கெல்லாம் ஸத்யமாய், இருக்கும்,

ஒன்றுயுள்ள பிரஹ்மம் எல்லையாக (நிஷேதிக்க முடியாததாக) மிஞ்சுகிறது.
(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"द्वे वाव ब्रह्मणो रूपे मूर्तं चैव अमूर्तं च"என்ற இந்த பிருஹதாரண்யக பிராஹ்மண வாக்கியத்தில் வெகு ஆடம்பரத்துடன் பிரஹ்மத்திற்கு பிருதிவீ,அப்பு,தேஜஸ் என்ற மூர்த்தமான ரூபம்; வாயு, ஆகாசம் என்ற அமூர்த்தமான ரூபம்; ஆக இரண்டு ரூபங்கள் உண்டென்று சொல்லிவிட்டு, கடைசியில் பிரஹ்மத்தை உபதேசிக்கும் போது "இனி ஆகையால் இது அல்ல, இது அல்ல" என்று உபதேசம் "अथात आदेशो न इति न इति" என்று முடிகிறது. அதாவது, இரண்டு வித ரூபங்களையும் சொன்னதின் பிறகு ரூபமற்ற பிரஹ்மத்தைப்பற்றி சொல்ல வேண்டியிருப்பதால், இது அல்ல இது அல்ல என்று பிரஹ்ம விஷயமான உபதேசம் என்று அர்த்தம். இங்கேயுள்ள முதல் "இது அல்ல" என்பதினுலேயே ஒன்றுயிருக்கிற ஜகத் நீக்கப்பட்டு விடுகிறபடியால், இரண்டாவது "இது அல்ல" என்பது அர்த்தமில்லாமல் போய்விடும். அதனுல் அந்த இரண்டாவது "இது அல்ல" என்பதினுல் பிரஹ்மமும் மறுக்கப்படுகிறது என்று தான் வைத்துக் கொள்ள வேண்டும். அதாவது சூன்யம் தான் மிச்சம் என்று கருத்து.

ஸித்தாந்தம் :

இரண்டாவது சொன்ன மறுப்பு வீண் ஆகாது. திருப்பிச் சொல்லுதலுக்கும் பிரயோஜனமுள்ளதால் எது எது அறியப் படுகிறதோ, எது எது "இது" என்று குறிப்பிடக்கூடியதோ, அதுவெல்லாம் பிரஹ்மம் அல்ல என்று திருப்பிச் சொல்லுவதினுல் மறுக்கப்படுகிறது. திருப்பிச் சொல்லாமல் "இது அல்ல" என்று ஒரு தடவை மாத்திரம் சொல்லியிருந்தால் "இது" என்று சொல்லக் கூடியதாய் பிரகிருதத்திலுள்ள மூர்த்தம், அமூர்த்தம் இவைகளே நிஷேதிக்கப்படுவதாக ஆகும். மூர்த்தம், அமூர்த்தம் இரண்டுமில்லாத தன்மை, மூல அக்ஞானம், ஆகிய இவை இரண்டும் நிஷேதிக்கப்படாததினுல் அவைகளே பிரஹ்மம் என்று ஏற்பட்டுவிடும். அவைகளையும் நிஷேதிப்பதற்காக இரண்டாவது "இது அல்ல" என்பது. அப்படியானுலும் கூட திருப்பிச்சொல்வதினுல் கட்டுப்பாடு இல்லாமல் எதையும் சேர்த்துக் கொள்ளலாமானதினுல் பிரஹ்மத்தையுமே

நிஷேதிக்கிறது என்று ஏற்படாதா? என்றால் அப்படியல்ல. "இது" என்பது "இது" என்று அறியக் கூடியதையே சொல்லும் சப்தமானதினால், அறியப்படும் தன்மை இல்லாத பிரஹ்மத்தைக் குறிப்பிட சக்தியற்றது. ஆகையால் பிரஹ்மம் நிஷேதிக்கப்படுவதில் சேராது. மேலும் "இனி உபதேசம்" என்று வெகு கோலாஹலமாய் பிரஹ்மத்தை உபதேசிப்பதாக பிரதிக்ஞை செய்துவிட்டு அந்த பிரஹ்மத்தையே சுருதி மறுத்துவிடுமானால் அது விரோதமாகாதா? மேலும் பிரஹ்மமும் நிஷேதிக்கப் படுகிறது என்றால், மேலுள்ள வாக்கியம் பொருந்தாது. "सत्यस्य सत्यम्" என்பது முதலானதினால் பிரஹ்மத்திற்கு "ஸத்யத்திற்கும் ஸத்யம்" என்று பெயரிடப்பட்டிருக்கிறது. அதாவது உலகத்தில் ஸத்யமென்று எண்ணப் படுகிற மலை, நதி, ஸமுத்திரம் முதலானதையெல்லாம் விட அதிகமான ஸத்யத் தன்மை பிரஹ்மத்திற்கு உண்டென்பது அந்தப் பெயரால் குறிப்பிடப்படுகிறது. எல்லாமே மறுக்கப்படுகிறதென்றால் இதுவெல்லாம் அர்த்தமில்லாததாக ஆகிவிடும். ஆகையால் "இது" என்று குறிப்பிடக் கூடாததாய் மறுக்க முடியாததாய், பிரஹ்மம் மிஞ்சுகிறது என்பது தான் வாஸ்தவம். ஆகையால் "இது அல்ல" என்பதினால் பிரஹ்மம் மறுக்கப்படவில்லை.

## ७.पराधिकरणम्

## 7.பராதி$_4$கரணம்

(ஸூத்ரம் 31 - 37)

**परमतः सेतून्मानसंबन्धभेदव्यपदेशेभ्यः ।।३१।।**

பரமத: ஸேதூந்மாநஸம்ப$_3$ந்த$_4$பே$_4$த$_3$வ்யபதே$_3$சேப்$_4$ய: 31

(இதற்குமேல் ஸேது, அளவு, ஸம்பந்தம், பேதம் இவை சொல்லப்பட்டிருப்பதால்)

**सामान्यात्तु ।।३२।।**

ஸாமாந்யாத்து 32

(ஸமானத்தன்மையினால் தான்)

**बुद्ध्यर्थः पादवत् ।।३३।।**

பு$_3$த்$_3$த்$_4$யர்த$_2$: பாத$_3$வத் 33

(புத்திக்காக பாதத்தைப்போல)

**स्थानविशेषात्प्रकाशादिवत् ।।३४।।**

ஸ்தா$_2$நவிசேஷாத்ப்ரகாசாதி$_3$வத் 34

(ஸ்தான வித்யாஸத்தினால், பிரகாசம் முதலியதுபோல)

**उपपत्तेश्च ।।३५।।**
உபபத்தேச்ச 35
(பொருத்தமானதினாலும்)

**तथाऽन्यप्रतिषेधात् ।।३६।।**
ததா₂அந்யப்ரதிஷேதா₄த் 36
( அப்படியே வேறை மறுப்பதினால் )

**अनेन सर्वगतत्वमायामशब्दादिभ्यः ।।३७।।**
அனேன ஸர்வக₃தத்₃வமாயாமசப்தா₃தி₃ப்₄ய: 37
( இதனால் எங்குமுள்ள தன்மை, ஆயாமத்தை சொல்லும் சப்தம் முதலியவைகளால் )

பிரஹ்மம் நிஷேதிக்கப்படாமலிருந்தாலும் அதைத் தவிர வேறு வஸ்து இருக்குமேயானல், இரண்டாவதற்றது என்பது சரியாகாது. அப்படி ஏதேனும் வஸ்து உண்டா? என்பது இங்கு விஷயம்.

**वस्त्वन्यद् ब्रह्मणो नो वा विद्यते ब्रह्मणोऽधिकम् ।**
**सेतुत्वोन्मानवत्त्वाच्च सम्बन्धाद् भेदवत्त्वतः ।। १३ ।।**
**धारणात्सेतुतोन्मानमुपास्त्यै भेदसंगती ।**
**उपाध्युद्भवनाशाभ्यां नान्यदन्यनिषेधतः ।। १४ ।।**

வஸ்த்வந்யத்₃ ப்₃ரஹ்மணோ நோ வா வித்₃யதே ப்₃ரஹ்மணோஅதி₄கம்।
ஸேதுத்வோந்மாநவத்த்வாச்ச ஸம்ப₃ந்தா₄த்₃ பே₄த₃வத்த்வத: ।। 13
தா₄ரணாத்ஸேதுதோந்மாநமுபாஸ்த்யை பே₄த₃ஸங்க₃தீ ।
உபாத்₄யுத்ப₄வநாசாப்₄யாம் நாந்யத₃ந்யநிஷேத₄த: ।। 14

(அ..ம்)

பிரஹ்மத்தைவிட வேறு வஸ்து உண்டா? அல்லது இல்லையா? சேது தன்மையாலும், அளவுடன் கூடியதாலும், ஸம்பந்தம் இருப்பதாலும், வேற்றுமையுள்ளதாயிருப்பதாலும், பிரஹ்மத்திற்கு அதிகமாக வஸ்து உண்டு.

தூங்குவதால் சேதுத்தன்மை, உபாஸனைக்காக அளவு. வேற்றுமை உபாதி உண்டாவதால், ஸம்பந்தம் உபாதி நசிப்பதால். ஆகையால் வேறு நிஷேதிக்கப்படுவதால் வேறு வஸ்து கிடையாது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

**"अथ य आत्मा स सेतुः विधृतिः"** "இனி எவர் ஆத்மாவோ அவர் சேது (அணை) நன்கு தூங்குபவர்" என்று சேதுத்தன்மை சொல்லப்படுகிறது. சேது என்பது உலகத்தில் ஜலத்தைத் தடுத்துக்கொண்டு அக்கரை இக்கரை இரண்டையும் ஸம்பந்தித்திருக்கும் அணை. அது வழியாய் ஜலத்தைத்

தாண்டி அந்நிய இடத்தில் உள்ள காட்டுக்கோ, வேறு பிரதேசத்திற்கோ உபயோகிப்படுகிறது. அப்படியே பிரஹ்மம் சேதுவென்று இருந்தால், அது ஜகத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு நிற்பதுடன் அந்த பிரஹ்மத்தைக் கடந்து போக வேண்டிய ஸ்தானம் வேருக இருக்க வேண்டுமென்று ஏற்படுகிறது. தவிரவும் "चतुष्पात् ब्रह्म, षोडशकलं ब्रह्म" "நான்கு பாதங்களையுடைய பிரஹ்மம், பதினுறு கலைகளுடன் கூடிய பிரஹ்மம்" என்றெல்லாம் பிரஹ்மத்திற்கு அளவு சொல்லப் பட்டிருக்கிறது. இது எல்லாம் இரண்டாவதாக உள்ள கோ முதலிய வஸ்துக்களில்தான் காண்கிறது. இரண்டாவதற்றதில் எங்கேயும் காணப்படுவதில்லை. இவ்விதம் சொல்வதால், பிரஹ்மத்திற்கும் இரண்டாவது வஸ்து உண்டு. மேலும் "सता सोम्य तदा संपन्नो भवति" "ஹே ஸோம்ய! அப்பொழுது (தூங்கும்போது ஜீவன்) ஸத்வஸ்துவுடன் கலந்து விடுகிருன்" என்பதால் பிரஹ்மத்துடன் வேறென்றிற்கு ஸம்பந்தம் சொல்லப்படுகிறது. பிரஹ்மத்தைத் தவிர வேருக ஒரு வஸ்து இருந்தால் தான், இந்த ஸம்பந்தம் பொருத்தமாகும். அப்படியே "आत्मा वा अरे द्रष्टव्यः" "ஆத்மாவே ஸாக்ஷாத்கரிக்கத்தக்கது" என்பதினுல் ஸாக்ஷாத்கரிப்பவன் வேறு, ஸாக்ஷாத்கரிக்கப்படுவது வேறு என்று பேதம் சொல்லப்பட்டதாக ஆகிறது. ஆகையால் பிரஹ்மம் இரண்டாவதற்றதல்ல, வேறு வஸ்து உண்டு.

ஸித்தாந்தம் :

பிரஹ்மத்திற்கு சேதுவாயிருக்கும் தன்மை முக்கியமான அர்த்தத்தில் பொருந்தக்கூடியதில்லை, பொருந்துமானுல் அதுவும் மண், மரம் இவைகளால் கட்டப்பட்டதென்று ஏற்படும். சேதுவுடன் ஏதோவொரு ஒத்துப்போகும் தர்மத்தைக் கொண்டு சேதுவென்று சொல்லப் பட்டிருக்கிறது என்று தான் எடுத்துக் கொள்ள முடியும். இங்கே தூங்குதல் என்ற தர்மம் மாத்திரம் தான் சொல்லப்படுகிறது. "தூங்குபவர்" என்று வியக்தமாகக் கண்டிருப்பதால். வேறு இடம், அங்கே போவது என்பதெல்லாம் இங்கே கிடையாது.பிரஹ்மத்திற்கு அளவு சொன்னது உபாஸனைக்காகத்தான், தத்வத்தை எடுத்துச் சொல்வதற்கல்ல, அந்த பிரகரணமே உபாஸனுப்பிரகரணம். பேதம் சொன்னதும், கட ஆகாசம், மஹா ஆகாசம் என்பது போல, உபாதி ஏற்படுவதைக் கொண்டு சொல்லப்பட்டது. ஸம்பந்தம் (சேருவது) என்று சொன்னதும், கடம் உடைந்தால் கட ஆகாசமும் மஹா ஆகாசமும் ஒன்ருவது போல உபாதி நசித்தவுடன் ஜீவன்

பிரஹ்மத்தன்மையை அடைகிருன் என்று சொல்லப்பட்டது. ஆகையால் பிரஹ்மத்தைத் தவிர வேறு வஸ்து உண்டென்பதற்குச் சொன்ன எல்லா காரணங்களுக்கும் வேறு விதமாக போக்கு இருப்பதாலும் "एकमेव अद्वितीयम्" "ஒன்றே தான், இரண்டாவதற்றது" என்று வியக்தமாய் வேறு வஸ்து மறுக்கப்பட்டிருப்பதாலும், பிரஹ்மத்தைத் தவிர இரண்டாவது வஸ்து கிடையாது தான்.

## ८.फलाधिकरणम्

## 8.ப₂லாதி₄கரணம்

(ஸூத்ரம் 38 - 41)

**फलमत उपपत्तेः ।।३८।।**

ப₂லமத உபபத்தே: 38

( பலன் இவரிடமிருந்து,பொருத்தமானதினால் )

**श्रुतत्वाच्च ।।३९।।**

ச்ருதத்வாச்ச 39

( சொல்லப்பட்டிருப்பதாலும் )

**धर्मं जैमिनिरत एव ।।४०।।**

த₄ர்மம் ஜைமிநிரத ஏவ 40

( தர்மத்தை ஜைமினி, இதினாலேயே )

**पूर्वं तु बादरायणो हेतुव्यपदेशात् ।।४१।।**

பூர்வம் து பா₃த₃ராயணோ ஹேதுவ்யபதே₃சாத் 41

( முன்சொல்லியது தான் என்று பாதராயணர், காரணமென்று சொல்லியிருப்பதால் )

ஈசுவரரே ஜகத்தை நியமனம் செய்கிறவர் என்றுல், அந்தந்த ஜீவர்கள் செய்யும் கர்மாக்களே பலனைக் கொடுக்குமானதினுல், இதற்காக ஈசுவரர் வேண்டுமா? என்பது இங்கு விஷயம்.

**कर्मैव फलदं यद्वा कर्माराधित ईश्वरः ।**
**अपूर्वावान्तरद्वारा कर्मणः फलदातृता ।। १५ ।।**
**अचेतनात्फलासूतेः शास्त्रीयात्पूजितेश्वरात् ।**
**कालान्तरे फलोत्पत्तेर्नापूर्वपरिकल्पना ।। १६ ।।**

கர்மைவ ப₂லத₃ம் யத்₃வா கர்மாராதி₄த ஈச்வர: ।
அபூர்வாவாந்தரத்₃வாரா கர்மண: ப₂லதா₃த்ருதா ।। 15
அசேதநாத்ப₂லாஸூதே: சாஸ்த்ரீயாத்பூஜிதேச்வராத் ।
காலாந்தரே ப₂லோத்பத்தேர்நாபூர்வபரிகல்பநா ।। 16

(அ..ம்)

பலனைக் கொடுப்பது கர்மாவேதானு? அல்லது கர்மாவினுல் ஆராதிக்கப்பட்ட ஈசுவரரா? "அபூர்வம்" என்று மத்தியில் உள்ளதின் வழியாக கர்மாவுக்கே பலனைக் கொடுக்கும் தன்மை.

அசேதனத்திலிருந்து பலன் ஏற்படாததினுல், சாஸ்திரத்தில் சொல்லப்பட்டவராய் பூஜிக்கப்பட்டவராயுள்ள ஈசுவரரிடமிருந்து வேறு (பின்) காலத்தில் பலன் ஏற்படுமானதினுல் அபூர்வம் என்று ஒன்றை கல்பிக்க வேண்டியதில்லை.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

இப்பொழுது செய்யும் கர்மா அடுத்த க்ஷணத்திலேயே நசித்து விடுவதாய் இருந்த போதிலும், அதனுல் ஏற்படும் "அபூர்வம்" என்பது பின் காலத்தில் ஏற்படவேண்டிய பலனைக் கொடுப்பதற்கு சக்தியுள்ளதாக மத்தியில் இருப்பதால், ஈசுவரர் ஒருவரை இதற்காகக் கல்பிப்பது வீண் சிரமமேயாகும்.

ஸித்தாந்தம் :

கர்மாவாக இருக்கட்டும், அபூர்வமாகவோ இருக்கட்டும் இரண்டும் அசேதனமேயானதால் எந்தவிடத்தில் எந்த ஸமயத்தில் எந்த நிமித்தம் கொண்டு யார் யாருக்கு எப்படி எப்படி தாரதம்யத்துடன் நியமப்படி பலனைக் கொடுப்பதற்கு வேண்டிய ஸாமர்த்தியம் அவைகளிடத்தில் கிடையாது. உலகத்திலும் அசேதனமாயுள்ள சேவை முதலிய வேலைகளில் அவ்விதம் பலன் கொடுக்கும் ஸாமர்த்தியம் காண்பதில்லை. ஆகையால், ஸேவிக்கப்படும் சேதனனுன, அரசனைப் போல பூஜிக்கப்படும் சேதனனுன ஈசுவரரிடம் இருந்து தான் பலன் ஏற்படுமென்று ஒப்புக்கொள்ள வேண்டும். ஈசுவரரை கல்பிக்கிற சிரமம் வேண்டாமென்று சொன்னதும் பிசகு. அவரை நாமாக யுக்தியினுல் கல்பிக்கிறதில்லை. அவர் சாஸ்திரத்தினுலேயே ஸித்தராயிருப்பதால் அவரை கல்பிக்க அவசியமேயில்லை. "एष ह्येव साधुकर्म कारयति तं, यम् एभ्यः लोकेभ्यः उन्निनीषते । एष उ एव असाधु कर्म कारयति तं यम् अधोनिनीषते" "எவனை இந்த லோகங்களிலிருந்து மேலே கொண்டு போக நினைக்கிருரோ, அவனை இவரே தான் நல்ல கர்மாவை செய்யும்படிச் செய்கிருர். எவனை கீழே கொண்டு போக நினைக்கிருரோ, அவனையும் இவரே தான் கெட்ட கர்மாவை செய்யும்படிச் செய்கிருர்" என்ற சுருதி தர்மாதர்மங்களுக்கு பலனைக் கொடுக்கும் தன்மையையும் அவைகளை செய்யும்படிச் செய்யும்

தன்மையையும் ஈசுவரருக்கேயென்று சொல்கிறது. இவ்விதம் ஈசுவரர் வேதமாகிற உத்தமமான பிரமாணத்தினுல் ஸித்தராகவிருக்கும்போது, கேட்கப்படாததாய் புதிதாக "அபூர்வம்" என்று ஒன்றை கல்பிக்கும் சிரமம் உனக்கே தான். ஆகையால், கர்மாவினுல் ஆராதிக்கப்படும் ஈசுவரர் தான் பலனைக் கொடுப்பவர். (இங்கு நல்ல கர்மாவையே சொல்லியிருந்த போதிலும், இதே நியாயப்படி கெட்ட கர்மாவுக்கு பலன் கொடுப்பவரும் ஈசுவரர்தான்).

இவ்விதம் நான்கு அதிகரணங்களால் "तत्" "அது" என்ற பதத்தின் அர்த்தமாகிய ஈசுவரருடைய தத்வம் சோதிக்கப்பட்டது. இவைகளுக்குள் முதல் அதிகரணத்தினுல் பிரஹ்மத்தின் ரூபமற்ற தன்மையும், இரண்டாவதில் மறுக்கக் கூடாத தன்மையும், மூன்ருவதால் இரண்டாவதற்ற தன்மையும், நான்காவதால் வியவஹாரதசையில் பலனைக் கொடுக்கும் தன்மையும், சொல்லப்பட்டன. சந்திரனை காட்டுவதற்காக மரத்துக்கிளையைக் காட்டுவது போல, எல்லையற்ற வைபவங்களையுடைய பிரஹ்மத்தைக் காட்ட ஏதோ சிலது உதாஹரணமாக இங்கு எடுத்துக் காட்டப்பட்டது. இவ்விதமாக இந்த பாதத்தில் முதல் நான்கு அதிகரணங்களில் "त्वं" "நீ" ஜீவனும் பின்னுள்ள நான்கு அதிகரணங்களில் "तत्" "அது" ஈசுவரரும் சோதித்து காட்டப்பட்டது.

இவ்விதம் மூன்ருவது அத்யாயம் இரண்டாவது பாதத்தில் அதிகரணங்கள் 8, சுலோகங்கள் 16 (ஸூத்ரங்கள் 41).

==========================================

# மூன்றாவது அத்யாயம் : மூன்றாவது பாதம்

## १.सर्ववेदान्तप्रत्ययाधिकरणम्
## 1.ஸர்வவேதா₃ந்தப்ரத்யயாதி₄கரணம்
(ஸூத்ரம் 1 - 4)

**सर्ववेदान्तप्रत्ययं चोदनाद्यविशेषात् ।।१।।**
ஸர்வவேதா₃ந்தப்ரத்யயம் சோத₃நாத்₃யவிசேஷாத் 1
( எல்லா வேதாந்தங்களிலும் அறியப்படுவது (ஒன்றே) விதி முதலியதில் வித்யாஸமில்லாததால் )

**भेदान्नेति चेन्नैकस्यामपि ।।२।।**
பே₄தா₃ந்நேதி சேந்நைகஸ்யாமபி 2
(பேதமிருப்பதால் இல்லை என்றால், அப்படியல்ல ஒன்றிலேயேகூட)

**स्वाध्यायस्य तथात्वेन हि समाचारेऽधिकाराच्च सववच्च तन्नियमः ।।३।।**
ஸ்வாத்₃யாயஸ்ய ததா₂த்வேந ஹி ஸமாசாரேஅதி₄காராச்ச ஸவவச்ச தந்நியம: 3
(ஸ்வாத்யாயத்திற்கு, அப்படியென்று ஸமாசாரத்தில் (சொல்வதாலும்),அதிகாரமிருப்பதாலும் அல்லவா ? ஸவம்போல அந்த நியமமும்)

**दर्शयति च ।।४।।**
த₃ர்சயதி ச 4
(காட்டுகிறது என்பதினாலும்)

இந்த பாதத்தில் முக்கியமாக ஒரே விஷயமாக பல விதங்களில் சொல்லியிருக்கும் அம்சங்களை எவ்வளவு வரை சேர்த்துக் கொள்ளலாம் என்று விசாரிக்கப்படுகிறது.

**सर्ववेदेष्वनेकत्वमुपास्तेरथवैकता ।**
**अनेकत्वं कौथुमादिनामधर्मविभेदतः ।। १ ।।**
**विधिरूपफलैकत्वादेकत्वं नाम न श्रुतम् ।**
**शिरोव्रताख्यधर्मस्तु स्वाध्याये स्यान्न वेदने ।। २ ।।**

ஸர்வவேதே₃ஷ்வநேகத்வமுபாஸ்தேரத₂வைகதா ।
அநேகத்வம் கௌது₂மாதி₃நாமத₄ர்மவிபே₄த₃த: ।। 1
விதி₃ரூபப₂லைகத்வாதே₃கத்வம் நாம ந ச்ருதம் ।
சிரோவ்ரதாரக்₂யத₄ர்மஸ்து ஸ்வாத்₄யாயே ஸ்யாந்ந வேத₃நே ।। 2

(அர்த்தம்)

எல்லா வேதங்களிலுமுள்ள உபாஸனைக்கு பலவாயிருக்கும் தன்மையா? அல்லது ஒன்றுயிருக்கும் தன்மையா? "கௌதுமம்" என்பது முதலான பெயர்களிலும், தர்மங்களிலும், பேதமிருப்பதால் பலவாயிருக்கும் தன்மை தான்.

விதிப்பது, ஸ்வரூபம், பலன் இவை ஒன்றுகவேயிருப்பதால் (உபாஸனையும்) ஒன்று தான். பெயர் வேதத்தில் சொல்லப்பட்டதில்லை. "சிரோவிரதம்" என்று சொல்லப்படும் தர்மமோ தன் வேதத்தை அத்யயனம் செய்யும் விஷயத்திலேயே தவிர தத்வத்தை அறியும் விஷயத்தில் கிடையாது.

(விளக்கம்)

பூர்வபக்ஷம் :

சாந்தோக்ய உபநிஷத்தில் பஞ்சாக்னி உபாஸனம் சொல்லப்படுகிறது. அப்படியே பிருஹதாரண்யக உபநிஷத்திலும் பஞ்சாக்னி உபாஸனம் சொல்லப்படுகிறது. ஆனால் சாந்தோக்யத்தில் உள்ளதற்கு "கௌதுமம்" என்று பெயர், பிருஹதாரண்யத்திலுள்ளதற்கு "வாஜஸநேயகம்" என்று பெயர். இதைப் போலவே மற்ற உபாஸனைகளிலும் காண்கிறது. இவ்விதம் பெயர் வேறுபடுவதால், உபாஸனைகள் வேறு. அப்படியே, தர்மங்களிலும் வேதம் காணப்படுகிறது. முண்டக உபநிஷத்தில் "तेषां एव एतां ब्रह्मविद्यां वदेत् , शिरोव्रतं विधिवत् यैः तु चीर्णम्" "எவர்களால் சிரோவிரதமானது விதிப்படி அனுஷ்டிக்கப் பட்டிருக்கிறதோ, அவர்களுக்குத்தான் இந்த பிரஹ்ம வித்யையை சொல்லும்" என்று காண்கிறது. சிரோவிரதம் என்பது அதர்வவேதத்தைச் சேர்ந்தவர்களை உத்தேசித்து விதிக்கப்பட்ட ஒரு தனித்த வேதவிரதம்; மற்றவர்களை யுத்தேசித்து விதிக்கப்பட்டதில்லை. இவ்விதம் சிரோவிரதம் இங்கு விதிக்கப் பட்டிருப்பதால், தர்மத்தில் பேதம் ஏற்படுகிறது. ஆகையால் வேதம் வேறுபட்டால் உபாஸனையும் வேறுபட்டது என்று தான் ஆகும்.

ஸித்தாந்தம் :

வேதம் வேறுபட்டாலும் விதி முதலியது வேறுபடவில்லையானால் உபாஸனை வேறுபடாது. சாந்தோக்யத்தில் "यो हवै ज्येष्ठं च श्रेष्ठं च वेद" "எவன் ஜ்யேஷ்டமென்றும், சிரேஷ்டனென்றும் அறிகிறுனே" என்று பிராணனின் உபாஸனையை எப்படி விதித்திருக்கிறதோ, அப்படியே தான் பிருஹதாரண்யத்திலும் விதித்திருக்கிறது. அப்படியே பஞ்சாக்னி

வித்யையில் த்யுலோகம், பர்ஜன்யம், பிருதிவீ, புருஷன், ஸ்திரீ என்று பெயரிட்ட ஐந்து அக்னிகள் அறிய வேண்டியதாகிய எந்த ஸ்வரூபமோ, அதுவே இரண்டு வேதங்களிலும் ஸமானமாக இருக்கிறது. இரண்டிலும் பிராணோபாஸனையின் பலன் "ज्येष्ठश्च ह वै श्रेष्ठश्च भवति" "ஜ்யேஷ்டனுகவும் சிரேஷ்டனுகவுமே ஆகிறுன்" என்று இவ்விதம் ஒரே மாதிரி பலனும் சொல்லப்படுகிறது. ஆகையால் இரண்டிடத்திலும் சொல்லப்படும் உபாஸனை ஒன்றே."கௌதுமம்" என்பது முதலான பெயர் வித்யாஸம் சொல்லப்பட்டதோ, அந்தப் பெயர்களே வேதத்தில் உள்ளதில்லை. அத்யயனம் செய்கிறவர்கள் அந்தந்த சாகைகளை பிரசாரத்திற்குக் கொண்டு வந்த ரிஷிகளின் பெயரால் அந்தந்த வேத பாகங்களைச் சொல்லுகிறுர்களென்பதைத் தவிர வேறில்லை. *சிரோவிரதமென்ற தர்மத்தில் வேதம்* சொல்லப்பட்டது என்பது அத்யயனத்தை மாத்திரம் ஸம்பந்தித்த விஷயமே *தவிர உபாஸனைக்கு* அங்கமாகாது. "न एतत् अचीर्णव्रतोऽधीते" "இந்த விரதம் அனுஷ்டிக்காதவன் அத்யயனம் செய்வதில்லை" என்று இந்த விரதம் அத்யயனத்தினுடைய தர்மம் என்று தெரிவதால். ஆகையால், ஒன்று தான் என்பதற்குக் காரணங்கள் இருப்பதாலும், வேறு என்பதற்குக் காரணம் இல்லாததினுலும், வேதம் வேறுபடுவதால் உபாஸனை வேறுபடுவதில்லை.

# २.उपसंहाराधिकरणम्

## 2.உபஸம்ஹாராதி₄கரணம்

(ஸூத்ரம் 5)

**उपसंहारोऽर्थाभेदाद्विधिशेषवत्समाने च ॥५॥**

உபஸம்ஹாரோஅர்தா₂பே₄தா₃த்₃விதி₄சேஷவத்ஸமாநே ச 5

(ஸமானமாயிருப்பதில், உப்ஸம்ஹாரம், விஷயம் வேறில்லாததால், விதிசேஷம்போல )

உபாஸனை ஒன்றுயிருந்தாலும் ஓரிடத்தில் (வேதத்தில்) சொல்லாத அம்சம் வேறு வேதத்தில் சொல்லியிருந்தால் அதையும் இங்கே சேர்த்துக் கொள்ள வேண்டுமாவென்பது இவ்வதிகரணத்தின் விஷயம்.

**एकोपास्तावनाहार्या आहार्या वा गुणाः श्रुतौ ।**
**अनुक्तत्वादनाहार्या उपकारः श्रुतैर्गुणैः ॥ ३ ॥**
**श्रुतत्वादन्यशाखायामाहार्या अग्निहोत्रवत् ।**
**विशिष्टविद्योपकारः स्वशाखोक्तगुणैः समः ॥ ४ ॥**

ஏகோபாஸ்தாவநாஹார்யா ஆஹார்யா வா கு₃ணா: ச்ருதௌ ।

அநுக்தத்வாத₃நாஹார்யா உபகார; ச்ருதைர்கு₃ணை; ।।' 3
ச்ருதத்வாத₃ந்யசாகா₂யாமாஹார்யா அக்₃னிஹோத்ரவத் ।
விசிஷ்டவித்₃யோபகார; ஸ்வசாகோ₂க்தகு₃ணை; ஸம; ।। 4

(அ..ம்)

ஒரே உபாஸனையில் (வேறிடத்தில் கண்ட) குணங்கள் சேர்த்துக் கொள்ளத் தக்கவையில்லையா? அல்லது, சேர்த்துக் கொள்ளத் தக்கவைகளா? (இந்த) வேதத்தில் சொல்லப்படாததினால், சேர்த்துக் கொள்ளத் தக்கவையல்ல. (இங்கு) சொல்லப் பட்டிருக்கிற குணங்களினால் தான் பிரயோஜனம்.

வேறு சாகையில் சொல்லப்பட்டிருப்பதால், அக்னிஹோத்ரத்தில் போல, சேர்த்துக் கொள்ளத்தக்கவை தான். தன் சாகையில் சொல்லப்பட்டிருக்கிற குணங்களுக்கு ஸமானமாகவே, சேர்த்துக் கொள்ளப்படும் குணங்களோடு சேர்ந்த உபாஸனைக்குப் பிரயோஜனமுண்டு.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

வாஜஸநேயக (பிருஹதாரண்யக) உபநிஷத்தில் பிராணவித்யைச் சொல்லும் போது "रेतो ह उच्चक्राम" "ரேதஸ் வெளிக் கிளம்பினது" என்ற குணம் ஒன்று அதிகமாய் சொல்லப்பட்டிருக்கிறது. இது சாந்தோக்ய உபநிஷத்தில் இல்லை. இதை அங்குள்ள பிராணவித்யையில் சேர்த்துக் கொள்ளக்கூடாது, அங்கே சொல்லப் படாததால். அங்கு சொல்லப் பட்டிருக்கிற பிராணன் வாக்கு முதலான குணங்களால் தான் உபாஸனைக்கு உதவியேற்படும்.

ஸித்தாந்தம் :

இந்த சாகையில் சொல்லவில்லையானாலும் வேறு சாகையில் சொல்லப் பட்டிருப்பதால், சேர்த்துக்கொள்ள வேண்டியது தான். அக்னிஹோத்ரம் முதலியதை அனுஷ்டானம் செய்வதில் மற்ற சாகைகளில் சொல்லப்பட்டுள்ள குணங்களைச் சேர்த்துக்கொண்டே அனுஷ்டிக்கப்படுவது, காணப்படுவது போல. தன் சாகையிலுள்ள குணங்களினாலேயே வித்யையின் பிரயோஜனம் ஸித்திக்குமானதால் வேறு குணங்களைச் சேர்த்துக் கொள்வது பிரயோஜனமற்றது என்று சொல்லக்கூடாது. கர்மா பெரிதாகப் பெரிதாக, பலனும் பெரிதாகும் என்ற நியாயப்படி தன் சாகையில் கண்ட குணங்களைப் போல வேறு சாகைகளில் கண்ட குணங்களுக்கும் உபகாரம் செய்யும் தன்மை

உண்டு தான்.ஆகையால் (வேறு) குணங்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டியது தான்.

# ३.अन्यथात्वाधिकरणम्

## 3.அந்யதா$_2$த்வாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 6 - 8)

**अन्यथात्वं शब्दादिति चेन्नाविशेषात् ।।६।।**

அந்யதா$_2$த்வம் சப்$_3$தா$_3$தி$_3$தி சேந்நாவிசேஷாத் 6

( வேறாயிருக்கும் தன்மை சப்தத்தினால், என்றால் அப்படியல்ல, வித்யாஸமில்லாததினால் )

**न वा प्रकरणभेदात्परोवरीयस्त्वादिवत् ।।७।।**

ந வா ப்ரகரணபே$_4$தா$_3$த்பரோவரீயஸ்த்வாதி$_3$வத் 7

( ப்ரகரணம் வித்யாஸப்படுவதினால் இல்லை, பரோலரீயஸ்த்வம் முதலியதுபோல )

**संज्ञातश्चेत्तदुक्तमस्ति तु तदपि ।।८।।**

ஸஞ்ஜ்ஞாதச்சேத்தது$_3$க்தமஸ்தி து தத$_3$பி 8

( பெயரினால் என்றால் அது சொல்லப்பட்டுவிட்டது; ஆனால் அதுவும் இருக்கிறது. )

உபாஸனை வேறு என்று எப்பொழுது ஆகும்? என்பது இங்கு விஷயம்.

**एका भिन्नाऽथवोद्गीथविद्या छान्दोग्यकाण्वयोः ।**
**एका स्यान्नामसामान्यात्संग्रामादिसमत्वतः ।। ५ ।।**
**उद्गीथावयवोंकार उद्गातेत्युभयोर्भिदा ।**
**वेद्यभेदेऽर्थवादादिसाम्यमत्राप्रयोजकम् ।। ६ ।।**

ஏகாபி$_3$ந்நாஅத$_2$வோத்$_3$கீ$_3$த$_2$வித்$_3$யா சா$_2$ந்தோ$_3$க்$_3$யகாண்வயோ:।
ஏகா ஸ்யாந்நாமஸாமான்யாத்ஸங்க்$_3$ராமாதி$_3$ஸமத்வத: ।। 5
உத்$_3$கீ$_3$தா$_2$வயவோங்கார உத்$_3$கா$_3$தேத்யுப$_4$யோர்பி$_4$தா$_3$ ।
வேத்$_3$யபே$_4$தே$_3$அர்த$_2$வாதா$_3$தி$_3$ஸாம்யமத்ராப்ரயோஜகம் ।। 6

(அ..ம்)

சாந்தோக்யத்திலும், காண்வசாகையிலும் உள்ள "உத்கீதவித்யை" என்பது ஒன்றேதானு? அல்லது வெவ்வேறு? பெயர் ஸமானமாயிருப்பதாலும், (தேவாஸுர) யுத்தம் முதலியது ஸமானமாயிருப்பதாலும் ஒன்ருகத் தான் இருக்கும்.

உத்கீதத்தின் அவயவமாகிய ஓங்காரம் (ஒன்றில்) உத்காதா (மற்ருென்றில்) என்று இரண்டிற்கும் பேதம் தான். உபாஸனைக்கு

விஷயமாயுள்ளதில் வேறுபாடு இருக்கும்போது, அர்த்த வாதம் முதலியதில் காணப்படும் ஸமானத்தன்மை இங்கு பிரயோஜனமற்றது. (வி..ம்)

பூர்வபக்ஷம் :

சாந்தோக்யத்திலும், காண்வசாகையிலும் "உத்கீதவித்யை" என்ற பெயரால் ஸமமாக சொல்லப்படுவதால், இரண்டு இடங்களிலும் சொல்லப்படுகிற உபாஸனை ஒன்று தான் என்பது தான் உசிதமாகும். பெயர் வேதத்தில் காணவில்லையானாலும் இரண்டிடத்திலும் தேவர்களுக்கும், அஸுரர்களுக்கும் யுத்தம் ஏற்பட்டது என்பது முதலியது ஸமானமாகவே இருக்கிறது. அதாவது சாந்தோக்யத்தில் ஸாத்விகமான இந்திரிய சேஷ்டைகளுக்கு தேவத்தன்மை, தாமஸமான இந்திரிய சேஷ்டைகளுக்கு அஸுரத்தன்மை என்று முறையே ஏற்படுத்திக் கொண்டு, அவைகளுக்குள் சண்டையைச் சொல்லி, வாக்கு முதலான தேவர்கள் அஸுரர்களால் அடிபட்டுப் போனதையும் சொல்லி, அவ்வஸுரர்களால் அடிபடாததன்மை பிராணனுக்கு மாத்திரம் தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது பூராவும் காண்வ சாகையிலும் ஸமானமாகக் காண்கிறது. ஆகையால் இரண்டு இடத்திலுமுள்ளது ஒரே உபாஸனை தான்.

ஸித்தாந்தம் :

உபாஸிக்கப்படவேண்டிய வஸ்து வேறுபடுவதால் இந்த உத்கீதவித்யை என்பது வெவ்வேறு தான். சாந்தோக்யத்தில், ஸாம வேதத்தின் ஒரு பாகமாகிய உத்கீதமென்பதின் அவயவமாயுள்ளது ஓங்காரம், அந்த ஓங்காரத்தை பிராணன் என்ற பாவனையுடன் உபாஸிக்கும்படி சொல்லி இருக்கிறது. காண்வவேதத்திலோ, பூரா உத்கீத பாகத்தையும் பாடுபவராக வாக் என்ற இந்திரியத்தை பிரேரணை செய்கிற பிராணனை உத்காதாவாக (பாடுகிறவராக) உபாஸிக்கச் சொல்லியிருக்கிறது. இவ்விதம் ஓரிடத்தில், ஓங்காரத்தை பிராணனுக உபாஸிக்கும் படியும், மற்றொரு இடத்தில் பிராணனை உத்காதாவாக உபாஸிக்கும் படியும் சொல்லியிருப்பதால், உபாஸிக்கப் படும் வஸ்து வேறுபடுகிறது. யுத்தம் முதலியதில் ஒற்றுமையென்பது இங்கு உபயோகப்படாது, அது எல்லாம் அர்த்தவாதமாகவே இருப்பதால். அஸுரர்களால் பீடிக்கப் படாததினுல் பிராணனுக்கு சிரேஷ்டத்தன்மை என்பது பொதுவாயிருந்த போதிலும் கூட உபாஸிக்கப்படும் வஸ்துவில் உள்ள பேதம் தள்ளிவிட

முடியாததினால் இரண்டு இடங்களிலும் கண்ட உத்கீதவித்யை தனித்தனி தான்.

# ४.व्याप्यधिकरणम्

# 4.வ்யாப்யதி₄கரணம்

(ஸூத்ரம் 9)

**व्याप्तेश्च समञ्जसम् ।।९।।**

**வ்யாப்தேச்ச ஸமஞ்ஜஸம் 9**

**( வியாப்தினாலோ பொருத்தமானது )**

உத்கீதத்தின் அவயவமாகிய ஓங்காரத்தை பிராணன் என்று உபாஸிக்க வேண்டுமென்று சொன்னோம். ஆனால் அந்த உபாஸனையை விதிக்கும் வாக்கியத்தில் "ओं इति एतत् अक्षरं उद्गीथं उपासीत" "ஓம் என்ற இந்த உத்கீதமாகிய அக்ஷரத்தை உபாஸிக்கவும்" என்று கண்டிருக்கிறது. இதிலிருந்து ஓங்காரமென்ற அக்ஷரத்தையே உத்கீதம் என்று சொன்னதாக ஏற்படுகிறது. அப்படி இரண்டும் ஒன்றாயிருப்பது எப்படி? என்பது இந்த அதிகரணத்தின் விஷயம்.

**किमध्यासोऽथवा बाध ऐक्यं वाऽथ विशेष्यता ।**
**अक्षरस्यात्र नास्त्यैक्यं नियतं हेत्वभावतः ।। ७ ।।**
**वेदेषु व्याप्त ओंकार उद्गीथेन विशिष्यते ।**
**अध्यासादौ फलं कल्प्यं सन्निकृष्टांशलक्षणा ।। ८ ।।**

கிமத்₄யாஸோऽத₂வா பா₃த ஐக்யம் வாऽத₂ விசேஷ்யதா ।
அக்ஷரஸ்யாத்ர நாஸ்த்யைக்யம் நியதம் ஹேத்வபா₄வத: ।। 7
வேதே₃ஷு வ்யாப்த ஓங்கார உத்₃கீ₃தே₂ந விசிஷ்யதே ।
அத்₄யாஸாதௌ₃ ப₂லம் கல்ப்யம் ஸந்நிக்ருஷ்டாம்சலக்ஷணா ।।8

(அ..ம்)

(ஓம் என்ற) அக்ஷரத்திற்கு இங்கே "அத்யாஸமா? அல்லது பாதமா? அல்லது ஐக்யமா? அல்லது விசேஷ்யமாக இருக்கும் தன்மையா? காரணம் எதுவும் இல்லாததினால் ஒன்றாயிருத்தல் (இவ்விதமென்று) தீர்மானமாக இல்லை.

வேதங்களில் வியாபித்துக் கொண்டிருக்கிற ஓம்காரம் (இங்கு) உத்கீதமென்பதினால் விசேஷிக்கப்படுகிறது (சுட்டிக்காட்டப்படுகிறது). அத்யாஸ முதலியதாயிருந்தால் பலன் கல்பிக்க வேண்டும். (ஆகையால் ஸமீபத்திலுள்ளதின் (உத்கீதத்தின்) அம்சம் என்று லக்ஷணை (குறிக்கப் படுகிறது).

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

சாந்தோக்ய உபநிஷத்தில் "ओं इति एतत् अक्षरं उद्गीथं उपासीत" "ஓம் என்ற இந்த உத்கீத அக்ஷரத்தை உபாஸிக்கவும்" என்று கண்டிருப்பதில் உத்கீதம் அக்ஷரம் இரண்டுக்கும் "ஸாமாநாதிகரண்யம்" (ஒரே வஸ்துவைக் குறிக்கும் தன்மை) சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதத்தன்மை நான்கு விதங்களாக இருக்கலாம் - (1) "அத்யாஸம்" : புத்தி பூர்வமாக ஒன்றை வேறொன்றாக பாவனை செய்தல். ஸாலக்கிராமத்தில் மஹாவிஷ்ணு என்றும் பிராமணரிடம் கணபதியென்றும் பாவிப்பது போல "नाम ब्रह्मेत्युपासीत" "நாமத்தை பிரஹ்மம் என்று உபாஸிக்கவும்" என்று விதித்திருப்பது அத்யாஸமாகும். (2) "பாதம்" : புத்தி பூர்வகமில்லாமல் தவறுதலால் ஒன்றைவேறொன்றாக அறிதல். தூணைப் பார்த்து திருடன் என்றும், கயிறை பாம்புவென்றும், நினைப்பதில் தவறுதலாய்த் தோன்றின திருடன், பாம்பு முதலியது பின்னால் வாஸ்தவமில்லையென்று பாதிக்கப்பட்டுவிடுவதால் "பாதம்" என்று சொல்லப்பட்டது. (3) "ஐக்யம்" : வாஸ்தவத்தில் ஒன்றாகவே இருத்தல், "ஜீவன் என்பது யாரோ அவனே பிரஹ்மம்", "அசுவம் என்பது எதுவோ, அதுவே துரகம்" என்பது போல. (4) "விசேஷ்ய"மாயிருக்கும் தன்மை : ஒன்றுக்கு மற்றொன்று விசேஷணமாக இருத்தல். நீலமாக இருப்பது உத்பலம், உயரமாக இருப்பவன் ராமன் என்பது போல. இங்கே ஓம்காரத்தை உத்கீதமாக பாவிக்க வேண்டுமென்ற அத்யாஸமா?உத்கீதம், ஓம்காரம் இரண்டும் தனித்தனியாகத் தெரிவதினால், "பாத"த்திற்கு இடமில்லை. உத்கீதம் என்ற சப்தமும் ஓம்காரமென்ற அக்ஷரமும் ஒரே வஸ்துவைச் சொல்லுகின்றனவா? அல்லது உத்கீதத்தை விசேஷணமாயுள்ள அக்ஷரம் என்று எடுத்துக் கொள்ள வேண்டுமா? என்று கவனித்தால், இவ்விதம் தான் என்று தீர்மானிக்கப் போதுமான காரணமில்லாததினால் தீர்மானிக்க முடியாது என்று தான் வைத்துக் கொள்ள வேண்டும்.

ஸித்தாந்தம் :

உத்கீதத்தை விசேஷணமாயுள்ள அக்ஷரமென்று தீர்மானிக்க முடியும். ஓம்காரம் என்ற அக்ஷரமோ மூன்று வேதங்களிலும் சொல்லப் பட்டிருக்கிறது. அவைகளில் எந்த ஓம்காரத்தை உபாஸிக்க வேண்டும் என்று அபேக்ஷிக்கும் போது உத்கீதத்திலுள்ள ஓம்காரத்தைத் தான்,

மற்றதையல்ல என்று ஸாம வேதத்திலுள்ளதென்பது விசேஷண மாகிறது. அத்யாஸம் முதலான பக்ஷங்களை எடுத்துக் கொள்வதானுல், அதற்கு பலன் என்னவென்று கல்பிக்கவேண்டிவரும் ஸ்வதந்திர உபாஸனையாகி விடுமானதினுல் அவசியம் பலனை அபேக்ஷிக்கும். விசேஷணமென்று எடுத்துக் கொண்டாலோ ஸ்வதந்திர உபாஸனையுமாகாது, தனியாக பலனைக் கல்பிக்க அவசியமும் இல்லை. உத்கீதம் என்பது ஸாமவேதத்தின் ஒரு முழுப்பகுதி, ஓம்காரமோ அதில் ஒரு அவயவம் தான். அப்படியிருப்பதால் "உத்கீத அக்ஷரம்" என்பதற்கு "உத்கீத அவயவமான அக்ஷரம்" என்று லக்ஷணையால் தானே அர்த்தம் சொல்ல வேண்டியிருக்கிறது என்ருல் வாஸ்தவம். அப்படியானுலும், அத்யாஸம் என்பதைவிட இது மேலானது தான். அத்யாஸத்தில், விஷ்ணு என்ற சப்தம் தனக்கு ஏற்பட்ட முழு அர்த்தத்தையும் விட்டுவிட்டு வேறு பதார்த்தமான சிலாப்ரதிமையைக் குறிக்கிறது. உத்கீதத்தையே அக்ஷரமென்று சொன்னுலும் பொருந்தாது. அதன் அவயவமென்ருல் உத்கீதம் என்ற சப்தத்திற்குரிய அர்த்தத்தில் ஒரு பாகத்தைத்தான் விட்டுவிடுகிருேம். அதாவது உத்கீதத்தில் உள்ள அக்ஷரங்களில் ஓம்காரம் என்பதைத் தவிர மற்ற அக்ஷரங்கள் விடப்படுகின்றன. அவை ஒருபாகமே தான், உத்கீதம் முழுவதையும் விட்டுவிடவில்லை. ஆகையால் இம்முறை அத்யாஸத்தை விட மேன்மையாக உள்ளது. இவ்விதமாக மற்ற வேதங்களிலுள்ள ஓங்காரங்களிலிருந்து பிரித்துத் தனித்தெடுத்து, ஸாமவேதத்தில் அதிலும் உத்கீத ஸாமத்தின் அவயவமாயிருக்கிற ஓம்காரம் என்ற அக்ஷரம் என்று துல்யப்படுத்திக் கொடுக்கிறது, உத்கீதம் என்ற விசேஷணம்.

## ५.सर्वाभेदाधिकरणम्

## 5.ஸர்வாபே$_4$தா$_3$தி$_4$கரணம்

(ஸூத்ரம் 10)

**सर्वाभेदादन्यत्रेमे ।।१०।।**

ஸர்வாபே$_4$தா$_3$த$_3$ந்யத்ரேமே 10

(எல்லாயிடத்திலும் பேதமில்லாததினால் வேறிடத்திலும் இவை)

பிராண உபாஸனை விஷயமாய் ஓரிடத்தில் சொல்லப்படும் குணங்களை மற்ற இடங்களிலும் சேர்த்துக் கொள்ள வேண்டுமா? என்று விசாரம்.

वसिष्ठत्वाद्यनाहार्यमाहार्यं वैवमित्यतः ।
उक्तस्यैव परामर्शादनाहार्यमनुक्तितः ।। ९ ।।
प्राणद्वारेण बुद्धिस्थं वसिष्ठत्वादि तेन तत् ।
एवंशब्दपरामर्शयोग्यमाहार्यमिष्यते ।। १० ।।

வஸிஷ்டத்வாத்₃யநாஹார்யமாஹார்யம் வைவமித்யத:
உக்தஸ்யைவ பராமர்சாத₃நாஹார்யமநுக்தித: ।। 9
ப்ராணத்₃வாரேண பு₃த்₃தி₄ஸ்த₂ம் வஸிஷ்டத்வாதி தேந தத் ।
ஏவம்சப்த₃பராமர்சயோக்₃யமாஹார்யமிஷ்யதே ।। 10

(அ..ம்)

வஸிஷ்டமாயிருத்தல் முதலியது சேர்த்துக் கொள்ளத்தக்கதில்லையா? அல்லது சேர்த்துக் கொள்ள வேண்டியவைகளா? "இவ்விதம்" என்று இருப்பது அங்கு சொல்லியிருப்பதையே குறிக்குமானதினால், அங்கு சொல்லாததினால் சேர்த்துக் கொள்ளத்தக்கதில்லை.

வஸிஷ்டமாயிருத்தல் முதலியது பிராணன் என்பது மூலமாகவே புத்தியில் வந்துவிடுகிறது. அதினால் அது "இவ்விதம்" என்று சப்தத்தினால் குறிக்கப்படுவதற்குத் தகுந்ததாய் சேர்த்துக்கொள்ள வேண்டியதென்றே கருதப்படுகிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிராண வித்யையைச் சொல்லும் போது சாந்தோக்யத்திலும், காண்வ சாகையிலும் வஸிஷ்டமாயிருத்தல், பிரதிஷ்டையாயிருத்தல் முதலான குணங்களைச் சொல்கிறார்கள். ஆனால் அதே பிராணவித்யையைச் சொல்லும் ஐதரேயத்திலோ, கௌஷீதகம் முதலியவைகளிலோ இந்த குணங்கள் சொல்லப்படவில்லை. அங்கே இந்த குணங்களை சேர்த்துக் கொள்ளக் கூடாது. "य एवं वेद" "எவன் இவ்விதம் அறிகிறானோ" என்று இவ்விதம் என்ற சப்தத்தினால் அந்தந்த சாகையில் சொல்லப்பட்ட குணங்களே கிரஹிக்கப்படுமானதினால், வேறிடத்திலுள்ளவைகளை இங்கே இழுத்துக்கொள்வது நியாயமாகாது.

ஸித்தாந்தம் :

குணத்தையுடைய பிராணன் என்பது ஒன்றாகவேயிருப்பதால், அதன் மூலமாக அதன் குணங்கள் எல்லாம் மனஸில் தோன்றும். ஆகையால் "இவ்விதம்" என்ற சப்தத்தினாலேயே சொன்ன குணங்களைப் போலவே சொல்லப்படாத மற்ற குணங்களும் குறிக்கப்படக்கூடியவைகளே. ஒருவரை மதுராபுரியில் வேத அத்யயனம் செய்விப்பவராகப் பார்த்த

பிறகு, மறுபடியும் அவரை மாஹிஷ்மதீ நகரத்தில் பார்க்க நேரிட்டால் அப்பொழுது அவர் வேதாத்யயனம் செய்து வைக்காத போனாலும், முன்னால் வேதாத்யயனம் செய்து வைத்தவர் என்றே தான் ஞாபகம் வரும். அவ்விதமே சாந்தோக்யம் முதலியதில் வஸிஷ்டத்தன்மை முதலியதாக அறியப்பட்ட பிராணனே அவ்வித குணமன்னியில் வெறும் பிராணனாக ஐதரேயம் முதலியதில் காணப்பட்டாலும், அந்த வஸிஷ்டத்தன்மை முதலிய குணங்களுடன் கூடினவர் என்பது ஞாபகத்திற்கு வரத்தான் வரும். ஆகையால் "இவ்விதம்" என்ற சப்தத்தினாலேயே குறிக்கப்படக்கூடிய யோக்கியதை இருப்பதால், வஸிஷ்டத்தன்மை முதலியதும் சேர்த்துக் கொள்ளத் தக்கது தான்.

## ६.आनन्दाद्यधिकरणम्

## 6.ஆநந்தா$_3$த்$_3$யதி$_4$கரணம்

(ஸூத்ரம் 11 - 13)

**आनन्दादयः प्रधानस्य ।।११।।**

ஆநந்தா$_3$த$_3$ய: ப்ரதா$_4$நஸ்ய 11

( ஆனந்தம் முதலியவை பிரதானமாயுள்ளதற்கு )

**प्रियशिरस्त्वाद्यप्राप्तिरुपचयापचयौ हि भेदे ।।१२।।**

ப்ரியசிரஸ்த்வாத்$_3$யப்ராப்திருபசயாபசயௌ ஹி பே$_4$தே 12

( பிரியசிரஸ்த்வம் முதலியது வராது, கூடுதல் குறைதல் பேதமிருந்தால்தானே )

**इतरे त्वर्थसामान्यात् ।।१३।।**

இதரே த்வர்த$_2$ஸாமாந்யாத் 13

( மற்றவைகளோ விஷயம் ஸமானமாயிருப்பதால் )

ஆனந்தம் முதலான குணங்களும் சேர்த்துக் கொள்ள வேண்டியவைகள் தானா? என்பது இங்கே விஷயம்.

**नाऽऽहार्या उत वाऽऽहार्या आनन्दाद्या अनाहृतिः ।**
**वामनीसत्यकामादेरिवैतेषां व्यवस्थितेः ।। ११ ।।**
**विधीयमानधर्माणां व्यवस्था स्याद्यथाविधि ।**
**प्रतिपत्तिफलानां तु सर्वशाखासु संहृतिः ।। १२ ।।**

நாஆஹார்யா உத வாஆஹார்யா ஆநந்தா$_3$த்$_3$யா அநாஹ்ருதி:।
வாமநீஸத்யகாமாதே$_3$ரிவைதேஷாம் வ்யவஸ்தி$_2$தே: ।। 11
விதீ$_4$யமாநத$_4$ர்மாணாம் வ்யவஸ்தா$_2$ ஸ்யாத்$_3$யதா$_2$விதி$_4$ ।
ப்ரதிபத்திப$_2$லாநாம் து ஸர்வசாகா$_2$ஸு ஸம்ஹ்ருதி: ।। 12

(அ..ம்)

ஆனந்தம் முதலானவை சேர்த்துக் கொள்ள வேண்டியதில்லையா? அல்லது, சேர்த்துக்கொள்ள வேண்டியவை தானா? "வாமனீ, ஸத்யகாமம்" முதலியதிற்குப் போல இவைகளுக்கும் வியவஸ்தை இருப்பதால்,சேர்த்தல் கிடையாது. (தியானத்திற்காக) விதிக்கப்படும் தர்மங்களுக்கு எப்படி விதிக்கப்படுகிறதோ அப்படியே என்று வியவஸ்தை இருக்கலாம். அறிவதை பிரயோஜனமாக உள்ளவைகளுக்கோ எல்லா சாகைகளிலும் சேர்த்துக் கொள்ள வேண்டியது தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"आनन्दो ब्रह्म" "ஆனந்தம் பிரஹ்மம்" "सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म" "ஸத்யமாய், ஞானமாய், எல்லையற்றதாய் உள்ளது பிரஹ்மம்" என்று தைத்திரீய உபநிஷத்தில் பரபிரஹ்மத்தைப் பற்றி சொல்லும் போது ஆனந்தம், ஸத்யம் முதலான லக்ஷணங்கள் சொல்லப் பட்டிருக்கின்றன. ஐதரேயம் முதலியதில் பரபிரஹ்மத்தைச் சொல்லும் போது "प्रज्ञानं ब्रह्म" "அறிவு பிரஹ்மம்" என்று மாத்திரம் காண்கிறது. ஆனந்தம், ஸத்யம் முதலானவை இங்கே காணுதபடியால் அவைகளை சேர்த்துக் கொள்ளக்கூடாது. ஏனென்றால் உபகோஸலவித்யையில் "एष उ एव वामनी:, एष उ एव भामनी:" "இவரே வாமநீ, இவரே பாமநீ" என்று வேண்டியதைக் கொண்டு வந்து கொடுக்கும் தன்மை, பிரகாசப்படுத்தும் தன்மை முதலிய குணங்கள் சொல்லப்படுகின்றன. தஹர வித்யையிலோ "सत्यकाम: सत्यसंकल्प:" "ஸத்யமான (மாறாத) காமத்தையுடையவர், ஸத்யமான (மாறாத) ஸங்கல்பத்தையுடையவர்" என்று ஸத்யகாமம் முதலான குணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்விரண்டுக்கும் குணங்களை ஒன்றுடொன்று சேர்த்துக் கொள்வது கிடையாது. இவ்விதம் எப்படி வியவஸ்தையிருக்கிறதோ, அப்படியே ஆனந்தம் முதலானவைகளுக்கும் வியவஸ்தையிருக்கும். ஆகையால் வேறிடத்திலிருந்து சேர்த்துக் கொள்வது நியாயமில்லை.

ஸித்தாந்தம் :

அந்த திருஷ்டாந்தம் இங்கே பொருந்தாது. அங்கே வாமநீத்தன்மை முதலானது தியானிக்கப்பட வேண்டியதாய் விதிக்கப் படுவதால் எப்படி விதியோ அப்படியேதான் வைத்துக் கொள்ள வேண்டும். இங்கேயோ, ஆனந்தம் முதலியது பிரஹ்மத்தின் தத்வமாக அறிய

வேண்டியதற்காகச் சொல்லப்படுவதால் அவை விதிக்கப்படுபவை அல்ல. வியவஸ்தையைச் சொல்லும் விதி எதுவும் இல்லாததினுல் அறிய வேண்டியதாயுள்ள பலனுக்கிய பரபிரஹ்மம் ஒன்ருகவே இருப்பதால், ஆனந்தம் முதலானவைகள் சேர்த்துக்கொள்ள வேண்டியவைகள் தான்.

## ७.आध्यानाधिकरणम्

## 7.ஆத்₄யாநாதி₄கரணம்

(ஸூத்ரம் 14,15)

**आध्यानाय प्रयोजनाभावात् ।।१४।।**

ஆத்₄யாநாய ப்ரயோஜ₃நாபா₄வாத் 14

( நன்கு தியானம் செய்வதற்காக, பிரயோஜனமில்லாததினால் )

**आत्मशब्दाच्च ।।१५।।**

ஆத்மசப்₃தா₃ச்ச 15

( ஆத்மா என்கிற சப்தத்தினாலும் )

அறிய வேண்டியது பரபிரஹ்மம் மாத்திரம் தானு? அதன் கூடவே சொல்லியிருக்கும் எல்லாமே அறிய வேண்டியவைகளா? என்பது விஷயம்.

**सर्वा परम्पराऽक्षादेर्ज्ञेया पुरुष एव वा ।**
**ज्ञेया सर्वा श्रुतत्वेन वाक्यानि स्युर्बहूनि हि ।। १३ ।।**
**पुमर्थः पुरुषज्ञानं तत्र यत्नः श्रुतो महान् ।**
**तद्बोधाय श्रुतोऽक्षादिर्वेद्य एकः पुमांस्ततः ।। १४ ।।**

ஸர்வா பரம்பராஅக்ஷாதே₃ர்ஜ்ஞேயா புருஷ ஏவ வா ।
ஜ்ஞேயா ஸர்வா ச்ருதத்வேந வாக்யாநி ஸ்யுர்ப₃ஹூநி ஹி ।। 13
புமர்த₂: புருஷஜ்ஞாநம் தத்ர யத்ந: ச்ருதோ மஹாந் ।
தத்₃போ₃தா₄ய ச்ருதோஅக்ஷாதி₃ர்வேத்₃ய ஏக: புமாம்ஸ்தத:।। 14

(அ..ம்)

இந்திரியங்கள் முதலியதின் வரிசை எல்லாமே அறிய வேண்டியதா? அல்லது புருஷன் மாத்திரம் தானு? சொல்லப்பட்டிருப்பதால் எல்லாம் அறியப்பட வேண்டியது தான். வாக்கியங்களோ பல இருக்கின்றனவே? புருஷனை (பரபிரஹ்மத்தை) அறிவது தான் புருஷார்த்தம். அந்த விஷயத்தில் தான் வெகு பிரயத்தினம் சொல்லப்பட்டிருக்கிறது. இந்திரியங்கள் முதலியது அந்தப்புருஷனையறிவதற்காகச் சொல்லப் பட்டது. ஆகையால் அறிய வேண்டியது புருஷன் ஒருவனே.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

கடவல்லியில் "इन्द्रियेभ्यः परा ह्यर्था अर्थेभ्यश्च परं मनः। मनसः तु परा बुद्धिः, बुद्धेः आत्मा महान्परः।। महतः परम् अवयक्तम् , अव्यक्तात् पुरुषः परः । पुरुषात् न परं किंचित् सा काष्ठा सा परागतिः ।।" "இந்திரியங்களைவிட மேலானவை விஷயங்கள், விஷயங்களைவிட மேலானது மனஸ், மனஸைவிட மேலானது புத்தி, புத்தியைவிட மேலானது மஹத் என்ற ஆத்மா, மஹத்தைவிட மேலானது அவ்யக்தம், அவ்யக்தத்தைவிட மேலானது புருஷன். புருஷனுக்கு மேல் எதுவும் கிடையாது. அதுவே எல்லை. அதுவே மேலான கதி" என்று சொல்லப்படுகிறது. "மனஸினால் விஷயங்களை ஆசைப்பட்ட பிறகு இந்திரியங்களைக் கொண்டு வெளியிலுள்ள விஷயங்களை அடைகிறான். அங்கே வெளியிலுள்ள விஷயங்களைவிட உள்ளேயிருப்பதால் இந்திரியங்கள் அவைகளைவிட மேலானவை என்பது பிரஸித்தம். ஆசைப்படும் தருணத்தில் இருக்கும் விஷயங்கள் மனஸில் இருப்பதால், இந்திரியங்களைவிட உள்ளேயிருப்பவைகளாகும். அவைகளையும் விட ஆசை ரூபமான மனோவிருத்தி உள்ளேயிருப்பது, அந்த விருத்தியைவிட விருத்தியை உடைய புத்தி இன்னம் உள்ளே இருப்பது. அந்த புத்தியையும் விட அந்த புத்திக்கும் உபாதான காரணமாக இருக்கிற மஹத் என்று சொல்லப்படுகிற, ஹிரண்யகர்ப்ப ஸ்வரூபமாயுள்ள ஆத்மா இன்னமும் உள்ளேயிருப்பவர், அந்த மஹத்திற்கும் உபாதானகாரணமாயுள்ள அவ்யக்தம் என்று சொல்லப்படுகிற மூலஅக்ஞானம் (மாயை) அந்த மஹத்தைவிட உள்ளேயிருப்பது. அந்த அவ்யக்தத்திற்கும் அதிஷ்டானமாய், சைதன்யஸ்வரூபமாய் உள்ள புருஷன் இன்னமும் உள்ளேயிருப்பவர். இந்த புருஷனையும்விட உள்ளே இருப்பது எதுவும் கிடையாது. உள்ளே உள்ளேயென்று சொல்லி வந்த தாரதம்யம் இந்த புருஷனுடன் முடிவடைந்து விடுகிறது. ஆகையால் புருஷார்த்தத்தை விரும்புகிறவர்கள் அடைய வேண்டிய மேலான கதி இவர் தான் என்பது சுருதியின் அர்த்தம். இங்கே சுருதியினால் எப்படி புருஷன் பிரதி பாதிக்கப்பட்டிருக்கிறானோ அவ்விதமே இந்திரியங்கள் முதலியதும் பிரதிபாதிக்கப் பட்டிருக்கின்றன. ஆகையால் எப்படி புருஷன் அறியத்தக்கவனோ, அப்படியே இந்திரியங்கள் முதலியதும் அறியத்தக்கதே தான். அப்படியில்லையானால், அவைகளைப்பற்றி எடுத்துச் சொன்னது எல்லாம் வீண் என்று ஆகிவிடும். பலவானதை பிரதிபாதிக்கிறதென்றால் வாக்கியத்தின் தாத்பர்யம் உடைபட்டு

போகாதா? என்று கேட்க இங்கே இடமில்லை. இங்கே வாக்கியங்களே பலவாக இருக்கின்றன. எல்லாம் சேர்த்து ஒரே வாக்கியம் என்று சொல்வது பொருத்தமாகாது. ஆகையால் இந்திரியங்கள் முதலியவைகளையும் அறிய வேண்டியது தான்.

ஸித்தாந்தம் :

எல்லாவித ஸம்ஸார பந்தத்திற்கும் காரணமாயுள்ள அக்ஞானம் நிவிருத்தியாவதே புருஷார்த்தம். அது புருஷனை அறிவதினால் தான் ஏற்படும். ஆகையால் புருஷார்த்தத்தை விரும்புகிறவர்களால் புருஷன் தான் அறியப்பட வேண்டியவன். ஆனால் அவன் வெகு உள்ளேயிருப்பவன். அவனைப்பற்றி உபநிஷத்திலேயே பின்வரும் வாக்கியத்தில் "एष सर्वेषु भुतेषु गूढात्मा न प्रकाशते । दृश्यते त्वग्र्यया बुद्ध्या सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः ।।" "இவர் எல்லாப் பிராணிகள் இடத்திலும் ஒளிந்திருக்கும் ஆத்மாவானதினால் பிரகாசிக்கிறது இல்லை, ஆனால் கூர்மையாய், ஸூக்ஷ்மமாய் உள்ள புத்தியினால் ஸூக்ஷ்மத்தைப் பார்க்க வல்லமையுள்ளவர்களால் பார்க்கப்படுகிறார்" என்று சொல்லியிருக்கிறது. அதாவது எல்லாவற்றிற்கும் உள்ளே ஒளிந்திருப்பதால் இந்த ஆத்மா வெளிப்பார்வையுள்ளவர்களுக்கு பிரகாசிக்கமாட்டார். ஆனால் எவர் உள் பார்வையுள்ளவர்களாய் ஸூக்ஷ்மமான தத்வத்தையறியக் கூடியவர்களோ, அவர்களால் யோகாப்பியாஸத்தினால் ஒருமுகப்பட்ட, ஸூக்ஷ்ம வஸ்துவை பார்க்கக்கூடிய, புத்தியினால் அந்த ஆத்மா பார்க்கப்படமுடியும். இதனால் புருஷனை அறியவேண்டியதற்கு ஸாதனமாக வேறு பிரயத்தினத்துடன் யோகம் உபதேசிக்கப்படுகிறது. ஆகையால் அறிய வேண்டிய வஸ்து புருஷன் தான். புருஷனை அறிய வேண்டிய வஸ்துவாயிருந்தால் பாக்கி இந்திரியங்கள் முதலியதின் வரிசையை உபதேசித்தது வீணாகாதா? என்று நினைக்க வேண்டாம். வெளி வஸ்துக்களையே நோக்கிச் செல்லும் மனஸை புருஷனிடம் நுழையும்படிச்செய்வதற்கு இந்த வரிசையானது நன்கு ஸாதனமாக உபயோகப்படுகிறது. ஆகையால் புருஷன் தான் அறிய வேண்டியவன்.

## ८.आत्मगृहीत्यधिकरणम्

## 8.ஆத்மக்₃ருஹீத்யதி₄கரணம்

(ஸூத்ரம் 16,17)

**आत्मगृहीतिरितरवदुत्तरात् ।।१६।।**

**ஆத்மக்₃ருஹீதிரிதரவது₃த்தராத் 16**

( ஆத்மாவை சொன்னது மற்றவிடங்களில்போல, மேலுள்ளதால் )

**अन्वयादिति चेत्स्यादवधारणात् ।।१७।।**

அந்வயாதி$_3$தி சேத்ஸ்யாத$_3$வதா$_4$ரணாத் 17

( அன்வயத்தினால் என்றால், அவதாரணத்தினால் இருக்கலாம் )

1. ஜகத்தை ஸ்ருஷ்டித்தது பிரஹ்மமா? விராட்டா? என்பது விஷயம்.

**आत्मा वा इदमित्यत्र विराट् स्यादथवेश्वरः ।**
**भुतासृष्टेर्नेश्वरः स्याद् गवाद्यानयनाद्विराट् ।। १५ ।।**
**भूतोपसंहृतेरीशः स्याद्द्वैतावधारणात् ।**
**अर्थवादो गवाद्युक्तिर्ब्रह्मात्मत्वं विवक्षितम् ।। १६ ।।**

ஆத்மா வா இத$_3$மித்யத்ர விராத் ஸ்யாத$_3$த$_2$வேச்வர; ।
பூ$_4$தாஸ்ருஷ்டேர்நேச்வர; ஸ்யாத்$_3$ க$_3$வாத்$_3$யாநயநாத்$_3$விராட் ।।15
பூ$_4$தோபஸம்ஹ்ருதேரீச; ஸ்யாத்$_3$த்$_3$வைதாவதா$_4$ரணாத் ।
அர்த$_2$வாதோ$_3$ க$_3$வாத்$_3$யுக்திர்ப்$_3$ரஹ்மாத்மத்வம் விவக்ஷிதம் ।। 16

(அ..ம்)

"இது ஆத்மாவாகவே" என்ற இந்தவிடத்தில் சொல்லியிருப்பது விராட்டாக இருக்குமா? அல்லது ஈசுவரரா? பூதங்களுடைய ஸ்ருஷ்டி சொல்லப் படாததினுல் ஈசுவரர் அல்ல. கோ முதலியதைக் கொண்டு வந்ததாகச் சொல்வதால் விராட்தான்.

பூதங்களை சேர்த்துக் கொள்ளலாமானதினுல், இரண்டாவதற்றதென்று உறுதியாய் சொல்வதால், ஈசுவரர்தான். கோ முதலியதைச் சொன்னது அர்த்தவாதம். பிரஹ்மத்திற்கு ஆத்மாவாவிருக்கும் தன்மை (இங்கு) சொல்ல எண்ணப்படும் விஷயம்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஐதரேய உபநிஷத்தில் "**आत्मा वा इदं एक एव अग्र आसीत्**" "இது முதலில் ஆத்மாவென்ற ஒன்ருகவே இருந்தது" என்று காண்கிறது. "**स ऐक्षत, लोकान्नु सृजै**" "அவர் லோகங்களையே ஸ்ருஷ்டிப்பேன் என்று எண்ணினுர்" என்று அடுத்துவரும் வாக்கியத்தில் ஐந்து பூதங்களுடைய ஸ்ருஷ்டி சொல்லப்படவில்லை. உலகங்களை மாத்திரம் ஸ்ருஷ்டி செய்ததாகக் காண்கிறது. அது விராட்டின் கார்யமானதினுல் இங்கே ஆத்மா என்று சொல்லப்படுவது விராட்தான். தைத்திரீயம், சாந்தோக்யம் முதலான சுருதிகளில் ஆகாசம் முதலான பூதங்களின் ஸ்ருஷ்டி ஈசுவரருக்குத் தான் சொல்லப்பட்டிருக்கிறது. அது இங்கே

சொல்லப்படாததினுல் இங்கே சொல்லப்படும் ஆத்மா ஈசுவரர் அல்ல. மேலும் பின்னுல் "ताभ्यो गां आनयत्" "அவைகளுக்காக (இந்திரியங்கள் முதலியவைகளுக்காக) பசுவை கொண்டு வந்தார்" அப்படியே குதிரையைக் கொண்டு வந்தார், மனுஷ்யனைக் கொண்டு வந்தார் என்றெல்லாம் சொல்லப்படுகிறது. இவ்விதம் கொண்டு வருவது சரீரத்தை உடைய விராட்டிற்குத்தான் பொருந்துமே தவிர, சரீரமற்ற பரமாத்மாவிடம் பொருந்தாது. ஆகையாலும் இங்கே சொல்லப்பட்ட ஆத்மா விராட் தான்.

ஸித்தாந்தம் :

"ஒருவராகவே முதலில் இருந்தார்" என்று இரண்டாவதற்ற தன்மை அழுத்திச் சொல்லியிருப்பதால் இங்குள்ள ஆத்மா ஈசுவரர் தான். வேறு சாகையில் கண்டிருக்கிற பூதங்களின் ஸ்ருஷ்டியை இங்கேயும் சேர்த்துக் கொள்ள முடியும். கோ முதலியதைக் கொண்டு வந்ததென்பது வெறும் அர்த்தவாத வாக்கியம். அதைத் தெரிந்து கொள்வதினுல் தனித்து ஸ்வதந்திரமாக எவ்வித புருஷார்த்தமும் ஏற்படாது. ஆகையால் அதில் தாத்பர்யம் கிடையாது. இதை "பூதார்த்தவாதம்" (வாஸ்தவமாயுள்ளதைச் சொல்வது) என்று கருதினுலும், பரமேசுவரரே விராட் முதலியவர் மூலமாக கோ முதலியதைக் கொண்டு வந்ததாக இருக்கட்டும்.கோ முதலியதைக் கொண்டு வருவதாக வர்ணிப்பது அர்த்தவாதமென்று வைத்துக் கொண்டாலும் கூட அதைச் சொல்வதில் வேதத்திற்கு எவ்வித பிரயோஜனமும் ஸித்திக்கவில்லையேயென்ருல், அப்படியல்ல. "आत्मा वै " "ஆத்மாதான்" என்று ஆரம்பித்து "स एतं एव पुरुषं ब्रह्म ततं अपश्यत् प्रज्ञानं ब्रह्म" "அவர் இந்த புருஷனையே வியாபகமான பிரஹ்மமாகப் பார்த்தார், அறிவே பிரஹ்மம்" என்று முடித்திருப்பதால், ஜீவனுக்கும் பிரஹ்மத்திற்குமுள்ள ஐக்கியத்தைச் சொல்வது தான் வேதத்தின் உத்தேசம். ஆகையால் இங்குள்ள "ஆத்மா" என்ற சப்தம் ஈசுவரரையே குறிக்கிறது.

2. இந்த அதிகரணத்தையே வேறு விதமாகவும் வர்ணிக்கிருர் -

> द्वयोः वस्त्वन्यत् एकं वा काण्वच्छान्दोग्यषष्ठयोः ।
> उभयत्र पृथग्वस्तु सदात्मभ्यामुपक्रमात् ।। १७ ।।
> साधारणोऽयं सच्छब्दः स आत्मा तत्त्वमित्यतः ।
> वाक्यशेषादात्मवाची तस्माद्वस्त्वेकमेतयोः ।। १८ ।।

த்வயோ;வஸ்த்வந்யத் ஏகம் வா காண்வச்சா$_2$ந்தோ$_3$க்$_3$யஷஷ்டயோ; ।
உப$_4$யத்ர ப்ருத$_2$க்வஸ்து ஸதா$_3$த்மப்$_4$யாமுபக்ரமாத் ॥ 17
ஸாதா$_4$ரணோஅயம் ஸச்ச$_2$ப்$_3$த$_3$; ஸ ஆத்மா தத்த்வமித்யத; ।
வாக்யசேஷாதா$_3$த்மவாசீ தஸ்மாத்$_3$வஸ்த்வேகமேதயோ; ॥ 18

(அ..ம்)

காண்வம்(பிருஹதாரண்யகம்) ஆருவது அத்யாயத்திலும், சாந்தோக்யம் ஆருவது அத்யாயத்திலும் ஆகிய இரண்டிலும் காணப்படும் வஸ்து வெவ்வேரு? அல்லது ஒன்றுதாஞ? (ஓரிடத்தில்) ஸத் என்றும் (மற்ற விடத்தில்) ஆத்மா என்றும் ஆரம்பமிருப்பதால் இரண்டிடங்களிலும் வஸ்து தனித்தனி தான்.

"ஸத்" என்ற இந்த சப்தம் பொதுவாயுள்ளது. பின் வாக்கியத்தில் "அது ஆத்மா, அது நீ" என்றிருப்பதிஞல், ஆத்மாவைச் சொல்லும் சப்தமே அது. ஆகையால் இந்த இரண்டு இடங்களிலும் வஸ்து ஒன்று தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

காண்வம் ஆருவது அத்யாயத்தில் "எது ஆத்மா?" என்று ஆரம்பித்து ஆத்மா விஸ்தரித்துச் சொல்லப்பட்டிருக்கிறது. "कतम आत्मा" சாந்தோக்யம் ஆருவது அத்யாயத்திலோ "सत् एव सोम्य इदं अग्र आसीत्" "ஹே ஸோம்ய! முதலில் இது ஸத்தாகவேயிருந்தது" என்று "ஸத்" என்ற வஸ்து ஆரம்பித்து விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. உலகத்தில் ஸத் என்ற சப்தமும் ஆத்மா என்ற சப்தமும் ஒரே அர்த்தமுள்ளதாக பிரஸித்தியில்லை. ஆகையால் அந்த வஸ்துக்கள் வெவ்வேறு தான்.

ஸித்தாந்தம் :

ஸத் என்ற சப்தம் "இருப்பது" என்ற அர்த்தத்தைக் குறிப்பதால், சேதனஞன ஆத்மா அசேதனமான ஆத்மாவல்லாதது ஆகிய இரண்டிற்கும் பொதுவாய் இருப்பதால் ஸந்தேஹம் ஏற்படுகிறது. ஆஞல் பின் வாக்கியத்தில்."स आत्मा तत् त्वं असि" "அது ஆத்மா, அது நீ" என்று சொல்லப்படுவதால் அந்த ஸந்தேஹத்திற்கு இடமன்னியில் ஆத்மாவையே சொல்கிறதென்று தீர்மானமாகிறது. ஆகையால் இரண்டு இடங்களிலும் வஸ்து ஒன்று தான்.

## ९.कार्याख्यानाधिकरणम्

## 9.கார்யாக்$_2$யாநாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 18)

## कार्याख्यानादपूर्वम् ।।१८।।
## கார்யாக்$_2$யாநாத$_3$பூர்வம் 18
## ( செய்யவேண்டியதாக )

பின்னுள்ள வாக்கியத்திற்கு மதிப்புக் கொடுத்தால், வேறொரு இடத்தில் ஆசாரம் விஷயமாக ஏற்படக்கூடிய ஸந்தேஹம் ஒன்று இங்கு நிவிருத்திக்கப் படுகிறது.

**अनग्नबुद्ध्याचमने विधेये बुद्धिरेव वा ।**
**उभे अपि विधीयेते द्वयोरत्र श्रुतत्वतः ।। १९ ।।**
**स्मृतेस्त्वाचमनं प्राप्तं प्रायत्यर्थमनूद्य तत् ।**
**अनग्नतामतिः प्राणविदोऽपूर्वा विधीयते ।। २० ।।**

அனக்$_3$னபு$_3$த்$_3$த$_4$யாசமநே விதே$_3$யே பு$_3$த்$_3$தி$_4$ரேவ வா ।
உபே$_4$ அபி விதீ$_4$யேதே த்$_3$வயோரத்ர ச்ருதத்வத: ।। 19
ஸ்ம்ருதேஸ்த்வாசமநம் ப்ராப்தம் ப்ராயத்யர்த$_2$மநூத்$_3$ய தத் ।
அனக்$_3$னதாமதி: ப்ராணவிதோ$_3$அபூர்வா விதீ$_4$யதே ।। 20

(அ..ம்)

அனக்னம் என்ற பாவனே, ஆசமனம் என்ற இரண்டும் விதிக்கப் படுகின்றனவா? அல்லது பாவனே மாத்திரம் தானு? இங்கே இரண்டுமே சொல்லப்பட்டிருப்பதால், இரண்டும் தான் விதிக்கப்படுகின்றன.

ஆசமனம் என்பது சுத்திக்காக ஸ்மிருதியிலிருந்தே கிடைத்துவிடுகிறது. அதை அனுவதித்து (திரும்பச்சொல்லி) பிராணனே உபாஸிக்கிறவனுக்குப் புதிதாக அனக்னம் என்ற பாவனே விதிக்கப்படுகிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிராணவித்யையில் பின்னுள்ள வாக்கியத்தில் "**अशिष्यन् आचामेत्,अशित्वा च आचामेत्, एतमेव तत् अनमनग्नं कुरुते**" "சாப்பிடப்போகிறவர் ஆசமனம் செய்ய வேண்டும், சாப்பிட்ட பிறகும் ஆசமனம் செய்யவேண்டும். அது தான் இந்த பிராணனே அனக்னனுகச் செய்கிறது" என்று காண்கிறது. இங்கே பிராணனின் நக்னமில்லாத் தன்மையை பாவிப்பது, ஆசமனம் செய்வது இரண்டுமே சொல்லப் பட்டிருப்பதால், இரண்டுமே விதிக்கப்பட்டவை.

ஸித்தாந்தம் :

"எது வேறு வழியாகக் கிடைக்கவில்லேயோ, அதைச் சொல்லும் சாஸ்திரம் தான் பிரயோஜனமுள்ளது" என்ற நியாயப்படி, வேறு எந்த

பிரமாணத்திலும் கிடைக்காததாயுள்ள அனக்னம் என்ற பாவனை தான் இங்கு விதிக்கப்பட்டதாக ஆகும். அதாவது, போஜனத்திற்கு முந்தியும் பிந்தியும் ஆசமனம் செய்யப்படும் ஜலத்தில் வஸ்திரம் என்ற பாவனை செய்து அந்த வஸ்திரத்தினால் பிராணனின் வஸ்திரமில்லாத்தன்மை விலகுவதாக பாவிக்க வேண்டும் என்று தாத்பர்யம். அடியிலும் வஸ்திரம், மேலேயும் வஸ்திரம் போட்டு பிராணனை மூடுவதாக, வஸ்திரம் தரித்தவராக பாவனை. இது வேறு எங்கேயும்சொல்லாத விஷயம். நாமாக பிரத்யக்ஷம் முதலானதினாலும் கண்டுபிடிக்க முடியாத விஷயம். ஆகையால் இது தான் இங்கே விதிக்கப்படுகிறது. ஆசமனமோ ஸ்மிருதியிலேயே சுத்திக்காக விதிக்கப்பட்டிருப்பதால், அதை விதிக்க அவசியமில்லை. அந்த ஸ்மிருதிக்கு இந்த வாக்கியமே மூலமாக இருக்கட்டுமேயென்றால், இங்கே வர்ணதர்மம், ஆசிரமதர்மம் இவைகளைச் சொல்லும் பிரகரணமில்லாததினால் இங்கே விஷயமே வேறாயிருப்பதால், இது மூலமாகாது. மூலமாக வேறு சுருதியிருக்க வேண்டுமென்று அனுமானத்தினால் தான் ஊஹித்துக்கொள்ளலாம். ஆகையால் ஆசமனம் வேறு வகையில் கிடைத்திருப்பதால் அனக்னம் என்ற பாவனைதான் பிராணோபாஸகனை யுத்தேசித்து இங்கே விதிக்கப் பட்டிருக்கிறது.

## १०.समानाधिकरणम्

## 10.ஸமாநாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 19)

**समान एवं चाभेदात् ।।१९।।**

ஸமாந ஏவம் சாபே$_4$தா$_3$த் 19

( ஸமானமாயிருப்பதிலும் இப்படியே, பேதமில்லாததினால்)

ஒரே உபாஸனை வெவ்வேறு வேதங்களில் வந்தாலும் ஒன்றேதான் என்று சொல்லப்பட்டது. ஒரே வேதத்தில் இரண்டு தடவை சொல்லப்பட்டால் எப்படி? என்பது விஷயம்.

**शाण्डिल्यविद्या काण्वानां द्विविधैकविधाऽथवा ।**
**द्विरुक्तेरेकशाखायां द्वैविध्यमिति गम्यते ।। २१ ।।**
**एका मनोमयत्वादि प्रत्यभिज्ञानतो भवेत् ।**
**विद्याया विधिरेकत्र स्यादन्यत्र गुणे विधिः ।। २२ ।।**

சாண்டில்யவித்$_3$யா காண்வாநாம் த்$_3$விவிதை$_4$கவிதா$_4$அத$_2$வா ।

த்₃விருக்தேரேகசாகா₂யாம் த்₃வைவித்₃த₄யமிதி க₃ம்யதே ।। 21
ஏகா மனோமயத்வாதி₃ ப்ரத்யபி₄ஞாநதோ ப₄வேத் ।
வித்₃யாயா விதி₄ரேகத்ர ஸ்யாத₃ந்யத்ர கு₃ணே விதி₄: ।। 22

(அ..ம்)

காண்வர்களின் சாண்டில்ய வித்யை இரண்டு விதமா? அல்லது ஒரே விதம் தானு? ஒரே சாகையில் இரண்டு தரம் சொல்லியிருப்பதால், இரண்டு வித்யைகள் என்று தெரிகிறது.

மனுேமயத்தன்மை முதலியது ஞாபகத்திற்கு வருவதால், ஒரே வித்யைதான் ஓரிடத்தில் வித்யைக்கு விதி, மற்றவிடத்தில் குண விஷயத்தில் விதியென்று ஆகும்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

காண்வர்களுடைய அக்னி ரஹஸ்யப் பிராஹ்மணத்தில் "स आत्मानम् उपासीत मनोमयं प्राणशरीरम्" "அவன் மனுேமயமாய் பிராணனை சரீரமாகவுடையதாயுள்ள ஆத்மாவை உபாஸிக்கவும்" என்று சாண்டில்ய வித்யை சொல்லப் பட்டிருக்கிறது. அப்படியே அதே காண்வர்களுடைய பிருஹதாரண்யகத்தின் அதே வித்யை "मनोमयोऽयं पुरुषो भाः सत्यः" "இந்த புருஷன் மனுேமயன், பிரகாசமானவன், ஸத்யமானவன்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. திரும்பச் சொல்வது உசிதமில்லையாதலால் வெவ்வேறு சாண்டில்ய வித்யை என்று தான் வைத்துக் கொள்ள வேண்டும்.

ஸித்தாந்தம் :

மனுேமயம் முதலான குணங்களுடன் அறியவேண்டிய வஸ்து ஒன்றே தான் என்று ஞாபகம் வருவதால், ஒரே வித்யைதான். ஓரிடத்தில் வித்யையை விதித்து மற்றவிடத்தில் அதையே அனுவதித்து ஸத்யமாயிருக்கும் தன்மை, எல்லாவற்றையும் ஆளும் தன்மை முதலிய குணங்களை விதிப்பதாக எடுத்துக் கொண்டால் திரும்பச்சொல்லல் என்ற தோஷத்திற்கு இடமில்லை. "அக்னிஹோத்ரம் ஹோமம் செய்கிருன், தயிரினுல் ஹோமம் செய்கிருன்" என்றவிடத்தில் முதலில் அக்னி ஹோத்ர கர்மாவையும் பின்னுல் அதற்கு வேண்டிய திரவியத்தையும் விதிப்பது திரும்பச் சொன்னதாகாதோ, அவ்விதமே இங்கேயும். ஆகையால் சாண்டில்ய வித்யை ஒரே விதம் தான்.

# ११.संबन्धाधिकरणम्

## 11.ஸம்ப₃ந்தா₄தி₄கரணம்

(ஸூத்ரம் 20 - 22)

**संबन्धादेवमन्यत्रापि ।।२०।।**

ஸம்ப₃ந்தா₄தே₃வமந்யத்ராபி 20

(ஸம்பந்தமிருப்பதால், இவ்விதமே வேறு இடத்திலும்)

**न वा विशेषात् ।।२१।।**

ந வா விசேஷாத் 21

(அல்ல, விசேஷமிருப்பதினால்)

**दर्शयति च ।।२२।।**

த₃ர்சயதி ச 22

(மேலும், காட்டுகிறது)

ஒரே வித்யைக்குள்ளேயே ஒரு ஸந்தேஹம் இங்கு விஷயம்.

**संहारः स्याद् व्यवस्था वा नाम्नोरहरहंत्विति ।**
**विद्यैकत्वेन संहारः स्यादध्यात्माधिदैवयोः ।। २३ ।।**
**तस्योपनिषदित्येवं भिन्नस्थानत्वदर्शनात् ।**
**स्थितासीनगुरूपास्त्योरिव नाम्नोर्व्यवस्थितिः ।। २४ ।।**

ஸம்ஹார: ஸ்யாத்₃ வ்யவஸ்தா₂ வா நாம்நோரஹரஹந்த்விதி ।
வித்₃யைகத்வேந ஸம்ஹார: ஸ்யாத₃த்₄யாத்மாதி₄தை₃வயோ: ।। 23
தஸ்யோபநிஷதி₃த்யேவம் பி₄ந்நஸ்தா₂நத்வத₃ர்சநாத் ।
ஸ்தி₂தாஸீநகு₃ரூபாஸ்த்யோரிவ நாம்நோர்வ்யவஸ்தி₂தி: ।। 24

(அ..ம்)

அஹ: என்றும், அஹம் என்றும் உள்ள இரண்டு பெயர்களுக்கும் ஒன்றோடு ஒன்று சேர்த்துக்கொள்ளுதல் உண்டா? அல்லது, தனித்தனியென்று வியவஸ்தையா? ஒரே வித்யையாயிருப்பதால் ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம் இரண்டுக்கும் சேர்த்துக் கொள்வது உசிதம் தான்.

"அதனுடைய உபநிஷத்" என்றிவ்விதம் தனித்தனி இருப்பிடத்தில் இருக்கும் தன்மை காட்டப்படுவதால், நிற்கிற குருவின் உபாஸனை உட்கார்ந்திருக்கும் குருவின் உபாஸனை இரண்டும் வேறுபடுவது போல, இங்கேயும் பெயர்கள் விஷயத்தில் வியவஸ்தைதான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிரஹதாரண்யகத்தில் ஸத்ய வித்யையைச் சொல்லும் போது ஆதிதைவிகமான புருஷனுக்கு அஹ : என்ற இந்தப் பெயர் தியானத்திற்காக உபதேசிக்கப்படுகிறது. ஆத்யாத்மிகமான கண்ணிலுள்ள புருஷனுக்கோ அஹம் என்ற பெயர் சொல்லப்படுகிறது. வித்யை ஒன்றுகவேயிருப்பதால் இரண்டு பெயர்களையும் இரண்டு புருஷர்களுக்கும் சேர்த்துக் கொள்வது தான் நியாயம்.

ஸித்தாந்தம் :

"**य एष तस्मिन् मण्डले पुरुष:**" "அந்த மண்டலத்தில் எவர் இந்த புருஷனே" என்று ஆரம்பித்து "**तस्य उपनिषत् अहः**" "அவருடைய உபநிஷத் அஹ:" என்று, அவர் என்ற சப்தத்தினல் மண்டலத்திலுள்ள புருஷனையே குறிப்பிட்டு அவருக்கே இந்த தனித்த பெயர் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. அப்படியே "**योऽयं दक्षिणेऽक्षन् पुरुष:**" "வலது கண்ணில் எவர் இந்த புருஷனே" என்று ஆரம்பித்து **तस्य उपनिषत् अहम्**" "அவருடைய உபநிஷத் அஹம் " என்று கண்ணிலுள்ள புருஷனையே அவர் என்ற சப்தத்தால் குறிப்பிட்டு அவருக்கே தனியாக ஒரு பெயர் உபதேசிக்கப் பட்டிருக்கிறது. ஆகையால் ஒரே வித்யையில் அறிய வேண்டியதாயுள்ள ஸத்யமென்ற பிரஹ்மம் ஒன்றுகவேயிருந்த போதிலும் இருப்பிடத்தை கவனித்து பெயர்கள் சொல்லியிருப்பதால், ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம் இவர்களுக்குள் பெயர்கள் தனித்தனிதான். அவைகளுக்குள் ஒன்றேடொன்று சேர்ப்பது கிடையாது. உலகத்தில் உபாஸிக்கப்படும் குரு ஒருவரேயானுலும் அவரை நிற்கும்போது உபாஸிக்கும் முறையாகிய உபசாரம் அவர் உட்கார்ந்திருக்கும் போதும் அப்படியேயென்பது உசிதமாகாது. உட்கார்ந்து கொண்டிருந்தால் காலைப்பிடித்து விடலாம், நிற்கிறபோது அது சரியல்ல. அவ்விதமே இங்கேயும். ஆகையால் இங்கே பெயர்களுக்குள் வியவஸ்தை உண்டென்று அறியவும்.

## १२.संभृत्यधिकरणम्

## 12.ஸம்ப்₄ருத்யதி₄கரணம்

(ஸூத்ரம் 23)

**संभृतिद्युव्याप्त्यपि चात: ।।२३।।**

ஸம்ப்₄ருதித்₄யுவ்யாப்த்யபி சாத: 23

(அதனால் ஸம்ப்ருதியும் த்யுலோக வ்யாப்தியும்)

ராணாயநீய சாகையில் சில பாகத்தில் **ब्रह्मज्येष्ठा वीर्या संभृतानि ब्रह्माग्रे ज्येष्ठं दिवमाततान**" "வீர்யமாயுள்ளவைகள் பிரஹ்மத்தை முன்னிட்டு நன்கு உண்டாயின. அந்த முன்னிருந்த பிரஹ்மம் முதலில் த்யுலோகத்தை வியாபித்தது" என்று காண்கிறது. அதாவது, உலகத்தில் வீர்யமுள்ளவர்கள் என்று விஷ்ணு, சிவன், பிரஹ்மா முதலான தேஹங்களில் எவர் பிரவேஸித்தார்களோ, அவர்கள் எல்லாருமே பிரஹ்மத்தை முன்னிட்டுக் கொண்டேயேற்பட்டவர்கள். சக்தியோடு கூடின பிரஹ்மத்தை எதிர்பாராமல் யாரும் வீர்யமுள்ளவர்களாக இருக்க முடியாது அல்லவா? அவ்விதம் முன்பே இருந்த அந்த பிரஹ்மம் முன்னால் த்யுலோகத்தை வியாபித்துக் கொண்டிருந்தது என்று தாத்பர்யம். இதில் சொல்லப்படும் குணங்களை வேறுயிடங்களிலும் சேர்த்துக் கொள்ளவேண்டுமா? என்பது விஷயம்.

**आहार्या वा न वाऽन्यत्र संभृत्यादिविभूतयः ।**
**आहार्या ब्रह्मधर्मत्वाच्छाण्डिल्यादाववारणात् ।। २५ ।।**
**असाधारणधर्माणां प्रत्यभिज्ञाऽत्र नास्त्यतः ।**
**अनाहार्या ब्रह्ममात्रसंबन्धोऽतिप्रसञ्जकः ।। २६ ।।**

ஆஹார்யா வா ந வாஅந்யத்ர ஸம்ப்$_4$ருத்யாதி$_3$விபூ$_4$தய: ।
ஆஹார்யா ப்$_3$ரஹ்மத$_4$ர்மத்வாச்சா$_2$ண்டி$_3$ல்யாதா$_3$வவாரணாத் ।। 25
அஸாதா$_4$ரணத$_4$ர்மாணாம் ப்ரத்யபி$_4$ஜ்ஞாஅத்ர நாஸ்த்யத: ।
அநாஹார்யா ப்$_3$ரஹ்மமாத்ரஸம்ப$_3$ந்தோ$_4$அதிப்ரஸஞ்ஜக: ।। 26

(அ..ம்)

ஸம்பிருதி முதலிய மஹிமைகள் வேறிடத்திலும் சேர்த்துக் கொள்ள வேண்டியவைகளா? அல்லது இல்லையா? பிரஹ்மத்தின் தர்மங்களாகவே இருப்பதாலும், சேர்க்கக் கூடாதென்று தடையில்லாததினாலும், சாண்டில்ய வித்யை முதலியதில் சேர்த்துக் கொள்ள வேண்டியவை தான்.

பொதுவாயில்லாத தர்மங்களுக்கு இங்கே ஞாபகம் வருவது இல்லை என்பதினால் சேர்த்துக்கொள்ள வேண்டியவைகளல்ல. (பிரஹ்மத்திற்கு) தர்மமாத்திரமாக இருக்கிறது என்ற ஸம்பந்தம் (பொதுமென்றால்) அதிபிரஸங்கமாகும் (எல்லாவற்றையும் சேர்த்துக் கொள்ளும்படி ஏற்பட்டு விடும்).

(வி..ம்)

பூர்வபக்ஷம் :
இங்கே ஆதிதைவிதமான பிரஹ்மத்திற்கு ஸம்பிருதி (எல்லாவற்றையும் தாங்குதல்) த்யுலோக வியாபிதி முதலான குணங்கள் உபாஸிக்கத் தகுந்ததாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அதே பிரஹ்மம்தான் சாண்டில்ய வித்யை தஹர வித்யை முதலியவைகளில் ஆத்யாத்மிகவாக ஹ்ருதயத்திற்கு உள்ளே இருப்பதாக உபாஸிக்கப்பட வேண்டியதென்று சொல்லப்படுகிறது. இரண்டிடத்திலும் பிரஹ்மம் ஒன்றேயானதினால் ஸம்பிருதி முதலிய குணங்களும் சாண்டில்ய தஹரம் முதலான வித்யைகளில் சேர்த்துக் கொள்ள வேண்டியவைதான்.

ஸித்தாந்தம் :
இந்த ஸம்பிருதி முதலான குணங்களில் ஒன்று கூட சாண்டில்யம் முதலிய வித்யைகளில் காணப்படவில்லை.ஆகையால் அதே வித்யை என்று ஞாபகப்படுத்த எதுவுமில்லாததினால் அந்த குணங்களை இங்கே கொண்டு வர வேண்டியதில்லை. பிரஹ்மம் ஒன்றுகவேயிருப்பதைக் கொண்டு சேர்ப்பதானால், சேர்க்க வேண்டாதது என்று எதுவுமேயிராது. ஆகையால் ஸம்பிருதி முதலியவை சேர்த்துக் கொள்ள வேண்டியவையல்ல.

# १३.पुरुषविद्याधिकरणम्

## 13.புருஷவித்₃யாதி₄கரணம்

(ஸூத்ரம் 24)

**पुरुषविद्यायामिव चेतरेषामनाम्नानात् ।।२४।।**

புருஷவித்₃யாயாமிவ சேதரேஷாமநாம்நாநாத் 24
(புருஷ வித்யையில்போல, மற்றவைகளுக்கும், சொல்லப்படாததினால்)

தைத்திரீயத்தில் "**तस्यैव विदुषो यज्ञस्याऽऽत्मा यजमानः**" "இவ்விதம் அறிகிற அவருடைய யக்ஞத்திற்கு ஆத்மாதான் யாகம் செய்கிறவர்" என்றும், தாண்டி சாகையில் "**पुरुषो वाव यज्ञः**" "புருஷனே யக்ஞம்" என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இரண்டு இடங்களிலும் சொல்வது ஒரே வித்யையா? என்பது விஷயம்.

**पुंविद्यैका विभिन्ना वा तैत्तिरीयकताण्डिनोः ।**
**मरणावभृथत्वादिसाम्यादेकेति गम्यते ।। २७ ।।**
**बहुना रूपभेदेन किञ्चित्साम्यस्य बाधनात् ।**
**न विद्यैक्यं तैत्तिरीये ब्रह्मविद्याप्रशंसनात् ।। २८ ।।**

பும்வித்₃யைகா விபி₄ந்நா வா தைத்திரீயகதாண்டி₃நோ: ।
மரணாவப்₄ருத₂த்வாதி₃ஸாம்யாதே₃கேதி க₃ம்யதே ।। 27
ப₃ஹுூநா ரூபபே₄தே₃ந கிஞ்சித்ஸாம்யஸ்ய பா₃த₄நாத் ।
ந வித்₃யைக்யம் தைத்திரீயே ப்₃ரஹ்மவித்₃யாப்ரசம்ஸநாத் ।। 28

(அ..ம்)

தைத்திரீயத்திலும், தாண்டி சாகையிலும் உள்ள புருஷ வித்யை ஒன்ரு? அல்லது வெவ்வேரு? மரணம் அவபிருதம் என்பது முதலியதில் ஸாம்யம் இருப்பதால், ஒன்று என்று தெரிகிறது.
வெகுவாக ஸ்வரூபத்தில் பேதமிருப்பதினுல் கொஞ்சமாயுள்ள ஸாம்யம் பாதிக்கப்பட்டுவிடுவதாலும், தைத்திரீயத்தில் பிரஹ்ம வித்யை புகழப்பட்டு இருப்பதாலும், ஒரே வித்யையல்ல.
(வி..ம்)

பூர்வபக்ஷம் :
"यन्मरणं तदवभृथः" "எது மரணமோ, அது அவபிருதம்" என்று ஓரிடத்திலும் "मरणमेवावभृथः" "மரணம் தான் அவபிருதம்" என்று மற்றவிடத்திலுமாக இரண்டு இடங்களிலும் ஒரே மாதிரி சொல்லப்பட்டு இருக்கிறது. அப்படியே பிராத: ஸவனம் முதலானவைகளும் ஸமானமாகவே சொல்லப்படுகின்றன. ஆகையால் இந்த புருஷ வித்யை ஒன்று தான்.

ஸித்தாந்தம் :
அறிய வேண்டியதின் ஸ்வரூபத்தில் இங்கு வெகுவாக வேற்றுமை காணப் படுகிறது. தைத்திரீயத்தில் வித்வானுடைய யக்ஞம் எதுவோ அந்த யக்ஞத்திற்கு யஜமானன் (யாகம் செய்கிறவர்) ஆத்மாவென்று கண்டிருக்கிறது. இங்கே வித்வானுகிற யக்ஞத்திற்கு ஆத்மா யஜமானன் என்று அர்த்தம் கொள்வதானுல், வித்வானே யக்ஞம். அதில் யஜமானனும் அவன் என்று சொல்வது ஒன்றுக் கொன்று முரணுகும். தாண்டி சாகையிலோ புருஷனேயே யக்ஞமாகச் சொல்லியிருக்கிறது. இவ்விதமாக, புருஷனுடைய யக்ஞமென்பது ஒன்றில் விஷயம், மற்ருென்றில் புருஷனே யக்ஞமென்பது விஷயம், என்று ஸ்வரூபத்தில் பேதம். ஆத்மா யஜமானன் என்பது முதலியது தாண்டி சாகையில் காணவே இல்லை. மேலும், ஆயுளை மூன்ருகப் பிரித்து அவைகளுக்கு மூன்று ஸவனங்களாக இருக்கும் தன்மை தாண்டி சாகையில் காண்கிறதே தவிர தைத்திரீயத்தில் கொஞ்சமேனும் காணவில்லை. இப்படியெல்லாம் பலவித வேற்றுமையிருப்பதால் மரணம், அவபிருதம்

முதலிய அல்பமான பாதிக்கப்பட்டு விடுகிறபடியால் இரண்டு வித்யைகளுக்குள் பேதம் என்பது தான் உசிதம். மேலும், தாண்டி சாகையில் சொல்வது உபாஸனைக்காக பாவனை செய்ய வேண்டியதற்காக சொல்லப்பட்டிருக்கிறது. தைத்திரீயத்திலோ அப்படி அல்ல. பாவிப்பதற்காகவல்ல அறிந்து கொள்வதற்காகவே தான். "இவ்விதம் அறிகிற அவருடைய" என்று பிரஹ்மத்தை அறிவதின் புகழே அறிகிறவனைப் புகழ்வதால் சொல்லப்படுகிறது. ஆகையால் ஓரிடத்தில் உபாஸனை, இன்னொரு இடத்தில் ஞானமே என்று இருப்பதால் இரண்டும் ஒரே வித்தையா என்று ஸந்தேஹிப் பதற்கே இடமில்லை.

# १४.वेधाद्यधिकरणम्

## 14.வேத₄ாத்₃யதி₄கரணம்

(ஸூத்ரம் 25)

**वेधाद्यर्थभेदात् ।।२५।।**

வேதா₄த்₃யர்த₂பே₄தா₃த் 25

(வேதம் (பிளப்பது) முதலியதின்பொருள் வேறுபடுவதால்)

ஏதேனும் உபநிஷத்தின் மத்தியில் மந்திரமோ, கர்மாவோ காணப்பட்டால் அவைகளும் வித்தைக்கு அங்கமாகுமா? என்பது விஷயம்.

**वेधमन्त्रप्रवर्ग्यादि विद्याङ्गमथवा नतु ।**
**विद्या सन्निधिपाठेन विद्याङ्गे मन्त्रकर्मणी ।। २९ ।।**
**लिङ्गेनान्यत्र मन्त्राणां वाक्येनापि च कर्मणाम् ।**
**विनियोगात् सन्निधिस्तु बाध्योऽतो नाङ्गता तयोः ।। ३० ।।**

வேத₄மந்த்ரப்ரவர்க்₃யாதி₃ வித்₃யாங்க₃மத₂வா நது ।
வித்₃யா ஸந்நிதி₄பாடே₂ந வித்₃யாங்கே₃ மந்த்ரகர்மணீ ।। 29
லிங்கே₃நாந்யத்ர மந்த்ராணாம் வாக்யேநாபி ச கர்மணாம் ।
விநியோகா₃த் ஸந்நிதி₄ஸ்து பா₃த்₄யோ அதோ நாங்க₃தா தயோ: ।।30

(அ..ம்)

"வேத" மந்திரம், பிரவர்க்யம் முதலானது வித்யைக்கு அங்கமாகுமா? அல்லது ஆகாதா? வித்யையின் ஸமீபத்தில் சொல்லப்பட்டிருப்பதால், மந்திரமும் கர்மாவும் வித்தைக்கு அங்கங்கள்தான்.

லிங்கத்தினுல் மந்திரங்களுக்கு வேறிடத்தில் விநியோகம், கர்மாக்களுக்கு வாக்கியத்தினுலேயே வேறிடத்தில் விநியோகம் என்று

ஏற்படுவதால், ஸந்நிதி (ஸமீபத்தில் இருத்தல்) என்பது பாதிக்கப் படுகிறது. ஆகையால் அவை இரண்டிற்கும் வித்யைக்கு அங்கமாயிருக்கும் தன்மை கிடையாது.
(வி..ம்)

பூர்வபக்ஷம் :
அதர்வ வேத உபநிஷத்தின் ஆரம்பத்தில் "सर्वं प्रविध्य हृदयं प्रविध्य" "எல்லாவற்றையும் நன்கு துளைத்து ஹ்ருதயத்தை நன்கு துளைத்து" என்பது முதலிய மந்திரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அப்படியே காண்வர்களின் உபநிஷத்தின் ஆரம்பத்தில் பிரவர்க்ய விஷயமான பிராஹ்மணம் சொல்லப் பட்டிருக்கிறது. இது போல வேறு இடங்களிலும் காண்கின்றன. இவையெல்லாம் வித்யைக்கு ஸமீபத்திலேயே சொல்லப்பட்டிருப்பதால், அந்த மந்திரங்களும், கர்மாக்களும் வித்தைக்கு அங்கங்கள்தான்.

ஸித்தாந்தம் :
ஹ்ருதயத்தைத் துளைப்பது என்ற லிங்கத்தினாலேயே (அடையாளத்தினாலேயே) அந்த மந்திரங்கள் சத்ருக்களை நாசம் செய்வதற்காக செய்யப்படும் ஆபிசார கர்மாவில் விநியோகமுள்ளவை என்று தெரிகிறது.அப்படியே "पुरस्तादुपसदां प्रवृणक्ति" "உபஸத்துக்களுக்கு முன்னால் பிரவர்க்யம் செய்யவும்" என்ற வாக்கியத்தினாலேயே, அக்னிஷ்டோமத்தில் விநியோகம் என்று தெரிகிறது. பூர்வமீமாம்ஸயிலேயே சுருதி லிங்க அதிகரணத்தில் லிங்கமும், வாக்கியமும் ஸந்நிதியை விட பலமுள்ளவை என்று ஸந்நிதி என்பது பாதிக்கப்பட்டு விடுகிறது. ஆகையால் இவ்வித மந்திரங்களுக்கோ, கர்மாக்களுக்கோ வித்தைக்கு அங்கமாயிருக்கும் தன்மை கிடையாது.

## १५.हान्यधिकरणम्
## 15.ஹாந்யதி₄கரணம்
(ஸூத்ரம் 26)

**हानौ तूपायनशब्दशेषत्वात्कुशाच्छन्दः स्तुत्युपगानवत्तदुक्तम् ।।२६।।**

ஹானௌ தூபாயநசப்த₃சேஷத்வாத்குசாச்ச₂ந்த: ஸ்துத்யுபகா₃நவத்ததுக்₃தம் 26

(விட்டுவிடுவதிலோ எடுத்துக்கொள்வதென்ற சப்தத்தை சேஷமாயுடையதால், குசை, சந்தஸ், ஸ்தோத்ரம், உபகானம் இவைகளைப்போல அது சொல்லப்பட்டிருக்கிறது)

இந்த அதிகரணம் இரண்டு விதமாக அர்த்தம் செய்யப்படுகிறது. ஆகையால் இரண்டு வர்ணகங்கள் என்று பிரித்திருக்கிறார்கள்.

(1) उपायनमनाहार्यं हानायाहृयतेऽथवा ।
अश्रुतत्वादनाक्षेपाद्विद्याभेदाच्च नाऽऽहृतिः ।। ३१ ।।
विद्याभेदेप्यर्थवाद आहार्यः स्तुतिसाम्यतः ।
हानस्य प्रत्यभिज्ञानादेकविंशादिवादवत् ।। ३२ ।।

உபாயநமநாஹார்யம் ஹாநாயாஹ்ருயதேஅத$_2$வா ।
அச்ருதத்வாத$_3$நாக்ஷேபாத்$_3$வித்$_3$யாபே$_4$தாச்ச நாஆஹ்ருதி: ।। 31
வித்$_3$யாபே$_4$தே$_3$ப்யர்த$_2$வாத$_3$ ஆஹார்ய: ஸ்துதிஸாம்யத: ।
ஹாநஸ்ய ப்ரத்யபி$_4$ஞாநாதே$_3$கவிம்சாதி$_3$வாத$_3$வத் ।। 32

(அ..ம்)

(ஒருவர்) விடுவதற்காக (வேறொருவர்) எடுத்துக் கொள்ளுதல் என்பது சேர்த்துக் கொள்ள வேண்டியதில்லையா? அல்லது சேர்த்துக்கொள்ள வேண்டியது தானா? சொல்லப்படாததினாலும், வேண்டப்படாததினாலும், வேறு வித்யையாக இருப்பதாலும், சேர்த்துக் கொள்ளுதல் கிடையாது.

வேறு வித்யையாயிருந்தாலும் கூட புகழுதல் என்ற ஸாம்யம் இருப்பதால், அர்த்த வாதம் சேர்த்துக் கொள்ள வேண்டியது தான். விடுவது ஞாபகத்திற்கு வருவதால், இருபத்தியொன்று என்பது முதலியதைச் சொல்வது போல.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

சாட்யாயனீ சாகையில் "तस्य पुत्राः दायमुपयन्ति, सुहृदः साधुकृत्याम् , द्विषन्तः पापकृत्याम्" "அவருடைய புத்திரர்கள், அவருடைய சொத்தை எடுத்துக் கொள்கிறார்கள், நண்பர்கள் நல்ல கர்மாவையும், த்வேஷிப்பவர்கள் பாபகர்மாவையும் (அடைகிறார்கள்)" அதாவது, ஞானிக்கு புத்திரன் என்ற நிலையிருக்கிற பிராணிகள் எல்லாரும் அவருடைய சொத்து (என்ற நிலையிலுள்ள), கர்மாவை உசிதம்படி எடுத்துக் கொள்கிறார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. தாண்டி சாகையிலோ "अश्व इव रोमाणि विधूय,पापं चन्द्र इव राहोर्मुखात्प्रमुच्य, धूत्वा शरीरम्" "குதிரை ரோமங்களை உதறுவது போல, பாபத்தை உதறிவிட்டு, ராகுவின் வாயிலிருந்து சந்திரன் போல நன்கு விடுபட்டு, சரீரத்தை உதறிவிட்டு" என்று கண்டிருக்கிறது. அப்படியே அதர்வ வேதத்திலும் "तदा विद्वान्पुण्यपापे विधूय निरञ्जनः परं साम्यमुपैति" "அப்பொழுது (பிரஹ்மத்தை) அறிந்தவன்

புண்யம், பாபம் இரண்டையும் நன்கு உதறிவிட்டு, அழுக்கற்றவனுக, மேலான ஸமத்தன்மையை அடைகிருன்" என்று காண்கிறது. இங்கே "அழுக்கற்றவன்" என்ருல் இனி ஜன்மமெடுக்ககாரணமில்லாதவன் என்று அர்த்தம்; "மேலான ஸமத்தன்மை" என்பது பிரஹ்மத்தின் ஸ்வரூபம். இங்கே தத்வமறிந்தவனுக்கு புண்ய பாபங்களைவிட்டுவிடுவதைச் சொல்லும் சுருதிகளில் விடப்படும் புண்ய பாபங்களை இன்னெருவர் எடுத்துக் கொள்வதாகச் சேர்த்துக் கொள்ளக் கூடாது. விடுதலைச் சொல்லும் சுருதிகளில் வேறெருவர் எடுத்துக் கொள்வதாக சொல்லப்படாததினுல். சொல்லவில்லை யாஞலும் ஒருவர் விட்டதை மற்றவர் எடுத்துக் கொள்ளத் தானே வேண்டும், ஆகையால் எடுத்துக் கொள்வதும் வேண்டப்படுகிறது என்ருல், அது அவசியமில்லை. இன்னெருவர் எடுத்துக் கொள்ளாமல் போனுலும் ஞானி விட்டுவிடுவது பொருந்தக் கூடியதே. மேலும் மற்றவர் எடுத்துக் கொள்வதாகச் சொல்லும் வாக்கியம் ஸகுண வித்தையில் சொல்லப்பட்டிருக்கிறது. விடுவதாகச் சொல்வதோ நிர்குண வித்தையில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் எங்கே விடுவது மாத்திரம் சொல்லப்பட்டிருக்கிறதோ அங்கே வேறெருவர் எடுத்துக் கொள்கிருர் என்பதை சேர்த்துக் கொள்ளக் கூடாது.

ஸித்தாந்தம் :

வெவ்வேறு வித்யைகள் என்பது வாஸ்தவம். ஆகையால் எடுத்துக் கொள்வது என்பதை ஏதோ அனுஷ்டிக்க வேண்டிய தர்மம் என்ற முறையில் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று நாம் சொல்லவில்லை. ஆனுல் வெறும் அர்த்தவாதம் என்ற முறையில் தான் சொல்கிருேம். புண்ய பாபங்களை விடுகிருன் என்பதினுல் பிரஹ்மஞானம் எவ்விதம் புகழப் படுகிறதோ, அவ்விதமே அவைகளை வேறு சிலர் எடுத்துக்கொள்கிருர்கள் என்றும் புகழுவது முடியும். மேலும் வெறும் அர்த்த வாதம் ஆனதினுல் விடுவதையும் எடுத்துக் கொள்வதையும் சொல்கிற சுருதிகளுக்கு தாத்பர்யம் அதில் இல்லையென்று ஆகாது, வேறு பிரமாண பிரஸித்திக்கு விரோதமில்லாததினுல் உள்ளதைச் சொல்லும் "பூதார்த்தவாதம்" ஆகும்.விடுவதைச்சொல்லும் சுருதிகளில் எதிலும் எடுத்துக் கொள்வது சொல்லப் படவில்லையென்று சொன்னது தவறு. கௌஷீதகீ சுருதியில் விடுவது எடுத்துக் கொள்வது இரண்டுமே சொல்லப்படுகிறது. तत्सुकृतदुष्कृते विधूनुते । तस्य प्रिया ज्ञातयः सुकृतमुपयन्ति अप्रिया दुष्कृतम् " "அப்பொழுது நற்செய்கை கெட்ட செய்கை

இரண்டையும் உதறி விடுகிறான்". அவனுடைய பிரியமான ஞாதிகள் நற்செய்கையை அடைகிறார்கள். பிரியமில்லாதவர்கள் கெட்ட செய்கையை" என்று. "அப்பொழுது" என்பது பிரஹ்மலோகம் அடையும் வேளையில் என்று அர்த்தம். இவ்விதமிருப்பதால், கௌஷீதகீ சுருதியில் காணப்படும் "விடுவது" என்பதற்கு அதர்வண, தாண்டி சாகையிரண்டிடத்திலும் ஞாபகம் வருமாதலால், கௌஷீதகீயில் கண்ட எடுத்துக் கொள்வதையும் சேர்த்துக் கொள்வது தான் நியாயம். ஒரு அர்த்தவாதத்திற்கு இன்னொரு அர்த்தவாதத்தின் அபேக்ஷையைக் கொண்டு அர்த்தம் செய்வது எங்கேயும் பார்த்ததில்லையே? என்றால் சரியல்ல. ஸாமத்தை உபாஸிப்பதை புகழ்வதாயுள்ள சுருதியில் "**एकविंशो वा इतोऽसावादित्यः**" "இந்த ஆதித்யன் இதிலிருந்து இருபத்தி ஒன்றாவது" என்ற அர்த்தவாதமிருக்கிறது. அது எப்படி இருபத்தி ஒன்றாவது என்று நிர்ணயிப்பதற்கு தைத்திரீயத்தில் ஸத்திரங்களைச் சொல்லும் பிரகரணத்திலுள்ள அர்த்தவாதத்தின் அபேக்ஷையிருக்கிறது. அங்கே "**द्वादश मासाःपञ्चर्तवः त्रय इमे लोकाः, असावादित्य एकविंशः**" "பன்னிரண்டு மாஸங்கள், ஐந்து ரிதுக்கள், இந்த லோகங்கள் மூன்று, இந்த ஆதித்யன் இருபத்தியொன்றாவது" என்று கணக்கு சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் அர்த்தவாதமாயிருந்தாலும், எடுத்துக்கொள்வது என்பதை சேர்த்துக்கொள்ள வேண்டியது தான்.

(2)

**विधूननं चालनं स्याद्धानं वा चालनं भवेत्।**
**दोधूयन्ते ध्वजाग्राणीत्यादौ चालनदर्शनात् ।। ३३ ।।**
**हानमेव भवेद्वाक्यशेषेऽन्योपायनश्रवात् ।**
**कर्त्रा न ह्यपरित्यक्तमन्यः स्वीकर्तुमर्हति ।। ३४ ।।**

விது$_4$நநம் சாலநம் ஸ்யாத்$_3$தா$_4$நம் வா சாலநம் ப$_4$வேத்।
தோ$_3$து$_4$யந்தே த்$_4$வஜாக்$_3$ராணீத்யாதௌ சாலநத$_3$ர்சநாத் ।। 33
ஹாநமேவ ப$_4$வேத்$_3$வாக்யசேஷேஅந்யோபாயநச்ரவாத் ।
கர்த்ரா ந ஹ்யபரித்யக்தமந்ய: ஸ்வீகர்துமர்ஹதி ।। 34

(அ..ம்)

உதறுதல் என்பது அசைப்பதா? அல்லது விடுவதா? துவஜத்தின் நுனிகள் உதறிக் கொண்டேயிருக்கின்றன என்பது முதலானதில் அசைவது காணப்படுவதால் அசைப்பது தான்.

பின் வாக்கியத்தில் வேறொருவர் எடுத்துக்கொள்வதாகச் சொல்லியிருப்பதால், விடுவது என்று தான் ஆகும். செய்பவனால்

விட்டுவிடப்படாமலிருப்பதை இன்னொருவர் எடுத்துக்கொள்ளுவது ஸாத்தியமில்லை.
(வி..ம்)

பூர்வபக்ஷம் :
நற்செய்கை, கெட்ட செய்கை இவைகளை உதறிவிடுகிறான் என்றவிடத்தில் அசைத்தலே அர்த்தம், விடுவதில்லை.

ஸித்தாந்தம் :
பின் வாக்கியத்தில் சொல்லப்படுகிற வேறு ஒருவரால் எடுத்துக் கொள்ளப்படுகிறது என்று சொல்லியிருப்பது விடாமலிருந்தால் பொருத்தம் ஆகாததினால், அசைத்தலை சொல்லும் உதறுதலால் விடுவது தான் குறிப்பிடப்படுகிறது.

# १६.सांपरायाधिकरणम्

## 16.ஸாம்பராயாதி₄கரணம்

(ஸூத்ரம் 27,28)

**सांपराये तर्तव्याभावात्तथा ह्यन्ये ।।२७।।**

ஸாம்பராயே தர்தவ்யாபா₄வாத்ததா₂ ஹ்யந்யே 27
( ஸாம்பராயத்தில், கடக்கவேண்டியதில்லாததினால், அப்படியே மற்றவர்கள்)

**छन्दत उभयाविरोधात् ।।२८।।**

சந்த₃த உப₄யாவிரோத₄ாத் .28
(வேண்டியபடி, இரண்டிற்கும் விரோதமில்லாததால்)

முன் அதிகரணத்தில் சொன்ன புண்ய பாபங்களை விடுவது எப்பொழுது? என்பது இங்கே விஷயம்.

**कर्मत्यागो मार्गमध्ये यदि वा मरणात्पुरा ।**
**उत्तीर्य विरजां त्यागस्तथा कौषीतकीश्रुतेः ।। ३५ ।।**
**कर्मप्राप्यफलाभावान्मध्ये साधनवर्जनात् ।**
**ताण्डिश्रुतेः पुरा त्यागो बाध्यः कौषीतकीक्रमः ।। ३६ ।।**

**கர்மத்யாகோ₃ மார்க₃மத்₄யே யதி வா மரணாத்புரா ।**
**உத்தீர்ய விரஜாம் த்யாக₃ஸ்ததா₂ கௌஷீதகீச்ருதே: ।। 35**
**கர்மப்ராப்யப₂லாபா₄வாந்மத்₄யே ஸாத₄நவர்ஜ₃நாத் ।**
**தாண்டி₃ச்ருதே: புரா த்யாகோ₃ பா₃த்₄ய: கௌஷீதகீக்ரம: ।। 36**

(அ..ம்)
கர்மங்களை விடுவது மார்க்கத்தின் மத்தியிலா? அல்லது மரணத்திற்கு முன்பாகவேயா? விரஜா நதியைத் தாண்டினபிறகு தான் விடுவது, அப்படியே கௌஷீதகீ சுருதியிருப்பதால்.
கர்மாவினுல் அடைய வேண்டிய பலன் எதுவுமில்லாததினுலும், (மார்க்கத்தின்) மத்தியில் (விடுவதற்கு வேண்டிய) ஸாதனங்கள் கிடையாததாலும், (விடுவது முன்னுல் என்று) தாண்டி சுருதியிருப்பதினுலும், விடுவது (மரணத்திற்கு) பின்னுல் தான். கௌஷீதகீயில் உள்ள வரிசை பாதிக்கப்பட்டு விடுகிறது.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
பிரஹ்ம லோகத்திற்கு ஸமீபத்திலுள்ள விரஜாஎன்ற நதியைக்கடந்து போன பிறகு தான் பாப புண்யங்களை விடுதல் என்று கௌஷீதகீ உபநிஷத்தில்"स आगच्छति विरजां नदीं, तां मनसा एव अत्येति, तत् सुकृतदुष्कृते विधूनुत" அவன் விரஜா நதிக்கு வருகிருன், அதை மனஸினுலேயே தாண்டுகிருன், அப்பொழுது நற்செய்கை தீயச்செய்கை இரண்டையும் உதறுகிருன்" என்று கண்டிருப்பதினுல் போகும் மார்க்கத்தின் மத்தியில் தான் அவைகளை விடுதல்.

ஸித்தாந்தம் :
பிரஹ்மத்தையடைய வேண்டியதைத் தவிர, பிரஹ்மலோகம் போகும் வழி நடுவில் புண்யபாபங்களால் அடைய வேண்டிய எவ்வித பலனும் இல்லாததினுல், அவைகளை அந்த நதீ வரை கொண்டு போவது பிரயோஜனமற்றது. மேலும் மரணத்திற்கு முன்னுலேயே விட்டு விடப்பட்ட புண்ய பாபங்களை மறுபடியும் விட அவசியமில்லை என்பதுடன் போகும் வழியில் விடுவதற்கு வேண்டிய ஸாதனங்க ளும் கிடையாது. சரீரமேயில்லாத போது ஸாதனங்களை அனுஷ்டிப்பது ஸாத்தியமில்லை. மரணத்திற்கு முன்னுல் விடுவதற்கு பிரமாணமில்லையென்று சொல்ல முடியாது. "குதிரை ரோமங்களைப் போல" என்ற தாண்டிசுருதியில் சொல்லப்பட்டிருப்பதால். இவ்விதமிருப்பதால் நதியைக்கடந்து விடுவது என்று கௌஷீதகீ சுருதியில் சொல்வது பாதிக்கப்படுகிறது. ஆகையால் மரணத்திற்கு முன்னுலேயே உபாஸ்யமான பிரஹ்மம் ஸாக்ஷாத்கரிக்கப்பட்ட உடனேயே புண்ணிய பாபங்கள் விடப்படுகின்றன.

# १७.गतेरर्थवत्त्वाधिकरणम्

## 17.க$_3$தேரர்த$_2$வத்தவாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 29;30)

**गतेरर्थवत्त्वमुभयथाऽन्यथा हि विरोधः ।।२९।।**

க$_3$தேரர்த$_2$வத்த்வமுப$_4$யதா$_2$அந்யதா$_2$ ஹி விரோத$_4$: 29

(கதிக்கு இரண்டுவிதமாக அர்த்தமுள்ள தன்மை, வேறு என்றால் விரோதம்)

**उपपन्नस्तल्लक्षणार्थोपलब्धेर्लोकवत् ।।३०।।**

உபபந்நஸ்தல்லக்ஷணார்தோ$_2$பலப்$_3$தே$_4$ர்லோகவத் 30

(பொருத்தமானது, அதைக்காரணமாக, உடையவிஷயம் காணப்படுவதால் உலகத்தில்போல)

பிரஹ்ம லோகம் போவது உபாஸகன் ஞானி இருவருக்கும் உண்டா? என்பது இங்கே விஷயம்.

**उपास्तिबोधयोर्मार्गः समो यद्वा व्यवस्थितः ।**
**सम एवोत्तरो मार्ग एतयोः कर्महानवत् ।। ३७ ।।**
**देशान्तरफलप्राप्त्यै युक्तो मार्ग उपास्तिषु ।**
**आरोग्यवद्बोधफलं तेन मार्गो व्यवस्थितः ।। ३८ ।।**

உபாஸ்திபோ$_3$த$_4$யோர்மார்க$_3$: ஸமோ யத்$_3$வா வ்யவஸ்தி$_2$த: ।
ஸம ஏவோத்தரோ மார்க$_3$ ஏதயோ: கர்மஹாநவத் ।। 37
தே$_3$சாந்தரப$_2$லப்ராப்த்யை யுக்தோ மார்க$_3$ உபாஸ்திஷு ।
ஆரோக்$_3$யவத்$_3$போ$_3$த$_4$ப$_2$லம் தேந மார்கோ$_3$ வ்யவஸ்தி$_2$த:।।38

(அ..ம்)

உபாஸனே,ஞானம் இரண்டிற்கும் போகும் மார்க்கம் ஸமமா? அல்லது வியவஸ்தை உண்டா? கர்மங்களே விட்டு விடுவது போலவே, இவ்விருவருக்கும் உத்தர மார்க்கம் ஸமம் தான்.

வேறு இடத்திலுள்ள பலனேயடைவதற்காக, உபாஸனேகள் விஷயத்தில் போகும் மார்க்கம் நியாயமே. ஞானத்தின் பலனே ஆரோக்யம் போல, ஆகையால் மார்க்கம் வியவஸ்தையுள்ளது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

உபாஸகன் ஞானி இருவருக்குமே புண்ணிய பாபங்களே உதறிவிடுவது முன்னல் சொல்லப்பட்டது. அப்படியே ஸகுண பிரஹ்மத்தை உபாஸிக்கிறவருக்கும் நிர்குண பிரஹ்ம தத்வத்தையறிந்தவருக்கும்,

பின்னல் நான்காவது அத்யாயம் மூன்றுவது பாதத்தில் சொல்லப்போகிற அர்ச்சிராதி மார்க்கம் என்ற தேவயானம் ஸமம் தான்.

ஸித்தாந்தம் :

உபாஸனையால் அடைய வேண்டியதாயுள்ள பிரஹ்ம லோகம் என்ற பலன் வேறு இடத்தில் இருப்பதால், அங்கே போவதற்கு மார்க்கம் அவசியம். பிரஹ்மக் ஞானத்தின் பலனே வியாதி நிவிருத்தியாவது போல அவித்யை விலகுவதே யானதினுல், அதற்கு மார்க்கத்தினுல் ஆகவேண்டியது என்ன உண்டு. ஆகையால் உபாஸகனுக்குத்தான் மார்க்கம் ஞானிக்குக் கிடையாது என்கிற வியவஸ்தை.

## १८.अनियमाधिकरणम्

## 18.அநியமாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 31)

**अनियमः सर्वासामविरोधः शब्दानुमानाभ्याम् ।।३१।।**

அநியம: ஸர்வாஸாமவிரோத$_4$: சப்தா$_3$னுமானாப்$_4$யாம் 31

(நியமமில்லை, எல்லாவற்றிற்கும்; விரோதமில்லை, சப்தம் அனுமானம் இவைகளால்)

அந்த தேவயான மார்க்கம் எல்லா உபாஸகர்களுக்கும் உண்டா? என்பது இங்கு விஷயம்.

**मार्गः श्रुतस्थलेष्वेव सर्वोपास्तिषु वा भवेत् ।**
**श्रुतेष्वेव प्रकरणाद्द्विः पाठोऽस्य वृथाऽन्यथा ।। ३९ ।।**
**प्रोक्तो विद्यान्तरे मार्गो ये चेम इति वाक्यतः ।**
**तेन बाध्यं प्रकरणं द्विः पाठश्चिन्तनाय हि ।। ४० ।।**

மார்க$_3$: ச்ருதஸ்த$_2$லேஷ்வேவ ஸர்வோபாஸ்திஷு வா பவேத் ।
ச்ருதேஷ்வேவ ப்ரகரணாத்$_3$ த்$_3$வி:பாடோஅஸ்ய வ்ருதா$_2$அந்யதா$_2$ ।। 39
ப்ரோக்தோ வித்$_3$யாந்தரே மார்கோ$_3$ யே சேம இதி வாக்யத: ।
தேந பா$_3$த்$_4$யம் ப்ரகரணம் த்$_3$வி: பாட$_2$ச்சிந்தநாய ஹி ।। 40

(அ..ம்)

மார்க்கம் சொல்லப்பட்டிருக்கும் இடங்களில் மாத்திரம் உண்டா? அல்லது எல்லா உபாஸனைகள் விஷயத்திலுமா? பிரகரணமா யிருப்பதால்,சொன்னஇடங்களில் தான். அப்படியில்லையானுல் இரண்டு தரம் சொல்வது வீணுகி விடும்.

சொல்லப்படும் மார்க்கம் வேறு வித்தைக்கும் தான், "எந்த இவர்கள்" என்று வாக்கியமிருப்பதால். அதனுல் பிரகரணம் பாதிக்கப்படுகிறது. இரண்டு தரம் சொல்வது சிந்தனைக்காகவே தான்.
(வி..ம்)

பூர்வபக்ஷம் :
சாந்தோக்யத்தில் பஞ்சாக்னி வித்தையிலும், உப கோஸல வித்தையிலும், உத்தர மார்க்கம் சொல்லப்பட்டிருக்கிறது. சாண்டில்ய வித்தையிலும், வைசுவாநரர் முதலான வித்தைகளிலும் சொல்லப் படவில்லை. அப்படி இருந்தால், பிரகரணத்திற்கு பிராமாண்யமுள் ளதால், எந்த வித்தைகளில் மார்க்கம் சொல்லப்பட்டிருக்கிறதோ அவைகளுக்குத்தான் அது, மற்ற வித்தைகளில் சேர்த்துக் கொள்ளக்கூடாது. மேலும், கடைசியில் ஒரே தரம் சொல்லி இருந்தாலும் எல்லா வித்தைகளுக்கும் என்று சேர்த்துக்கொள்வது நியாயமாகும். அப்படியில்லையானால் இரண்டு வித்தைகளில் மாத்திரம் சொல்வதால் அவைகளுக்குத்தான் அது. எல்லாவற்றிற்கும் அது உண்டு என்றிருந்தால் இரண்டாவது தடவை சொல்வதற்கு அர்த்தமில்லை.

ஸித்தாந்தம் :
பஞ்சாக்னி வித்தை பின் வாக்கியத்தில் பஞ்சாக்னி வித்தையை உபாஸிக்கிறவர் களுக்கு உத்தர மார்க்கத்தைச் சொல்லிவிட்டு வேறு வித்தைகளை உபாஸிக்கிறவர்களுக்கும் வியக்தமாகவே அர்ச்சிராதி மார்க்கத்தைச் சொல்கிறது. " **तत् ये इत्थं विदुः येच इमे अरण्ये श्रद्धातपः इति उपासते, ते अर्चिषं अभिसंभवन्ति** " "அதை எவர்கள் இவ்விதம் அறிகிருர்களோ, மேலும் எந்த இவர்கள் அரண்யத்தில் சிரத்தை தபஸ் என்று உபாஸிக்கிருர்களோ, அவர்கள் அர்ச்சிஸை அடைகிருர்கள்" என்று சொல்கிறது. அதாவது எந்த உபாஸகர்கள் இவ்விதம் பஞ்சாக்னிகளை உபாஸிக்கிருர்களோ, எவர்கள் அரண்யத்தில் சிரத்தை, தபஸ் என்பது முதலான தவங்களோடு கூடினவர்களாக இருந்து கொண்டு வேறுவித உபாஸனைகளிலும் பிரவிருத்திக்கிருர்களோ, அவர்கள் எல்லாருமே அர்ச்சிராதி மார்க்கத்தை அடைகிருர்கள் என்று அர்த்தம். ஆகையால் அவர்களுக்கு மார்க்கத்தை விதிக்கும் வாக்கியமேயிருப்பதால் பிரகரணம் என்பது பாதிக்கப்பட்டுவிடும். இரண்டாம் தடவை சொன்னது வீண் என்பதுமில்லை, உபாஸிக்க வேண்டிய வஸ்துவின் குணத்தை சிந்தனை செய்வதை

பிரயோஜனமாயுடையதால். ஆகையால் எல்லா உபாஸனைகளுமே உத்தர மார்க்கம் உண்டென்று அறிய வேண்டியது.

# १९.यावदधिकाराधिकरणम्

## 19.யாவத₃தி₄காராதி₄கரணம்

(ஸூத்ரம் 32)

**यावदधिकारमवस्थितिराधिकारिकाणाम् ।।३२।।**

யாவத₃தி₄காரமவஸ்தி₂திராதி₄காரிகாணாம் 32

(அதிகாரம் பெற்றிருப்பவர்களுக்கு அதிகாரமுள்ளவரை நிலைத்தல்)

அர்ச்சிராதி மார்க்கமாய் பிரஹ்ம லோகம் போனவர் இங்கு திரும்புவது கிடையாது என்பது சில ஸமயங்களில் தவறுகிறதே என்ற ஸந்தேஹத்திற்கு ஸமாதானம் இங்கே சொல்லப்படுகிறது.

**ब्रह्मतत्त्वविदां मुक्तिः पाक्षिकी नियताऽथवा ।**
**पाक्षिक्यपान्तरतमःप्रभृतेर्जन्मकीर्तनात् ।। ४१ ।।**
**नानादेहोपभोक्तव्यमीशोपास्तिफलं बुधाः ।**
**भुक्त्वाधिकारिपुरुषा मुच्यन्ते नियता ततः ।। ४२ ।।**

ப்₃ரஹ்மதத்த்வவிதா₃ம் முக்தி: பாக்ஷிகீ நியதாऽதவா ।
பாக்ஷிக்யபாந்தரதம:ப்ரப்₄ருதேர்ஜந்மகீர்தநாத் ।। 41
நாநாதே₃ஹோபபோ₄க்தவ்யமீசோபாஸ்திபலம் பு₃தா₄: ।
பு₄க்த்வாதி₄காரிபுருஷா முச்யந்தே நியதா தத: ।। 42

(அ..ம்)

பிரஹ்ம தத்வத்தையறிந்தவர்களுக்கு முக்தி என்பது பாக்ஷிகீ (இருக்கவும் இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம்) என்ருு? அல்லது தீர்மானமாக ஏற்படுவது தானு? அபாந்தரதமஸ் முதலானவருக்கு பிறப்பு சொல்லி இருப்பதால், பாக்ஷிகீ தான்.

ஈசுவரரை உபாஸித்ததின் பலனுக பல தேஹங்களில் அனுபவிக்க வேண்டியதாயுள்ளதை அனுபவித்து விட்டு, அதிகாரஸ்தானம் வஹிக்கும் புருஷர்களான ஞானிகள் முக்தியை அடைகிருர்கள். ஆகையால், தீர்மானமாக உள்ளது தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

அபாந்தரதமஸ் என்ற பெயரையுடைய வேதப்பிரவர்த்தகரான ஒரு ஆசார்யார் விஷ்ணுவின் ஆக்ஞையின் பேரில் துவாபரயுகத்தின்

கடைசியில் கிருஷ்ணத்வைபாயனர் (வேத வியாஸர்) என்ற ரூபத்துடன், வேறு சரீரத்தை எடுத்துக் கொண்டார் என்று புராணங்களில் சொல்லப்படுகிறது. அப்படியே ஸநத்குமார் என்ற தேவரிஷியும், ஸ்கந்தர் என்ற ரூபத்துடன் பார்வதீ பரமேசுவரர்களிடமிருந்து பிறந்ததாகவும் காண்கிறது. இவ்விதம் தத்வ ஞானிகளாகியிருந்தும் வஸிஷ்டர் முதலான வேறு சிலர்களும் கூட அங்கங்கு ஏதோ சாபத்தினுலோ, தன் இஷ்டப்படிக்கேயோ வெவ்வேறு சரீரங்களை எடுத்தார்களென்று சொல்லப்படுகிறது. ஆகையால் தத்வக் ஞானிகளுக்கும் முக்தி பாக்ஷிகீ தான்.

ஸித்தாந்தம் :

முன் சொல்லப்பட்ட புருஷர்கள் யாவரும் உலகத்தை சரிவர நடத்தி வைக்க வேண்டியவர்கள். முந்தின கல்பத்தில் உக்கிரமாக தபஸ் செய்து பரமேசுவரரை உபாஸித்து இந்த கல்பத்தில் பலவித தேஹத்தில் அனுபவிக்க வேண்டியதாயுள்ள அதிகார ஸ்தானத்தைப் பெற்றிருப்பவர்கள். அவர்கள் உடைய உபாஸனையின் பலன் ஆரம்பித்து விட்டபடியால் அது முடிந்தவுடன் முக்தியை அடைவார்கள். பலன் கொடுக்க ஆரம்பிக்காத கர்ம பலன்களை தத்வக்ஞானம் எரித்து விடுவதைத் தடுக்க முடியாததினுல், தத்வமறிந்தவர்களுக்கு அதற்குப்பின் ஜன்மம் ஏற்பட நிமித்தமில்லை. ஆகையால் அவர்களுக்கு முக்தி தீர்மானமாயுண்டு.

## २०.अक्षरधियाधिकरणम्

## 20.அக்ஷரதி$_4$யாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 33)

**अक्षरधियां त्ववरोधः सामान्यतद्भावाभ्यामौपसदवत्तदुक्तम् ।।३३।।**

அக்ஷரதி$_4$யாம் த்வவரோத$_4$: ஸாமாந்யதத்$_3$பா$_4$வாப்$_4$யா மௌபஸத$_3$வத்தது$_3$க்தம் 33

(அக்ஷரஞானத்திலோ சேர்த்துக்கொள்ளவேண்டியது, ஸமானமாயிருக்கும் தன்மையும் அதுவாகவேயிருக்கும் தன்மையும் இருப்பதால், ஔபஸதம்போல அது சொல்லப்பட்டது)

பிருஹதாரண்யகம் கார்க்கீ பிராஹ்மணத்தை அறிவிப்பதற்கு "अस्थूलम् अनण्वह्रस्वं" "ஸ்தூலமல்லாதது, அணுவல்லாதது, குட்டையல்லாதது" என்பது முதலிய வார்த்தைகளால் சில மறுப்புகள் மாத்திரம் காண்கின்றன. அப்படியே கடவல்லியிலும் "अशब्दम् अस्पर्शम् अरूपम्

अव्ययम्" "சப்தமற்றது, ஸ்பர்சமற்றது, ரூபமற்றது, நாசமற்றது" என்று காண்கிறது. இதே மாதிரி வேறுயிடங்களிலும் காணப்படுகின்றன. இவைகளையெல்லாம் சேர்த்துக் கொள்ள வேண்டுமா? என்பது விஷயம்.

निषेधानामसंहारः संहारो वा न संहृतिः ।
आनन्दादिवदात्मत्वं नैषां सम्भाव्यते यतः ।। ४३ ।।
श्रुतानामाहृतानां च निषेधानां समा यतः ।
आत्मलक्षणता तस्माद्दार्ढ्यायास्तूपसंहृतिः ।। ४४ ।।

நிஷேதா$_4$நாமஸம்ஹார: ஸம்ஹாரோ வா ந ஸம்ஹ்ருதி: ।
ஆநந்தா$_3$தி$_3$வதா$_3$த்மத்வம் நைஷாம் ஸம்பா$_4$வ்யதே யத: ।। 43
ச்ருதாநாமஹ்ருதாநாம் ச நிஷேதா$_4$நாம் ஸமா யத: ।
ஆத்மலக்ஷணதா தஸ்மாத்$_3$தா$_3$ர்ட்$_2$யாயாஸ்தூபஸம்ஹ்ருதி: ।। 44

(அ..ம்)

மறுப்புகளுக்கு சேர்த்தல் கிடையாதா? அல்லது உண்டா? இவைகளுக்கு ஆனந்தம் முதலியதைப் போல ரூபமாயிருக்கும் தன்மை ஸம்பவிக்காததினுல் சேர்த்தல் கிடையாது.
சொல்லப்பட்டவைகளுக்கும் சேர்க்கப்படும் மறுப்புகளுக்குமே ஆத்மாவைக் குறிப்பிடும் தன்மை ஸமமாயிருப்பதால் அதனுல் உறுதிப்படுத்துவதற்காக சேர்த்துக் கொள்வதும் இருக்கட்டும்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஆனந்தம் ஸத்யம் முதலான தர்மங்களைப் போல ஆத்மாவின் ஸ்வரூபத்தில் சேராததினுலும் மறுப்புகளைப் சேர்ப்பதினுல் எவ்வித பிரயோஜனமும் இல்லாததினுலும், அவைகளை ஒன்ருேடு சேர்ப்பது கிடையாது.

ஸித்தாந்தம் :

தன் சாகையில் சொல்லப்படும் மறுப்புகளுக்கு ஆத்மாவின் ஸ்வரூபம் என்ற தன்மையில்லையானுலும், ஆத்மாவைக் குறிக்கும் தன்மையுண்டு. அந்த தன்மை வேறு சாகைகளிலிருந்து சேர்த்துக் கொள்ளப்படும் மறுப்புகளுக்கும் உண்டு. தன் சாகையிலுள்ள மறுப்புகளினுலேயே ஆத்மா குறிக்கப்பட்டு விடுவதால் வேறு சாகைகளிலிருந்து சேர்ப்பது வீண் என்பது ஆகாது. மற்றவைகளையும் சேர்ப்பதால் நன்கு உறுதிப்படுமாதலால் அப்படியில்லையானுல், தன் சாகையிலேயே

இரண்டு மூன்று மறுப்புகளால் ஆத்மா குறிக்கப்பட்டு விடுமானதினுல் மற்ற மறுப்புகள் வீண் என்று ஏற்படும். ஆகையால் எல்லா மறுப்புகளேயும் சேர்க்க வேண்டியது தான்.

# २१.इयदधिकरणम्

# 21.இயத$_3$தி$_4$கரணம்

(ஸூத்ரம் 34)

**इयदामननात् ।।३४।।**

இயதா$_3$மநநாத் 34

( இவ்வளவு சொல்லப்பட்டிருப்பதால் )

கடவல்லியில் "ऋतंपिबन्तौ" "கர்மபலஃனஅனுபவிக்கும்இருவர்"என்றும், முண்டகத்தில் "द्वा सुपर्णा" "இரண்டு பக்ஷிகள்" என்றும் காண்கிறது. இவ்விரண்டும் ஒரே வித்தை தானு? என்பது இங்கே விஷயம்.

**पिबन्तौ द्वा सुपर्णेति द्वे विद्ये अथवैकता ।**
**भोक्तारौ भोक्त्रभोक्ताराविति विद्ये उभे इमे ।। ४५ ।।**
**पिबन्तौ भोक्त्रभोक्तारावित्युक्तं हि समन्वये ।**
**इयत्ता प्रत्यभिज्ञानाद्विद्यैका मन्त्रयोर्द्वयोः ।। ४६ ।।**

பிப$_3$ந்தௌ த்$_3$வா ஸுபர்ணேதி த்$_3$வே வித்$_3$யே அத$_2$வைகதா।
போ$_4$க்தாரௌ போ$_4$க்த்ரபோ$_4$க்தாராவிதி வித்$_3$யே உபே$_4$ இமே।। 45
பிப$_3$ந்தௌ போ$_3$க்த்ரபோ$_4$க்தாராவித்யுக்தம் ஹி ஸமந்வயே ।
இயத்தா ப்ரத்யபி$_4$ஜ்ஞாநாத்$_3$வித்$_3$யைகாமந்த்ரயோர்த்வயோ:।।46

(அ..ம்)

"அனுபவிக்கிற இருவர்" என்றும், "இரண்டு பக்ஷிகள்" என்றும் சொல்லப்படுவது இரண்டு வித்தைகளா? அல்லது ஒன்றே தானு? (ஓரிடத்தில்) "அனுபவிக்கிற இருவர்" என்றும் மற்றவிடத்தில் "அனுபவிப்பவர், அனுபவிக்காதவர் ஆக இரண்டு" என்றும் இருப்பதால் இவை இரண்டு வித்தைகள் தான்.

"அனுபவிக்கிற இருவர்" என்பது "அனுபவிப்பவர், அனுபவிக்காதவர் இருவரும் தான் என்று (முன்னமே முதல் அத்யாயத்தில்) ஸமன்வயம் சொல்லும் போது சொல்லப்பட்டுவிட்டது."இத்தனே" என்பது ஞாபகத்திற்கு வருவதால், இரண்டு மந்திரங்களிலும் ஒரே வித்தைதான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

கடவல்லியில் "ऋतं पिबन्तौ सुकृतस्य लोके" "உலகத்தில் நன்கு செய்யப்பட்ட கர்மபலனை அனுபவித்துக் கொண்டு இருவர்" என்ற மந்திரத்தில் த்விவசனத்தினால் இருவர்களுக்கும்,அனுபவிக்கும் தன்மை உண்டு என்று துவங்குகிறது. முண்டகத்தில் "द्वा सुपर्णा "என்று "இரண்டு பக்ஷிகளை" சொல்லிவிட்டு "तयोरन्यः पिप्पलं स्वाद्वत्ति"அவைகளில் ஒன்று பழத்தை ருசியாய் சாப்பிடுகிறது" என்று ஒன்றுக்கே கர்மபலனை அனுபவிக்கும் தன்மையையும் "अनश्नन्नन्योऽभिचाकशीति" "இன்னொன்று சாப்பிடாமல் நன்கு பிரகாசித்துக் கொண்டிருக்கிறது" என்று மற்றொன்றுக்கு அனுபவிக்காத தன்மையும் சொல்கிறது. ஆகையால் அறியப்பட வேண்டியதின் ஸ்வரூபத்தில் வித்யாஸமிருப்பதால், வித்தைகள் வெவ்வேறு தான்,

ஸித்தாந்தம் :

முதல் அத்யாயம் இரண்டாம் பாதம் மூன்றுவது அதிகரணத்தில் "அனுபவிக்கும் இருவர்" என்ற சப்தத்திற்கு ஜீவனையும் பிரஹ்மத்தையும் குறிப்பதால் அனுபவிக்கிறவன்,அனுபவிக்காதவர் இருவருமே தான் அர்த்தம் என்று சொல்லப் பட்டுவிட்டது. ஆகையால் வித்தையில் பேதம் இல்லை. இரண்டிடத்திலுமுள்ள "இரண்டு" என்ற எண்ணிக்கை இரண்டிடத்திலும் ஞாபகப் படுத்துகிறது. ஆகையால் வித்தை ஒன்றே தான்.

# २२.अन्तरात्वाधिकरणम्

## 22.அந்தராத்வாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 35,36)

**अन्तरा भूतग्रामवत्स्वात्मनः ।।३५।।**

அந்தரா பூ$_4$தக்$_3$ராமவத்ஸ்வாத்மன: 35

( உள்ளே பூதக்ராமம்போல, தன் ஆத்மாவிற்கு )

**अन्यथा भेदानुपपत्तिरिति चेन्नोपदेशान्तरवत् ।।३६।।**

அந்யதா$_2$ பே$_4$தா$_3$நுபபத்திரிதி சேந்நோபதே$_3$சாந்தரவத் 36

( வேறுவிதமானால் பேதம் பொருந்தாது என்றால், அப்படியல்ல, வேறு உபதேசம்போல )

பிருஹதாரண்யக உபநிஷத்தில், உஷஸ்த பிராஹ்மணத்தில் "यत्साक्षादपरोक्षाद्ब्रह्म य आत्मा सर्वान्तरः""எது ஸாக்ஷாத்தாக அபரோக்ஷமோ, எது எல்லாவற்றிற்கும் உள்ளே இருக்கும் ஆத்மாவோ" என்று காண்கிறது. அதற்கு அடுத்த கஹோள பிராஹ்மணத்திலும் இதே

வார்த்தைகள் அப்படியே இருக்கின்றன. அப்படி இருப்பதால் இரண்டும் ஒரே வித்தைதானு? அல்லது வெவ்வேரு? என்பது விஷயம்.

विद्याभेदोऽथ विद्यैक्यं स्यादुषस्तकहोलयोः ।
समानस्य द्विराम्नानाद्विद्याभेदः प्रतीयते ।। ४७ ।।
सर्वान्तरत्वमुभयोरस्ति विद्यैकता ततः ।
शङ्काविशेषनुत्यै द्विः पाठस्तत्त्वमसीतिवत् ।। ४८ ।।

வித்$_3$யாபே$_4$தோ$_3$அத வித்$_3$யைக்யம் ஸ்யாது$_3$ஷஸ்தகஹோளயோ:।
ஸமாநஸ்ய த்$_3$விராம்நாநாத்வித்$_3$யாபே$_4$த$_3$: ப்ரதீயதே ।। 47
ஸர்வாந்தரத்வமுப$_4$யோரஸ்தி வித்$_3$யைகதா தத: ।
சங்காவிசேஷநுத்யை த்$_3$வி: பாட$_2$ஸ்தத்த்வமஸீதிவத் ।। 48

(அ..ம்)

உஷஸ்த பிராஹ்மணத்திலும், கஹோள பிராஹ்மணத்திலும் காணப்படும் வித்தை வெவ்வேரு? ஒரே வித்தைதானு? ஸமானமாயிருப்பதை இரண்டு தரம் சொல்லி இருப்பதால் வித்தையின் வேறுபாடு தெரிகிறது.

இரண்டிலுமே எல்லாவற்றிற்கும் உள்ளேயிருக்கும் தன்மை சொல்லப் பட்டிருக்கிறது. ஆகையால் ஒரே வித்தைதான். இரண்டாம் தரம் சொன்னது, "அதுவே நீ" என்பது போல குறிப்பிட்ட ஸந்தேஹத்தை நிவிருத்தி செய்வதற்காக.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

அந்த இரண்டு பிராஹ்மணங்களிலும் எதையும் கூட்டாமலும் குறைக்காமலும், அப்படியே வாக்கியம் அமைந்திருப்பதால், திரும்பச் சொல்லுதல் என்ற தோஷம் ஏற்படாமலிருப்பதற்காக, வித்தைகள் வெவ்வேறு என்று எடுத்துக் கொள்வதே உசிதம்.

ஸித்தாந்தம் :

இரண்டு பிராஹ்மணங்களிலுமே "எல்லாவற்றிற்கும் உள்ளேயிருக்கும் தன்மை" சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியிருத்தல் ஒரு வஸ்துவில் தான் ஸம்பவிக்கும். இரண்டு வஸ்துகள் என்ருல் அவைகளில் ஒன்று அவசியம் வெளியிலிருப்பதாகத் தான் இருக்க முடியும். ஆகையால் எல்லாவற்றிற்கும் உள்ளேயிருப்பது என்று அறியத்தக்கது ஒன்றேயானதினுல், வித்தையும் ஒன்று தான். மேலும், திரும்பச் சொல்வது தோஷமாகாது. வேறு சாகையில் குறிப்பிட்ட ஸந்தேஹங்களை நிவிருத்தி செய்வதற்காக "तत् त्वं असि" "அதுவே நீ"

என்று ஒன்பது தடவை எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. அது போலவே இங்கேயும் பொருந்தும் உஷஸ்த பிரஹ்மணத்தில் தேஹம் முதலியதே ஆத்மாவா என்ற ஸந்தேஹம் நிவிருத்தி செய்யப்பட்டது. கஹோளா பிராஹ்மணத்தில் தேஹம் முதலியதற்று வேருயுள்ள ஆத்மாவிற்கு பிரஹ்மமாயிருக்கும் தன்மை சொல்லப்பட்டிருக்கிறது. இது அங்குள்ள பின் வாக்கியத்திஞல் நன்கு தெரிகிறது. ஆகையால் ஒரே வித்தை தான்.

## २३.व्यतिहाराधिकरणम्

## 23.வ்யதிஹாராதி$_4$கரணம்

(ஸூத்ரம் 37)

**व्यतिहारो विशिंषन्ति हीतरवत् ।।३७।।**

வ்யதிஹாரோ விசிம்ஷந்தி ஹீதரவத் 37

( மாற்றிச் சொல்வது, வித்யாஸப்படுத்துகிறார்கள் அல்லவா, மற்றதைப்போல )

ஐதரேயத்தில் "**तद्योऽहं सोऽसौ, योऽसौ सोऽहम्** ""அங்கு நான் யாரோ அவர் இவர், எவர் இவரோ அவர் நான்" அதாவது, எந்த இவர் தேஹம், இந்திரியம் இவைகளுக்கு ஸாக்ஷியாக ஜீவாத்மாவாக இருக்கிருரோ, அவரே தான் ஆதித்ய மண்டலத்தில் உள்ள பரமாத்மா. ஆதித்ய மண்டலத்தில் உள்ளவர் எவரோ, அவரே தான் என் தேஹம் முதலியதில் இருப்பவர், என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் மாற்றிச் சொன்னதின் பிரயோஜனம் இங்கே சொல்லப்படுகிறது.

**व्यतिहारे स्वात्मरव्योरेकधा धीरुत द्विधा ।**
**वस्त्वैक्यादेकधैक्यस्य दार्ढ्याय व्यतिहारगीः ।। ४९ ।।**
**ऐक्येऽपि व्यतिहारोया धीर्द्वेधेशस्य जीवता ।**
**युक्तोपास्त्यै वाचनिकी मूर्तिवद्दार्ढ्यमार्थिकम् ।। ५० ।।**

வ்யதிஹாரே ஸ்வாத்மரவ்யோரேகதா$_4$ தீ$_4$ருத த்$_3$விதா$_4$ ।
வஸ்த்வைக்யாதே$_3$கதை$_4$க்யஸ்ய தா$_3$ட்ர்யாய வ்யதிஹாரகீ$_3$:।।49
ஏக்யேஅபி வ்யதிஹாரோயா தீ$_4$ர்த்$_3$வேதே$_4$சஸ்ய ஜீ$_3$வதா ।
யுக்தோபாஸ்த்யை வாசநிகீ மூர்திவத்$_3$தா$_3$ட்ர்யமார்தி$_2$கம் ।। 50

(அ..ம்)

தன் ஆத்மாவையும் ஆதித்யனையும் மாற்றிச் சொல்லுமிடத்தில் பாவனை ஒரே விதமா? அல்லது இரண்டு விதமா? வஸ்து

ஒன்ருகவேயிருப்பதால் ஒரே பாவனே தான். ஒன்ருயிருக்கும் தன்மை உறுதிப்படுவதற்காக மாற்றிச் சொல்லுதல்.
(வஸ்து) ஒன்ருகவிருந்தாலும், மாற்றிச் சொல்லியிருப்பதால், பாவனே இரண்டு விதமாகவும் தான். ஈசுவரருக்கு ஜீவத்தன்மை என்பது உருவத்தைச் சொல்வது போல, உபாஸனேக்காக விதிக்கப்படுவது உசிதமே. உறுதிப்படுதல் என்பது தானு கவே கிடைக்கும்.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
தன் சரீரத்தையும், ஸுர்ய மண்டலத்தையும் ஒன்றுக்கொன்று மாற்றிச் சொல்லியிருந்த போதிலும், ஜீவனும், பிரஹ்மமும் ஒன்று என்ற விஷயம் ஒன்ருகவேயிருப்பதால், ஒரே பாவனே தான் செய்ய வேண்டும். மாற்றிச் சொன்னது வீணும் ஆகாது. ஒரே விஷயமாயுள்ளதிற்கு உறுதிப்படுவது பொருந்துமாதலால்.

ஸித்தாந்தம் :
இது தத்வத்தை போதிக்க வந்த பிரகரணமேயில்லே, அப்படியிருந்தால் தான் உறுதிப்படுதல் அபேக்ஷிக்கப்படும். வாஸ்தவத்தில் இது ஸகுண பிரஹ்மத்தின் உபாஸனேயைச் சொல்லும் பிரகரணம். உபாஸனேயோ எப்படி சொல்லப் படுகிறதோ, அப்படியே தான் அனுஷ்டிக்க வேண்டும். ஆகையால் மாற்றி சொல்லியிருப்பதால் இரண்டு வித பாவனேகளும் செய்யப்பட வேண்டியவை தான். அப்படியாளுல் ஜீவனே பிரஹ்மத்தோடு ஒன்ருக்கிச் சொன்ளுல் அவனே உயர்த்திச் சொன்னதாக ஆகும் என்பதிருக்கட்டும், பிரஹ்மத்தை ஜீவனேடு ஒன்ருக்கிச் சொன்ளுல் மிகவும் கீழே இறங்குவதாக ஆகாதா? என்ருல், அது தோஷமில்லே. உபாஸகனுடைய சித்தம் நிலேத்திருப்பதற்காக சரீரம் முதலியதற்ற ஈசுவரருக்கு நான்குகைகள், எட்டுகைகள் என்பது முதலான மூர்த்தியுள்ளதாக உபதேசிப்பதில் எப்படி அவரை இறக்குவதாகாதோ, அப்படியே சாஸ்திரத்தில் விதித்தபடி ஈசுவரருக்கு ஜீவத்தன்மையைக் கொடுத்து உபாஸிப்பதில் என்ன கெடுதல்?

உபாஸனேக்காக ஒன்றுக்கொன்று மாற்றிச் சொல்வதை அனுஷ்டித்து வருவதிலிருந்தே ஜீவனுக்கும் பிரஹ்மத்திற்குமுள்ள ஒன்ருயிருக்கும் தன்மையின் ஞானம் உறுதிப்படுமேயாளுல், அப்பொழுது எங்கள் உத்தேசமே ஸித்தித்து விடுகிறது.ஆகையால் மாற்றி சொல்வதிலிருந்து பாவனே இரண்டு விதமாகவும் தான் செய்ய வேண்டும்.

# २४.सत्याद्यधिकरणम्
# 24.ஸத்த்யாத்₃யதி₄கரணம்
## (ஸூத்ரம் 38)
## सैव हि सत्त्यादयः ।।३८।।
## ஸைவ ஹி ஸத்த்யாத₃ய: 38
## ( அதுவே தான் ஸத்யம் முதலியவைகள் )

பிருஹதாரண்யகத்தில்"स यो हैतन्महद्यक्षं प्रथमजं वेद सत्यं ब्रह्मेति, जयतीमांल्लोकान्" "எந்த இவர் இந்தப்பெரிய யக்ஷமானவரை, முதலில் பிறந்தவரை அறிகிறாரோ, அவர் ஸத்யமான பிரஹ்மம் என்று, அவர் இந்த உலகங்களை ஜயிக்கிறார்" என்று சொல்லப் பட்டிருக்கிறது. யக்ஷம் என்பது பூஜிக்கத்தகுந்தவர் என்று அர்த்தம். முதலில் பிறந்தவர் என்பது ஹிரண்யகர்ப்ப ரூபமாக முதலில் உண்டானவர் என்று அர்த்தம். இந்த வாக்கியத்தினால் ஸத்ய வித்தையைச் சொல்லிவிட்டு, பின்னால் "तद्यत्तत्सत्यम् । असौ स आदित्यो य एष एतस्मिन्मण्डले पुरुषो यश्चायं दक्षिणेऽक्षन्पुरुषः"அது எதுவோ அது ஸத்யம், எந்த இந்த புருஷன் இந்த மண்டலத்தில் இருக்கிறாரோ,அந்த ஆதித்யன் அவரே வலது கண்ணில் எந்த இந்த புருஷனோ (அவனும் அவரே)" என்று காண்கிறது. இந்த இரண்டு வாக்கியங்களிலும் கண்ட ஸத்யவித்தை ஒன்று தானா? என்பது விஷயம்.

द्वे सत्यविद्ये एका वा यक्षरव्यादिवाक्ययोः ।
फलभेदादुभे लोकजयात्पापहतेः पृथक् ।। ५१ ।।
प्रकृताकर्षणादेका पापाघातोऽङ्गधीफलम् ।
अर्थवादोऽथवा मुख्यो युक्तोऽधिकृतिकल्पकः ।। ५२ ।।

த்₃வே ஸத்யவித்₃யே ஏகா வா யக்ஷரவ்யாதி₃வாக்யயோ: ।
ப₂லபே₄தா₃து₃பே₄ லோகஜ₃யாத்பாபஹதே: ப்ருத₂க் ।। 51
ப்ரக்ருதாகர்ஷணாதே₃கா பாபாகா₄தோஅங்க₃தீ₄ப₂லம் ।
அர்த₂வாதோ₃அத₂வா முக்யோ யுக்தோஅதி₄க்ருதிகல்பக: ।।52

(அ..ம்)

யக்ஷம் என்ற வாக்கியத்திலும், ஆதித்யன் முதலிய வாக்கியத்திலும், காணுவது இரண்டு ஸத்யவித்தைகளா? அல்லது ஒன்று தானா? பலனில் வேற்றுமை இருப்பதால் தனித்தனியாக(அதாவது ஒன்றுக்கு

உலகங்களை ஜயிப்பது என்பதாலும் (மற்றொன்றுக்கு) பாபம் போவதென்பதாலும், இரண்டு வித்தைகள் தான்.

முன் சொன்னதையே இழுப்பதால் ஒன்று தான். பாபம் போவது அங்கத்தின் உபாஸனையின் பலன் என்று அர்த்தவாதம். அல்லது அதிகாரம் பெற்றவனைக் கல்பிப்பது என்பதே முக்கியமென்று நியாயம். (வி..ம்)

பூர்வபக்ஷம் :

யக்ஷ வாக்கியத்தில் உலகத்தை ஜயிப்பது பலனாக சொல்லப்பட்டிருக்கிறது.ஆதித்ய வாக்கியத்திலோ"**हन्ति पाप्मानं जहाति च**" "பாபத்தை நாசம் செய்கிறான், விட்டும் விடுகிறான்" என்று வேறுவிதமான பலன் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் வித்தைகளுக்குள் பேதமுண்டு.

ஸித்தாந்தம் :

இந்த ஸத்யவித்தை என்பது ஒன்று தான். "எது அதுவோ அது ஸத்யம்" என்று முன் சொன்ன ஸத்யமான பிரஹ்மத்தையே இழுத்துச் சொல்லி "அவர் அந்த ஆதித்யன்" என்று ஆதித்யரூபமுள்ளதாய் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. பாபம் நசிப்பது உபாஸனையின் பலன் என்ற முறையில் அர்த்தவாதமே ஆகுமானதினால், இங்கு பலனில் வேற்றுமையும் இல்லை. "அங்கங்களில் சொல்லப்படும் பலன் அர்த்தவாதம்" என்ற நியாயப்படி அதில் தாத்பர்யம் கிடையாது. அல்லது இங்கேயுள்ள உபாஸனை செய்ய வேண்டிய அதிகாரி யாரென்று சொல்லப்படவில்லை. ஆகையால் சொல்லப்படும் பலன்களையே வைத்துக் கொண்டு அவைகளில் ஆசையுள்ளவன் அதிகாரி என்று கல்பிக்க வேண்டி வருவதால் "பாபம் நசிப்பது, உலகங்களை ஜயிப்பது, இவைகளை விரும்புகிறவன், உபாஸிக்க வேண்டும்" என்று சொல்ல முடியுமானதினால், குறிப்பிட்ட பலன்களே தாத்பர்யமாகலாம். ஆகையால் இந்த ஸத்ய வித்தை என்பது ஒன்று தான்.

## २५.कामाद्यधिकरणम्

## 25.காமாத்₃யதி₄கரணம்

(ஸூத்ரம் 39)

**कामादीतरत्र तत्र चाऽऽयतनादिभ्यः ।।३९।।**

காமாதீ₃தரத்ர தத்ர சாஆயதநாதி₃ப்₄ய: 39

( காமம் முதலியது மற்றவிடத்தில், அங்கேயும் ஆயதனம் முதலானவைகளால் )

சாந்தோக்யத்தில் "दहरोऽस्मिन्नन्तराकाश:" "இதற்கு உள்ளே தஹரமான (சிறியதான) ஆகாசம்" என்று ஹ்ருதயத்திற்குள்ளே இருப்பதாகச் சொல்லப்படும் தஹராகாசத்திற்கு ஸத்யகாமமாயிருத்தல் முதலான குணங்கள் சொல்லப்பட்டு இருக்கின்றன. பிருஹதாரண்யகத்திலோ "य एषोऽन्तर्हृदय आकाश:" "ஹ்ருதயத்திற்கு உள்ளே எந்த இந்த ஆகாசமோ" என்று சொல்லப்படும் ஹ்ருதயாகாசத்திற்கு வசித்வம் (ஆளும் தன்மை) முதலான குணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்விரண்டு வித குணங்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டுமா? என்பது இங்கே விஷயம்.

असंहृतिः संहृतिर्वा व्योम्नोर्दहरहार्दयोः ।
उपास्यज्ञेयभेदेन तद्गुणानामसंहृतिः ।। ५३ ।।
उपास्त्यै क्वचिदन्यत्र स्तुतये चास्तु संहृतिः ।
दहराकाश आत्मैव हृदाकाशोऽपि नेतरः ।। ५४ ।।

அஸம்ஹ்ருதி: ஸம்ஹ்ருதிர்வா வ்யோம்நோர்த₃ஹரஹார்த₃யோ:।
உபாஸ்யஜ்ஞேயபே₄தே₃ந தத்₃கு₄ணாநாமஸம்ஹ்ருதி: ।। 53
உபாஸ்த்யை க்வசித₃ந்யத்ர ஸ்துதயே சாஸ்து ஸம்ஹ்ருதி: ।
த₃ஹராகாச ஆத்மைவ ஹ்ருதா₃காசோஅபி நேதர: ।। 54

(அ..ம்)

தஹராகாசம், ஹ்ருதயாகாசம் இவைகள் விஷயத்தில் சேர்ப்பது கிடையாதா? அல்லது சேர்ப்பது உண்டா? உபாஸிக்க வேண்டியது, அறிய வேண்டியது என்ற பேதம் இருப்பதால், அவைகளின் குணங்களுக்கு சேர்த்தல் கிடையாது.

ஓரிடத்தில் உபாஸனைக்காகவும், மற்றவிடத்தில் ஸ்துதிக்காகவும் சேர்த்தல் இருக்கலாம். தஹராகாசம் என்பது ஆத்மாவே தான். ஹ்ருதயாகாசம் என்பதும் வேறு இல்லை.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

தஹராகாசம் உபாஸிக்கப்பட வேண்டியதாயிருக்கிறது, ஹ்ருதய ஆகாசமோ அறிய வேண்டியதாயிருக்கிறது. ஆகையால் வெவ்வேறு வித்தைகள். ஆகையால் ஒன்றுக்கொன்று குணங்களைச் சேர்ப்பது உசிதமாகாது.

ஸித்தாந்தம் :

வசித்வம் முதலான குணங்களை தஹராகாசத்தில் சேர்த்துக் கொண்டால் உபாஸனைக்கு உபயோகப்படும். அப்படியே ஸத்யகாமத்வம் முதலான குணங்களை ஹ்ருதயாகாசத்தில் சேர்த்துக் கொண்டால், ஸ்துதிக்கு உபயோகப்படுகிறது. உபயோகமுள்ளதா யிருந்தாலும் வித்தைகள் வெவ்வேறு தானேயென்றால் வித்தை வேறுபட்டாலும் கூட இரண்டிடத்திலும் ஆகாசமென்ற சப்தத்தினால் சொல்லப்படும் ஆத்மா ஒன்றாகவேயிருக்கிறது. தஹராகாசம் ஆத்மாவென்பது தஹராதிகரணத்தில் (I3-5) வர்ணிக்கப்பட்டது. ஹ்ருதயாகாசம் ஆத்மா யென்பது " महानज आत्मा ""பெரியவர், பிறப்பு அற்றவர் ஆத்மா" என்று ஆரம்பத்திலேயே கண்டிருக்கிறது. ஆகையால் இரண்டு இடங்களிலும் சேர்த்துக் கொள்ளுதல் உண்டு.

# २६.आदराधिकरणम्

## 26.ஆத₃ராதி₄கரணம்

(ஸூத்ரம் 40,41)

**आदरादलोपः ॥४०॥**

ஆத₃ராத₃லோப: 40

( ஆதரவு இருப்பதால் விடுவதில்லை )

**उपस्थितेऽतस्तद्वचनात् ॥४१॥**

உபஸ்தி₂தேஅதஸ்தத்₃வசநாத் 41

( கிடைக்கும்போது அதிலிருந்து, அது சொல்லியிருப்பதால் )

சாந்தோக்யத்தில் வைசுவானர வித்தை ஸம்பந்தமான பின் வாக்கியத்தில் "यां प्रथमामाहुतिं जुहुयात्, तां जुहुयात्प्राणाय स्वाहेति" "எதை முதல் ஆஹூதியாக ஹோமம் செய்கிறாரோ, அதை பிராணாய ஸ்வாஹா என்று அஹூதி செய்ய வேண்டும்" என்று கண்டிருக்கிறது. போஜனம் செய்யாத போதும் இது உண்டா? என்பது இங்கு விஷயம்.

**न लुप्यते लुप्यते वा प्राणाहुतिरभोजने ।**
**न लुप्यतेऽतिथेः पूर्वं भुञ्जीतेत्यादरोक्तितः ॥ ५५ ॥**
**भुज्यर्थान्नोपजीवित्वात्तल्लोपे लोप इष्यते ।**
**भुक्तिपक्षे पूर्वभुक्तावादरोऽप्युपपद्यते ॥ ५६ ॥**

ந லுப்யதே லுப்யதே வா ப்ராணாஹூதிரபோ₄ஜநே ।
ந லுப்யதேஅதிதே₂: பூர்வம் பு₄ஞ்ஜீதேத்யாத₃ரோக்தித: ॥ 55
பு₄ஜ்₃யர்தா₃ந்நோபஜீ₃வித்வாத்தல்லோபே லோப இஷ்யதே ।
பு₄க்திபக்ஷே பூர்வபு₄க்தாவாத₃ரோஅப்யுபபத்₃யதே ॥ 56

(அ..ம்)

போஜனமில்லாத போது பிராணனுக்கு ஆஹுதி விட்டுப் போகாதா? அல்லது விட்டுப்போகுமா? அதிதிக்கு முன்னுலேயே சாப்பிட வேண்டுமென்று ஆதரவு சொல்லியிருப்பதால் விட்டுப் போகாது. சாப்பிடுவதற்காக ஏற்பட்ட அன்னத்தைக் கொண்டு இந்த விதியிலிருந்து வருவதால், அதற்கு (சாப்பிடுவதற்கு) இல்லாமை வரும் போது இதற்கும் இல்லாமை தான். சாப்பாடு என்பது இருக்கும் பக்ஷத்தில் (அதிதிக்கு) முன் சாப்பிடுவதில் ஆதரவு என்பதும் பொருந்தும்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஏதேனும் காரணத்தினுல் போஜனமில்லாமல் போனுலும் கூட உபாஸகனுக்கு பிராணுஹுதி விட்டுப்போகாது."पूर्वोऽतिथिभ्योऽश्नीयात्" "அதிதிகளுக்கும் முன்னதாகவே சாப்பிடவும்" என்று உபாஸகனுய் உள்ள யஜமானனுக்கு போஜனத்தை விதிக்கிற சுருதி பிராணுஹுதியில் விசேஷ ஆதரவைக் காட்டுகிறது.அந்த ஆதரவை நன்கு வெளிப்படுத்துவதற்காகவே "यथा ह वै स्वयमहुत्वाऽग्निहोत्रं परस्य जुहुयात्, तादृक्तत्स्यात्""தான் அக்னிஹோத்ர ஹோமம் செய்யாமல் இன்னொருவருக்கு ஹோமம் செய்தால் எப்படியோ, அவ்விதமே தான் அது ஆகும்" என்று தனக்கு முன் அதிதிகளுக்கு போஜனம் செய்விப்பதை நிந்திக்கிறது. இவ்வளவு ஆதரவு காட்டி இருப்பதால், பிராணுஹுதிக்கு விடுதல் கிடையாது.

ஸித்தாந்தம் :

"तद्यद्भक्तं प्रथममागच्छेत्तद्धोमीयम् " "எந்த அந்த அன்னம் முதலில் வருகிறதோ, அது ஹோமத்திற்கு உரியது" என்று போஜனத்திற்காக ஏற்பட்ட அன்னத்திற்கு ஹோம திரவியமாய் இருக்கும் தன்மை சொல்லப்படுவதால், போஜனம் இல்லையானுல், திரவியமில்லை யானதினுல் ஆஹுதியும் கிடையாது தான். ஆதரவு காட்டினது போஜனம் செய்யும் பக்ஷத்தில் முதலில் சாப்பிடும்படி விதிப்பதற்காக ஏற்பட்டது தான். ஆகையால் போஜனமில்லையானுல் பிராணுஹுதியும் கிடையாது.

# २७.तन्निर्धारणाधिकरणम्

## 27.தந்நிர்தா₄ரணாதி₄கரணம்

(ஸூத்ரம் 42)

**तन्निर्धारणानियमस्तद्दृष्टेः पृथग्घ्यप्रतिबन्धः फलम् ।।४२।।**

தந்நிர்தா$_4$ரணாநியமஸ்தத்$_3$ருஷ்டே: ப்ருத$_2$க்$_3$க்$_4$யப்ரதிப$_3$ந்த$_4$: ப$_2$லம் 42

( அதன் நிர்தாரணத்தில் நியமம் இல்லை அவ்விதம் காண்பதால் தனியாக தடையில்லாமை பலனல்லவா. )

கர்மாக்களின் அங்கமாயிருப்பதில் உபாஸனை செய்யும்படி சொல்லும் வாக்கியங்கள், கர்மாக்களை அனுஷ்டிக்கிற எல்லோராலேயும் செய்ய வேண்டியது தானு? என்பது விஷயம்.

**नित्या अङ्गावबद्धाः स्युः कर्मस्वनियता उत ।**
**पर्णवत्क्रतुसंबन्धो वाक्यान्नित्यास्ततो मताः ।। ५७ ।।**
**पृथक्फलश्रुतेर्नैता नित्या गोदोहनादिवत् ।**
**उभौ कुरुत इत्युक्तं कर्मोपास्यनुपासिनोः ।। ५८ ।।**

நித்யா அங்கா$_3$வப$_3$த்$_3$தா$_4$ ஸ்யு: கர்மஸ்வநியதா உத ।
பர்ணவத்கரதுஸம்ப$_3$ந்தோ$_4$ வாக்யாந்நித்யாஸ்ததோ மதா: ।। 57
ப்ருத$_2$க்ப$_2$லச்ருதேர்நைதா நித்யா கோ$_3$தோ$_3$ஹநாதி$_3$வத் ।
உபௌ$_4$ குருத இத்யுக்தம் கர்மோபாஸ்யனுபாஸிநோ: ।। 58

(அ..ம்)

கர்மாக்களில் அங்கங்களோடு ஸம்பந்தப்பட்ட உபாஸனைகள் நித்யம்களா (அவசியம் அனுஷ்டிக்க வேண்டியவைகளா)? அல்லது, அவசியமில்லையா? வாக்கியத்திலிருந்து பர்ணம் (இலை) போல யாகத்தின் ஸம்பந்தம் தெரிகிறது. ஆகையால் நித்யமாக கருதப் படுகின்றன.

தனியாக பலன் சொல்லப்படுவதால், கோ தோஹனம் போல இவை நித்யமல்ல, உபாஸிப்பவன், உபாஸிக்காதவன் இருவர் விஷயமாக "இருவரும் கர்மாவை செய்கிறுர்கள்" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

கர்மாக்களின் அங்கமாயுள்ள உத்கீதம் முதலியவைகளில் பிரதிமைகளைப் போல பிரதீகமாகவிருப்பவைகளில், விதிக்கப்படுகிற தேவதா உபாஸனைகள் "அங்காவ பத்தம்" எனப்படும். கர்மாக்களை அனுஷ்டிக்கும் போது அந்த கர்மாக்களின் அங்கங்கள் போலவே, இந்த உபாஸனைகளும் அனுஷ்டிக்க வேண்டியவைதான். கர்மாக்களைச் சொல்லும் பிரகரணத்தில் இவைகளை ஆரம்பித்துச்

சொல்லவில்லையானாலும் இங்குள்ள வாக்கியத்திலிருந்து கர்மாக்களின் ஸம்பந்தம் தெரிகிறது. ஜுஹு என்ற ஹோம பாத்திரம் இலையால் செய்யப்பட்டிருக்க வேண்டுமென்று தனியாக ஆரம்பித்துச் சொல்லாமல் போனாலும் "यस्य पर्णमयी जुहूर्भवति" "எவருக்கு ஜுஹு இலையால் செய்யப்பட்டதாய் இருக்கிறதோ" என்ற வாக்கியத்திலிருந்து யாகத்திலிருந்து விலகாத ஜுஹு மூலமாக இலைக்கு யாகத்தின் ஸம்பந்தமும் ஏற்பட்டுவிடுகிறது. அப்படியே "य एवं विद्वानुद्गायाते " "எவர் இவ்விதம் அறிந்தவரோ, அவர் உத்கானம் செய்கிறார் " य एवं विद्वान्साम गायति" "எவர் இவ்விதம் அறிந்தவரோ, அவர் ஸாமத்தைப் பாடுகிறார்" என்பது முதலிய வாக்கியங்களிலிருந்து யாகத்திலிருந்து விலகாமல் ஸம்பந்தித்து இருக்கிற உத்கீதம், ஸாமம் இவை மூலமாக அந்த உபாஸனைகளுக்கும் யாக ஸம்பந்தம் தெரிகிறது. ஆகையால் கர்மாக்களில் இந்த உபாஸனைகள் அவசியம் செய்ய வேண்டியவை தான்.

ஸித்தாந்தம் :

கோதோஹனம் முதலியது எப்படி நியதமில்லையோ, அப்படியே இந்த உபாஸனைகளும் "चमसेनाप: प्रणयेत्,गोदोहनेन पशुकामस्य" சமஸத்தினால் ஜலத்தைக்கொண்டு வரவும், பசுக்களை விரும்புகிறவனுக்கு கோ தோஹனத்தினால் (பால் கறக்கும் பாத்திரத்தினால்) என்றுமிடத்தில் ஜலத்தைக் கொண்டு வருவதையொட்டி கோ தோஹனம் விதிக்கப்பட்ட போதிலும் அது பசுக்களை விரும்புகிறவனுக்கே தவிர ஜலத்தைக் கொண்டு வருவது போல, யாகத்துடன் அவசியம் ஸம்பந்தப் பட்டதல்ல. இவ்விதமே கர்மாக்களுடைய அங்கங்களையொட்டி விதிக்கப்படும் உபாஸனைகள் அந்த கர்மாக்களைச் சேர்ந்தவையல்ல, உபாஸிக்கிறவர்களையே சேர்ந்தவை கர்மாவிற்குள்ள பலனைவிட இவைகளுக்கு வேறு பலன்கள் சொல்லப்படுவதால், ஐந்து வித ஸாமத்தில் மழை தேவதையை உபாஸிக்கிறவனுக்கு "वर्षति हास्मै " இவனை உத்தேசித்து அவசியம் மழை பெய்யும் என்று இவன் இஷ்டப்படி மழை என்பது கர்மாவின் பலனை விட வேறாக உபாஸனையின் பலன் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் உபாஸனை யாகத்தில் ஒட்டினதில்லை.மேலும் அங்காவபத்தமான உபாஸனையைச் சொல்லும் பின் வாக்கியத்தில்" तेनोभौ कुरुतो यश्चैतदेवं वेद यश्च न वेद" ஆகையால் கர்மாக்களில் உபாஸனைகள் நியதமில்லை. எவர் இதை இவ்விதம் அறிகிறாரோ, எவர் அறியவில்லையோ இருவருமே அதனால்

செய்கிறுர்கள் என்று உபாஸகன், உபாஸகனல்லாதவன் இருவருக்கும் ஆதாரமாயுள்ள அந்த அங்கத்திஞல் கர்மாவை அனுஷ்டிப்பது வெகு தெளிவாய் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் கர்மாக்களில் உபாஸனைகள் நியதமில்லை.

## २८.प्रदानाधिकरणम्

## 28.ப்ரதா₃நாதி₄கரணம்

(ஸூத்ரம் 43)

प्रदानवदेव तदुक्तम् ।।४३।।

ப்ரதா₃நவதே₃வ தது₃க்தம் 43

( பிரதானம்போலவே, அது சொல்லப்பட்டிருக்கிறது )

ஸம்வர்க்க வித்தையில் அதிதைவமாக வாயுவும், அத்யாத்மமாக பிராணனும் உபாஸிக்கப்பட வேண்டியதாக சொல்லியிருக்கிறது. இது இரண்டு உபாஸனையா? அல்லது ஒன்று தாஞ? என்பது விஷயம்.

एकीकृत्य पृथग्वा स्याद्वायुप्राणानुचिन्तनम् ।
तत्त्वाभेदात्तयोरेकीकरणेनानुचिन्तनम् ।। ५९ ।।
अवस्थाभेदतोऽध्यात्ममधिदैवं पृथक्श्रुतेः ।
प्रयोगभेदो राजादिगुणकेन्द्रप्रदानवत् ।। ६० ।।

ஏகீக்ருத்ய ப்ருத₂க்₃வா ஸ்யாத்₃வாயுப்ராணானுசிந்தநம் ।
தத்த்வாபே₄தா₃த்தயோரேகீகரணேநானுசிந்தநம் ।। 59
அவஸ்தா₂பே₄த₃தோஅத்₄யாத்மமதி₄தை₃வம் ப்ருத₂க்ச்ருதே: ।
ப்ரயோக₃பே₄தோ₃ ராஜாதி₃கு₃ணகேந்த்₃ரப்ரதா₃நவத் ।। 60

(அ..ம்)

வாயுவையும், பிராணனையும் அனுசிந்தனம் செய்வது ஒன்ருகச் செய்தா? அல்லது தனித்தனியாகவா? (இரண்டிற்கும்) தத்வத்தில் பேதமில்லாததிஞல் இரண்டையும் ஒன்ருகச் செய்து அனுசிந்தனம் (என்பது தான் நியாயம்).

அவஸ்தையின் பேதத்தைக் கொண்டு அத்யாத்மம், அதிதைவம் என்று தனித்தனியாக சொல்லப்பட்டிருப்பதால், ராஜன் முதலான குணங்களுடன் கூட இந்திரனுக்கு (தனித்தனியே) கொடுப்பது போல பிரயோகத்தில் வேறுபாடு தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிராணன் என்பது வாயுவின் கார்யமேயானதினால் கார்யத்திற்கும், காரணத்திற்கும் தத்வத்தில் வேறுபாடு இல்லாததினால் இரண்டையும் ஒன்றாகச் செய்து தான் சிந்தனம் செய்ய வேண்டும்.

ஸித்தாந்தம் :

தத்வத்தில் பேதமில்லையானாலும் கார்யமாயிருத்தல், காரணமாக இருத்தல் என்ற அவஸ்தை (நிலை)யில் பேதம் உண்டு. அதனாலேயே "इत्यधिदैवम् , अथाध्यात्मम्" "இவ்விதம் அதிதைவம் இனி அத்யாத்மம்" என்று பிரித்து தனியாக அனுசிந்தனம் செய்ய வேண்டியதற்காகவே சுருதி பிரித்துச் சொல்கிறது. ஆகையால் தனித் தனியே தான். "इन्द्रायराज्ञे पुरोडाशमेकादशकपालम्, इन्द्रायाधिराजाय, इन्द्राय स्वराज्ञे" "ராஜனாக இருக்கும் இந்திரனுக்கு பதினோரு கபால புரோடாசம், அதி ராஜனாகவிருக்கும் இந்திரனுக்கு, ஸ்வராஜனாகவிருக்கும் இந்திரனுக்கு" என்று இந்திரன் ஒருவனாயிருந்த போதிலும் ராஜன் முதலான குணங்களின் பேதத்தினால் எப்படி தனித்தனியாக புரோடாசம் கொடுக்கப்படுகிறதோ, அப்படியே இங்கேயும் தத்வமொன்றே யானாலும், ஸ்தானவித்யாஸத்தினால் தனித்தனியாகத்தான் சிந்தனம் இருக்க வேண்டும்.

## २९.लिङ्गभूयस्त्वाधिकरणम्

## 29.லிங்க₃பூ₄யஸ்த்வாதி₄கரணம்

(ஸூத்ரம் 44 - 52)

**लिङ्गभूयस्त्वात्तद्धि बलीयस्तदपि ।।४४।।**

லிங்க₃பூ₄யஸ்த்வாத்தத்₃தி₄ ப₃லீயஸ்தத₃பி 44

(லிங்கம் அதிகமாயிருப்பதால், அதுதானே அதிக பலமுள்ளது, அதுவும்)

**पूर्वविकल्पः प्रकरणात् स्यात् क्रिया मानसवत् ।।४५।।**

பூர்வவிகல்ப: ப்ரகரணாத் ஸ்யாத் க்ரியா மானஸவத் 45

(முந்தினதின் விகல்பம் பிரகரணத்தினால்,க்ரியை ஆகலாம்-மானஸம் போல)

**अतिदेशाच्च ।।४६।।**

அதிதே₃சாச்ச 46

(அதிதேசத்தினாலும்)

**विद्यैव तु निर्धारणात् ।।४७।।**

வித்₃யைவ து நிர்தா₄ரணாத் 47

(ஆனால், வித்யைதான், நிர்தாரணம் செய்யப்படுவதால்)

**दर्शनाच्च ॥४८॥**

தீ$_3$ர்ஶநாச்ச 48

(காண்பதானாலும்)

**श्रुत्यादिबलीयस्त्वाच्च न बाधः ॥४९॥**

*ச்ருத்யாதி$_3$ப$_3$லீயஸ்த்வாச்ச* ந பா$_3$த$_4$: 49

(சுருதி முதலியது அதிக பலமுள்ளவையானதினாலும் பாதமில்லை)

***अनुबन्धादिभ्यः प्रज्ञान्तरपृथक्त्ववद्दृष्टश्च तदुक्तम् ॥५०॥***

*அநுப$_3$ந்தா$_4$திப்$_4$ய*: ப்ரஜ்ஞாந்தரப்ருத$_2$க்தவவத்$_3$த்$_3$ருஷ்டச்ச *தது$_3$க்தம் 50*

(*அனுபந்தம் முதலியவைகளாலும்*, வேறு உபாஸனையின் தனித் தன்மைபோல, பார்க்கவும் படுகிறது, அது சொல்லியிருக்கிறது)

**न सामान्यादप्युपलब्धेर्मृत्युवन्नहि लोकापत्तिः ॥५१॥**

ந ஸாமாந்யாத$_3$ப்யுபலப்தே$_4$ர்ம்ருத்யுவந்நஹி லோகாபத்தி: 51

(ஸமானத்தன்மையிலிருந்தும் இல்லை, காணப்படுவதால் மிருத்யுவைப்போல, லோகமாக ஆவது இல்லையே)

**परेण च शब्दस्य ताद्विध्यं भूयस्त्वात्त्वनुबन्धः ॥५२॥**

பரேண ச சப்த$_3$ஸ்ய தாத்$_3$வித்$_4$யம் பூ$_4$யஸ்த்வாத்த்வனுப$_3$ந்த: 52

(மேலுள்ளதாலும் சப்தத்திற்கு அவ்விதமிருப்பதால், அதிகமாயிருப்பதாலோ அனுபந்தம்)

அக்னிரஹஸ்யத்தில் ஒரு பிராஹ்மணத்தில் "**षट्त्रिंशतं सहस्राणि अपश्यत् आत्मनो अग्नीनर्कान्मनोमयान्मनश्चितः**" "தன்னுடைய முப்பத்தியாருயிரம் மனோமயமான மனஸினுல் சயனம் செய்யப்பட்ட அக்னிகளைக் கண்டார்" என்று சொல்லப் பட்டிருக்கிறது. அதாவது புருஷனுடைய ஆயுஸ் நூறு வருஷங்கள், 36000 நாட்கள் ஆகின்றன. அவைகளில் ஒவ்வொரு தினத்திலும் ஏற்படும் மனோ விருத்தியை அக்னியாக தியானம் செய்வதானுல் 36000 அக்னிகள் என்று ஏற்படுகின்றன இவை தனக்குள்ளிருக்கும் ஆத்ம ஸ்வரூபமாக பாவிக்கப்பட வேண்டும். இவைகளே அர்ச்சிக்கப்பட வேண்டும். மனஸினுல் சயனம் செய்யப்படுவது, ஏற்படுத்தப்படுவது என்பதனுல் மனஸ் "சித்துக்கள்" இவ்விதமே வாக்குச்சித்துக்கள், பிராணசித்துக்கள், சக்ஷுஸ்சித்துக்கள் என்றுமுண்டு. இவையெல்லாம் அக்னி சயனப் பிரகரணத்தில் சொல்லப் பட்டிருக்கின்றன. இவை கர்மாவுக்கு அங்கங்களா? ஸ்வதந்திரமான உபாஸனைகளா? என்பது இங்கு விசாரிக்கப்படுகிறது.

**कर्मशेषाः स्वतन्त्रा वा मनश्चित्प्रमुखाग्नयः ।**

कर्मशेषाः प्रकरणाल्लिङ्गं त्वन्यार्थदर्शनम् ।। ६१ ।।
उन्नेयविधिगाल्लिङ्गादेव श्रुत्या च वाक्यतः ।
बाध्यं प्रकरणं तस्मात् स्वतन्त्रं वह्निचिन्तनम् ।। ६२ ।।

கர்மசேஷா: ஸ்வதந்த்ரா வா மனச்சித்ப்ரமுகா₂க்₃நய: ।
கர்மசேஷா: ப்ரகரணால்லிங்க₃ம் த்வந்யார்த₂த₃ர்சநம் ।। 61
உந்நேயவிதி₄கா₃ல்லிங்கா₃தே₃வ ச்ருத்யா ச வாக்யத: ।
பா₃த்₄யம் ப்ரகரணம் தஸ்மாத் ஸ்வதந்த்ரம் வஹ்நிசிந்தநம் ।। 62

(அ..ம்)

மனஸ், சித் முதலான அக்னிகள் கர்மாவையொட்டினவைகளா? அல்லது ஸ்வதந்திரமானவைகளா? பிரகரணத்தினுல் கர்மாவை யொட்டினவை தான். லிங்கமோ வேறு விஷயத்தைக் காட்டக் கூடியது. ஊஹிக்கக்கூடிய விதியிலுள்ள லிங்கத்தினுலும், சுருதியினுலும், வாக்கியத்தினு லும் பிரகரணம் பாதிக்கப்படுகிறது. ஆகையால் அக்னிகளைச் சிந்திப்பது ஸ்வ தந்திரமானது தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

இவை எல்லாம் அக்னி சயனப் பிரகரணத்தில் சொல்லப்பட்டிருப்பதால் கர்மசேஷங்கள் தான். "तान्हैतानेवंविदे सर्वाणि भुतानि चिन्वन्त्यपि स्वपते" இவ்விதம் அறிகிறவனே உத்தேசித்து, அவன் தூங்கும் போதும் எல்லா பிராணிகளும் எப்பொழுதும் அந்த இவைகளை செய்து கொண்டிருக்கின்றன" என்று பின் வாக்கியத்தில் சொல்லப் படுகிறது. அதாவது உபாஸகன் தூங்கினுலும் கூட அக்னிகள் விட்டுப் போவது இல்லை. இவனுடைய மனஸ், வாக்கு முதலியவை வேலை செய்யாமலிருந்த போதிலும், விழித்துக் கொண்டிருக்கிற பிராணிகளுடைய மனஸ், வாக்கு முதலியவை வேலை செய்து கொண்டிருப்பதால், எல்லா பிராணிகளுடைய மனஸ், வாக்கு முதலியவைகளின் பிரவிருத்திகள் யாவுமே அக்னிகளாக வர்ணித்து இருப்பதைக் காரணமாகக் கொண்டு இந்த உபாஸகன் தூங்கினுலும் மற்ற பிராணிகள் யாவரும் எப்பொழுதும் இந்த அக்னிகளை சயனம் செய்வதாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஆக ஆயுஸ் உள்ளவரை விடாமல் அக்னி சயனம் நடந்து வருகிறது என்று இவ்விதம் சொல்வது இந்த உபாஸனையில் ஸ்வதந்திரத் தன்மையைக் காட்டும் லிங்கமாகாதா? மேலும் கர்ம சேஷமாயிருக்குமேயானுல், தூங்கும் போது விட்டுப் போகுமானதால், ஆயுஸ் வரை இடைவிடாது

எப்படியிருக்க முடியும்? ஆகையினுலேயே இது கர்ம சேஷமில்லே, ஸ்வந்திரமாயுள்ளது என்று ஏற்படவில்லேயா? லிங்கம் என்பது பிரகரணத்தை விட அதிகமுள்ளதால் என்று கேட்கலாம், இது தோஷமாகாது. லிங்கம் என்பது வேறு விஷயத்தைக் காட்டும் தன்மை உடைய தாயிருப்பதினுலேயே பிரகரணத்தை விட பலக்குறைவுள்ளது. லிங்கம் என்பது இரண்டு விதம் : ஸாமர்த்தியம் (தானுகவே காட்டிக் கொடுக்கும் சக்தி) என்றும் வேறு விஷயத்தைக் காட்டிக் கொடுப்பது என்றும் விதியின் உத்தேசத்திலேயே அடங்கியிருப்பது ஸாமர்த்தியம் என்ற லிங்கம்; இதற்குத் தானுகவே பிராமாண்யம் உண்டு. வேறு எதையோ ஒட்டி உள்ள அர்த்தவாதத்தில் காணப்படும் லிங்கம் வேறு விஷயத்தைக் காட்டுவதாகும்அதற்கு தாத்பர்யம் இல்லாததால் ஸ்வதந்திரமாக பிராமாண்யம் கிடையாது. மேலும் எடுத்துக் கொண்ட விஷயத்தை ஸ்துதி செய்ய வந்த பிரமாணத்தின் மத்தியில் காண்பது அதற்கு பக்க பலமாகத்தான் ஆகும். இவ்விதம் இருப்பதால் எடுத்துக் காட்டின லிங்கம் பலக்குறைவுள்ளதால் பிரகரணத்தினுல் மனஸ், சித், அக்னிகள் கர்மாவையொட்டினவை தான்.

ஸித்தாந்தம் :

இங்கே "வேண்டும்" என்பது முதலான வார்த்தைகள் இல்லாததினுல், சப்தத்தினுல் விதி கிடைப்பதில்லேயென்பது வாஸ்தவம். ஆனுல் அர்த்த வாதத்தின் பலத்தைக் கொண்டு விதி ஊஹிக்க முடியும். "ராத்ரிஸத்ர" நியாயத்தை அனுஸரித்து பலனேச் சொல்லி ஸ்துதி செய்யும் வாக்கியங்கள் (அந்தந்த பலனே விரும்புகிறவர்) அதிகாரியென்று காட்டுவதில் தாத்பர்யமென்று ஏற்படுவதால், இந்த பிராஹ்மணம் முழுவதுமே விதியின் உருவமுள்ளதாக ஆகிறது. ஆகையால் விதியின் உத்தேசத்தில் அடங்கி இருக்கும் தன்மையால் லிங்கத்திற்கு நன்கு பலம் உண்டு. மேலும் "ते हैते विद्याचित एव" "அந்த இவை பாவனேயால் சயனம் செய்யப் படுபவைகளே"என்று சுருதியினுலேயே கர்மாவுக்கு அங்கமாயிருக்கும் தன்மை மறுக்கப்படுகிறது. தவிரவும் विद्यया हैवैत एवंविदश्चिता भवन्ति" "இவை பாவனேயினுலேயே இவ்விதம் உபாஸிப்பவருக்கு சயனம் சொல்லப் பட்டதாக ஆகின்றன" என்ற வாக்கியமும் கூட இது ஸ்வதந்திரமான உபாஸனேயென்பதை காட்டுகிறது. ஆகையால் சுருதி, லிங்கம், வாக்கியம் இவைகளால் பிரகரணம் பாதிக்கப் படுவதால் மனஸ்,சித் முதலானவை ஸ்வதந்திரமான உபாஸனு ரூபமென்று ஒப்புக் கொள்ள வேண்டும்.

# ३०.ऐकात्म्याधिकरणम्

## 30.ஐகாத்ம்யாதி4கரணம்

(ஸூத்ரம் 53,54)

**एक आत्मनः शरीरे भावात् ।।५३।।**

ஏக ஆத்மந: சரீரே பா4வாத் 53

(சிலர், சரீரமிருக்கும்போது ஆத்மா இருப்பதால்)

**व्यतिरेकस्तद्भावाभावित्वान्नतूपलब्धिवत् ।।५४।।**

வ்யதிரேகஸ்தத்3பா4வாபா4வித்வாந்நதூபலப்3தி4வத் 54

(அது இருந்தும் இது இல்லாததால் வேறு இல்லை என்பது இல்லையானால், அறிவுபோல வேறு தான்)

மனஸ்,சித் முதலானது கர்மாவின் அங்கமல்ல.புருஷனேயே சேர்ந்தது என்று சொன்னதால், அந்த புருஷன் என்பது யார் என்று இங்கு விசாரிக்கப்படுகிறது. ஸ்வர்க்கம், மோக்ஷம் இவைகளேயடையும் புருஷன் யார் என்பது பூர்வமீமாம்ஸை உத்தரமீமாம்ஸை இரண்டிற்கும் பொதுவாக இருந்த போதிலும் இங்கேயும் சொல்லப்படுகிறது.

**आत्मा देहस्तदन्यो वा चैतन्यं मदशक्तिवत् ।**
**भूतमेलनजं देहे नान्यत्राऽऽत्मा वपुस्ततः ।। ६३ ।।**
**भूतोपलब्धिर्भूतेभ्यो विभिन्ना विषयित्वतः ।**
**सैवाऽऽत्मा भौतिकाद्देहादन्योऽसौ परलोकभाक् ।। ६४ ।।**

ஆத்மா தே3ஹஸ்தத3ந்யோ வா சைதந்யம் மத3சக்திவத் ।
பூ4தமேளநஜம் தே3ஹே நாந்யத்ராஆத்மா வபுஸ்தத: ।। 63
பூ4தோபலப்3தி4ர்பூ4தேப்4யோ விபி4ந்நா விஷயித்வத: ।
ஸைவாஆத்மா பௌ4திகாத்3தே3ஹாத3ந்யோஅஸௌ பரலோகபா4க் ।।64

(அ..ம்)

ஆத்மா என்பது தேஹமேதானு? அல்லது அதைவிட வேரு? மதசக்தியைப் போல, பூதங்களுடைய சேர்க்கையால் உண்டாவது சைதன்யம், அது தேஹத்தில் தான் காணப்படுகிறது, வேறு எங்குமில்லே. ஆகையால் தேஹம் தான் ஆத்மா.

பூதங்களே அறிதல் பூதங்களே விட வேருய்த்தான் இருக்க வேண்டும், விஷயத்தையுடையதென்ற தன்மையிருப்பதால், அந்த அறிவே ஆத்மா. அது பூதங்களால் செய்யப்பட்டிருக்கும் தேஹத்தைவிட வேறு. அது தான் பரலோகம் போவது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பௌத்தர்களும், லோகாயதிகர்களும் சொல்வதாவது தேஹம் தான் ஆத்மா. தேஹமிருக்கும் போது சைதன்யம் இருக்கிறது. தேஹமில்லாத போது சைதன்யம் இல்லை என்று அன்வயம், வ்யதிரேகம் இரண்டு முறையிலும் பார்க்கும் போது சைதன்யமென்ற ஆத்மா தேஹத்தைத் தவிர வேறில்லை என்று தெரிகிறது. சைதன்யம் என்பது வேறு இனமாயிருப்பதால் தேஹத்தைவிட ஆத்மா வேறு என்று ஸந்தேஹிக்க வேண்டாம். பாக்கு, வெற்றிலை, சுண்ணும்பு மூன்றும் சேர்ந்தால் மத சக்தி எப்படி உண்டாகிறதோ, அப்படியே தேஹமென்ற உருவமாகச் சேர்ந்துள்ள பூதங்களிலிருந்து ஏற்படும் சைதன்யம் என்பது எப்படி வேறு இனம் ஆகும்? ஆகையால் சேதனமாய் உள்ள தேஹம் தான் ஆத்மா.

ஸித்தாந்தம் :

"எது எது விஷயியாக (விஷயத்தையுடையதாக) இருக்கிறதோ, அது அது விஷயத்தை விட வேறு. கண் எப்படி ரூபத்தை விட வேரூ அப்படி" என்ற நியாயப்படி பிருதிவீ முதலான பூதங்களையறிவது, பூதங்களை விட வேருகத்தான் இருக்கவேண்டும் விஷயியாயிருப்பதால். அப்படியிருக்க அவ்வித சைதன்யத்தை ஆத்ம தத்வமென்று சொல்லிக் கொண்டு, அதற்கு பூதங்களால் ஏற்பட்டிருக்கும் தேஹத்தின் ஸ்வரூபமாயிருத்தல் எப்படி சொல்ல முடியும்?" தேஹமிருந்தால் சைதன்யம்,இல்லையாஞல் இல்லை" என்று சொல்வது பிசகு. தேஹ மில்லையாஞலும் பரலோகம் போகும் ஆத்ம சைதன்யம் உண்டு என்று சாஸ்திரத்திஞல் தெரிகிறது. சாஸ்திரத்திற்கு பிராமாண்யம் கொடுக்க வேண்டியதோ அவசியம். ஆகையால் "வ்யதிரேகம்" என்பது இல்லை. அப்படியே இறந்து விட்ட தேஹம் இருந்தும் கூட சைதன்யம் காணப்படாததிஞல், "அன்வயம்" என்பதும் இல்லை. ஆகையால் தேஹம் ஆத்மாவல்ல.

## ३१.अङ्गावबद्धाधिकरणम्

## 31.அங்கா₃வப₃த்₃தா₄தி₄கரணம்

(ஸூத்ரம் 55,56)

अङ्गावबद्धास्तु न शाखासु हि प्रतिवेदम् ।।५५।।

அங்கா₃வபு₃த்₃தா₄ஸ்து ந சாகா₂ஸு ஹி ப்ரதிவேதம் 55
(அங்காவபத்தங்களோ ஒவ்வொரு வேதத்திலும் தன் சாகைகளில் மட்டுமல்ல)

मन्त्रादिवद्वाऽविरोधः ।।५६।।

மந்த்ராதி₃வத்₃வாஅவிரோத₄: 56
(அல்லது, மந்திரம் முதலியதைப்போல, விரோதமில்லை)

அங்கங்களையொட்டிய உபாஸனைகளில் ஐதரேய உபநிஷத்தில் "உக்தம்" என்று சொல்லப்படுவதில் கர்மாகங்களில் பிருதிவீ முதலான பாவனைகளைச் செய்யும்படி கண்டிருக்கிறது. கௌஷீதகீ முதலிய வேறு சாகைகளிலும் "உக்தம்" சொல்லப்படுகிறது. இரண்டும் ஒன்று தானா? என்பது விஷயம்.

उक्थादिधीः स्वशाखाङ्गेष्वेवान्यत्रापि वा भवेत् ।
सान्निध्यात् स्वस्वशाखाङ्गेष्वेवासौ व्यवतिष्ठते ।। ६५ ।।
उक्थोद्गीथादिसामान्यं तत्तच्छब्दैः प्रतीयते ।
श्रुत्या च सन्निधेर्बाधस्ततोऽन्यत्रापि यात्यसौ ।। ६६ ।।

உக்தா₂தி₃தீ₄: ஸ்வசாகா₂ங்கே₃ஷ்வேவாந்யத்ராபி வா ப₄வேத் ।
ஸாந்நித்₄யாத் ஸ்வஸ்வசாகா₂ங்கே₃ஷ்வேவாஸௌ வ்யவதிஷ்ட₂தே ।। 65
உக்தோ₂த்₃கீ₃தா₂தி₃ஸாமாந்யம் தத்தச்ச₂ப்₃தை₃: ப்ரதீயதே ।
ச்ருத்யா ச ஸம்நிதே₄ர்பா₃த₄ஸ்ததோஅன்யத்ராபி யாத்யஸௌ ।। 66

(அ..ம்)

"உக்தம்" முதலான பாவனை தன் சாகையில் கண்ட அங்கங்களில் மாத்திரம் தானா? வேறு இடங்களிலும் இருக்குமா? ஸாந்நித்யம், ஸமீபத்தில் இருத்தல், இருப்பதால் தம் தம் சாகைகளில் தான் அது குறிப்பாய் நின்று விடும்.

"உக்தம்", "உத்கீதம்" முதலியது பொதுவென்பது அந்தந்த சப்தங்களினாலேயே தெரிகிறது. சுருதியினால் ஸந்நிதி பாதிக்கப்படும். ஆகையால் இது வேறிடமும் போகும்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிருதிவீ முதலான பாவனை ஐதரேயித்திலிருப்பதால் அங்குள்ள உக்தத்திற்குத் தான், அதன் ஸமீபத்திலேயேயிருப்பதால் கௌஷீதகீ முதலியது வேறு சாகையானதினால் அங்கு போகாது.

ஸித்தாந்தம் :
"உக்தம்" என்ற சப்தம் முக்கியமான அர்த்தத்தில் எல்லா சாகைகளிலுமுள்ள பொதுவான உக்தத்தையே சொல்லும். ஆகையால் "உக்தம்" என்ற சுருதியின் பலத்தினுல் எல்லா சாகைகளிலுமுள்ள உக்த சாஸ்திரங்களிலும் தொடர்பு கிடைக்கிறது. சுருதியோ ஸந்நிதியை விட பலமுள்ளது. ஆகையால் ஏதேனுமொருவிடத்தில் விதிக்கப்படும் பாவனை வேறு சாகைகளிலும் தொடர்ந்து வரும்.

# ३२.भूमज्यायस्त्वाधिकरणम्

## 32.பூ$_4$மஜ்$_3$யாயஸ்த்வாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 57)

**भूम्नः क्रतुवज्जयायस्त्वं तथा हि दर्शयति।। ५७।।**

பூ$_4$ம்ந: க்ரதுவஜ்ஜயாயஸ்த்வம் ததா$_2$ ஹி த$_3$ர்சயதி 57
(பெரியதான ஸம்ஸ்தத்திற்கு மேன்மை, க்ரதுவைப்போல, அப்படியே தான் காட்டுகிறது)

வைசுவானர வித்யையில் த்யு லோகம், ஸூர்யன், வாயு, ஆகாசம், ஜலம், பூமி இவைகள் விராட்ரூபமாயுள்ள வைசுவானரருக்கு சிரஸ், கண், பிராணன், மத்ய தேஹம், மூத்ரஸ்தானம், பாதம் என்ற உருவங்களாக த்யானம் செய்ய வேண்டிய அம்சங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்விதம் ஒவ்வொரு அம்சங்களின் தியானமும் தனித்தனி உபாஸனையா? அல்லது எல்லாம் சேர்ந்த ஒரே உபாஸனையா? என்பது விஷயம்.

**ध्येयो वैश्वानरांशोऽपि ध्यातव्यः कृत्स्न एव वा ।**
**अंशेषूपास्तिफलयोरुक्तेरस्त्यंशधीरपि ।। ६७ ।।**
**उपक्रमावसानाभ्यां समस्तस्यैव चिन्तनम् ।**
**अंशोपास्तिफले स्तुत्यै प्रत्येकोपास्तिनिन्दनात् ।। ६८ ।।**

த்$_4$யேயோ வைஷ்வானராம்சோஅபி த்$_4$யாதவ்ய:க்ருத்ஸ்த்ந ஏவ வா।
அம்சேஷூபாஸ்திப$_2$லயோருக்தேரஸ்த்யம்சதீ$_4$ரபி ।। 67
உபக்ரமாவஸாநாப்$_4$யாம் ஸமஸ்தஸ்யைவ சிந்தநம் ।
அம்சோபாஸ்திப$_2$லே ஸ்துத்யை ப்ரத்யேகோபாஸ்திநிந்த$_3$நாத்।। 68

(அ..ம்)
வைசுவானரருடைய அம்சம் தியானிக்கப்பட வேண்டியதா? அல்லது (வைசுவாநரர்) முழுவதும் தான் தியானிக்கப்பட வேண்டியதா?

அம்சங்களில் உபாஸனே, பலன், இரண்டும் சொல்லியிருப்பதால் அம்சத்தின் தியானமும் உண்டு.
ஆரம்பம், முடிவு இரண்டிலிருந்தும் எல்லாம் சேர்ந்ததற்குத் தான் உபாஸனே. தனித்தனியாக ஒன்றை மாத்திரம் உபாஸிப்பது நிந்திக்கப்பட்டிருப்பதால், அம்சங்களில் உபாஸனேயும் பலனும் சொன்னது ஸ்துதிக்காக மாத்திரம்.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
"**औपमन्यव कं त्वमात्मानपुपास्से**" "ஹே ஔபமன்யவரே, நீர் யாரை ஆத்மாவாக உபாஸிக்கிறீர்?" என்ற கேள்வியிலுைம் "**दिवमेव भगवो राजन्निति होवाच**" "ஹே பகவன் ராஜனே த்யுலோகத்தைத்தான் என்று சொன்ஞர்" என்ற பதில் இருந்தும் த்யு லோகத்தை மாத்திரம் உபாஸிப்பது உண்டென்று தெரிகிறது. மேலும், அந்த உபாஸனேயிலிருந்து "**तव सुतं प्रसुतमासुतं कुले दृश्यते**""உம்முடைய குலத்தில் ஸுதம், பிரஸுதம், ஆஸுதம் காணப்படுகிறது" என்று ஸுதம் என்ற சப்தங்களால் சொல்லப்படுகிற ஸோமயாகத்தின் பலவிதங்கள் நடக்கின்றனவென்ற பெருமை பலஞகவும் தெரிய வருகிறது. இவ்விதமே மற்ற அம்சங்களிலும் எடுத்துக்கொள்ள வேண்டும். பின்னுள்ள வாக்கியத்திலோ "**तस्य ह वा एतस्याऽऽत्मनो वैश्वानरस्य**""அந்தஇந்த வைசுவாநர ஆத்மாவிற்கே" என்று எல்லா அவயங்களும் சேர்ந்துள்ள முழுவதிற்கும் உபாஸனே வெகு ஸ்பஷ்டமாகக் காண்கிறது.ஆகையால் தனித்தனி அம்சங்களின் உபாஸனே எல்லாவற்றையும் சேர்த்து உபாஸனே என்று இரண்டுமே தான் தாத்பர்யம்.

ஸித்தாந்தம் :
தாத்பர்யம் சேர்ந்துள்ளதிற்குத்தான் உபாஸனேயே தவிர தனித்தனி அம்சங்களுக்கு அல்ல. ஆரம்பத்தில் "**को न आत्मा किं ब्रह्म**""நமக்கு ஆத்மா யார்? பிரஹ்மம் எது?" என்று பூரா பிரஹ்மமுமே உபாஸிக்க வேண்டிய விஷயமாக வைத்துக் கொண்டு விசாரிக்க ஆரம்பித்திருக்கிறது. முடிவிலும் "**तस्य ह वै**" "அவருக்கே" என்பது முதலியதால் எல்லாம் சேர்ந்ததின் உபாஸனேயே நன்கு ஸ்பஷ்டமாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆக ஆரம்பமும் முடிவும் சேர்ந்து ஒரே தாத்பர்யமுள்ள வாக்கியமென்று தெரிகிறது. அப்படியிருக்கும் போது அம்சங்களில் தனித்தனி உபாஸனேகள் என்று ஒப்புக் கொண்டால்

வாக்கியம் உடைபட்டு விடும். தனித்தனி பலன் சொன்னதோ, "இதுவே இப்படியானுல் முழுவதும் உபாஸித்தால் கேட்பானேன்" என்ற முறையில் ஸ்துதிக்காக என்று ஆகிறது. மேலும் பலவித உபாஸனைகள் கிடைப்பதற்காக வாக்கியத்தை உடைக்கலாமென்று வைத்துக் கொண்டாலும், அப்பொழுது தனித்தனியாக உபாஸிப்பதை நிந்திக்கும் வசனங்களுக்கு ஸமாதானம் எப்படி? "मूर्धा ते व्यपतिष्यत्" "உம் தலை வெடித்து விழுந்து விடும்" என்று சிரஸை மாத்திரம் உபாஸிப்பது நிந்திக்கப்பட்டிருக்கிறது. தனித்தனி உபாஸனைகளும் அப்படியே நிந்திக்கப் பட்டிருக்கின்றன. ஆகையால் எல்லாம் சேர்ந்ததின் உபாஸனைதான் தாத்பர்ய விஷயம்.

## ३३.शब्दादिभेदाधिकरणम्

## 33.சப்$_3$தா$_3$தி$_3$பே$_4$தா$_3$தி$_4$கரணம்

(ஸூத்ரம் 58)

**नाना शब्दादिभेदात् ।।५८।।**

நாநா சப்$_3$தா$_3$தி$_3$பே$_4$தா$_3$த் 58

(வெவ்வேறு சப்தம் முதலியதில் பேதத்தினால்)

சாந்தோக்யத்தில் சாண்டில்ய வித்தையில் மதுவித்தை முதலியவை சொல்லப்பட்டிருக்கின்றன. அப்படியே வேறு சாகைகளிலும் பலவித வித்தைகள் சொல்லப்படுகின்றன. எல்லாவற்றிலும் உபாஸிக்க வேண்டிய பிரஹ்மம் ஒன்ருகவேயிருப்பதால் எல்லா வித்தைகளும் ஒன்று தாஞ? என்பது விஷயம்.

**न भिन्ना उत भिद्यन्ते शाण्डिल्यदहरादयः ।**
**समस्तोपासनश्रै ष्ट्याद्ब्रह्मैक्यादप्यभिन्नता ।। ६९ ।।**
**कृत्स्नोपास्तेरशक्यत्वाद्गुणैर्ब्रह्म पृथक्कृतम् ।**
**दहरादीनि भिद्यन्ते पृथक्पृथगुपक्रमात् ।। ७० ।।**

ந பி$_4$ந்நா உத பி$_4$த்$_3$யந்தே சாண்டி$_3$ல்பத$_3$ஹராத$_3$ய: ।
ஸமஸ்தோபாஸநஷ்ரை ஷ்ட்$_2$யாத்$_3$ப்$_3$ரஹ்மைக்யாத$_3$ப்யபி$_4$ந்நதா ।।69
க்ருத்ஸ்நோபாஸ்தேரசக்யத்வாத்$_3$கு$_3$ணைர்ப்$_3$ரஹ்ம ப்ருத$_2$க்க்ருதம் ।
த$_3$ஹராதீ$_3$நி பி$_4$த்$_3$யந்தே ப்ருத$_2$க்ப்ருத$_2$கு$_3$பக்ரமாத் ।। 70

(அ..ம்)

சாண்டில்ய வித்யை, தஹர வித்யை முதலியவை வேறுபடாதவைகளா? அல்லது வேறுபட்டவைகளா? எல்லாம் சேர்ந்ததை உபாஸிப்பது

சிலாக்கியமாகயிருப்பதாலும், பிரஹ்மம் ஒன்ருகவேயிருப்பதாலும், வேறு படாதவைகள் தான்
எல்லாம் சேர்ந்ததை உபாஸிப்பது முடியாததிஞல், குணங்களைக் கொண்டு பிரஹ்மம் தனித்தனிப் படுத்தப்பட்டிருக்கிறது. தனித் தனியாகவே ஆரம்பிக்கப் பட்டிருப்பதால் தஹர வித்தை முதலியவை வேறுபட்டவைகள் தான்.
(வி..ம்)

பூர்வபக்ஷம் :
முன் அதிகரணத்தில் கண்ட நியாயப்படி எல்லாம் சேர்ந்ததை உபாஸிப்பதே மிகவும் உத்தமமாயிருப்பதாலும் உபாஸிக்க வேண்டிய பிரஹ்மமும் ஒன்ருகவே இருப்பதாலும் எல்லா வித்யைகளும் ஒன்றே தான்.

ஸித்தாந்தம் :
கணக்கில்லாத வித்தைகளில் உள்ளவைகளையெல்லாம் ஒன்று சேர்த்துக் கொண்டு அனுஷ்டானம் செய்வது ஸாத்தியமில்லாததிஞல், வித்யைகளுக்குள் பேதம் ஒப்புக்கொண்டு தான் தீரவேண்டும். உபாஸிக்க வேண்டிய பிரஹ்மம் ஒன்று தானே என்று நினைத்துவிடக் கூடாது. குணங்களைக் கொண்டு வேறுபாடு பொருந்துமானதால். ஒவ்வொரு உபாஸனைக்கும் ஆரம்பம் எப்படி, முடிவு எப்படி என்று தீர்மானிக்க முடியுமானதிஞல் அவை இவ்வளவு என்று நிச்சயிப்பது முடியாததில்லை. எல்லாவற்றையும் ஒன்ருக்கிவிட்டால் எவ்வளவு அளவிலும் அடங்காது. ஆகையால் வித்தைகள் வெவ்வேறு தான்.

## ३४.विकल्पाधिकरणम्
## 34.விகல்பாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 59)

**विकल्पोऽविशिष्टफलत्वात् ।।५९।।**

**விகல்போஅவிசிஷ்டப$_2$லத்வாத் 59**

**(விகல்பம், பலனில் வித்யாஸமில்லாததினால்)**

உபாஸனை என்பது இரண்டு விதம். அஹங்கிரஹ உபாஸனை, பிரதீக உபாஸனை என்று. ஸகுணமாக ஆத்மாவை உபாஸிக்கும் போது "நான்" என்று உபாஸிப்பதால், அது அஹங்கிரஹ உபாஸனையாகும். இது பின்ஞல் நான்காவது அத்யாயத்தில் சொல்லப்படப்போகிறது. ஆத்மாவல்லாத வஸ்துவில் தேவதையென்ற பாவனையுடன்

ஸம்ஸ்காரம் (சுத்தி) செய்து உபாஸிப்பது பிரதீக உபாஸனையாகும். இவைகளில் அஹங்கிரஹமாகவுள்ள சாண்டில்யம் முதலான உபாஸனைகளில் ஏதேனும் ஒரு உபாஸனையை அனுஷ்டித்தால் போதுமா? தோன்றின படி இரண்டு மூன்று உபாஸனைகளை செய்யலாமா? என்பது இங்கு விசாரிக்கப்படுகிறது.

अहंग्रहेष्वनियमो विकल्पनियमोऽथवा ।
नियामकस्याभावेन याथाकाम्यं प्रतीयताम् ।। ७१ ।।
ईशसाक्षात्कृतेस्त्वेकविद्ययैव प्रसिद्धितः ।
अन्यानर्थक्यविक्षेपौ विकल्पस्य नियामकौ ।। ७२ ।।

அஹங்க்$_3$ரஹேஷ்வநியமோ விகல்பநியமோஅத$_2$வா ।
நியாமகஸ்யாபா$_4$வேந யாதா$_2$காம்யம் ப்ரதீயதாம் ।। 71
ஈசஸாக்ஷாத்க்ருதேஸ்த்வேகவித்$_3$யயைவ ப்ரஸித்$_3$தி$_4$த: ।
அந்யாநர்த$_2$க்யவிக்ஷேபௌ விகல்பஸ்ய நியாமகௌ ।। 72

(அ..ம்)

அஹங்கிரஹ உபாஸனைகளில் நியமம் கிடையாதா? அல்லது இப்படி அப்படியென்று நியமம் உண்டா? நியமத்தை ஏற்படுத்திக் கொடுக்க எதுவுமில்லாததினுல், தோன்றினபடி என்று தான் அறிய வேண்டும்.

ஒரே உபாஸனையினுலேயே ஈசுவரருடைய ஸாக்ஷாத்காரம் நன்கு ஸித்தித்து விடுவதால், இன்னொரு உபாஸனை வீண் என்பதும் மனஸின் விக்ஷேபத்திற்குக் காரணம் என்பதும் இப்படியா அப்படியா என்று விகல்பத்தை நியமிக்கப் போதுமானவை.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஒன்று, இரண்டு அல்லது பல உபாஸனைகளையும் தோன்றினபடி செய்யலாம். இப்படித்தான் செய்ய வேண்டுமென்று நியமனம் செய்வதற்கு எதுவுமில்லாத தினுல் சாண்டில்ய உபாஸனை, தஹர உபாஸனை, வேறு ஏதேனும் உபாஸனை ஒன்று தான் அனுஷ்டிக்கப்பட வேண்டும். மற்றது கூடாது என்று நியமனம் செய்ய எவ்வித காரணமும் இல்லை. ஆகையால் தோன்றினபடி என்பது தான் நியாயம்.

ஸித்தாந்தம் :

இன்னொரு உபாஸனை வீண் என்பதே ஒரு நியாமகம் (நியாயத்தை ஏற்படுத்துவது). உபாஸனையின் பிரயோஜனம் ஈசுவரரை ஸாக்ஷாத் கரித்தல். அது ஒரு உபாஸனையினுலேயே ஸித்திக்கிறது. அப்படியிருக்க

வேறு உபாஸனை வீண்தானே !.மேலும் உபாஸனையினுல் கிடைக்கும் ஸாக்ஷாத்காரம் பிரமாணத்தினுல் ஏற்படும் அறிவாகிய ஸாக்ஷாத் காரமல்ல. இடைவிடாமல் பாவித்து வந்ததால் தியானம் செய்யப்படும் வஸ்துவுடன் ஒன்ருய் கலந்து விடுவதாயுள்ள அபிமானம். ஒரு உபாஸனையை அனுஷ்டித்து ஸம்பாதிக்கப்படுகிற அந்த அபிமானம், அந்த உபாஸனையை விட்டு விட்டு வேறு விஷயத்தில் ஈடுபடும் மனிதனுக்கு மனஸில் விக்ஷேபமேயிருக்குமாதலால், எப்படி உறுதிப்பட முடியும்? ஆகையால் வீண் என்பதினுலும் விக்ஷேபத்திற்குக் காரணம் என்பதினுலும் நியமம் உண்டு.

## ३५.काम्याधिकरणम्

## 35.காம்யாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 60)

**काम्यास्तु यथाकामं समुच्चीयेरन्न वा पूर्वहेत्वभावात् ।।६०।।**

காம்யாஸ்து யதா$_2$காமம் ஸமுச்சீயேரந்ந வா
பூர்வஹேத்வபா$_4$வாத் 60
(காம்யங்களோ இஷ்டப்படி சேர்த்துக்கொள்ளலாம்,
அல்லது வேண்டாம், முன்காரணமில்லாததினால்)

பிரதீக உபாஸனைகளிலும் அதே நியாயம் தானு? என்பது இங்கு விஷயம்.

**प्रतीकेषु विकल्पः स्याद्याथाकाम्येन वा मतिः ।**
**अहं ग्रहेष्विवैतेषु साक्षात्कृत्यै विकल्पनम् ।। ७३ ।।**
**देवो भूत्वेतिवन्नात्र काचित्साक्षात्कृतौ मितिः ।**
**याथाकाम्यमतोऽमीषां समुच्चयविकल्पयोः ।। ७४ ।।**

ப்ரதீகேஷு விகல்ப: ஸ்யாத்$_3$யாதா$_2$காம்யேந வா மதி: ।
அஹம் க்$_3$ரஹேஷ்விவைதேஷு ஸாக்ஷாத்க்ருத்யை விகல்பநம் ।।73
தே$_3$வோ பூ$_4$த்வேதிவந்நாத்ர காசித்ஸாக்ஷாத்க்ருதௌ மிதி: ।
யாதா$_2$காம்யமதோஅமீஷாம் ஸமுச்சயவிகல்பயோ: ।। 74

(அ..ம்)

பிரதீக உபாஸனைகளில் விகல்பம் உண்டா? அல்லது தோன்றினபடி பாவனையா? அஹங்கிரஹ உபாஸனைகளில் போலவே, இவைகளிலும் ஸாக்ஷாத்காரம் ஏற்பட வேண்டியதற்காக விகல்பம் தான்.

"தேவனுக ஆகி" என்பது போல் இங்கே ஸாக்ஷாத்காரம் உண்டென்பதில் எவ்வித பிரமாணமும் கிடையாது. ஆகையால்

இவைகளுக்குள் சேர்த்துச்செய்வது, தனித்துச் செய்வது என்பதில் இஷ்டப்படிச் செய்யலாம்.
(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஒரு உபாஸனையினுலேயே ஸாக்ஷாத்காரம் கிடைக்குமானதினுல் வேறு உபாஸனை வீண் என்று முன் அதிகரணத்தில் சொன்ன நியாயப்படி பிரதீக உபாஸனைகளிலும் ஒன்றே போதுமானது. தோன்றினபடி இரண்டு மூன்று பிரதீகங்களை உபாஸிக்கக் கூடாது.

ஸித்தாந்தம் :

முன் கண்ட அஹங்கிரஹ உபாஸனைக்கும் பிரதீக உபாஸனைக்கும் வெகு பேதம் உண்டு. அஹங்கிரஹ உபாஸனைகளில் "देवो भूत्वा देवानप्येति" "தேவனுக ஆகி தேவர்களை அடைகிருன்" அதாவது ஜீவித்திருக்கும் போதே பாவனை செய்வதில் அதிகத்தன்மையால் தேவருடைய ஸாக்ஷாத்காரத்தை அடைந்து பிறகு இறந்தவுடன் தேவத்தன்மையை அடைகிருன்" என்று பலன் சொல்லப் பட்டிருக்கிறது. இவ்விதமாக பிரதீக உபாஸனைகள் விஷயத்தில் ஸாக்ஷாத்காரம் என்பது பலனுகுமென்று எவ்வித பிரமாணமும் கிடையாது. ஏதேனும் ஸாக்ஷாத் காரத்தை பலனுக சொல்ல வேண்டுமானுலும் கூட அங்கங்கு சொல்லப் பட்டிருக்கிற போக்கிய வஸ்துக்களை அடைவதைத் தான் பலனுக எடுத்துக் கொள்ள வேண்டும். அப்படியானுல் அவைகளோ வெவ்வேறுகவே இருக்கும் ஆதலால், ஒன்றை அடைவதால் மற்றென்றையடைவது வீண் என்று ஆகாது. மேலும் சில சமயங்களில் ஒரு பிரதீகத்தை உபாஸித்து விட்டு மற்ற சமயங்களில் வேறொரு பிரதீகத்தை உபாஸித்தால் முன் செய்த உபாஸனையின் பலனுகிய அபூர்வம் (புண்ணியம்) நசித்து விடாது. ஆகையால் இஷ்டப்படி ஒன்றையையோ அல்லது பல பிரதீகங்களையோ சேர்த்து உபாஸிக்கலாம்.

## ३६.यथाश्रयभावाधिकरणम्

## 36.யதா$_2$ச்ரயபா$_4$வாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 61 - 66)

**अङ्गेषु यथाश्रयभावः ।।६१।।**

அங்கே$_3$ஷு யதா$_2$ஷ்ரயபா$_4$வ: 61

(அங்கங்களில், ஆசிரயம் இருப்பதுபோல)

**शिष्टेश्च ।।६२।।**

சிஷ்டேச்ச 62
(விதித்திருப்பதினாலும்)

समाहारात् ।।६३।।

ஸமாஹாராத் 63
(சேர்த்துக்கொள்வதால்)

गुणसाधारण्यश्रुतेश्च ।।६४।।

கு$_3$ணஸாதா$_4$ரண்யச்ருதேச்ச 64
(குணங்களின் பொதுவாயுள்ள தன்மையைச்சொல்லும் சுருதியானாலும்)

न वा तत्सहभावाश्रुतेः ।।६५।।

ந வா தத்ஸஹபா$_4$வாச்ருதே: 65
(இல்லை, அதற்கு சேர்ந்திருப்பது சொல்லப்படாததினால்)

दर्शनाच्च ।।६६।।

த$_3$ர்சநாச்ச 66
(காண்பதினாலும்)

பிரதீகங்கள் என்பது இரண்டு விதம் : லௌகிகங்கள் (உலகத்திலுள்ள ஸாலக்கிராமம், விக்ரஹம் போலுள்ளவை) வைதிகங்கள் (வேதத்தில் கண்ட கர்மாக்களில் அங்கமாயுள்ளவை). லௌகிக பிரதீகங்கள் விஷயமாயுள்ள நிர்ணயம் முன் அதிகரணத்தில் சொல்லப்பட்டது. இந்த அதிகரணத்தில் கர்மாங்கமான பிரதீகங்கள் விஷயமாய் சொல்லப்படுகிறது.

समुच्चयोऽङ्गबद्धेषु याथाकाम्येन वा मतिः ।
समुच्चितत्वाङ्गानां तद्बद्धेषु समुच्चयः ।। ७५ ।।
ग्रहं गृहीत्वा स्तोत्रस्याऽऽरम्भ इत्यादिवन्नहि ।
श्रूयते सहभावोऽत्र याथाकाम्यं ततो भवेत् ।। ७६ ।।

ஸமுச்சயோஅங்கப$_3$த்$_3$தே$_4$ஷு யாதா$_2$காம்யேந வா மதி: ।
ஸமுச்சிதத்வாங்கா$_3$நாம் தத்$_3$வப$_3$த்$_3$தே$_4$ஷு ஸமுச்சய: ।। 75
க்$_3$ரஹம் க்$_3$ருஹீத்வா ஸ்தோத்ரஸ்யாஆரம்ப$_4$ இத்யாதி$_3$வந்நஹி ।
ச்ருயதே ஸஹபா$_4$வோஅத்ர யாதா$_2$காம்யம் ததோ ப$_4$வேத் ।। 76

(அ..ம்)

அங்கங்களையொட்டின உபாஸனைகளில் ஒன்றோடொன்று சேர்த்தல் உண்டா? அல்லது இஷ்டப்படி பாவனையா? அங்கங்கள் (எல்லாம் கர்மாவில்) சேர்ந்திருப்பதால், அவைகளையொட்டியுள்ள உபாஸனைகளுக்கும் சேர்த்தல் தான்.

இவைகளுக்குள் சேர்த்துச்செய்வது, தனித்துச் செய்வது என்பதில் இஷ்டப்படிச் செய்யலாம்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஒரு உபாஸனையினுலேயே ஸாக்ஷாத்காரம் கிடைக்குமானதினுல் வேறு உபாஸனை வீண் என்று முன் அதிகரணத்தில் சொன்ன நியாயப்படி பிரதீக உபாஸனைகளிலும் ஒன்றே போதுமானது. தோன்றினபடி இரண்டு மூன்று பிரதீகங்களை உபாஸிக்கக் கூடாது.

ஸித்தாந்தம் :

முன் கண்ட அஹங்கிரஹ உபாஸனைக்கும் பிரதீக உபாஸனைக்கும் வெகு பேதம் உண்டு. அஹங்கிரஹ உபாஸனைகளில் "देवो भूत्वा देवानप्येति" "தேவனுக ஆகி தேவர்களை அடைகிருன்" அதாவது ஜீவித்திருக்கும் போதே பாவனை செய்வதில் அதிகத்தன்மையால் தேவருடைய ஸாக்ஷாத்காரத்தை அடைந்து பிறகு இறந்தவுடன் தேவத்தன்மையை அடைகிருன்" என்று பலன் சொல்லப் பட்டிருக்கிறது. இவ்விதமாக பிரதீக உபாஸனைகள் விஷயத்தில் ஸாக்ஷாத்காரம் என்பது பலனுகுமென்று எவ்வித பிரமாணமும் கிடையாது. ஏதேனும் ஸாக்ஷாத் காரத்தை பலனுக சொல்ல வேண்டுமானுலும் கூட அங்கங்கு சொல்லப் பட்டிருக்கிற போக்கிய வஸ்துக்களை அடைவதைத் தான் பலனுக எடுத்துக் கொள்ள வேண்டும். அப்படியானுல் அவைகளோ வெவ்வேருகவே இருக்கும் ஆதலால், ஒன்றை அடைவதால் மற்றொன்றையடைவது வீண் என்று ஆகாது. மேலும் சில சமயங்களில் ஒரு பிரதீகத்தை உபாஸித்து விட்டு மற்ற சமயங்களில் வேருெரு பிரதீகத்தை உபாஸித்தால் முன் செய்த உபாஸனையின் பலனுகிய அபூர்வம் (புண்ணியம்) நசித்து விடாது. ஆகையால் இஷ்டப்படி ஒன்றையோ அல்லது பல பிரதீகங்களையோ சேர்த்து உபாஸிக்கலாம்.

## ३६.यथाश्रयभावाधिकरणम्

## 36.யதா₂ச்ரயபா₄வாதி₄கரணம்

(ஸூத்ரம் 61 - 66)

अङ्गेषु यथाश्रयभावः ।।६१।।

அங்கே₃ஷு யதா₂ஷ்ரயபா₄வ: 61

(அங்கங்களில், ஆசிரயம் இருப்பதுபோல)

शिष्टेश्च ।।६२।।

சிஷ்டேச்ச 62
(விதித்திருப்பதினாலும்)

समाहारात् ।।६३।।

ஸமாஹாராத் 63
(சேர்த்துக்கொள்வதால்)

गुणसाधारण्यश्रुतेश्च ।।६४।।

கு$_3$ணஸாதா$_4$ரண்யச்ருதேச்ச 64
(குணங்களின் பொதுவாயுள்ள தன்மையைச்சொல்லும் சுருதியானாலும்)

न वा तत्सहभावाश्रुतेः ।।६५।।

ந வா தத்ஸஹபா$_4$வாச்ருதே: 65
(இல்லை, அதற்கு சேர்ந்திருப்பது சொல்லப்படாததினால்)

दर्शनाच्च ।।६६।।

த$_3$ர்சநாச்ச 66
(காண்பதினாலும்)

பிரதீகங்கள் என்பது இரண்டு விதம் : லௌகிகங்கள் (உலகத்திலுள்ள ஸாலக்கிராமம், விக்ரஹம் போலுள்ளவை) வைதிகங்கள் (வேதத்தில் கண்ட கர்மாக்களில் அங்கமாயுள்ளவை). லௌகிக பிரதீகங்கள் விஷயமாயுள்ள நிர்ணயம் முன் அதிகரணத்தில் சொல்லப்பட்டது. இந்த அதிகரணத்தில் கர்மாங்கமான பிரதீகங்கள் விஷயமாய் சொல்லப்படுகிறது.

समुच्चयोऽङ्गबद्धेषु याथाकाम्येन वा मतिः ।
समुच्चितत्वाङ्गानां तद्बद्धेषु समुच्चयः ।। ७५ ।।
ग्रहं गृहीत्वा स्तोत्रस्याऽऽरम्भ इत्यादिवन्नहि ।
श्रूयते सहभावोऽत्र याथाकाम्यं ततो भवेत् ।। ७६ ।।

ஸமுச்சயோஅங்க$_3$பத்$_3$தே$_4$ஷு யாதா$_2$காம்யேந வா மதி: ।
ஸமுச்சிதத்வாங்கா$_3$நாம் தத்$_3$வப$_3$த்$_3$தே$_4$ஷு ஸமுச்சய: ।। 75
க்$_3$ரஹம் க்$_3$ருஹீத்வா ஸ்தோத்ரஸ்யாஆரம்ப$_4$ இத்யாதி$_3$வந்நஹி ।
ச்ரூயதே ஸஹபா$_4$வோஅத்ர யாதா$_2$காம்யம் ததோ ப$_4$வேத் ।। 76

(அ..ம்)

அங்கங்களையொட்டின உபாஸனைகளில் ஒன்றோடொன்று சேர்த்தல் உண்டா? அல்லது இஷ்டப்படி பாவனையா? அங்கங்கள் (எல்லாம் கர்மாவில்) சேர்ந்திருப்பதால், அவைகளையொட்டியுள்ள உபாஸனைகளுக்கும் சேர்த்தல் தான்.

"க்ரஹம் (பாத்திரத்தை) எடுத்துக் கொண்டு ஸ்தோத்ரத்தின் ஆரம்பம்" என்பது முதலியது போல, இங்கே (இந்த உபாஸனைகளுக்குள்) சேர்ந்திருத்தல் சொல்லப்படவில்லை. ஆகையால் இஷ்டப்படி என்று தான் ஏற்படும்.
(வி..ம்)

பூர்வபக்ஷம் :

அங்கங்களையெல்லாம் சேர்த்துத்தான் கர்மாவை அனுஷ்டிக்க வேண்டியிருக்கிறது. அப்படியே அந்த அங்கங்களுக்கு உள்பட்டவை களாக இருப்பதால் அங்கங்களையொட்டின உபாஸனைகளும் சேர்ந்தே தான் செய்யப்பட வேண்டும் என்பது நியமம்.

ஸித்தாந்தம் :

"ग्रहं वा गृहीत्वा चमसं वोत्रीय स्तोत्रमुपाकुर्यात्स्तुतमनुशंसति" "க்ரஹம் என்ற பாத்திரத்தை எடுத்துக் கொண்டு அல்லது சமஸம் என்ற பாத்திரத்தை உயர்த்திக் கொண்டு, ஸ்தோத்திரத்தை ஆரம்பிக்கவும். ஸ்தோத்ரம் சொன்னதை மறுபடியும் சொல்லவும்" என்பது முதலான இடங்களில் கிரஹம், ஸ்தோத்ரம் சொல்வது இவைகளுக்கு முன்பின்னாக சேர்ந்திருத்தல் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதம் உபாஸனைகள் விஷயம் எதுவும் சொல்லப்படவில்லை.ஆகையால் இங்கே விகல்பமோ (ஏதேனும் ஒன்றோ) அல்லது ஸமுக்யமோ (எல்லாம் சேர்த்தோ) இஷ்டப்படி வைத்துக் கொள்ளலாம்.

இவ்விதம் மூன்றுவது அத்யாயம் மூன்றுவது பாதத்தில் அதிகரணங்கள் 36, சுலோகங்கள் 76 (ஸூத்ரங்கள் 66).

==================================

## மூன்றாவது அத்யாயம் : நான்காவது பாதம்

நிர்குணப் பிரஹ்மத்தை அறிவதற்கு வேண்டியதாயுள்ள உள்ஸாதனங்கள், வெளி ஸாதனங்கள் எல்லாம் இந்த பாதத்தில் சொல்லப்படுகிறது.

### १.पुरुषार्थाधिकरणम्

### 1.புருஷார்தா$_2$தி$_4$கரணம்

(ஸூத்ரம் 1 - 17)

**पुरुषार्थोऽतःशब्दादिति बादरायणः ॥१॥**

புருஷார்தோ$_2$த:சப்தா$_3$தி$_3$தி பா$_3$த$_3$ராயண: 1

( புருஷார்த்தம் இதிலிருந்து, சப்தத்தினால் என்று பாதராயணர் )

**शेषत्वात्पुरुषार्थवादो यथाऽन्येष्विति जैमिनिः ॥२॥**

சேஷத்வாத்புருஷார்த$_2$வாதோ$_3$ யதா$_2$அந்யேஷ்விதி ஜைமிநி: 2

( புருஷார்த்தம் என்று சொல்வது அர்த்தவாதம் சேஷமாயிருப்பதால், மற்றவைகளில் போல, என்று ஜைமினி )

**आचारदर्शनात् ॥३॥**

ஆசாரத$_3$ர்சநாத் 3

( ஆசாரம் காண்ப்படுவதினால் )

**तच्छ्रुतेः ॥४॥**

தச்ச்$_2$ருதே: 4

( அது சொல்லியிருப்பதால் )

**समन्वारम्भणात् ॥५॥**

ஸமந்வாரம்ப$_4$ணாத் 5

( கூடவே சேர்ந்து ஆரம்பிப்பதால் )

**तद्वतो विधानात् ॥६॥**

தத்$_3$வதோ விதா$_3$நாத் 6

( அதுள்ளவனுக்கு விதிக்கப்பட்டிருப்பதினால் )

**नियमाच्च ॥७॥**

நியமாச்ச 7

( நியமம் இருப்பதினாலும் )

**अधिकोपदेशात्तु बादरायणस्यैवं तद्दर्शनात् ॥८॥**

அதி$_4$கோபதே$_3$சாத்து பா$_3$த$_3$ராயணஸ்யைவம் தத்$_3$த$_3$ர்சநாத் 8

( ஆனால், அதிகத்திற்கு உபதேசமிருப்பதால் பாதராயணருக்கு இவ்விதம், அவ்விதம் காண்பதால் )

**तुल्यं तु दर्शनम् ॥९॥**

துல்யம் து த$_2$ர்சநம் 9

( பார்க்கப்படுவதோ ஸமானம் )

**असार्वत्रिकी ।।१०।।**

அஸார்வத்ரிகீ 10

( எங்கேயுமுள்ளதல்ல )

**विभागः शतवत् ।।११।।**

விபா$_4$க$_3$: சதவத் 11

( பிரித்தல் நூறைப்போல் )

**अध्ययनमात्रवतः ।।१२।।**

அத்$_4$யயநமாத்ரவத: 12

( அத்யயனம் மாத்திரமுள்ளவனுக்கு )

**नाविशेषात् ।।१३।।**

நாவிசேஷாத் 13

( இல்லை குறிப்பிடாததினால் )

**स्तुतयेऽनुमतिर्वा ।।१४।।**

ஸ்துதயேஅனுமதிர்வா 14

( அல்லது, ஸ்துதிப்பதற்காக அனுமதி )

**कामकारेण चैके।।१५।।**

காமகாரேண சைகே 15

( இஷ்டப்படி செய்வதாலும் சிலர் )

**उपमर्दं च ।।१६।।**

உபமர்த$_3$ம் ச 16

( நசுக்குதலும் )

**ऊर्ध्वरेतःसु च शब्दे हि ।।१७।।**

ஊர்த்$_4$வரேத:ஸு ச சப்$_3$தே$_3$ ஹி 17

( ஊர்த்வரேதஸ்களிலும், சப்தத்தில் இருக்கிறதே )

ஆத்மக் ஞானம் கர்மாவுக்கு அங்கமாகுமா? என்பது இங்கு விஷயம்.

**क्रत्वर्थमात्मविज्ञानं स्वतन्त्रं वाऽऽत्मनो यतः ।**
**देहातिरेकमज्ञात्वा न कुर्यात्क्रतुगं ततः ।। १ ।।**
**नाद्वैतधीः कर्महेतुर्हन्ति प्रत्युत कर्म सा ।**
**आचारो लोकसंग्राही स्वतन्त्रा ब्रह्मधीस्ततः ।। २ ।।**

க்ரத்வர்த$_2$மாத்மவிஜ்ஞாநம் ஸ்வதந்த்ரம் வாஆத்மநோ யத:।
தே$_3$ஹாதிரேகமஜ்ஞாத்வா ந குர்யாத்க்ரதுக$_3$ம் தத: ।। 1
நாத்$_3$வைததீ$_4$: கர்மஹேதுர்ஹந்தி ப்ரத்யுத கர்ம ஸா ।
ஆசாரோ லோகஸங்க்$_3$ராஹீ ஸ்வதந்த்ரா ப்$_3$ரஹ்மதீ$_4$ஸ்தத: ।। 2

(அ..ம்)
ஆத்மாவை அறிதல் யாகத்திற்காகவா? அல்லது ஸ்வதந்திரமா? ஆத்மா தேஹத்தை விட வேறு என்று அறியாமல் (யாகத்தை) செய்ய முடியாது என்பதினுல் (ஆத்மக் ஞானம்) கர்மாவுக்காகத்தான்.
இரண்டாவதற்றதையறிவது கர்மாவுக்குக் காரணமாகாது. மேலும் அது கர்மாவையே நாசம் செய்து விடும். ஆசாரமிருப்பது லோக ஸங்கிரஹத்திற்காக. ஆகையால் பிரஹ்மஞானம் ஸ்வதந்திரமே.
(வி..ம்)
பூர்வபக்ஷம் :
இந்த சரீரத்தை விட ஆத்மா என்பது வேறு அதுவே பரலோகம் போகிறது என்ற நிச்சயமில்லையானுல் ஜ்யோதிஷ்டோமம் முதலான கர்மாக்களில் பிரவிருத்தியே ஏற்படாது. ஆகையால் யாகாதிகளில் பிரவிருத்திக்கச் செய்யும் தன்மை உள்ளதால், ஆத்மக்ஞானம் கர்மாக்களுக்கு அங்கம் தான்.

ஸித்தாந்தம் :
தேஹத்திற்கு வேருயுள்ள ஆத்மாவை அறிதல் இரண்டு விதம் : பரலோகம் போகிறவனுய், கர்மாக்களைச் செய்கிறவனுய், இருக்கிறவன் ஆத்மாவென்று அறிவது ஒரு விதம். பிரஹ்மமே ஆத்மாவின் வாஸ்தவமான ஸ்வரூபம் என்று அறிவது இரண்டாவது விதம். இவைகளில் முதலில் சொன்ன செய்கிறவன் ஆத்மா என்று அறிவது கர்மாவில் பிரவருத்தியுண்டு பண்ணுமேயாணுலும் இரண்டாவதான ஆத்மாவின் ஸ்வரூபம் இரண்டாவதற்ற பிரஹ்மமேயென்று அறிதல் கர்மாவில் பிரவிருத்திக்கச் செய்யாது. தவிரவும் அது செயல் செயலுக்கு உதவுகிறவைகள், செயலின் பலன், எல்லாவற்றையும் மறுத்து விடுமானதினுல், கர்மாவிலிருந்து விலகும்படித்தான் செய்யும். தத்வத்தையறிந்தவர்களாயிருந்தும் ஜனகர் முதலானவர்களிடம் கர்மாவில் பிரவிருத்தி ரூபமான ஆசாரம் காணப்படுகிறதே? என்ருல் வாஸ்தவம். ஆனுல் அந்த ஆசாரம் லோக ஸங்கிரஹத்திற்காகவே தவிர வேறில்லை. மேலும் தத்வத்தையறிந்தவர்களுக்குக் கூட முக்தியின் பொருட்டு கர்மாக்கள் அனுஷ்டிக்க வேண்டியவை தான் என்றிருந்தால் "किं प्रजया करिष्यामो येषां नोऽयमात्माऽयं लोक:" "எந்த எங்களுக்கு இந்த ஆத்மாவே இந்த லோகமோ, அந்த நாங்கள் பிரஜையைக் கொண்டு என்ன செய்ய வேண்டும்" என்பது முதலிய வாக்கியங்களில் பிரஜை முதலியது பிரயோஜனமற்றதென்று சொல்லும்

சுருதி எப்படி பொருத்தமாகும்? ஆத்ம தத்வ ஸ்வரூபமாயுள்ள லோகம் பிரத்யக்ஷமாக இருக்கும் போது ஆத்மாவல்லாத லோகத்திற்கு ஸாதனமாயுள்ள பிரஜை வீண் என்று சொல்கிறது. அப்படியே "**किमर्था वयमध्येष्यामहे, किमर्था वयं यक्ष्यामहे**" "நாங்கள் என்ன பிரயோஜனத்திற்காக அத்யயனம் செய்ய வேண்டும்? எந்த பிரயோஜனத்தையுத்தேசித்து நாங்கள் யாகம் செய்ய வேண்டும்? என்பது முதலியதையும் எடுத்துக் கொள்ள வேண்டும். ஆகையால் ஆத்ம தத்வக்ஞானம் ஸ்வதந்திரமான புருஷார்த்த ஸாதனமே தவிர, கர்மாவுக்கு அங்கமல்ல.

# २.परामर्शाधिकरणम्

## 2.பராமர்சாதிகரணம்

(ஸூத்ரம் 18 - 20)

**परामर्श जैमिनिरचोदना चापवदति हि ।।१८।।**

பராமர்சம் ஜைமினிரசோத₃நா சாபவத₃தி ஹி 18

( பராமர்சம் என்று ஜைமினி,விதியுமில்லை, நிந்தையிருக்கிறதே)

**अनुष्ठेयं बादरायणः साम्यश्रुतेः ।।१९।।**

அனுஷ்டேயம் பா₃த₃ராயண: ஸாம்யச்ருதே: 19

( அனுஷ்டிக்கவேண்டியது என்று பாதராயணர், ஸமமாக சொல்லியிருப்பதால் )

**विधिर्वा धारणवत् ।।२०।।**

விதி₄ர்வா தா₄ரணவத் 20

( அல்லது விதி, தாரணம்போல )

முன் அதிகரணத்தில் ஆத்மக்ஞானம் ஸ்வந்திரம் என்று சொல்லப்பட்டது. அந்த ஞானம் ஸித்திப்பது ஊர்தவரேதஸ்களாய் இருக்கக் கூடிய ஆசிரமங்களில் தான் ஸுலபம். அவ்விதம் ஆசிரமம் உண்டாவென்பது இங்கே விசாரிக்கப்படுகிறது.

(1) முதல் வர்ணகம் :

**नास्त्यूर्ध्वरेताः किंवाऽस्ति नास्त्यसावविधानतः ।**
**वीरघातो विधेः क्लृप्तावन्धपङ्ग्वादिगा स्मृतिः ।। ३ ।।**
**अस्त्यपूर्वविधेः क्लृप्तेर्वीरहाऽनग्निको गृही ।**
**अन्धादेः पृथगुक्तत्वात् स्वस्थानां श्रूयते विधिः ।। ४ ।।**

நாஸ்த்யூர்த்₄வரேதா: கிம்வாஅஸ்தி நாஸ்த்யஸாவவிதா₄நத: ।
வீரகா₄தோ விதே₄: க்லுப்தாவந்த₄பங்க்₃வாதி₃கா₃ ஸ்ம்ருதி: ।। 3
அஸ்த்யபூர்வவிதே₄: க்லுப்தேர்வீரஹாஅநக்₃நிகோ க்₃ருஹீ ।
அந்தா₄தே₃:ப்ருத₂கு₃க்தத்வாத் ஸ்வஸ்தா₂நாம் ச்ரூயதே விதி₄: ।।4

(அ..ம்)

ஊர்த்வரேதஸ் (ஆசிரமம்) கிடையாதா? அல்லது உண்டா? விதிக்கப்படாததினுல் அது கிடையாது. விதியை கல்பிப்பதாளுல் "வீரகாதம்" (என்ற தோஷம் வரும்). ஸ்மிருதி குருடு நொண்டி முதலானவர்களைப் பொருத்தது.

புதிதாக விதியை கல்பிக்க முடியுமானதிளுல் (அந்த ஆசிரமம்) உண்டு. "வீரகாதம்" (என்ற தோஷம்) கிரஹஸ்தளுயிருந்து கொண்டு அக்னியை விட்டவனுக்குத் தான். குருடு முதலியவர்களை தனியாகச் சொல்லியிருப்பதால் ஸ்வஸ்தமாக (தன் நிலையில்) இருப்பவர்களுக்கும் விதி சொல்லப்பட்டிருக்கிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

சாந்தோக்யத்தில் "**त्रयो धर्मस्कन्धाः। यज्ञोऽध्ययनं दानमिति प्रथमः। तप एव द्वितीयः। ब्रह्मचार्याचार्यकुलवासी तृतीयः**" "தர்ம ஸ்கந்தங்கள் (நிலைகள்) மூன்று. யக்ஞும், அத்யயனம், தானம் இவை முதலாவது, தபஸ் தான் இரண்டாவது, குருவின் குலத்திலேயே இருந்து விடும் பிரஹ்மசாரீ மூன்ருவது" என்று சொல்லியிருக்கிறது. இதில் யக்ஞும் முதலானதிளுல் குறிக்கப்படும் கிரஹஸ்தாசிரமம், தபஸ் என்ற சப்தத்திளுல் குறிக்கப்படும் வானபிரஸ்தாசிரமம், நைஷ்டிகபிரஹ்மசர்யாசிரமம் என்று மூன்று பாத்திரம் தான் சொல்லப்பட்டிருக்கிறது. நான்காவது ஆசிரமத்திற்கு விதி இல்லை. புதிதாக பிரயோஜனத்தையுத்தேசித்து விதியை கல்பிக்கலாமோயென்ருல் "**वीरहा वा एष देवानां योऽग्निमद्वासयते**" "எவன் அக்னியை விட்டு விடுகிருனே அவர் தேவர்களுக்கு வீரஹத்தி செய்வதவளுவான்" என்று அக்னியை விடுவதென்பதிளுல் குறிக்கப்படும் கிருஹஸ்தாசிரம பரித்யாகம் நிந்திக்கப் பட்டிருப்பதால் விதி கல்பிக்க முடியாது. ஸ்மிருதியில் "ஆசிரமங்கள் நான்கு" "**चत्वार आश्रमाः**" என்று சொல்லியிருக்கிறதேயென்ருல், கிருஹஸ்த தர்மானுஷ்டானத்திற்கு அதிகாரமில்லாத குருடு, நொண்டி முதலானவர் விஷயமாக அது ஏற்பட்டது. ஆஜ்யத்தை (நெய்யை) கண்ணுல் பார்க்கும்படி உள்ள கர்மாவில், குருடனுக்கு அதிகாரமில்லை. அப்படி விஷ்ணுகிரமம் முதலிய தாண்டுதலை அபேக்ஷிக்கும் கர்மாவில், கால் இல்லாதவனுக்கு அதிகாரமில்லை. இவர்கள் போலுள்ளவர்களை உத்தேசித்து அந்த விதி. கண் முதலியது நன்ருய் இருப்பவனுக்கு ஆத்மக்ஞானத்திற்கு உபயோகப்படக் கூடியதாக ஊர்த்வரேதஸ் ஆசிரமம் கிடையாது.

ஸித்தாந்தம் :

ஊர்த்வரேதஸ் ஆசிரமம் உண்டு. விதி காணப்படவில்லையாலுைம் அபூர்வமான பிரயோஜனமிருப்பதால் விதியை கல்பித்துக் கொள்ள முடியும். வீரஹத்தி தோஷம் சொன்னது அக்னியை விட்ட கிருஹஸ்தன் விஷயமாகத்தான். குருடு முதலானவர்களுக்கென்று சொன்னதும் தவறு. "अथ पुनरव्रती व्रती वा, स्नातकोऽस्नातको वा, उत्सन्नाग्निरमग्निको वा, यदहरेव विरजेत्तदहरेव प्रव्रजेत्" "இனியும் விரதமற்றவனோ, விரதமுள்ளவனோ, ஸ்நாதகனோ, ஸ்நாதகன் அல்லாதவனோ, அக்னியை இழந்தவனோ, அக்னியேயில்லாதவனோ, எந்த தினத்தில் வைராக்கியமடைகிறானோ, அந்த தினமே வெளிக்கிளம்பலாம்" என்று கிருஹஸ்தாசிரமத்தில் அதிகாரமில்லாதவர்களுக்கும் கூட தனியாக ஸன்னியாஸம் விதிக்கப் பட்டிருப்பதால். மேலும் கண் முதலியது சரியாயிருப்பவர்களுக்கு வேறு ஆசிரமம் விஷயமாக விதியை கல்பிக்க அவசியமில்லை. ஜாபால சுருதியில்" ब्रह्मचर्यं समाप्य गृही भवेत्, गृहाद्वनी भूत्वा प्रव्रजेत्" "பிரஹ்மசர்யத்தை முடித்துக் கொண்டு கிருஹஸ்தனுக ஆக வேண்டும், கிருஹஸ்தத்திலிருந்து வானப்ரஸ்தனுக ஆகி ஸன்னியாஸி ஆக வேண்டும்" என்று நேராகவே விதி காணப்படுவதால் வேறு ஆசிரமம் உண்டு.

(2) இரண்டாவது வர்ணகம் :

लोककाम्याश्रमी ब्रह्मनिष्ठामर्हति वा न वा ।
यथावकाशं ब्रह्मैव ज्ञातुमर्हत्यवारणात् ।। ५ ।।
अनन्यचित्तता ब्रह्मनिष्ठाऽसौ कर्मठे कथम् ।
कर्मत्यागी ततो ब्रह्मनिष्ठामर्हति नेतरः ।। ६ ।।

லோககாம்யாச்ரமீ ப்$_3$ரஹ்மநிஷ்டாமர்ஹதி வா ந வா ।
யதா$_2$வகாசம் ப்$_3$ரஹ்மைவ ஜ்ஞாதுமர்ஹத்யவாரணாத் ।। 5
அனன்யசித்ததா ப்$_3$ரஹ்மநிஷ்டாஅஸௌ கர்மடே கத$_2$ம் ।
கர்மத்யாகீ$_3$ ததோ ப்$_3$ரஹ்மநிஷ்டாமர்ஹதி நேதர: ।। 6

(அ..ம்)

லோகத்தில் ஆசையுள்ள ஆசிரமி பிரஹ்ம நிஷ்டைக்கு தகுந்தவனு? அல்லது இல்லையா? தடுக்கப்படாததினுல் இவனும் அவகாசம் கிடைப்பதை ஒட்டி பிரஹ்மத்தையறிய தகுதியுள்ளவன்.

பிரஹ்ம நிஷ்டை என்பது வேறு எதிலும் போகாதிருத்தல். இது கர்மாவில் ஈடுபட்டவனிடம் எப்படி இருக்க முடியும்? ஆகையால்

கர்மாவை விட்டவன் தான் பிரஹ்ம வித்யைக்கு தகுந்தவன், வேறு யாருமில்லை.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"त्रयो धर्मस्कन्धाः" "தர்ம ஸ்கந்தங்கள் மூன்று" என்றவிடத்தில் ஆசிரமங்களைப் பற்றி "सर्व एत पुण्यलोका भवन्ति" "இவர்கள் எல்லாரும் புண்ணிய லோகத்தை அடைகிறவர்கள்" என்று ஆசிரம தர்மங்களை அனுஷ்டிப்பவர்களுக்கு புண்ணிய லோகத்தைச் சொல்லிவிட்டு "ब्रह्मसंस्थोऽमृतत्वमेति" என்று "பிரஹ்ம நிஷ்டையுள்ளவன் மரணமற்ற தன்மையை அடைகிறுன்" என்பதினுல் மோக்ஷத்திற்கு ஸாதனமாக பிரஹ்ம நிஷ்டை சொல்லப்பட்டிருக்கிறது. இந்த பிரஹ்ம நிஷ்டை புண்ணிய லோகத்தை விரும்பும் ஆசிரமிகளுக்கும் கூட ஏற்படலாம். ஆசிரம கர்மாக்களை அனுஷ்டித்து விட்டு அவகாசமுள்ள போது பிரஹ்ம நிஷ்டையை செய்து கொள்வது சிரமமில்லை. மேலும் லோகத்தை விரும்புகிறவன் பிரஹ்மத்தை அறியக்கூடாது என்று எங்கும் தடுக்கப்படவில்லை. ஆகையால் எல்லா ஆசிரமிகளுக்கும் பிரஹ்மநிஷ்டை உண்டு.

ஸித்தாந்தம் :

பிரஹ்ம நிஷ்டை என்பது எல்லா வித வியாபாரங்களையும் விட்டு விட்டு வேறு எதிலும் சித்தம் செல்லாமல் பிரஹ்மத்தினிடத்திலேயே கடைசியாக இருத்தல். கர்மாவை அனுஷ்டிப்பதும் கர்மாவை விட்டு விடுவதும் ஒன்றுக்கொன்று நேர் விரோதமாயிருப்பதால், கர்மாவில் முழைந்து இருப்பவனிடம் இது ஸம்பவிக்காது. ஆகையால் கர்மாவை விட்டவனுக்குத் தான் பிரஹ்ம நிஷ்டை.

## ३.स्तुतिमात्राधिकरणम्

## 3.ஸ்துதிமாத்ராதி₄கரணம்

(ஸூத்ரம் 21,22)

**स्तुतिमात्रमुपादानादिति चेन्नापूर्वत्वात् ।।२१।।**

ஸ்துதிமாத்ரமுபாதா₃நாதி₃தி சேந்நாபூர்வத்வாத் 21

( ஸ்துதிமாத்திரம் எடுத்துக்கொள்வதால், என்றால் இல்லை, அபூர்வமாயிருப்பதால் )

**भावशब्दाच्च ।।२२।।**

பா₄வசப்₃தா₃ச்ச 22

( விதி சப்தமுள்ளதாலும் )

உத்கீதத்தின் அவயவமாகிற ஓங்காரத்திற்கு "ரஸதமத்வம்" (மிகவும் ரஸமுள்ளதாகவிருக்கும் தன்மை) முதலிய குணங்கள்" **स एष रसानां रसतम: परम:**""அந்த இது ரஸங்களுக்கெல்லாம் உத்தமமாயுள்ள ரஸதமம்" என்பது முதலான வாக்கியத்தினால் சொல்லப்படுகின்றன. இது வெறும் ஸ்தோத்ரம் தானு? த்யானத்தில் சேர்த்துக் கொள்ள வேண்டியதா? என்பது இங்கு விஷயம்.

**स्तोत्रं रसतमत्वादि ध्येयं वा गुणवर्णनात् ।**
**जुहूरादित्य इत्यादाविव कर्माङ्गसंस्तुतिः ।। ७ ।।**
**भिन्नप्रकरणस्थत्वान्नाङ्गविध्येकवाक्यता ।**
**उपासीतेति विध्युक्तेर्ध्येयं रसतमादिकम् ।। ८ ।।**

ஸ்தோத்ரம் ரஸதமத்வாதி$_3$ த்$_4$யேயம் வா கு$_3$ணவர்ணநாத் ।
ஜு$_3$ஹூராதி$_3$த்ய இத்யாதா$_3$விவ கர்மாங்க$_3$ஸம்ஸ்துதி: ।। 7
பி$_4$ந்நப்ரகரணஸ்த$_2$த்வாந்நாங்க$_3$வித்$_4$யேகவாக்யதா ।
உபாஸீதேதி வித்$_4$யுக்தேர்த்$_4$யேயம் ரஸதமாதி$_3$கம் ।। 8

(அ..ம்)

ரஸதமத்வம் முதலியது ஸ்தோத்ரமா? அல்லது தியானிக்க வேண்டியதா? ஜுஹூ ஆதித்யன் என்பது முதலியதில் போல குணம் வர்ணிக்கப்பட்டிருப்பதால், கர்மாவின் அங்கமாயுள்ளதற்கு ஸ்தோத்ரம் தான்.

வேறு பிரகரணத்திலிருப்பதால், அங்கத்தை விதிக்கும் வாக்கியத்துடன் ஒரே வாக்கியமாகும் தன்மை கிடையாது. மேலும் உபாஸிக்கவும் என்று விதியும் சொல்லப்பட்டிருப்பதால் ரஸதமம் முதலியது தியானிக்க வேண்டியதே.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"**इयमेव जुहूरादित्य: कूर्म: स्वर्लोक:**" "இந்த ஜுஹூவே ஆதித்யன், கூர்மம், ஸ்வர்க்க லோகம்" என்பது முதலிய இடங்களில் ஜுஹூ முதலியவைகளை ஆதித்யன் முதலானதாக எப்படி ஸ்தோத்ரம் செய்யப்படுகிறதோ, அப்படியே இங்கே ரஸதமத்வம் முதலான குணங்களைக் கொண்டு ஓங்காரம் ஸ்துதி செய்யப்படுகிறது. அவை தியானம் செய்ய வேண்டியவையல்ல.

ஸித்தாந்தம் :

திருஷ்டாந்தம் சரியில்லை. ஜுஹூ ஆதித்யன் என்பது முதலியது ஜுஹூவை விதிக்கும் பிரகரணத்திலேயே சொல்லப்படுவதால் அதற்கு ஸ்தோத்ரமாய் இருக்கட்டும். இங்கே ரஸதமத்வம் முதலியது உபநிஷத்தில் சொல்லப்பட்டு இருப்பதால், கர்ம பிரகரணத்தில் சொல்லப்படும் உத்கீதத்தை விதிக்கும் வாக்கியத்துடன் ஒரே வாக்கியமாகாததினால் இது ஸ்தோத்ரம் அல்ல. மேலும் "ओमित्येतदक्षरमुद्गीथमुपासीत" "ஓம் என்ற இந்த உத்கீத அக்ஷரத்தை உபாஸிக்கவும்" என்று ஸமீபத்திலேயே இருக்கிற உபாஸனையை விதிக்கும் வாக்கியத்தோடு தான் ஒரே வாக்கியமாக சேரக்கூடியதானதினால் ரஸதமத்வம் முதலிய குணங்கள் அவ்வுபாஸனையில் தியானிக்க வேண்டியவை தான்.

## ४.पारिप्लवाधिकरणम्

## 4.பாரிப்லவாதி₄கரணம்

(ஸூத்ரம் 23,24)

**पारिप्लवार्था इति चेन्न विशेषितत्वात् ।।२३।।**

பாரிப்லவார்தா₂ இதி சேந்ந விசேஷிதத்வாத் 23

( பாரிப்பிலவத்திற்காக என்றால் சரியல்ல, குறிப்பிடப்பட்டிருப்பதால் )

**तथा चैकवाक्यतोपबन्धात् ।।२४।।**

ததா₂ சைகவாக்யதோபப₃ந்தா₄த் 24

( அப்படியே ஒரே வாக்கியத்தன்மை சேருமானதால் )

உபநிஷத்துக்களில் "अथ ह याज्ञवल्क्यस्य द्वे भार्ये बभुवतु:" "இனி யாஜ்ஞவல்க்யருக்கு இரண்டு பார்யைகள் இருந்தார்கள்" "जनको ह वैदेह आसांचक्रे" "ஜனகர் என்ற வைதேஹர் (ஸதஸில்) உட்கார்ந்து கொண்டிருந்தார்" என்று முதலான கதைகள் சொல்லப்படுகின்றன. அவைகளுக்கு உபயோகம் என்ன? என்பது இங்கே விஷயம்.

**पारिप्लवार्थमाख्यानं किं वा विद्यास्तुतिः स्तुतेः ।**
**ज्यायोऽनुष्ठानशेषत्वं तेन पारिप्लवार्थता ।। ९ ।।**
**मनुर्वैवस्वतो राजेत्येवं तत्र विशेषणात् ।**
**अत्र विद्यैकवाक्यत्वभावाद्विद्यास्तुतिर्भवेत् ।। १० ।।**

பாரிப்லவார்த₂மாக்₂யாநம் கிம் வா வித்₃யாஸ்துதி: ஸ்துதே: ।
ஜ்யாயோஅனுஷ்டா₂நசேஷத்வம் தேந பாரிப்லவார்த₂தா ।। 9
மனுர்வைவஸ்வதோ ரா ஜேத்யேவம் தத்ர விசேஷணாத் ।

அத்ர வித்₃யைகவாக்யத்வபா₄வாத்₃வித்₃யாஸ்துதிர்ப₄வேத் ।। 10

(அ..ம்)

கதை சொல்வது பாரிப்லவதிற்காகவா? அல்லது வித்தையின் ஸ்துதியா? ஸ்துதியை விட அனுஷ்டானத்திற்கு சேஷமாயிருப்பது சிலாக்கியம். ஆகையால் பாரிப்லவத்திற்காகத் தான்.

"விவஸ்வானுடைய புத்திரர் மனுராஜன்" என்று இவ்விதம் அங்கே குறிப்பிடப் பட்டிருப்பதாலும் இங்கே வித்தையோடு ஒரே வாக்கியமாகும் தன்மை இருப்பதாலும், வித்தையின் ஸ்துதி தான் ஆகும்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

அசுவமேத யாகத்தில் ராத்திரி வேளைகளில் ராஜனை குடும்ப ஸஹிதமாக உட்கார்த்தி அவன் முன் நிலையில் வேதத்திலுள்ள கதைகள் அத்வாயுவினுல் சொல்லப்பட வேண்டும். இது தான் "**पारिप्लवमाचक्षीत**" "பாரிப்லவத்தைச் சொல்லவும்" என்ற வாக்கியத்தினுல் விதிக்கப்படும் பாரிப்லவம் என்ற கர்மா அதைப் பிரயோஜனமாக உள்ளவைகள் ஆனுல், உபநிஷத்திலுள்ள கதைகள் அனுஷ்டானத்திற்கு உபயோகப் படுவதாக ஆகும். வெறும் வித்யையின் ஸ்தோத்ரம் என்பதை விட அனுஷ்டானம் சிலாக்கியமே. ஆகையால் அவை பாரிப்லவத்திற்காகத் தான்.

ஸித்தாந்தம் :

முதல் நாளில் "**मनुर्वैवस्वतो राजा**" "வைவஸ்வத மனுராஜன்", இரண்டாவது நாளில் "**यमो वैवस्वतो राजा**" "வைவஸ்வதனுன யமன்ராஜன்" என்பது முதலான கதைகள் பாரிப்லவத்திற்காகவென்று குறிப்பிடப் பட்டிருக்கின்றன. ஆகையால் உபநிஷத்திலுள்ள கதைகள் அதற்கு சேஷமாக ஆகாது. மேலும் ஸமீபத்தில் சொல்லப்படும் வித்தைக்கு ஸ்துதியென்ற முறையில் வித்யா வாக்கியத்துடன் ஒரே வாக்கியமாயிருக்கும் தன்மை நன்கு காணப்படுகிறது.ஆகையால் உபநிஷத் திலுள்ள கதைகள் அந்தந்த வித்தைகளின் ஸ்துதிக்காகவே தவிர பாரிப்லவத்திற்காக அல்ல.

## ५.अग्नीन्धनाद्यधिकरणम्

## 5.அக்₃நீந்த₄நாத்₃யதி₄கரணம்

(ஸூத்ரம் 25)

## अत एव चाग्नीन्धनाद्यनपेक्षा ।।२५।।
அத ஏவ சாக்₃நீந்த₄நாத்₃யநபேக்ஷா 25
( இதினாலேயே அக்னி இந்தனம் முதலியதிற்கு அபேக்ஷையில்லை )

அப்படியானல் ஆத்மக்ஞானத்திற்கு கர்மாவின் அபேக்ஷை கிடையாதா? என்பது இங்கு விஷயம்.

आत्मबोधः फले कर्मापेक्षो नोवा ह्यपेक्षते ।
अंगिनोऽङ्गेष्वपेक्षायाः प्रयाजादिषु दर्शनात् ।। ११ ।।
अविद्यातमसोर्ध्वस्तौ दृष्टं हि ज्ञानदीपयोः ।
नैरपेक्ष्यं ततोऽत्रापि विद्या कर्मानपेक्षिणी ।। १२ ।।

ஆத்மபோ₃த₄: ப₂லே கர்மாபேக்ஷோ நோவா ஹ்யபேக்ஷதே ।
அங்கி₃நோஅங்கே₃ஷ்வபேக்ஷாயா: ப்ரயாஜாதி₃ஷு த₃ர்சநாத் ।।11
அவித்₃யாதமஸோர்த்₃வஸ்தெள த்₃ருஷ்டம் ஹி ஜ்ஞாநதீ₃பயோ:।
நைரபேக்ஷ்யம் ததோஅத்ராபி வித்₃யா கர்மாநபேக்ஷிணீ ।। 12

(அ..ம்)

ஆத்மக்ஞானம் பலனைக் கொடுக்கும் விஷயத்தில் கர்மாவை அபேக்ஷிக்கிறதா? அல்லது இல்லையா? அங்கியாயுள்ளதற்கு அங்கங்கள் விஷயத்தில் அபேக்ஷை இருப்பதாக பிரயாஜம் முதலியவைகளில் காணுவதால் (இங்கேயும்) அபேக்ஷிக்கிறது.

அறியாமை, இருட்டு இவ்விரண்டையும் போக்கடிப்பதில் ஞானத்திற்கும், தீபத்திற்கும் வேறு எதையும் அபேக்ஷிக்காத தன்மை பிரஸித்தமாய் காணப் படுகிறது. ஆகையால் இங்கேயும் ஆத்மக்ஞானம் கர்மாவை அபேக்ஷிக்கிறதில்லை.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

முதல் அதிகரணத்தில் வித்யையானது ஸ்வதந்திரமான புருஷார்த்தத்தை பலனுகவுடையதென்று காட்டினதினுல் கர்மாவுக்கு அங்கமாயிருக்கும் தன்மை கிடையாதென்று விலக்கப்பட்டது. அங்கமில்லாமல் போனுலும், அங்கியாக இருக்கலாமல்லவா? அது அங்கே நிராகரிக்கப்படவில்லை. ஆகையால் பிரஹ்ம தத்வக் ஞானமானது தனக்குள்ள பலனைக் கொடுக்கும் விஷயத்தில், தனக்கு அங்கமாயுள்ள கர்மாவை அபேக்ஷிக்கிறது. அங்கியாக இருப்பதால் தர்சபூர்ணமாஸம் பிரயாஜங்களை அபேக்ஷிப்பது போல.ஆகையால் ஞானம் கர்மாவை அபேக்ஷிக்கிறது.

ஸித்தாந்தம் :

பிரஹ்மக்ஞானமானது தனக்கு விரோதியாய் விலக்க வேண்டியதாய் உள்ளதை விலக்கும் விஷயத்தில் வேறு எதையும் அபேக்ஷிப்பது கிடையாது. பிரகாச ஸ்வரூபமாயிருப்பதால் தீபம் போலவும், குட விஷயமான ஞானம் போலவும். மேலும் ஆத்மக்ஞானம் அங்கியென்றால் எப்படி? பிரயாஜம் முதலியதைப் போல பலனையுண்டு பண்ணுவதில் உதவி செய்வதால் அவைகளுக்கு அங்கமாயிருக்கும் தன்மை எப்படியோ, அப்படி கர்மா ஞானத்திற்கு அங்கமா? அல்லது நெல்லைக் குத்துதல் போல ஸ்வரூபத்திற்கே உதவி செய்யும் முறையில் அங்கமா? முதலில் சொன்னபடியென்றால் மோக்ஷம் கர்மாவினால் உண்டு பண்ணக்கூடியதென்று ஏற்படுமானதினால் அநித்யம் என்று ஏற்பட்டுவிடும். பின் சொன்னபடியென்றால் திருஷ்டாந்தமே தவறு, குத்துதல் முதலியதிற்கு ஸ்வரூபத்தில் உதவி செய்யும் தன்மை பிரயாஜாதிகளுக்குக் கிடையாததினால். ஆகையால் ஆத்மக்ஞானம் ஏற்பட்டுவிட்டால் தன்னுடைய பலனாகிய மோக்ஷத்தைக் கொடுக்கும் விஷயத்தில் எவ்வித கர்மாவையும் அபேக்ஷிப்பதில்லை.

## ६.सर्वापेक्षाधिकरणम्

## 6.ஸர்வாபேக்ஷாதி₄கரணம்

(ஸூத்ரம் 26,27)

**सर्वापेक्षा च यज्ञादिश्रुतेरश्ववत् ।।२६।।**

ஸர்வாபேக்ஷா ச யஜ்ஞாதி₃ச்ருதேரச்வவத் ..26..

( எல்லாவற்றிற்கும் அபேக்ஷை, யக்ஞம் முதலான சுருதியினால், குதிரையைப்போல )

**शमदमाद्युपेतः स्यात्तथाऽपि तु तद्विधेस्तदङ्गतया तेषामवश्यानुष्ठेयत्वात् ।।२७।।**

சமத₃மமாத்₃யுபேத: ஸ்யாத்ததா₂அபி து தத்₃விதே₄ஸ்தத₃ங்க₃தயா தேஷாமவச்யாநுஷ்டேயத்வாத் ..27..

( அப்படியானாலும் சமம் தமம் முதலியதுடன் கூடினவனாய் இருக்கவேண்டும் அது விதிக்கப்பட்டிருப்பதால் அதற்கு அங்கமாக அவைகளுக்கும் அவசியம் அனுஷ்டிக்க வேண்டிய தன்மையுள்ளதால் )

அப்படியானால் ஆத்மக்ஞானத்திற்கு கர்மாவின் அபேக்ஷை ஒரு நாளும் கிடையாதா? என்பது இங்கு விஷயம்.

**उत्पत्तावनपेक्षेयमुत कर्माण्यपेक्षते ।**

**फले यथानपेक्षैवमुत्पत्तावनपेक्षता ।। १३ ।।**

**यज्ञशान्त्यादिसापेक्षं विद्याजन्म श्रुतिद्वयात् ।**
**हलेऽनपेक्षितोऽप्यश्वो रथे यद्वदपेक्ष्यते ।। १४ ।।**

**உத்பத்தாவநபேக்ஷயமுத கர்மாண்யபேக்ஷதே ।**
**ப₂லே யதா₂நபேக்ஷைவமுத்பத்தாவநபேக்ஷதா ।। 13**
**யஜ்ஞசாந்த்யாதி₃ஸாபேக்ஷம் வித்₃யாஜந்ம ச்ருதித்₃வயாத் ।**
**ஹலேஅநபேக்ஷிதோஅப்யச்வோ ரதே₂ யத்₃வத₃பேக்ஷ்யதே ।। 14**

(அ..ம்)

இந்த அபேக்ஷிக்காதிருத்தல் (ஞானம்) உண்டாவதிலா? அல்லது (உண்டாவதில் ஞானம்) கர்மாக்களை அபேக்ஷிக்கிறதா? பலன் விஷயத்தில் எப்படி அபேக்ஷையில்லையோ, அவ்விதமே உண்டாவதிலும் அபேக்ஷை கிடையாது.
வித்யை உண்டாவது இரண்டு சுருதிகளால் யக்ஞம் முதலியதையும், சாந்தி முதலியதையும், அபேக்ஷிக்கிறதாகவேயிருக்கிறது. கலப்பையில் (உழுவதற்கு) குதிரை அபேக்ஷிக்கப்படவில்லையானாலும் ரதத்தில் (இழுப்பதற்காக) அபேக்ஷிக்கப்படுகிறது எப்படியோ அப்படி.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிரஹ்மக்ஞானம்தன் பலன் விஷயத்தில் எப்படி கர்மாவை அபேக்ஷிக்கவில்லையோ, அப்படியே தான் உண்டாகும் விஷயத்தில் அபேக்ஷிக்காது. அப்படியில்லையானால் சிலஸமயம் அபேக்ஷிக்கிறது, சில ஸமயம் அபேக்ஷிக்கிறதில்லையென்றால், பாதியுவதி பாதிகிழவி என்பது போலாகும்.

ஸித்தாந்தம் :

அந்த தோஷத்திற்கு இங்கே இடமில்லை. ஒரே வஸ்து குறிப்பிட்ட கார்யங்களுக்கு அபேக்ஷிக்கப்படும், வேறு குறிப்பிட்ட கார்யங்களுக்கு அபேக்ஷிக்கப்படுவதில்லை என்பது உசிதத் தன்மையைப் பொருந்தி இருக்கிறது. கலப்பையை இழுப்பதில் குதிரை தேவையில்லையானாலும் ரதம் இழுக்கத் தேவைப்படுகிறது. அதைப் போலவே இங்கேயும். ஞானம் உண்டாகும் விஷயத்தில் கர்மாக்களை அபேக்ஷிக்கிறது என்றதில் பிரமாணம் இல்லாமல் போகவில்லை. **तमेतं वेदानुवचनेन ब्रह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसाऽनाशकेन**" "பிராஹ்மணர்கள் வேதாத்யயனம் செய்வதினாலும், யக்ஞத்தினாலும், தானத்தினாலும், நாசம் செய்யாத (அல்லது போஜனமில்லாத) தபஸினாலும், அந்த இவரை அறிய விரும்புகிறார்கள்" என்பதினால் பிரவிருத்தி ரூபமாயுள்ள வேதாத்யயனம் முதலியவைகளுக்கு அறிய வேண்டுமென்ற விருப்பத்தை

ஏற்படுத்துவது மூலமாக ஞானத்திற்கு வெளியிலுள்ள அங்கங்களான ஸாதனமாயிருக்கும் தன்மை தெரிய வருகிறது. அப்படியே "शान्तो दान्त उपरतस्तितिक्षुः समाहितो भूत्वाऽऽत्मन्येवाऽऽत्मानं पश्यति" "சாந்தி உடையவனாய், இந்திரிய நிக்ரஹமுள்ளவனாய், கர்மாக்களிலிருந்து விலகினவனாய் (குளிர் உஷ்ணம் முதலியவைகளை) ஸஹித்துக் கொள்பவனாய், நன்கு மனஸ் அடக்கமுள்ளனவனாய், ஆகி தன்னிடத்திலேயே பரமாத்மாவை பார்க்கிறான்" என்றதால் நிவிருத்தி ரூபமாயுள்ள சமம் தமம் முதலியவைகளுக்கு ஞானம் உண்டாகும் காலத்திலும் கூடவேயிருக்க வேண்டிய முறையில் உள் அங்கமான ஸாதனத் தன்மையும் தெரிய வருகிறது. ஆகையால் ஆத்மக்ஞானம், யக்ஞம் முதலியவைகளையும் சமம் முதலியவைகளையும் தான் உத்பத்தியாவதற்காக அபேக்ஷிக்கிறது.

## ७.सर्वान्नानुमत्यधिकरणम्

## 7.ஸர்வான்னானுமத்யதி₄கரணம்

(ஸூத்ரம் 28 - 31)

**सर्वान्नानुमतिश्च प्राणात्यये तद्दर्शनात् ।।२८।।**

ஸர்வான்னானுமதிச்ச ப்ராணாத்யயே தத்₃த₃ர்சநாத் ..28..

(எல்லாம் அன்னம் என்ற அனுமதிபிராணனுக்கு ஆபத்து வரும்போது, அப்படியே காண்பதால் )

**अबाधाच्च ।।२९।।**

அபா₃தா₄ச்ச ..29..

( பாதிக்காததினாலும் )

**अपिच स्मर्यते ।।३०।।**

அபிச ஸ்மர்யதே ..30..

( மேலும், ஸ்மரிக்கப்படுகிறது )

**शब्दश्चातोऽकामकारे ।।३१।।**

சப்₃த₃ச்சாதோஅகாமகாரே ..31..

( தனது இஷ்டப்படி செய்யக்கூடாதென்பதில் சப்தம் அதனாலும் )

பிராண வித்யையில் "न ह वा एवंविदि किंच नानन्नं भवति" "இவ்விதம் அறிகிறவன் விஷயத்தில் அன்னமல்லாதது எதுவும் இல்லை" அதாவது பிராணனை உபாஸிக்கிறவனால் சாப்பிடக்கூடாதது எதுவும் கிடையாது என்று கண்டிருக்கிறது. இதன் தாத்பர்யமென்னவென்பது இங்கே விஷயம்.

सर्वाशनविधिः प्राणविदोऽनुज्ञाऽथवाऽऽपदि ।
अपूर्वत्वेन सर्वान्नभुक्तिर्ध्यातुर्विधीयते ।। १५ ।।
श्वाद्यन्नभोजनाशक्तेः शास्त्राच्चाभोज्यवारणम् ।
आपदि प्राणरक्षार्थमेवानुज्ञायतेऽखिलम् ।। १६ ।।

ஸர்வாசநவிதி$_4$: ப்ராணவிதோ$_3$அநுஜ்ஞாஅத$_2$வாஆபதி$_3$ ।
அபூர்வத்வேந ஸர்வாந்நபு$_4$க்திர்த்$_4$யாதுர்விதீ$_4$யதே ।। 15
ச்வாத்$_3$யந்நபோ$_4$ஜநாசக்தே: சாஸ்த்ராச்சாபோ$_4$ஜ்யவாரணம் ।
ஆபதி$_3$ ப்ராணரக்ஷார்த$_2$மேவாநுஜ்ஞாயதேஅகி$_2$லம் ।। 16

(அ..ம்)

பிராண உபாஸகனுக்கு எல்லாம் சாப்பிடலாமென்று விதியா? அல்லது ஆபத் காலத்தில் அனுமதியா? எல்லா அன்னத்தையும் புஜிப்பது (வேறு பிரமாணத்திஞல் கிடைக்காத) புதிதாயிருப்பதால் உபாஸகனுக்கு விதிக்கப்படுகிறது.

நாய் முதலியதின் அன்னத்தை புஜிப்பது ஸாத்தியமில்லாததிஞலும், சாஸ்திரத்திஞல் சாப்பிடக் கூடாததைத் தடுத்திருப்பதிஞலும், பிராணனை ரக்ஷித்துக் கொள்வதற்காக மாத்திரம், ஆபத்துக் காலத்தில் எல்லாம் அனுமதிக்கப்பட்டிருக்கிறது.

(வி..ம்) ,

பூர்வபக்ஷம் :

எல்லாவற்றையும் அன்னமாக சாப்பிடலாமென்பது வேறு எந்த பிரமாணத்திலும் கிடைக்காமல் புதிதாக இருப்பதால் பிராணனை உபாஸிக்கிறவனுக்கு அது விதிக்கப்பட்டிருக்கிறது.

ஸித்தாந்தம் :

"यदिदं किंचाऽऽश्वभ्य आ कमिभ्य आ कीटपतङ्गेभ्यः तत्तेऽन्नम्" "நாய்கள் முதல், பூச்சிகள் முதல், புழு, பக்ஷிகள் முதல் எந்த இதெல்லாம் உண்டோ அது உனக்கு அன்னம்" என்று நாய் முதலியதின் அன்னம் உபாஸகனுக்கு சாப்பிட வேண்டியதாக விதிக்கப்பட்டதாக ஆகும். அவ்விதம் விதிக்கவோ முடியாது. எது சாப்பிடலாம் எது சாப்பிடக் கூடாதென்று பிரித்துக் காட்டும் சாஸ்திரம் எல்லா அன்னத்தையும் சாப்பிடலாமென்று விதியிருந்தால், பாதிக்கப்பட்டுவிடும்.ஆகையால் ஆபத்துக் காலத்தில் எவ்வளவு மட்டில் பிராணனை ரக்ஷிப்பதற்கு வேண்டியதோ அந்த மட்டில் நிஷித்தமான அன்னமாய் இருந்தாலும் அனுமதிக்கப்படுகிறது. அதஞல் தான் சாக்ராயணர் (உஷஸ்தி) என்ற முனிவர் பிராணன் போகும் ஸமயம் வந்த போது பழையதாக ஆகிவிட்ட யானை, யானைப்பாகஞல் சாப்பிட்டு மிச்சமாயுள்ள கொள்ளை சாப்பிட்டு

விட்டு, அந்த சூத்திரனுடைய பாத்திரத்திலிருந்த ஜலத்தை சாப்பிடவில்லை. அங்கே இரண்டு ஸம்பவங்களுக்கும் "न वा अजीविष्यमिमानखादन्" "நான் இவைகளை சாப்பிடாமலிருந்தால் ஜீவித்திருக்கமாட்டேன்"என்றும் "कामो म उदपानम्" "எனக்கு குடிக்க ஜலம் இஷ்டப்படி கிடைக்கும்" என்றும் அவரே காரணத்தைச் சொல்கிருர்.

ஆகையால் எல்லா அன்னத்தையும் சாப்பிடலாமென்பது ஆபத்துக் காலத்தில் அனுமதிக்கப்பட்டது தான்.

## ८.आश्रमकर्माधिकरणम्

## 8.ஆச்ரமகர்மாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 32 - 35)

**विहितत्वाच्चाऽऽश्रमकर्मापि ।।३२।।**

விஹிதத்வாச்சாஆச்ரமகர்மாபி ..32..

( விதிக்கப்பட்டிருப்பதாலும் ஆசிரம கர்மாவும் )

**सहकारित्वेन च ।।३३।।**

ஸஹகாரித்வேந ச ..33..

( உதவியாயிருப்பதினாலும் )

**सर्वथाऽपि त एवोभयलिङ्गात् ।।३४।।**

ஸர்வதா$_2$அபி த ஏவோப$_4$யலிங்கா$_3$த் ..34..

(எவ்விதமானாலும் அவைதான் இரண்டுவித லிங்கமிருப்பதால் )

**अनभिभवं च दर्शयति ।।३५।।**

அநபி$_4$ப$_4$வம் ச த$_3$ர்சயதி ..35..

( அபிபவமில்லாததையும் காட்டுகிறது )

முன் ஆருவது அதிகரணத்தில் ஆசிரம கர்மாக்கள் வித்யாஸாதனன்கள் என்று சொல்லப்பட்டது. அவைகளை ஆசிரம தர்மம் என்ற முறையில் ஒரு தரம், வித்யாஸாதனம் என்ற முறையில் இன்னொரு தரம் அனுஷ்டிக்க வேண்டுமா? என்பது விஷயம்.

**विद्यार्थमाश्रमार्थं च द्विःप्रयोगोऽथवा सकृत् ।**
**प्रयोजनविभेदेन प्रयोगोऽपि विभिद्यते ।। १७ ।।**
**श्राद्धार्थभुक्तया तृप्तिः स्याद्विद्यार्थेनाऽऽश्रमस्तथा ।**
**अनित्यनित्यसंयोग उक्तिभ्यां खादिरे मतः ।। १८ ।।**

வித்$_3$யார்த$_2$மாச்ரமார்த$_2$ம் ச த்$_3$வி:ப்ரயோகோ$_3$அதவா ஸக்ருத் ।
ப்ரயோஜ$_3$நவிபே$_4$தே$_3$ந ப்ரயோகோ$_3$அபி விபி$_4$த்$_3$யதே ।। 17
ச்ராத்$_3$தா$_4$ர்த$_2$பு$_4$க்த்யா த்ருப்தி: ஸ்யாத்$_3$வித்$_3$யார்தே$_2$நாஆச்ரமஸ்ததா$_2$।

அநித்யநித்யஸந்யோக₃ உக்திப்₄யாம் கா₂தி₃ரே மத: ।। 18

(அ..ம்)

வித்யைக்காகவும், ஆசிரமத்திற்காகவும் என்று இரண்டு தடவை பிரயோகமா? அல்லது ஒரே தடவை தானு? பிரயோஜனம் வெவ்வேறு ஆனதினுல் பிரயோகமும் வேறுபடும்.

சிராத்தத்திற்காக சாப்பிடுவதினுல் திருப்தியும் ஏற்படும். அப்படியே வித்யைக்காக செய்வதினுல் ஆசிரம தர்மமும் செய்யப்பட்டதாக ஆகும். காதிர விஷயத்தில் இரண்டு வசனங்களிருப்பதால் நித்யமானகர்மா நித்யமில்லாத கர்மா இரண்டிற்கும் சேர்க்கை ஸம்மதிக்கப் பட்டிருக்கிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

அறிய விருப்பமென்று சொன்ன வாக்கியத்தில் வித்யைக்குக் காரணமாய் சொல்லப்பட்ட யக்ஞும் முதலியவை எவை விதிக்கப்பட்டனவோ அவைகளே ஆசிரம தர்மங்களாக பூர்வ காண்டத்தில் விதிக்கப் பட்டிருக்கின்றன. அவைகளுக்கு இரண்டு வித பிரயோஜனமிருப்பதால், இரண்டு தடவை அனுஷ்டானம் அவசியம்.

ஸித்தாந்தம் :

சிராத்தத்திற்காக என்று போஜனம் செய்தால், தவிர்க்க முடியாமல் தானுகவே திருப்தியேற்படுவது எப்படியோ, அப்படியே வித்யைக்காக அனுஷ்டிக்கப்படும் கர்மாக்களினுல் ஆசிரம தர்மமும் ஸித்தித்து விடும். வித்யையைக் காரணமாகக் கொண்டு செய்வது காம்ய கர்மாவாகுமானதினுலும், ஆசிரம தர்மங்கள் நித்ய கர்மாவாயிருப்பதாலும்,ஒரே பிரயோகத்தில் நித்யம்,அநித்யம் என்ற இரண்டையும் சேர்ப்பது விரோதமென்று சொல்லக்கூடாது. ஏனென்ருல் இரண்டு விதமான வசனங்களின் பலத்தினுல் ஒரே கர்மாவுக்கு இரண்டு வித ரூபமும் பொருந்தும். "**खादिरो यूपो भवति। खादिरं वीर्यकामस्य यूपं कुर्वीत**" "கதிரமரத்தால் செய்வது யூபம் ஆகும் வீர்யத்தை (கருங்காலி) விரும்புகிறவனுக்கு கதிரமரத்தால் செய்யப்பட்ட யூபத்தை ஏற்படுத்தவும்" என்ற இடத்தில் இரண்டு வாக்கியங்கள் இருக்கும் பலத்தால் ஒரே வஸ்துவிற்கு நித்யமாயிருக்கும் தன்மையும், காம்யமா யிருக்கும் தன்மையும் எப்படி ஏற்படுகிறதோ அதைப் போல இங்கேயும். ஆகையால்இரண்டு விதமான யக்ஞும் முதலானவைகளுக்கு ஒரே தடவை தான் பிரயோகம்.

# ९.विधुराधिकरणम्

# 9.விது₄ராதி₄கரணம்

(ஸூத்ரம் 36 - 39)

**अन्तरा चापि तु तद्दृष्टेः ॥३६॥**

அந்தரா சாபி து தத்₃த்₃ருஷ்டே: 36

( நடுவில் இருப்பவனுக்கும் அதிகாரமுண்டு அவ்விதம் காண்பதால் )

**अपि च स्मर्यते ॥३७॥**

அபி ச ஸ்மர்யதே 37

( ஸ்மரிக்கவும்படுகிறது )

**विशेषानुग्रहश्च ॥३८॥**

விசேஷாநுக்₃ரஹச்ச 38

( விசேஷமான அனுக்கிரஹத்தினாலும் )

**अतस्त्वितरज्ज्यायो लिङ्गाच्च ॥३९॥**

அதஸ்த்விதரஜ்ஜ்யாயோ லிங்கா₃ச்ச 39

( ஆனால் இதைவிட மற்றது மேலானது, லிங்கத்தினாலும் )

முந்தின ஆசிரமத்தை முடித்த பிறகு ஏதேனும் காரணத்தினுல் மேலுள்ள ஆசிரமத்தை அடையாமலிருப்பவன் 'அனுசிரமி (ஆசிரமமில்லாதவன்) என்று சொல்லப்படுகிறுன். அவனுக்கு ஆத்ம ஞானம் ஏற்படுமா? என்பது விஷயம்.

**नास्त्यनाश्रमिणो ज्ञानमस्ति वा नैव विद्यते ।**
**धीशुद्ध्यर्थाश्रमित्वस्य ज्ञानहेतोरभावतः ॥ १९ ॥**
**अस्त्येव सर्वसंबन्धिजपादेश्चित्तशुद्धितः ।**
**श्रुताहि विद्या रैक्कादेराश्रमे त्वतिशुद्धता ॥ २० ॥**

நாஸ்த்யநாச்ரமிணோ ஜ்ஞாநமஸ்தி வா நைவ வித்₃யதே ।
தீ₄சுத்₃த்₄யர்தா₂ச்ரமித்வஸ்ய ஜ்ஞாநஹேதோரபா₄வத: ॥ 19
அஸ்த்யேவ ஸர்வஸம்பந்தி₄ஜபாதே₃ஷ்சித்தசுத்₃தி₄த: ।
ச்ருதாஹி வித்₃யா ரைக்வாதேராச்ரமே த்வதிசுத்₃த₄தா ॥ 20

(அ..ம்)

அனுசிரமிக்கு ஞானம் ஏற்படாதா? அல்லது உண்டா? ஞானத்திற்குக் காரணமாயிருக்கிற சித்தசுத்தியை பிரயோஜனமாயுள்ள ஆசிரமமுள்ளவனுய் இருத்தல் இல்லாததினுல் கிடைக்கவே கிடைக்காது.

எல்லாருக்கும் ஸம்பந்தப்பட்ட ஜபம் முதலியதால் சித்தசுத்தி ஏற்படுமானதினுல், உண்டு தான். ரைக்வர் முதலியோர்க்கு வித்யை

சொல்லப்படவில்லையா? ஆசிரமம் இருந்தாலோ அதிகமான சுத்தி உண்டாகும்.

(வி..ம்).

பூர்வபக்ஷம் :

சித்தசுத்திக்கு ஹேதுவாயுள்ள ஆசிரமித் தன்மை அனுசிரமியிடம் கிடையாததினுல் தத்வக்ஞானம் ஸம்பவிக்காது.

ஸித்தாந்தம் :

ஆசிரமத்தை எதிர்பாராமல் ஜபம் முதலியதும் சித்தசுத்திக்குக் காரணமாகுமானதினுல், அனுசிரமிக்கும் ஞானம் ஏற்படலாம். "जप्येनैव तु संसिध्येद्ब्राह्मणो नात्र संशयः" "பிராஹ்மணன் ஜபத்தினுலேயே நன்கு சித்தசுத்தியையடையலாம், இதில் ஸந்தேஹமில்லை" என்று ஸ்மிருதி சொல்கிறது. சுருதியும் விவாஹத்தை அபேக்ஷிக்கும் ரைக்வருக்கு அனுசிரமியாயிருந்த போதிலும் ஸம்வர்க்க வித்யையில் அதிகாரமிருந்ததாகக் காட்டுகிறது. இவ்விதமே ஆசிரமமில்லாத கார்க்கீ முதலானவர்களையும் எடுத்துக் கொள்ளலாம். இதனுல் ஆசிரமம் வீண் என்று ஆகாது. அதற்கு மிகவும் சுத்தியை ஏற்படுத்தும் காரணத் தன்மையிருப்பதால். ஆகையால் அனுசிரமிக்கும் ஞானம் ஸம்பவிக்கும் தான்.

## १०.तद्भूताधिकरणम्

## 10.தத்₃பூ₄தாதி₄கரணம்

(ஸூத்ரம் 40)

**तद्भूतस्य तु नातद्भावो जैमिनेरपि नियमातद्रूपाभावेभ्यः ।।४०।।**

தத்₃பூ₄தஸ்ய து நாதத்₃பா₄வோ ஜைமிநேரபி
நியமாதத்₃ரூபாபா₄வேப்₃ப்₄ய: ..40..

( அவ்விதமானவனுக்கோ அவ்விதமில்லாத தன்மை கிடையாது. ஜைமினிக்கும், நியமமிருப்பதினாலும், அதுபோலில்லாததாலும், இல்லாததினாலும் )

மேல் ஆசிரமம் போய்விட்டு மறுபடியும் கீழே இறங்கலாமா, தன் இஷ்டப்படி? என்பது இந்த அதிகரணத்தில் விசாரிக்கப்படுகிறது.

अवरोहोऽस्त्याश्रमाणां न वा रागात्स विद्यते ।
पूर्वधर्मश्रद्धया वा यथाऽऽरोहस्तथैच्छिकः ।। २१ ।।
रागस्यातिनिषिद्धत्वाद्विहितस्यैव धर्मतः ।
आरोहनियमोक्त्यादेनवरोहोऽस्त्यशास्त्रतः ।। २२ ।।

அவரோஹோஅஸ்த்யாச்ரமாணாம் ந வா ராகாத்₃ஸ வித்₃யதே।

பூர்வத₄ர்மச்ரத்₃த₄யா வா யதாஆரோஹஸ்ததை₂ச்சி₂க: ।। 21
ராக₃ஸ்யாதிநிஷித்₃த₄த்வாத்₃விஹிதஸ்யைவ த₄ர்மத: ।
ஆரோஹநியமோக்த்யாதே₃நவரோஹோஅஸ்த்யசாஸ்த்ரத: ।। 22

(அ..ம்)

ஆசிரமங்களுக்குள் இறங்குவது உண்டா? அல்லது கிடையாதா? ராகத்தினலோ அல்லது முன்னுள்ள தர்மத்தில் சிரத்தையாவோ இறங்குதல் உண்டு. எப்படி ஏறுதல் இஷ்டப்படியோ, அப்படியே இறங்குதலும்.

ராகம் வெகு நிஷித்தமானதினலும், விதிக்கப்பட்டது தான் தர்மமாகும் ஆனதினலும், ஏறுவதில் நிய்மம் சொல்லியிருப்பதாலும், சாஸ்திரத்திற்கு விரோதமாயிருப்பதாலும் இறங்குதல் கிடையாது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"ब्रह्मचर्यं समाप्य गृही भवेत् , गृहाद्वनी भूत्वा प्रव्रजेत्" "பிரஹ்மசர்யத்தை முடித்து விட்டு கிரஹஸ்தனக ஆக வேண்டும். கிருஹஸ்தாசிரமத்திலிருந்து வானப்ரஸ்தனக ஆகி, ஸன்னியாஸம் செய்யவும்" என்று ஆசிரமங்களுக்குள் எப்படி இஷ்டப்படி மேல் போவது இருக்கிறதோ, அப்படியே சில ஸமயம் ராகத்தினலும் சில ஸமயம் முன்னிருந்த ஆசிரமத்தின் தர்மங்களிலுள்ள சிரத்தையினலும் ஸன்னியாஸ ஆசிரமத்திலிருந்து வானப்ரஸ்தன் என்பது முதலான இறங்குவதும் நியாயமே.

ஸித்தாந்தம் :

ராகம் என்பது மித்யையான அறியாமையையே மூலமாகவுடையதால், மிகவும் நிஷித்தமானது. அதற்கு இடம் கொடுப்பது நியாயமல்ல. முன் ஆசிரம தர்மத்தில் சிரத்தையென்பதும் தவறு. முன் ஆசிரம தர்மத்தில் சிரத்தை என்பதே பொருந்தாது,அந்த தர்மம் மேல் ஆசிரமத்தில் உள்ளவனுக்கு விதிக்கப்படாததால் அவனுக்கு அது தர்மமேயாகாது. எவனல் எது அனுஷ்டிக்க முடியுமோ, எதில் சிரத்தையிருக்கிறதோ, அது அவனுக்கு தர்மம் ஆகாது. எவனேயுத்தேசித்து எது விதிக்கப் பட்டிருக்கிறதோ அதுதான் அவனுக்கு தர்மம். மேலும் "ततो न पुनरेयात्" "அதிலிருந்து மறுபடியும் வரக்கூடாது" என்று இறங்குவதை நிஷேதித்து மேல் போவது நியமம் செய்யப்பட்டிருக்கிறது. தவிரவும் மேல் போவதில் இருப்பது போல இறங்குவதில் சிஷ்டர்களுடைய ஆசாரமும் இல்லை.ஆகையால் இறங்குவது கிடையாது.

# ११.आधिकारिकाधिकरणम्
## 11.ஆதி₄காரிகாதி₄கரணம்
(ஸூத்ரம் 41,42)

**नचाऽऽधिकारिकमपि पतनानुमानात्तदयोगात् ।।४१।।**

நசாஆதி₄காரிகமபி பதநாநுமாநாத்தத₃யோக₃ாத் 41
(அதிகாரத்தில் சொன்னதும்கூடகிடையாது, பதனம் என்று அனுமானமிருப்பதால் அது சேராததினால்)

**उपपूर्वमपि त्वेके भावमशनवत्तदुक्तम् ।।४२।।**

உபபூர்வமபி த்வேகே ப₄ாவமசனவத்ததுக்தம் 42
(ஆனால், சிலர், உபபாதகம், உண்டு சாப்பிடுவதுபோல அது சொல்லப்பட்டிருக்கிறது)

ஊர்த்வரேதஸ் ஆசிரமத்திலிருந்து நழுவிவிட்டால் பிராயச்சித்தம் உண்டா? என்பது இங்கே விஷயம்.

**भ्रष्टोर्ध्वरेतसो नास्ति प्रायश्चित्तमथास्ति वा ।**
**अदर्शनोक्तेर्नास्त्येव व्रतिनो गर्दभः पशुः ।। २३ ।।**
**उपपातकमेवैतद्व्रतिनो मधुमांसवत् ।**
**प्रायश्चित्ताच्च संस्काराच्छुद्धिर्यत्नपरं वचः ।। २४ ।।**

ப்₄ரஷ்டோர்த்₄வரேதஸோ நாஸ்தி ப்ராயச்சித்தமதா₂ஸ்தி வா ।
அத₃ர்சநோக்தேர்நாஸ்த்யேவ வ்ரதிநோ க₃ர்த₃ப₄: பசு: ।। 23
உபபாதகமேவைதத்₃வ்ரதிநோ மது₄மாம்ஸவத் ।
ப்ராயச்சித்தாச்ச ஸம்ஸ்காராச்சு₂த்₃தி₄ர்யத்நபரம் வச: ।। 24

(அ..ம்)

நழுவி விட்ட ஊர்த்வரேதஸ் ஆசிரமத்திலிருப்பவனுக்கு பிராயச்சித்தம் கிடையாதா? அல்லது உண்டா? "காணவில்லை" என்று சொல்லி இருப்பதால் கிடையாது தான். விரதிக்குத்தான் கழுதை பசு.
விரதிக்கு மது மாம்ஸம் சாப்பிடுவது போல இது உபபாதகம் தான். பிராயச்சித்தத்தினாலும் மறுபடியும் ஸம்ஸ்காரம் செய்வதினாலும் சுத்தி ஏற்படும், (காணவில்லை என்ற) வார்த்தை யத்னத்தைக் குறிக்கிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

**"आरूढो नैष्ठिकं धर्मं यः तु प्रच्यवते पुनः। प्रायश्चित्तं न पश्यामि येन शुध्येत् स आत्महा।।"**

"எவன் நைஷ்டிக தர்மத்தை ஏறினவனாய் மறுபடியும் நழுவி விடுகிறானோ, அந்த ஆத்மாவை கொன்றவன் எதினால் சுத்தியடைவானோ அப்படியுள்ள பிராயச்சித்தத்தை நான் காணவில்லை" என்று பிராயச்சித்தம் காணவில்லை என்ற வசனத்தினால்

நைஷ்டிகபிரஹ்மசாரியாக ஊர்த்வரேதஸ் தன்மையை அடைந்து மறுபடியும் ஸ்திரீ ஸங்கத்தினுல் நழுவிவிட்டவனுக்கு பிராயச் சித்தம் கிடையாது. "अथ यो ब्रह्मचारी स्त्रियमुपेयात्, स गर्दभं पशुमालभेत" "இனி எவன் பிரஹ்மசாரியாக இருந்து ஸ்திரீயுடன் சேருகிருனே, அவன் கழுதையை பசுவாகக் கொண்டு ஆலம்பனம் செய்ய வேண்டும்" என்று பிராயச்சித்தம் சொல்லியிருக்கிறதேயென்ருல் அப்படியல்ல. அது விரதியைக் குறித்து சொல்லப்பட்டது. வேதத்தை அத்யயனம் செய்வதற்கு அங்கமாக பிரஹ்மசர்ய விரதத்தையனுஷ்டித்துக் கொண்டு "உபகுர்வாணன்" என்று எவன் சொல்லப்படுகிருனே அவனையுத்தேசித்து இந்த பிராயச்சித்த வாக்கியம். நைஷ்டிக பிரஹ்மசாரியை உத்தேசித்தது அல்ல. ஆகையால் ஊர்த்வ ரேதஸ் நிலையிலிருந்து தவறினவனுக்கு பிராயச்சித்தம் கிடையாது.

ஸித்தாந்தம் :

உபகுர்வாணனுக்கு மது மாம்ஸத்தை சாப்பிடுவதினுல் உபபாதகம் என்று எப்படி பிராயச்சித்தமும் மறுபடி ஸம்ஸ்காரமும் உண்டோ, அப்படியே ஊர்த்வரேதஸ் ஆசிரமிக்கும், குரு பத்னீ கமனம் முதலியதைத் தவிர மற்ற விடத்தில் பிரவிருத்தி உபபாதகம் தான் ஆகும். மஹாபாதகம் ஆகாது. ஆகையால் பிராயச்சித்தத் தினுலும் மறுபடி ஸம்ஸ்காரத்தினுலும் சுத்தியுண்டு. மஹாபாதகங்களுக்குள் கணக்கிடாத காரணத்தைக் கொண்டு உபபாதகமென்று வைத்துக் கொண்டு பிராயச்சித்தம் உண்டு என்று சொன்னுல், காணவில்லையென்று சொன்ன வாக்கியத்திற்கு என்ன கதி? என்ருல் அந்த வாக்கியம் விசேஷமான யத்தினம் எடுத்துக் கொண்டு வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டுமென்பதில் தாத்பர்யமுள்ளது என்கிருேம். அதினுல்தான் "பிராயச்சித்தத்தை நான் காணவில்லை" என்று சொல்லிற்றே தவிர, "பிராயச்சித்தம் கிடையாது" என்று சொல்லவில்லை. பிரஹ்மசாரியாய் இருக்கும் தன்மை ஸமானமானதினுல் இவனுக்கும் பிராயச்சித்தம் கழுதைப் பசு தான். அப்படியே வானப்ரஸ்தர், ஸன்னியாஸி இவ்விருவர் விஷயத்திலும் கூட "वानप्रस्थो दीक्षाभेदे कृच्छ्रं द्वादशरात्रं चरित्वा महाकक्षंवर्धयेत्" "தீக்ஷை மீறப்பட்டால் வானப்ரஸ்தன் பன்னிரண்டு நாள் அனுஷ்டித்து விட்டு காட்டை பெரிதாக விருத்தி செய்ய வேண்டும்" என்றும் "भिक्षुः वनस्थवत् सोम वृद्धिवर्जम्" "ஸன்னியாஸி ஸோமலதையை விருத்தி செய்வதைத் தவிர மற்ற விஷயத்தில் வானப்ரஸ்தனைப் போலவே (காட்டை விருத்தி

செய்ய வேண்டும்)" என்றும் நழுவும் போது பிராயச்சித்தம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் பிராயச்சித்தம் உண்டு.

## १२.बहिरधिकरणम्

## 12.ப₃ஹிரதி₄கரணம்

(ஸூத்ரம் 43)

**बहिस्तूभयथाऽपि स्मृतेराचाराच्च ।।४३।।**

ப₃ஹிஸ்தூப₄யதா₂அபி ஸ்ம்ரிதேராசாராச்ச 43

(ஆனால் இரண்டுவிதத்திலும் வெளியில், ஸ்மிருதியினாலும் ஆசாரத்தினாலும்)

பிராயச்சித்தம் செய்து கொண்டவர்களுடன் சிஷ்டர்கள் முன் போல் சேர்ந்து கொள்ளலாமா? என்பது விசாரிக்கப்படுகிறது.

**शुद्धः शिष्टैरुपादेयस्त्याज्यो वा दोषहानितः ।**
**उपादेयोऽन्यथा शुद्धिः प्रायश्चित्तकृता वृथा ।। २५ ।।**
**आमुष्मिक्येव शुद्धिः स्यात्ततः शिष्टास्त्यजन्ति तम् ।**
**प्रायश्चित्तादृष्टिवाक्यादशुद्धिस्त्वैहिकीष्यते ।। २६ ।।**

சுத்₃த₄சிஷ்டைருபாதே₃யஸ்த்யாஜ்₄யோ வா தோ₃ஷஹாநித: ।
உபாதே₃யோஅந்யதா₂ சுத்₃தி₄: ப்ராயச்சித்தக்ருதா வ்ருதா₂ ।। 25
ஆமுஷ்மிக்யேவ சுத்₃தி₄: ஸ்யாத்தத: சிஷ்டாஸ்த்யஜந்தி தம் ।
ப்ராயச்சித்தாத்₃ருஷ்டிவாக்யாதசுத்₃தி₄ஸ்த்வைஹிகீஷ்யதே ।। 26

(அ..ம்)

(பிராயச்சித்தத்தினுல் சுத்தனுனவன் சிஷ்டர்களால் சேர்த்துக் கொள்ளத் தகுந்தவனு? அல்லது விலக்கத் தகுந்தவனு? தோஷம் போய்விட்டதால் சேர்த்துக் கொள்ளத்தகுந்தவன்; அப்படிக் கில்லையானுல் பிராயச் சித்தத்தினுல் செய்யப்படும் சுத்தி வீண். பரலோக ஸம்பந்தமாய்த்தான் சுத்தி ஏற்படும். ஆகையால் அவனை சிஷ்டர்கள் விலக்கிவிடுகிருர்கள். பிராயச்சித்தம் காணவில்லை என்ற வாக்கியத்தினுல் இந்த லோகத்தில் அசுத்தி ஒப்புக் கொள்ளப்படுகிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிராயச்சித்தத்தையனுஷ்டித்ததால் சுத்தியேற்படவில்லையானுல் அது வீண் என்றே ஆகுமானதால், பிராயச்சித்தம் செய்து கொண்டவனுக்கு சிஷ்டர்கள் கூடவே சேர்ந்து வியவஹாரம் உண்டு.

ஸித்தாந்தம் :

பிராயச்சித்தத்தினால் பரலோக ஸம்பந்தமான சுத்தி ஏற்பட்ட போதிலும் பிராயச்சித்தம் காணவில்லையென்று வசனமிருப்பதால், இந்த லோகத்தில் சுத்தி ஏற்படாததினால் சிஷ்டர்களுடன் இவன் வியவஹாரம் செய்யத் தகுந்தவனல்ல.

## १३.स्वाम्यधिकरणम्

## 13.ஸ்வாம்யதி$_4$கரணம்

(ஸூத்ரம் 44 - 46)

**स्वामिनः फलश्रुतेरित्यात्रेयः ।।४४।।**

ஸ்வாமிந: ப$_2$லச்ருதேரித்யாத்ரேய: 44

(ஸ்வாமிக்கு, பலன் சொல்லியிருப்பதால் என்று ஆத்ரேயர்)

**आर्त्विज्यमित्यौडुलोमिस्तस्मै हि परिक्रीयते ।।४५।।**

ஆர்த்விஜ்$_3$யமித்யௌடு$_3$லோமிஸ்தஸ்மை ஹி பரிக்ரீயதே 45

(ரித்விக் செய்யவேண்டியது என்று ஔடுலோமி, அதற்காக விலைக்கு வாங்கப்படுகிறார்)

**श्रुतेश्च ।।४६।।**

ச்ருதேச்ச 46

(சுருதியிலிருந்து)

அங்கங்களையொட்டி சொல்லப்பட்ட உபாஸனைகளை செய்ய வேண்டியது யாகம் செய்யும் யஜமானனா? ரித்விக்குகளா? என்பது விஷயம்.

**अङ्गध्यानं याजमानमार्त्विज्यं वा यतः फलम् ।**
**ध्यातुरेव श्रुतं तस्माद्याजमानमुपासनम् ।। २७ ।।**
**ब्रूयादेवंविदुद्गातेत्यार्त्विज्यत्वं स्फुटं श्रुतम् ।**
**क्रीतत्वादृत्विजस्तेन कृतं स्वामिकृतं भवेत् ।। २८ ।।**

அங்கத்$_3$யானம் யாஜமாநமார்த்விஜ்யம் வா யத: ப$_2$லம் ।
த்$_3$யாதுரேவ ச்ருதம் தஸ்மாத்$_3$யாஜமாநமுபாஸநம் ।। 27
ப்$_3$ரூயாதே$_3$வந்விது$_3$த்$_3$கா$_3$தேத்யார்த்விஜ்யத்வம் ஸ்பு$_2$டம் ச்ருதம் ।
க்ரீதத்வாத்$_3$ருத்விஜஸ்தேன க்ருதம் ஸ்வாமிக்ருதம் ப$_4$வேத் ।। 28

(அ..ம்)

அங்கத்தின் உபாஸனை யஜமானன் செய்ய வேண்டியதா? அல்லது ரித்விக் செய்ய வேண்டியதா? உபாஸனை செய்கிறவனுக்கே பலன் சொல்லப் பட்டிருக்கிறது; ஆகையால் உபாஸனை யஜமானன் செய்ய வேண்டியது தான்.

"இவ்விதம் அறிந்த உத்காதா சொல்ல வேண்டும்" என்றிருப்பதினுல் ரித்விக் தான் செய்ய வேண்டுமென்பது தெளிவாய் சொல்லப் பட்டிருக்கிறது. ரித்விக் (தக்ஷிணையால்) கிரயத்திற்கு வாங்கப் பட்டுவிட்டபடியால் அவர் செய்வது யஜமானன் செய்வதாகவே ஆகும். (வி..ம்)

பூர்வபக்ஷம் :

உபாஸனை செய்கிறவருக்கு பலன் சொல்லப்பட்டிருக்கிறது. பலன் யஜமானனுக்கே என்பது தான் நியாயம். யாகத்திற்கு யஜமானன் ஆவதால் பாத்தியம் உள்ளவன் அவன் தானே? ஆகையால் பலனையடைய வேண்டியவனுய் உள்ள யஜமானனுக்குத் தான் உபாஸனையை செய்வதென்ற தன்மை.

ஸித்தாந்தம் :

"**एवंविदुद्गाता ब्रूयात्**" "இவ்விதம் அறிந்த உத்காதா சொல்ல வேண்டும்" என்று பின்னுள்ள வாக்கியத்தில் உபாஸனையை செய்ய வேண்டியது ரித்விக் என்று ஸ்பஷ்டமாக சொல்லப் பட்டிருக்கிறது.எல்லா கர்மாக்களையும் செய்வதற்காகவே யஜமானனுல் ரித்விக்குகள் விலைக்கு வாங்கப்பட்டிருப்பதால் இது தான் நியாயம். ரித்வித்துக்களால் செய்யப்படுவது யஜமானனுலேயே செய்யப்படுவதாக ஆவதால், யஜமானனுக்குத் தான் பலனையடையும் தன்மையென்பது பொருந்தும். ஆகையால் உபாஸனை ரித்விக்குகள் செய்ய வேண்டிய கார்யம்.

## १४.सहकार्यन्तरविध्यधिकरणम्

## 14.ஸஹகார்யந்தரவித்₄யதி₄கரணம்

(ஸூத்ரம் 47 - 49)

**सहकार्यन्तरविधिः पक्षेण तृतीयं तत्त्वतो विद्यादिवत् ।।४७।।**

ஸஹகார்யந்தரவிதி₄: பக்ஷேண த்ரிதீயம் தத்த்வதோ வித்₄யாதி₃வத் 47

(உதவிசெய்யும் வேறொன்றுக்கும் விதி, அதோடு கூடியவனுக்கு மூன்றாவது பக்ஷத்தில் விதி முதலியதுபோல்)

**कृत्स्नभावात्तु गृहिणोपसंहारः ।।४८।।**

க்ருத்ஸ்நபா₄வாத்து க்₃ருஹிணோபஸம்ஹார: 48

(ஆனால், எல்லாமிருப்பதினால் கிருஹஸ்தனுடன் முடிக்கிறது)

**मौनवदितरेषामप्युपदेशात् ।।४९।।**

மௌநவதி₃தரேஷாமப்யுபதே₃சாத் 49

(மௌனத்தைப்போல மற்றவைகளுக்கும் உபதேசமிருப்பதால்)

பிருஹதாரண்யகம் கஹோல பிராஹ்மணத்தில் **तस्माद्ब्राह्मण: पाण्डित्यं निर्विद्य बाल्येन तिष्ठासेत्, बाल्यं च पाण्डित्यं च निर्विद्याथ मुनि:"** "ஆகையால் பிராஹ்மணன் பாண்டித்யத்தை அடைந்து பாலத் தன்மையுடன் இருக்க வேண்டும். பிறகு பாலத் தன்மையையும், பாண்டித்யத்தையும் அடைந்து அதன் பிறகு முனி" என்று கண்டிருக்கிறது. அதாவது "பிரஹ்மமாகவே இருப்பது மேலான புருஷார்த்தமாகையால், பிரஹ்மமாக இருக்க எண்ணுபவன் உபநிஷத்துக்களின் தாத்பர்யத்தை தீர்மானமாக அறிந்துகொள்வதாகிய பாண்டித்யத்தை பாக்கியில்லாமல் முழுவதும் ஸம்பாதித்துக் கொண்டு, பாலன் போல எவ்வித ராகத்வேஷமும் இல்லாதவனுக இருந்து கொண்டு ஸந்தேஹங்களைப் போக்கிக்கொள்வதற்காக யுக்திகளை அடிக்கடி சிந்தித்துக் கொண்டிருக்க விரும்பவேண்டும்; அதன் பிறகு பாண்டித்யம், பாலத்தன்மை இரண்டையும் முழுவதும் ஸம்பாதித்துக் கொண்டு பிறகு முனி" என்று சொல்லியிருக்கிறது. "பிறகு முனி" என்று நிறுத்திவிட்டபடியால் "பிறகு முனியாக ஆக வேண்டும்" என்று விதியை சேர்த்துக் கொள்ள வேண்டுமா? என்பது இங்கு விஷயம்.

**अविधेयं विधेयं वा मौनं तत्र विधीयते ।**
**प्राप्तं पाण्डित्यतो मौनं ज्ञानवाच्युभयं यतः ।। २९ ।।**
**निरन्तरज्ञाननिष्ठा मौनं पाण्डित्यतः पृथक् ।**
**विधेयं तद्भेददृष्टिप्राबल्ये तन्निवृत्तये ।। ३० ।।**

**அவிதே₄யம் விதே₄யம் வா மௌனம் தந்த்ர விதீ₄யதே ।**
**ப்ராப்தம் பாண்டி₃த்யதோ மௌனம் ஜ்₃ஞானவாச்யுப₄யம் யத: ।। 29**
**நிரந்தரஜ்ஞாநநிஷ்டா மௌநம் பாண்டி₃த்யத: ப்ருத₂க் ।**
**விதே₄யம் தத்₃பே₄தத்₃ருஷ்டிப்ராப₃ல்யே தந்நிவ்ருத்தயே ।।30**

(அ..ம்)

மௌனம் விதிக்கப்படுவதில்லையா? அல்லது விதிக்கப்படுகிறதா? அது விதிக்கப்படவில்லை. பாண்டித்யம் என்பதினுலேயே மௌனம் கிடைத்து விடுகிறது. ஏனென்ருல் (பாண்டித்யம், மௌனம் என்ற) இரண்டும் ஞானத்தையே சொல்கிறது.

மௌனம் என்பது இடைவிடாது ஞானத்திலேயே நிலைத்திருப்பது. ஆகையால் . பாண்டித்யத்தைவிட வேறு.(ஆத்மாவைத் தவிர) வேருயுள்ளதின் பார்வை நன்கு பலமாயிருக்கும் போது அதை விலக்குவதற்காக அது (மௌனம்) விதிக்கப்பட வேண்டியது தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

முனியாக ஆக வேண்டும் என்று விதிக்கப்படாததினுல், முனித்தன்மை (மௌனம்) விதிக்கப்படுவதில்லே. முன்னுலேயே பாண்டித்யம் என்ற சப்தத்தினுல் கிடைக்கும் மௌனம் என்பதற்கு புதிதாக வேறு அர்த்தம் இல்லாததினுல், இதற்காக ஒரு விதியை கல்பிக்கவும் முடியாது. பண்டிதனுடைய, அதாவது அறிந்தவனுடைய, தன்மை என்பதால் பாண்டித்யம் என்ற சப்தம் ஞானத்தையே சொல்கிறது. "மன ஞானே" என்று தாதுவிலிருந்து முனி சப்தம் ஏற்பட்டிருப்பதால், அதுவும் ஞானத்தையே சொல்கிறது. ஆகையால் ஏற்கனவே கிடைத்துள்ள மௌனத்திற்கு விதி கல்பிக்க அவசியமே இல்லே.

ஸித்தாந்தம் :

முன்னுல் சொன்ன பாண்டித்யம் தான் மறுபடியும் முனி என்ற சப்தத்தால் சொல்லப்படுகிறதென்ருல், மறுபடியும் சொன்னது பிரயோஜனமற்றதாக ஆகிவிடும். ஆகையால் முனி என்ற சப்தத்தினுல் இடைவிடாமல் ஞானத்தில் நிலேத்திருத்தல் என்ற புதிதாகவுள்ள அர்த்தம் தான் சுருதியினுல் சொல்லவந்தது. ஆகையால் முன்னுள்ள "तिष्ठासेत्" "இருக்க வேண்டும்" என்ற பந்தத்தை இங்கேயும் இழுத்துக் கொண்டால் விதி கிடைத்து விடுகிறது. ஞானத்தில் இடைவிடாமல் நிலேக்கும் தன்மைக்கு பிரயோஜனமோ இருக்கிறது. வெகு பலமான பேத வாஸனையில் ஊறியிருக்கிறவனுக்கு அதை நிவிருத்தி செய்து கொள்வதற்கு இந்த ஞான நிஷ்டை அவசியமாயிருக்கிறது. ஆகையால், நிதித்யாஸனம் என்ற தன்மையை உடைய மௌனம் இங்கு விதிக்கப்படுகிறது.

## १५.अनाविष्काराधिकरणम्

## 15.அனாவிஷ்காராதி₄கரணம்

(ஸூத்ரம் 50)

**अनाविष्कुर्वन्नन्वयात् ।।५०।।**

அநாவிஷ்குர்வந்நந்வயாத் ..50..

(வெளிக்காட்டாமல், பொருத்தமானதால்)

முன் அதிகரணத்தில் கண்ட பாலத் தன்மை என்பது என்ன? என்பது விஷயம்.

**बाल्यं वयः कामचारो धीशुद्धिर्वा प्रसिद्धितः ।**

वयस्तस्याविधेयत्वे कामचारोऽस्तु नेतरा ।। ३१ ।।
मननस्योपयुक्तत्वाद्भावशुद्धिर्विवक्षिता ।
अत्यन्तानुपयोगित्वाद्विरुद्धत्वाच्च न द्वयम् ।। ३२ ।।

பா₃ல்யம் வய: காமசாரோ தீ₄சுத்₃தி₄ர்வா ப்ரஸித்₃தி₄த: ।
வயஸ்தஸ்யாவிதே₄யத்வே காமசாரோऽஸ்து நேதரா ।। 31
மனனஸ்யோபயுக்தத்வாத்₃பா₄வசுத்₃தி₄ர்விவக்ஷிதா ।
அத்யந்தாநுபயோகி₃த்வாத்₃விருத்வத்வாச்ச ந த்₃வயம் ।। 32

(அ..ம்)

பாலத்தன்மை என்பது வயதா? இஷ்டப்படி சேஷ்டிப்பதா? அல்லது புத்தியின் சுத்தியா? (வயது என்றே) பிரஸித்தியிருப்பதால் வயது. அது விதிக்கக் கூடியதில்லையேயென்றால் இஷ்டப்படி சேஷ்டிப்பதாக இருக்கட்டும் எப்படியும் மற்றது (புத்தியின் சுத்தியென்பது) இல்லை. மனனத்திற்கு உபயோகப்படும் தன்மையுள்ளதால், சித்தசுத்தி தான் உத்தேசிக்கப்படுகிறது. மற்ற இரண்டும் மனனத்திற்கு கொஞ்சமேனும் உபயோகப்படாததாலும் விருத்தமாகவேயிருப்பதாலும், அவையல்ல.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

உலகத்தில் பாலத்தன்மை என்றால் பாலனிடம் இருக்கும் தன்மை என்றே பிரஸித்தியிருப்பதால், அது வயதாகத்தான் இருக்கும். ஆனால் வயது விதிக்கக்கூடிய விஷயமில்லையேயென்றால் பாலனுடைய தன்மை, அதாவது இஷ்டப்படி சேஷ்டிப்பது, இஷ்டப்படி சாப்பிடுவது முதலியது என்று இருக்கலாம். எப்படியும் பாலத்தன்மை என்பது சித்த சுத்தியைச் சொல்லாது.

ஸித்தாந்தம் :

பாண்டித்யம் என்ற சிரவணம் மௌனம் என்ற நிதித்யாஸனம், இவ்விரண்டிற்கும் மத்தியில் மனனத்தை விதிக்க சுருதிக்கு தாத்பர்யம். அதற்கு ராகம், துவேஷம், மானம், அவமானம் முதலான தோஷங்களால் சித்தம் பீடிக்கப்படும்போது வெளிப்பிரவிருத்தியை விடமுடியாததினால் மனனம் செய்வது ஸாத்தியமில்லாததினால், மனனத்திற்கு சித்தத்தின் சுத்தி அவசியம் வேண்டியதாயிருக்கிறது. பாலனுடைய செயல் என்று எடுத்துக் கொண்டால் இஷ்டப்படி சேஷ்டிப்பது, மனஸ் சுத்தமாயிருப்பது என்ற இரண்டுக்கும் பொருந்தும். ஆனால் வயதும், இஷ்டப்படி சேஷ்டிப்பதும் மனனத்திற்கு எவ்விதத்திலும் உபயோகப்படக்கூடியவையில்லை. மேலும் பாலன்

போல ஒன்றும் தெரியாமலிருந்தாலும், வெளிப் பிரவிருத்தி உள்ளவனுயிருந்தாலும், மனனத்தைக் கெடுத்து விடுமாதலால், அவை மனனத்திற்கு நேர் விரோதிகள். ஆகையால் மனனத்திற்கு மிகவும் உபயோகப்படக்கூடியதாயிருக்கிற சித்த சுத்தி தான் பாலத் தன்மையென்ற சப்தத்தினுல் சொல்லப்படுகிறது. மற்றது இரண்டும் சொல்லப்படவில்லை.

# १६.ऐहिकाधिकरणम्

## 16.ஐஹிகாதி₄கரணம்

(ஸூத்ரம் 51)

**ऐहिकमप्यप्रस्तुतप्रतिबन्धे तद्दर्शनात् ।।५१।।**

ஐஹிகமப்யப்ரஸ்துதப்ரதிப₃ந்தே₄ தத்₃த₃ர்சநாத் 51
(தடை ஏற்படாவிடில் இப்பிறப்பிலும்கூட
அவ்விதம் காண்பதால்)

ஆத்மக்ஞானம் இந்த ஜன்மாவிலேயே ஏற்படுமா? என்பது விஷயம்.

**इहैव नियतं ज्ञानं पाक्षिकं वा नियम्यते ।**
**तथाऽभिसंधेर्यज्ञादिः क्षीणो विविदिषाजनौ ।। ३३ ।।**
**असति प्रतिबन्धेऽत्र ज्ञानं जन्मान्तरेऽन्यथा ।**
**श्रवणायेत्यादिशास्त्राद्वामदेवोद्भवादपि ।। ३४ ।।**

இஹைவ நியதம் ஜ்ஞாநம் பாக்ஷிகம் வா நியம்யதே ।
ததா₂அபி₄ஸம்தே₄ர்யஜ்ஞாதி₃: க்ஷீணோ விவிதி₃ஷாஜநௌ ।।33
அஸதி ப்ரதிப₃ந்தே₄அத்ர ஜ்ஞாநம் ஜந்மாந்தரேஅந்யதா₂ ।
ச்ரவணாயேத்யாதி₃சாஸ்த்ரத்₃வாமதே₃வோத்₃ப₄வாத₃பி ।। 34

(அ..ம்)

ஞானம் இங்கேயே தான் என்று தீர்மானமா? அல்லது பாக்ஷிகமா (இங்கே இல்லையென்றும் ஏற்படலாமா)? அப்படியே (இங்கேயேயென்ற உத்தேசம் இருப்பதால்; தீர்மானம் தான். யக்ஞம் முதலானது ஞானத்தில் விருப்பத்தை உண்டு பண்ணினவுடன் க்ஷீணமாய் (சிலவழிந்து) போய் விடுகிறது.

தடை எதுவுமில்லாத பக்ஷத்தில் இங்கேயே ஞானம், வேறு விதமானல் (தடை இருந்தால்) மறுஜன்மத்தில். "கேட்பதற்குக்கூட" என்பது முதலான சாஸ்திரத்தினுலும் வாமதேவருக்கு பிறப்பு இருந்ததினுலும் (இவ்விதம்).

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

சிரவணம் மனனம் நிதித்யாஸனம் இவைகளை அனுஷ்டித்து வரும் போது இதே ஜன்மாவில் ஞானம் ஏற்படுகிறது என்று தீர்மானிக்கப்படுகிறது. இப்பொழுதா, வேறு ஜன்மாவிலா, என்ற ஸந்தேஹத்திற்கு இடமில்லை. ஏனென்றால் சிரவணம் முதலியதில் பிரவிருத்திக்கிற புருஷனுடைய ஞான விஷயமான இச்சை இங்கேயே ஞானமேற்படவேண்டுமென்பதையே விஷயமாகவுடையது. "எனக்கு இங்கே ஞானம் ஏற்படட்டும்" என்று ஸங்கல்பித்துக் கொண்டு தான் பிரவிருத்திக்கிறான். அதிருஷ்டமாக (கண்ணுக்குத் தெரியாத) பலன்களையுத்தேசித்து செய்யப்படும் யக்ஞம் முதலியவை அந்த ஞானத்தையுண்டு பண்ண ஸாதகமாயிருப்பதால், அவை எப்படி பின்னால் ஸ்வர்க்கத்தைக் கொடுக்கின்றனவோ, அப்படியே பின்னால் வேறு ஜன்மாவில் ஞானத்தையுண்டு பண்ணுமென்று ஸந்தேஹிக்கக் கூடாது. ஏனென்றால் அந்த யக்ஞம் முதலியவை சிரவணத்திற்கு முன்னாலேயே சித்தசுத்தியைக் கொடுத்து ஞானத்தில் விருப்பத்தையுண்டு பண்ணிவிட்ட படியால் அவைகளின் பிரயோஜனம் ஏற்பட்டுவிட்டது. இனி அவைகளால் செய்யக் கூடியது எதுவுமில்லை. ஆகையால் ஞானம் உண்டாவது இந்த ஜன்மாவிலேயே தான் என்று நியமனம் செய்யப்படுகிறது.

ஸித்தாந்தம் :

தடை இல்லாமலிருந்தால், இங்கேயே ஞானம் ஏற்படும்; தடை இருந்தாலோ, இப்பொழுது அனுஷ்டிக்கப்படும் சிரவணம் முதலியவைகளால் மறு ஜன்மத்தில் ஞானம் ஏற்படும். தடையென்பது பல விதமாகச் சொல்லப் பட்டிருக்கிறது "श्रवणायापि बहुभियो न लभ्यः शृण्वन्तोऽपि बहवो यं न विद्युः। आश्चर्योवक्ता कुशलोऽस्य लब्धा,आश्चर्यो ज्ञाता कुशलानुशिष्टः" "கேட்பதற்குக் கூட பல பேர்களால் எவர் அகப்படுவதில்லையோ, கேட்டுக் கொண்டேயிருக்கும் பலர் கூட எவரை அறிவதில்லையோ, அதை எடுத்துச் சொல்பவர் மிகவும் ஆச்சர்யம், அதையடையும் ஸாமர்த்தியசாலியும் (ஆச்சர்யம்). அவ்வித ஸாமர்த்தியமுள்ளவரால் உபதேசிக்கப்பட்டு அறிபவரும் ஆச்சர்யம்" என்று கடோபநிஷத் கூறுகிறது. முன் ஜன்மாவில் அனுஷ்டித்த சிரவணம் முதலியவைகளால் பின் ஜன்மாவில் ஞானமேற்படுவதைக் காணவில்லையென்று சொல்ல முடியாது. வாமதேவருக்கு

கர்ப்பத்திலிருக்கும் போதே ஞானமேற்பட்டதாக சொல்லப்படுகிறது. "गर्भ एवैतच्छयानो वामदेव एवमुवाच" "இவ்விதம் கர்பத்திலேயே சயனித்துக் கொண்டிருந்த வாமதேவர் சொன்னூர்" என்ற சுருதி சொல்கிறது. ஆகையால் இந்த ஜன்மாவிலோ அல்லது வேறு ஜன்மாவிலோ ஞானம் ஏற்படும்.

# १७.मुक्तिफलानियमाधिकरणम्

## 17.முக்திப$_2$லாநியமாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 52)

**एवं मुक्तिफलानियमस्तदवस्थावधृतेस्तदवस्थावधृते : ।।५२।।**

ஏவம் முக்திப$_2$லாநியமஸ்தத$_3$வஸ்தா$_2$வத்$_4$ருதேஸ்தத$_3$வஸ்தா$_2$வத்$_4$ருதே: 52

(இவ்விதம் முக்தியாகிற பலனில் நியமமில்லை, அந்த நிலை தீர்மானமானதினால்,அந்த நிலை தீர்மானமானதினால்)

முக்தியென்ற நிலையில் ஏற்றம் தாழ்வு உண்டா? என்பது விஷயம்.

**मुक्तिः सातिशाया नो वा फलत्वाद्ब्रह्मलोकवत् ।**
**स्वर्गवच्च नृभेदेन मुक्तिः सातिशयैव हि ।। ३५ ।।**
**ब्रह्मैव मुक्तिर्न ब्रह्म क्वचित्सातिशयं श्रुतम् ।**
**अत एकविधा मुक्तिः वेधसो मनुजस्य च ।। ३६ ।।**

முக்தி: ஸாதிசாயா நோ வா ப$_2$லத்வாத்$_3$ப்$_3$ரஹ்மலோகவத் ।
ஸ்வர்க$_3$வச்ச ந்ருபே$_4$தே$_3$ந முக்தி: ஸாதிசயைவ ஹி ।। 35
ப்$_3$ரஹ்மைவ முக்திர்ந ப்ரஹ்ம க்வசித்ஸாதிசயம் ச்ருதம் ।
அத ஏகவிதா$_4$ முக்தி: வேத$_3$ஸோ மனுஜஸ்ய ச ।। 36

(அ..ம்)

முக்தி தாரதம்யமுள்ளதா? அல்லது தாரதம்யமற்றதா? பலனுக இருப்பதினுல் பிரஹ்மலோகத்தைப் போலவும், ஸ்வர்க்கத்தைப் போலவும் மனிதர்களில் உள்ள வேற்றுமைக்குத் தக்கபடி முக்தி தாரதம்யமுடையது தான்.

முக்தியென்பது பிரஹ்மமேதான் பிரஹ்மம் தாரதம்யமுள்ளதாக எங்கும் கேள்விப்படுவதில்லை. ஆகையால் முக்தி பிரஹ்மாவுக்கோ, மனிதனுக்கோ ஒரே விதம் தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிரஹ்ம லோகம் என்ற பலன் ஸாலோக்யம் (பிரஹ்மாவிருக்கும் உலகத்தில் இருப்பது) , ஸாரூப்யம் (பிரஹ்மாவைப் போலவே ரூபம்

தரிப்பது), ஸாமீப்யம் (பிரஹ்மாவின் ஸமீபத்திலேயே இருப்பது), ஸாயுஜ்யம் (பிரஹ்மாவுக்கு ஸமானமான ஐசுவர்யத்துடன் இருப்பது) என்று நான்கு விதமாய் இருக்கிறது. அப்படியே கர்மாக்கள் அதிகமாயிருந்தால் பலனும் அதிகமாக இருக்கும் என்ற நியாயத்தையனுஸரித்து ஸ்வர்க்கமும் பலவிதம். முக்திக்கும் பலனுயிருக்கும் தன்மையென்பதில் வித்தியாஸமில்லாததினுல், அதிலும் தாரதம்யம் உண்டு.

ஸித்தாந்தம் :

முக்தியென்பது தனக்கு எப்பொழுதும் ஸித்தமாயிருக்கிற பிரஹ்மமாய் இருக்கும் ஸ்வரூபமே தவிர, ஸ்வர்க்கம் போல ஏதோ புதிதாக ஏற்பட வேண்டிய நிலையல்ல. இது பின்னுல் சொல்லப்படும். பிரஹ்மம் ஒரே விதம் தான் என்று சொல்லப்பட்டும், நிர்ணயம் செய்யப்பட்டும் இருக்கிறது. ஆகையால் நான்முகப் பிரஹ்மாவுக்கும் சரி, மனிதனுக்கும் சரி முக்தி ஒரே விதம்தான். ஸாலோக்யம் முதலான வித்யாஸமே புதிதாக உண்டாகும் தன்மையை உடையதால் உபாஸனையிலுள்ள தாரதம்யத்திஞல் இதிலும் தாரதம்யம் ஏற்படுகிறது. முக்தி அப்படிப்பட்டதல்ல என்பது ஸித்தம்.

இந்த மூன்ருவது அத்யாயம் நான்காவது பாதத்தில் அதிகரணங்கள் 17, சுலோகங்கள் 36 (ஸூத்ரங்கள் 52).

மூன்ருவது அத்யாயம் நான்கு பாதங்களும் சேர்ந்து அதிகரணங்கள் 67, சுலோகங்கள் 140 (ஸூத்ரங்கள் 186).

*மூன்ருவது அத்யாயம் முற்றிற்று.*



# நான்காவது அத்யாயம் : முதல் பாதம்

இந்த அத்யாயத்தில் நிர்குண பிரஹ்மம் ஸகுண பிரஹ்மம் இவைகளை அறிவதால் ஏற்படும் பலன் வர்ணிக்கப்படுகிறது. முதல் பாதத்தில் புண்ணிய பாபம் விலகுவது சொல்லப்படுகிறது.

## १.आवृत्त्यधिकरणम्
## 1.ஆவ்ருத்த்யதி₄கரணம்
(ஸூத்ரம் 1,2)

**आवृत्तिरसकृदुपदेशात् ।।१।।**

ஆவ்ருத்திரஸக்ரிது₃பதே₃சாத் 1

( ஆவிருத்தி (செய்யவேண்டும்) அடிக்கடி உபதேசிப்பதால் )

**लिङ्गाच्च ।।२।।**

லிங்கா₃ச்ச 2

( லிங்கம் (ஸூசகம்) இருப்பதினாலும் )

சிரவணம் முதலியதை எத்தனை தடவை செய்யவேண்டுமென்பது இங்கு விசாரிக்கப்படுகிறது.

**श्रवणाद्याः सकृत्कार्या आवर्त्या वासकृद्यतः ।**
**शास्त्रार्थस्तावता सिध्येत्प्रयाजादौ सकृत्कृतेः ।। १ ।।**
**आवर्त्या दर्शनान्तास्ते तण्डुलान्तावघातवत् ।**
**दृष्टेऽत्र संभवत्पर्थे नादृष्टं कल्प्यते बुधैः ।। २ ।।**

ச்ரவணாத்₄யா: ஸக்ருத்கார்யா ஆவர்த்யா வாஸக்ருத்₃யத: ।
சாஸ்த்ரார்த₂ஸ்தாவதா ஸித்₃யேத்ப்ரயாஜா₃தௌ₃ ஸக்ருத்க்ருதே:।। 1
ஆவர்த்யா த₃ர்சநாந்தாஸ்தே தண்டு₃லாந்தாவகா₄தவத் ।
த்₃ருஷ்டேஅத்ர ஸம்ப₄வத்பர்தே₂ நாத்₃ருஷ்டம்கல்ப்யதே பு₃தை₄:।।2

(அர்த்தம்)

சிரவணம் முதலியவை ஒரு தரம் செய்ய வேண்டியவைகளா? அல்லது திரும்பத் திரும்பச் செய்ய வேண்டியவைகளா? பிரயோஜனம் முதலியதிற்கு ஒரே தரம் செய்வதிருப்பதால்,சாஸ்திரத்தின் பிரயோஜனம் அவ்வளவினாலேயே ஸித்திக்கும் ஆனதினால் ஒரு தரம் தான்.

அரிசியை எடுப்பதை முடிவாயுள்ள குத்துதலைப் போல ஸாக்ஷாத்காரத்தை முடிவாயுள்ள அவை (சிரவணம் முதலியவை) திரும்பத் திரும்பச் செய்ய வேண்டியவை தான். தெரியக் கூடிய

பிரயோஜனம் இங்கே ஸம்பவிக்கும் போது, அறிவாளிகளால் தெரியக்கூடாத பலன் கல்பிக்கப்படுவதில்லை.
(விளக்கம்)

பூர்வபக்ஷம் :
சாஸ்திரத்தில் சொன்னதை ஒரு தரம் செய்தால் சாஸ்திரத்தின் தாத்பர்யம் நிறைவேறி விடுகிறது என்ற நியாயத்தை அனுஸரித்து பிரயோஜனம் முதலானவைகளுக்கு ஒரே தடவை தான் அனுஷ்டானம் ஏற்பட்டிருக்கிறது. சிரவணம் முதலியவைகளும் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டவைகளானதினால், அவைகளையும் ஒரு தரம் தான் அனுஷ்டிக்க வேண்டும்.

ஸித்தாந்தம் :
அந்த நியாயம் கண்ணுக்குப் புலப்படாத பலனை விஷயமாக உள்ளவைகளுக்கு தான். சாஸ்திரத்திலேயே அரிசியை எடுப்பதற்காக நெல்லைக் குத்து என்று சொல்லுமிடத்திலும் ஒரு தரம் என்று ஆகாது. அங்கே அரிசி கிடைக்கும் வரை திரும்பத் திரும்பக் குத்தித்தான் ஆக வேண்டும். அது போலவே நேரில் அனுபவிக்க வேண்டியதாயுள்ள பிரஹ்ம ஸாக்ஷாத்காரத்தை பலனுயுள்ள சிரவணம் முதலியவை பலன் ஏற்படும் வரை அனுஷ்டிக்க வேண்டியவைகளே. புலப்படக் கூடிய பலன் இருக்கிற போது புலப்படாத பலனை கல்பிப்பது நியாயமல்ல. ஆகையால் சிரவணம் முதலியவை திரும்பத் திரும்பச் செய்ய வேண்டியவை தான்.

## २.आत्मत्वोपासनाधिकरणम्

## 2.ஆத்மத்வோபாஸநாதி₄கரணம்

(ஸூத்ரம் 3)

**आत्मेति तूपगच्छन्ति ग्राहयन्ति च ।।३।।**

ஆத்மேதி தூபக₃ச்ச₂ந்தி க்₃ராஹயந்தி ச 3

( ஆத்மா என்றேதான் அறிகிறார்கள், போதிக்கவும் செய்கிறார்கள் )

பிரஹ்மத்தை தானென்றே பாவிக்க வேண்டுமா? என்பது விஷயம்.

ज्ञात्रा स्वान्यतया ब्रह्म ग्राह्यमात्मतयाऽथवा ।
अन्यत्वेन विजानीयाद्दु:ख्यदु:खिविरोधत: ।। ३ ।।
औपाधिको विरोधोऽत आत्मत्वेनैव गृह्यताम् ।
गृहणन्त्येवं महावाक्यै: स्वशिष्यान्ग्राहयन्ति च ।। ४ ।।

ஜ்ஞாத்ரா ஸ்வாந்யதயா ப்$_3$ரஹ்ம க்$_3$ராஹ்யமாத்மதயாஅத$_2$வா ।
அந்யத்வேந விஜா$_3$நீயாத்$_3$து:$_3$க்$_2$யது:$_3$கி$_2$விரோத$_4$த: ॥ 3
ஔபாதி$_4$கோ விரோ$_4$தோ$_4$அத ஆத்மத்வேநைவ க்$_3$ருஹ்யதாம் ।
க்$_3$ருஹ்ணந்த்யேவம் மஹாவாக்யை: ஸ்வசிஷ்யாந்க்$_3$ராஹயந்தி ச ॥4

(அ..ம்)

அறிகிறவனால் பிரஹ்மமானது தன்னைவிட வேறானதாக கிரஹிக்க வேண்டுமா? அல்லது தான் என்றேயா? (தான்) துக்கமுள்ளவன் (பிரஹ்மம்) துக்கமற்றது என்று விரோதமிருப்பதால் வேறாகத் தான் அறிய வேண்டும்.

விரோதம் உபாதிகளால் செய்யப்பட்டது. ஆகையால், தான் என்றே தான் கிரஹிக்க வேண்டும். இவ்விதமே (ஞானிகள்) அறிகிறார்கள். மஹா வாக்கியங்களினால் தங்கள் சிஷ்யர்களையும் கிரஹிக்கும்படிச் செய்கிறார்கள்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

சாஸ்திரத்தினால் பிரதிபாதிக்கப்படும் பிரஹ்மமோ எவ்வித துக்கமுமற்றது. அதையறிய வேண்டியவனோ துக்கத்துடன் கூடின ஜீவனாயிருக்கிறான். இவ்விரண்டும் ஒன்றாயிருப்பது விரோதமேயாகும். ஆகையால் பிரஹ்மத்தை தன்னை விட வேறு என்று தான் கிரஹிக்க வேண்டும்.

ஸித்தாந்தம் :

வாஸ்தவத்தில் பிரஹ்ம ஸ்வரூபனாகவேயிருந்து வருகிற ஜீவனுக்கு அந்த காரணமாகிற உபாதியினால் தான் துக்கமுள்ளவனாயிருக்கும் தன்மை முதலான ஸம்ஸார தர்மம் ஏற்படுகிறது என்ற விஷயம் முன் இரண்டாவது அத்யாயம், மூன்றாவது பாதத்தில் ஜீவனைப்பற்றி விசாரிக்கும் போது விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் வாஸ்தவமான விரோதம் இல்லாததினால் தானாகவே தான் பிரஹ்மத்தை கிரஹிக்க வேண்டும். அதனால் தான் தத்வத்தையறிந்தவர்கள் "अहं ब्रह्मास्मि" "நான் பிரஹ்மமாக இருக்கிறேன்" "अयं आत्मा ब्रह्म" "இந்த ஆத்மா பிரஹ்மம்" என்பது முதலிய மஹா வாக்கியங்களால் பிரஹ்மத்தை தானென்றே கிரஹிக்கிறார்கள். அவ்விதமே "तत्वमसि" "நீ அதுவாய் இருக்கிறாய்" என்பது முதலான வாக்கியங்களாலும் தங்கள் சிஷ்யர்களை கிரஹிக்கும் படி செய்கிறார்கள். ஆகையால், தானாகவே பிரஹ்மம் கிரஹிக்கப்பட வேண்டும்.

# ३.प्रतीकाधिकरणम्

# 3.ப்ரதீகாதி₄கரணம்

(ஸூத்ரம் 4)

## न प्रतीके न हि सः ।।४।।

ந ப்ரதீகே நஹி ஸ: 4

( பிரதீகத்தில் இல்லை, அவன் இல்லை அல்லவே )

பிரதீகத்தையும் தான் என்று கிரஹிக்க வேண்டுமா? என்பது விஷயம்.

**प्रतीकेऽहंदृष्टिरस्ति न वा ब्रह्माविभेदतः ।**
**जीवप्रतीकयोर्ब्रह्मद्वाराऽहंदृष्टिरिष्यते ।। ५ ।।**
**प्रतीकत्वोपासकत्वहानिर्ब्रह्मैक्यवीक्षणे ।**
**अवीक्षणे तु भिन्नत्वान्नास्त्यहंदृष्टियोग्यता ।। ६ ।।**

ப்ரதீகேஅஹம்த்₃ருஷ்டிரஸ்தி ந வா ப்₃ரஹ்மாவிபே₄த₃த: ।
ஜீவப்ரதீகயோர்ப்₃ரஹ்மத்₃வாராஅஹம்த்₃ருஷ்டிரிஷ்யதே ।। 5
ப்ரதீகத்வோபாஸகத்வஹாநிர்ப்₃ரஹ்மைக்யவீக்ஷணே ।
அவீக்ஷணே து பி₄ன்னத்வாந்நாஸ்த்யஹம்த்₃ருஷ்டியோக்₃யதா ।।6

(அ..ம்)

பிரதீக விஷயத்தில் நான் என்ற பாவனை உண்டா? அல்லது இல்லையா? ஜீவன், பிரதீகம் இரண்டுமே பிரஹ்மத்தைத் தவிர வேறு இல்லாததினால் பிரஹ்மமாயிருக்கும் தன்மை மூலமாய் நான் என்ற பாவனை ஒப்புக் கொள்ளப்படுகிறது.

பிரஹ்மத்தோடு ஒன்றாயிருக்கும் தன்மை பார்க்கப்பட்டதேயானால் பிரதீகமாயிருக்கும் தன்மை, உபாஸகனாயிருக்கும் தன்மை இரண்டிற்குமே ஹானியேற்பட்டுவிடும். பார்க்கப்படவில்லையானாலோ வெவ்வேறாகவே இருப்பதால் நான் என்ற பார்வைக்கு தகுதியில்லை.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"**मनो ब्रह्मेत्युपासीत**" "மனஸ் பிரஹ்மம் என்று உபாஸிக்கவும்" "**आदित्यो ब्रह्म**" "ஆதித்யன் பிரஹ்மம்" என்பது முதலானவைகளில் பிரஹ்மமாகப் பார்க்கப்படுவதால் ஸம்ஸ்காரமடைந்துள்ள மனஸ், ஆதித்யன் முதலான பிரதீகங்கள் உபாஸிக்கத் தக்கவைகளாக இருக்கின்றன. பிரதீகம் பிரஹ்மத்தின் கார்யமாகவே இருப்பதால், பிரஹ்மத்தைத் தவிர வேறில்லை. ஜீவனோ பிரஹ்மத்தைத் தவிர வேறில்லை. ஆகையால் பிரஹ்மம் மூலமாக உபாஸிக்க வேண்டியதான பிரதீகத்திற்கும்,

உபாஸனை செய்பவனுகிய ஜீவனுக்கும் வேற்றுமையில்லை. ஆகையால் ஒன்ருகவே ஆகலாமானதினுல் பிரதீகம் உபாஸகனுல் தன் ஆத்மாவென்றே கிரஹிக்கப்பட வேண்டும்.

ஸித்தாந்தம் :
பிரஹ்ம கார்யமாயிருப்பதால் பிரதீகம் பிரஹ்மம் என்றே பார்க்கப்படுமேயானுல் பிரதீகத்தின் ஸ்வரூபமே மறைந்து விடும். குடம் மண்ணேடு ஒன்ருகப் பார்க்கப்பட்டால் குடத் தன்மை மறைந்து விடும். அப்படியே ஜீவனுக்கு பிரஹ்மத்துடன் ஒன்ருயிருக்கும் தன்மை பார்க்கப்பட்டதேயானுல் ஜீவத் தன்மையே போய்விடுமானதினுல் உபாஸிகத்தன்மையும் போய்விடும். உபாஸ்யம், உபாஸகன் என்ற ஸ்வரூபங்களை அப்படியே வைத்துக் கொள்ள நினைத்து கார்யம், காரணம் இவைகளுக்குள்ளஐக்யம், ஜீவபிரஹ்மஐக்யம் இவைகளை ஆலோசிக் கமாலிருந்தாலோ அவை இரண்டும் பசுவும் எருமையும் போல நன்கு வேறுபட்ட வைகளேயாகும். அதனுல் பிரதீகத்திற்கும், உபாஸகனுக்கும் ஒன்ருயிருக்கக்கூடிய யோக்கியதை கிடையாது. ஆகையால் பிரதீகத்தில் நான் என்ற பாவனை கிடையாது.

## ४.ब्रह्मदृष्ट्यधिकरणम्

## 4.ப்$_3$ரஹ்மத்$_3$ருஷ்ட்யதி$_4$கரணம்

(ஸூத்ரம் 5)

**ब्रह्मदृष्टिरुत्कर्षात् ।।५।।**

ப்$_3$ரஹ்மத்$_3$ருஷ்டிருத்கர்ஷாத் 5

( பிரஹ்மமாக பாவனை, மேலாயிருப்பதால் )

பிரதீகத்தை பிரஹ்மமாக பாவிக்க வேண்டுமா? பிரஹ்மத்தை பிரதீகமாக பாவிக்க வேண்டுமா? என்பது இங்கு விசாரிக்கப்படுகிறது.

**किमन्यधीर्ब्रह्मणि स्यादन्यस्मिन्ब्रह्मधीरुत ।**
**अन्यदृष्ट्योपासनीयं ब्रह्मात्र फलदत्वतः ।। ७ ।।**
**उत्कर्षेतिपरत्वाभ्यां ब्रह्मदृष्ट्याऽन्यचिन्तनम् ।**
**अन्योपास्त्या फलं दत्ते ब्रह्मातिथ्याद्युपास्तिवत् ।। ८ ।।**

கிமந்யதீ$_4$ர்ப்$_3$ரஹ்மணி ஸ்யாத$_3$ந்யஸ்மிந்ப்$_3$ரஹ்மதீ$_4$ருத ।
அந்யத்$_3$ருஷ்ட்யோபாஸனீயம் ப்$_3$ரஹ்மாத்ர ப$_2$லத$_3$த்வத: ।। 7
உத்கர்ஷேதிபரத்வாப்$_4$யாம் ப்$_3$ரஹ்மத்$_3$ருஷ்ட்யாஅன்யசிந்தநம் ।
அன்யோபாஸ்த்யா ப$_2$லம் த$_3$த்தே ப்$_3$ரஹ்மாதித்$_2$யாத்$_3$யுபாஸ்திவத்।। 8

(அ..ம்)

பிரஹ்மத்தில் வேறொன்றின் பாவனை இருக்க வேண்டுமா? அல்லது வேறொன்றில் பிரஹ்மம் என்ற பாவனையா? இங்கு பிரஹ்மமே பலன் கொடுக்கும் தன்மையுள்ளதால் பிரஹ்மம் தான் வேறொன்று என்ற பாவனையுடன் உபாஸிக்கத்தக்கது.

மேலானதாயிருப்பதாலும், "என்று" என்பதைப் பின்னால் உடையதாய் இருப்பதாலும் பிரஹ்மமென்ற பாவனையுடன் மற்றொன்று தான் சிந்திக்கப்பட வேண்டும். அதிதி முதலியவர்களை உபாஸிப்பதற்குப் போல, வேறொன்றின் உபாஸனையால் பிரஹ்மமே பலன் கொடுக்கிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிரஹ்மமே பலனைக் கொடுக்க வேண்டியிருப்பதால் அது தான் உபாஸிக்கத் தகுந்ததாகும். ஆகையால் அதில் மனஸ் முதலான பாவனைகளை செய்ய வேண்டும்.

ஸித்தாந்தம் :

பிரஹ்மமே மேலான வஸ்துவாயிருப்பதால் கீழ்பட்ட மனஸில் பிரஹ்மம் என்கிற பாவனைதான் செய்ய வேண்டும். உலகத்தில் கீழ்பட்டவனாயிருக்கும் சேவகனிடம் ராஜன் என்ற பாவனை செய்து ராஜனைப் போல் பூஜிக்கிறார்கள் என்பது பிரஸித்தம். ராஜனிடம் சேவகன் என்று பாவனை செய்வது கிடையாது. மேலும்"मनो ब्रह्मेत्युपासीत" "மனஸ் பிரஹ்மம் என்று உபாஸிக்கவும்" என்பதில் பிரஹ்மம் என்ற சப்தத்திற்குப் பின்னால் "என்று" என்று கண்டிருப்பதினால் பிரஹ்மமாக உபாஸிக்க வேண்டுமென்று தெரிகிறது. மனஸ் என்ற சப்தத்திற்குப் பின்னால் "என்று" என்று காணாததினால் மனஸ் என்பது அதற்கேற்பட்ட முக்கியமான அர்த்தத்தையே சொல்லும். "மரக்கட்டையை திருடன் என்று நினைக்கிறான்" என்ற இடத்தில் எப்படி மரக்கட்டையென்ற சப்தம் முக்கியமான அர்த்தத்தைச் சொல்வதாகவும் திருடன் என்ற சப்தம் பாவிக்கப்படுவதைச் சொல்வதாகவும் இருக்கிறதோ, அப்படியே இங்கேயும் பிரஹ்ம ஸ்வரூபம் இல்லாத மனஸிற்கு உபாஸிக்கப்படும் தன்மையென்றால் பிரஹ்மத்திற்கு பலனைக் கொடுக்கும் தன்மை பொருந்தாதேயென்று நினைக்க வேண்டாம். பிரஹ்ம ஸ்வரூபமில்லாமலிருந்த போதிலும் அதிதியை உபாஸித்தால் எல்லா கர்மாக்களுக்கும் ஸாக்ஷியாயிருக்கும் முறையில் பிரஹ்மமே எப்படி பலனைக் கொடுக்கிறதோ அப்படி இங்கேயும் பொருந்தக் கூடியது தான்.

ஆகையால் பிரஹ்ம்மல்லாததில் தான் பிரஹ்மம் என்ற பாவனே செய்ய வேண்டும்.

# ५.आदित्यादिमत्यधिकरणम्

## 5.ஆதி3த்யாதி3மத்யதி4கரணம்

(ஸூத்ரம் 6)

**आदित्यादिमतयश्चाङ्ग उपपत्तेः ।।६।।**

ஆதி3த்யாதி3மதயச்சாங்க3 உபபத்தே: 6

( ஆதித்யன் முதலிய எண்ணம்தான் அங்கத்தில் (அதுவே) நியாயமானதினால் )

பிரஹ்மமென்று பாவிக்கச் சொல்லாமல் வேறு தேவதையாக பாவிக்கச் சொல்லுமிடங்களில், பாவனே எப்படி? என்பது விஷயம்.

**आदित्यादावङ्गदृष्टिरङ्गे रव्यादिधीरुत ।**
**नोत्कर्षो ब्रह्मजत्वेन द्वयोस्तेनैच्छिकी मतिः ।। ९ ।।**
**आदित्यादिधियाऽङ्गानां संस्कारे कर्मणः फले ।**
**युज्यतेऽतिशयस्तस्मादङ्गेष्वर्कादिदृष्टयः ।। १० ।।**

ஆதி3த்யாதா3வங்க3த்3ருஷ்டிரங்கே3 ரவ்யாதி3தீ4ருத ।
நோத்கர்ஷோ ப்3ரஹ்மஜ3த்வேன த்3வயோஸ்தேனைச்சி2கீ மதி:।। 9
ஆதி3த்யாதி3தி4யாஅங்கா2நாம் ஸம்ஸ்காரே கர்மண: ப2லே ।
யுஜ்3யதேஅதிசயஸ்தஸ்மாத3ங்கே3ஷ்வர்காதி3த்3ருஷ்டய: ।। 10

(அ..ம்)

ஆதித்யன் முதலானவர்களிடத்தில் அங்கம் என்ற பாவனேயா? அல்லது அங்கத்தில் ஆதித்யன் முதலானவர்களின் பாவனேயா? இரண்டுமே பிரஹ்மத்திலிருந்து உண்டானதாயிருப்பதால் மேல் என்பது இல்லே. ஆகையால் இஷ்டம் போல் பாவனே செய்யலாம்.

ஆதித்யன் முதலானவர்களென்று பாவனே செய்வதால் அங்கங்களுக்கு ஸம்ஸ்காரம் ஏற்படும் போது கர்மாவின் பலனில் அதிகத் தன்மை ஏற்படுவது நியாயம். ஆகையால் அங்கங்களில் தான் ஆதித்யன் முதலானவர்களென்ற பாவனே.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"य एवासौ तपति तमुद्गीथमुपासीत" "எந்த இவர் தபித்துக்கொண்டேயிருக்கிருரோ, அவர் உத்கீதம் என்று உபாஸிக்கவும்" என்றவிடத்தில் ஆதித்ய தேவதையை பிரதீக்மாக வைத்துக் கொண்டு அதில் கர்மாவிற்கு அங்கமாயுள்ள உத்கீதம் என்ற பாவனே செய்ய வேண்டுமா?

அல்லது மாற்றி கர்மாவின் அங்கத்தில் ஆதித்யன் என்ற பாவனையா? என்று வரும் போது ஆதித்யன், உத்கீதம் இரண்டுமே பிரஹ்மத்தின் கார்யமாயிருப்பதால் முன் அதிகரணத்தில் கண்ட நியாயமாகிற "மேலானது" என்பதற்கு இங்கே இடமில்லாததினால், இவ்விதம் தான் பாவனை செய்ய வேண்டுமென்று" நியமனம் செய்ய எவ்விதக் காரணமுமில்லாததினால் இஷ்டப்படி செய்யலாம்.

ஸித்தாந்தம் :
கர்மாவில் அங்கமாயுள்ளதைத் தான் ஆதித்யன் என்று பாவனை செய்து சுத்தி செய்ய வேண்டும். அப்படி செய்யும் பாவனைகளால் சுத்தியடையும் கர்மாவுக்கு விசேஷமான பலன் ஏற்படக் கூடியது. அப்படியில்லாவிடில் ஆதித்ய தேவதையிடம் கர்மாங்கம் என்று பாவனை செய்வதால் என்ன பலன் கிடைக்க முடியும்? தேவதை கிரியா ஸ்வரூபமில்லாததினால் பலனுக்கு ஸாதனமாகாது. அது எல்லாருக்கும் பொதுவாயுள்ளதாயிருப்பதால் யாகம் செய்கிறவன், செய்யாதவன் எல்லாருக்கும் பலன் ஒரே மாதிரி என்று ஏற்பட்டு விடும். ஆகையால் அங்கங்களில் தான் ஆதித்யன் முதலானவர்களின் பாவனை செய்ய வேண்டும்.

# ६.आसीनाधिकरणम्

## 6.ஆஸீநாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 7 - 10)

**आसीनः सम्भवात् ।।७।।**

ஆஸீந: ஸம்ப$_4$வாத் 7

( உட்கார்ந்துகொண்டு, (அவனுக்கே) ஸம்பவிக்குமானதால் )

**ध्यानाच्च ।।८।।**

த்$_4$யாநாச்ச 8

( தியானமானதினாலும் )

**अचलत्वं चापेक्ष्य ।।९।।**

அசலத்வம் சாபேக்ஷ்ய 9

( அசையாத்தன்மையையும் அபேக்ஷித்து )

**स्मरन्ति च ।।१०।।**

ஸ்மரந்தி ச 10

( ஸ்மிருதிகளும் சொல்கின்றன )

உபாஸனை செய்வது உட்கார்ந்து கொண்டா, எப்படி? என்பது விஷயம்.

**नास्त्यासनस्य नियम उपास्तावुत विद्यते ।**

**न देहस्थितिसापेक्षं मनोऽतो नियमो न हि ।। ११ ।।**
**शयनोत्थानगमनैर्विक्षेपस्यानिवारणात् ।**
**धीसमाधानहेतुत्वात्परिशिष्यत आसनम् ।। १२ ।।**

நாஸ்த்யாஸநஸ்ய நியம உபாஸ்தாவுத வித்₃யதே ।
ந தே₃ஹஸ்தி₂திஸாபேக்ஷம் மநோஅதோ நியமோ ந ஹி ।। 11
சயநோத்தா₂நக₃மநைர்விக்ஷேபஸ்யாநிவாரணாத் ।
தீ₄ஸமாதா₄நஹேதுத்வாத்பரிசிஷ்யத ஆஸநம் ।। 12

(அ..ம்)

உபாஸனை செய்வதில் ஆஸன விஷயமாக நியமம் இல்லையா? அல்லது உண்டா? மனஸ் என்பது தேஹத்தின் நிலையை அபேக்ஷிக்கிறதில்லை. ஆகையால் நியமம் கிடையாது.

படுத்திருத்தல், நிற்றல், நடத்தல் இவைகளால் (மனஸிற்கு) ஏற்படும் விக்ஷேபம் தடுக்க முடியாததினாலும், மனஸ் ஒருமைப்படுவதற்குக் காரணமாயிருப்பதினாலும் உட்கார்ந்திருப்பது தான் (உசிதமென்று) மிஞ்சுகிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

உட்கார்ந்து கொண்டே தான் உபாஸிக்க வேண்டும் என்று நியமம் கிடையாது. மனஸ் செய்ய வேண்டிய வேலை விஷயமாக சரீரம் இவ்விதமிருக்க வேண்டுமென்பதற்கு பிரயோஜனமில்லை.

ஸித்தாந்தம் :

படுத்துக் கொண்டு உபாஸிப்பது ஸாத்தியமில்லை. எதிர் பாராமல் தூக்கம் வந்து அமிழ்த்தி விடும். நின்று கொண்டிருந்தால் தேஹத்தை நிறுத்தி வைப்பதினாலும், நடந்து கொண்டிருந்தால் பாதையை கவனிப்பது முதலியதினாலும், மனஸ் விக்ஷேபத்தையடைந்து கொண்டேயிருக்கும். ஆதலால் மனஸ் உபாஸனைக்கு வேண்டியபடி ஒருமைப்பட்டு இருக்க முடியாது.. ஆகையால் உட்கார்ந்து கொண்டுதான் உபாஸிக்க வேண்டும்.

## ७.एकाग्रताधिकरणम्

## 7.ஏகாக்₃ரதாதி₄கரணம்

(ஸூத்ரம் 11)

**यत्रैकाग्रता तत्राविशेषात् ।।११।।**

யத்ரைகாக்₃ரதா தத்ராவிசேஷாத் 11

( எதில் ஒருமுனைப்படுமோ, அதில் விசேஷமில்லாததினால் )

திக், தேச விஷயமாக நியமம் உண்டா? என்பது விஷயம்.

दिग्देशकालनियमो विद्यते वा न विद्यते ।
विद्यते वैदिकत्वेन कर्मस्वेतस्य दर्शनात् ।। १३ ।।
ऐकाग्र्यस्याविशेषेण दिगादिर्न नियम्यते ।
मनोनुकूल इत्युक्तेर्दृष्टार्थं देशभाषणम् ।। १४ ।।

திக்₃தே₃சகாலநியமோ வித்₃யதே வா ந வித்₃யதே ।
வித்₃யதே வைதி₃கத்வேந கர்மஸ்வேதஸ்ய த₃ர்சநாத் ।। 13
ஐகாக்₃ர்யஸ்யாவிசேஷேண தி₃கா₃தி₃ர்ந நியம்யதே ।
மனோநுகூல இத்யுக்தேர்த்₃ருஷ்டார்த₂ம் தே₃சபா₄ஷணம் ।। 14

(அ..ம்)

திக், தேசம், காலம் இவைகளில் நியமம் உண்டா? அல்லது கிடையாதா? இது (நியமம்) கர்மாக்களில் காணப்படுவதால் (உபாஸனேயும்) வேதத்தில் விதிக்கப் பட்டிருக்கும் தன்மையுள்ளதால் (நியமம்) உண்டு.

மனஸ் ஒருமுனேப்படுவதில் வித்யாஸமில்லாததினுல், திக் முதலியது நியமிக்கப் படவில்லே. "மனஸிற்கு அனுகூலமான" என்று சொல்லி இருப்பதால் இடத்தைப் பற்றி சொன்னது புலப்படக் கூடிய பிரயோஜனத்தை யுத்தேசித்து சொல்லப் பட்டது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"ब्रह्मयज्ञेन यक्ष्यमाण:प्राच्यां दिशि" "பிரஹ்ம யக்ஞம் செய்பவன் கிழக்கு திக்கில்" என்று திக் விஷயமாக நியமம். "प्राचीनप्रवणे वैश्वदेवेन यजेत" "கிழக்கே தணிவாயுள்ள இடத்தில் வைசுவதேவத்தினுல் யஜிக்க வேண்டும்" என்று இடம் விஷயமாக நியமம். "अथ यदपराह्ने पिण्डपितृयज्ञेन चरन्ति" "இனி பிற்பகலில் பிண்டபித்ரு யக்ஞத்தினுல் அனுஷ்டிக்கிருர்கள்" என்று காலம் விஷயமாக நியமம் என்று இவ்வித மூன்று விதமான நியமங்களும் கர்மாவில் காணப்படுகிறது. கர்மா எப்படி வேதத்தினுல் விதிக்கப் பட்டிருக்கிறதோ, அப்படியே உபாஸனேயும் விதிக்கப்பட்டிருப்பதால் அவைகளுக்குள் வித்யாஸமில்லே. ஆகையால் இந்த நியமங்கள் உபாஸனேயிலும் உண்டென்று அறிய வேண்டும்.

ஸித்தாந்தம் :

மனஸின் ஐகாக்ர்யம் (ஒரு முனேப்படுதல்) தான் தியானத்திற்கு பிரதானமான ஸாதனம். அதற்கு திக் முதலான நியமங்களால் ஆக

வேண்டிய விசேஷமெதுவுமில்லை. ஆகையால் நியமம் கிடையாது. அதனால் தான் யோக அப்பியாஸத்திற்காக இடத்தைக் குறிப்பிடும் சுருதி "मनोनुकूले" " மனஸிற்கு அனுகூலமானதில்" என்று சொல்கிறது. எந்தவிடத்தில் மனஸ் தெளிவுடன் இருக்குமோ அங்கே மனஸை ஒருமைப்படுத்தவும். இதற்கு சாஸ்திரத்தினால் நியமிக்கப்படுவதான இடம் எதுவும் கிடையாது என்று தாத்பர்யம்."समे शुचौ शर्करावन्हिवालुकावर्तिते" "ஸமமான, (மேடு பள்ளம் இல்லாத) சுத்தமான, கூழாங்கல் நெருப்பு, மணல்(சரளி) இல்லாத" என்று யோகாப்பியாஸத்திற்கு இடம் சொல்லப் பட்டு இருக்கிறதேயென்றால் வாஸ்தவம். ஆனால் அது கண்ணுக்குப் புலப் படக்கூடிய ஸௌகர்யத்தை யுத்தேசித்து சொல்லப்பட்டது, என்பது பின்னால் வரும் "மனஸிற்கு அனுகூலமான" என்று குறிப்பிடுவதினால் நிச்சயிக்கப்படுகிறது. ஆகையால் திக் முதலானதில் நியமம் இல்லை.

## ८.आप्रायणाधिकरणम्

## 8.ஆப்ராயணாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 12)

**आप्रायणात्तत्रापि हि दृष्टम् ।।१२।।**

ஆப்ராயணாத்தத்ராபி ஹி த்$_3$ருஷ்டம் 12

( மரணம் வரையில், அப்பொழுதும் காணப்பட்டிருக்கிறபடியால் )

உபாஸனை எவ்வளவு காலம் செய்ய வேண்டும்? என்பது விஷயம்.

**उपास्तीनां यावदिच्छमावृत्तिः स्यादुताऽऽमृति ।**
**उपास्त्यर्थाभिनिष्पत्तेर्यावदिच्छं न तूपरि ।। १५ ।।**
**अन्त्यप्रत्ययतो जन्म भाव्यतस्तत्प्रसिद्धये ।**
**आमृत्यावर्तनं न्याय्यं सदा तद्भाववाक्यतः ।। १६ ।।**

உபாஸ்தீநாம் யாவதி$_3$ச்ச$_2$மாவ்ருத்தி: ஸ்யாது$_3$தாஆம்ருதி ।
உபாஸ்த்யர்தா$_2$பி$_4$நிஷ்பத்தேர்யாவதி$_3$ச்ச$_2$ம் ந தூபரி ।। 15
அந்த்யப்ரத்யயதோ ஜ$_2$ன்ம பா$_4$வ்யதஸ்தத்ப்ரஸித்$_3$த$_4$யே ।
ஆம்ருத்யாவர்தநம் ந்யாய்யம் ஸதா$_3$ தத்$_3$பா$_4$வவாக்யத: ।।16

(அ..ம்)

உபாஸனைகளுக்கு திரும்பத் திரும்பச் செய்தல் இஷ்டம் போலவா? அல்லது மரணம் வரையிலுமா? உபாஸனையின் (சப்தார்த்தம்) பிரயோஜனம் ஏற்பட்டு விடுவதால், இஷ்டம் போலத்தான். அதற்குப் பிறகு வேண்டியதில்லை.

கடைசி எண்ணத்தின்படி மேல் வரும் பிறப்பு, ஆகையால் அது (கடைசி எண்ணம்) நன்கு ஸித்திப்பதற்காக, எப்பொழுதும் அதையே பாவிக்க வேண்டுமென்ற வாக்கியமிருப்பதால், மரணம் வரை திரும்பத் திரும்பச் செய்வது தான் நியாயம்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

வேறு வித எண்ணம் குறுக்கிடாமல், ஒரே வித எண்ணத்தின் பிரவாஹமே உபாஸனேயென்று சப்தத்தின் அர்த்தம். அது ஏதோ கொஞ்ச காலத்திஞல் ஏற்பட்டு விடும். ஆகையால் வேண்டும் போது திரும்பத் திரும்பச் செய்தால் போதும். மரணம் வரை செய்தாக வேண்டுமென்பதில்லே.

ஸித்தாந்தம் :

கடைசியிலுள்ள எண்ணம் தான் பின்னுல் ஏற்படப்போகும் ஜன்மாவை உண்டு பண்ணக்கூடிய தன்மையையுள்ளதால் அவ்வெண்ணம் மரணம் வரை திரும்பத் திரும்பச் செய்தாலொழிய ஏற்படாது. அதனுல் தான் ஸ்மிருதியும்"सदा तद्भावभावितः""எப்பொழுதும் அதன் தன்மையையே பாவித்தவன்" என்று சொல்கிறது. அப்படியாளுல் ஜ்யோதிஷ்டோமம் முதலான கர்மாவைச் செய்து ஸ்வர்க்கம் போகிறவர்களுக்கு கடைசி எண்ணம் எப்படி? (ஜ்யோதிஷ்டோம ரூபமாக இருக்காதே?) என்ருல், அந்த கர்மாவிஞல் ஏற்படும் அபூர்வத்தின் பலத்திஞல் என்று சொல்கிருேம். அப்படியாளுல் உபாஸனேயிலும் தான் அபூர்வம் உண்டு என்ருல், வாஸ்தவம் இதனுல் இடைவிடாமல் திரும்பத் திரும்பச் செய்வதாகிய புலப்படக் கூடிய உபாயம் விட்டுவிட வேண்டியதாக ஆகாது. அவ்விதம் ஆகுமேயாளுல் அனுபவிக்கப்படும் எல்லா ஸுக துக்கங்களுமே அபூர்வத்திஞல் ஏற்படுவதாகவிருப்பதால், சாப்பிடுவது முதலிய புலப்படக் கூடிய எல்லா பிரயத்தினமுமே விட்டுவிட வேண்டியதாக ஏற்பட்டுவிடும். ஆகையால் புலப்படும் விஷயமாயிருப்பதால் மரணம் வரை திரும்பத் திரும்பச் செய்ய வேண்டியது தான். இதுவரை எட்டு அதிகரணங்களில் விசாரிக்கப்பட்ட விஷயங்கள் ஸாதனங்களாகவே இருப்பதால் முன் அத்யாயத்திலேயே சொல்லப்பட்டிருக்க வேண்டியவைகளாக இருந்த போதிலும் பலனுக்கு மிகவும் நெருங்கிய ஸாதனங்களா யிருப்பதால் இந்த அத்யாயத்திலேயே சேர்க்கப்பட்டிருக்கின்றன.

# ९.तदधिगमाधिकरणम्

## 9.தத₃தி₄க₃மாதி₄கரணம்

(ஸூத்ரம் 13)

**तदधिगम उत्तरपूर्वाघयोरश्लेषविनाशौ तद्व्यपदेशात् ।।१३।।**

தத₃தி₄க₃ம உத்தரபூர்வாக₄யோரச்லேஷவிநாசௌ
தத்₃வ்யபதே₃சாத் 13

( அதை அறிந்தால் பின்-முன் பாபங்களுக்கு ஓட்டாமையும் நாசமும், அவ்விதம் சொல்லியிருப்பதால் )

ஆத்மக்ஞானிக்கு பாபத்தின் ஸம்பந்தமுண்டா? என்பது விஷயம்.

**ज्ञानिनः पापलेपोऽस्ति नास्ति वाऽनुपभोगतः ।**
**अनाश इति शास्त्रेषु घोषाल्लेपोऽस्य विद्यते ।। १७ ।।**
**अकर्त्रात्मधिया वस्तुमहिम्नैव न लिप्यते ।**
**अश्लेषनाशावप्युक्तावज्ञे घोषस्तु सार्थकः ।। १८ ।।**

ஜ்ஞாநிந: பாபலேபோஅஸ்தி நாஸ்தி வாஅனுபபோ₄க₃த: ।
அநாச இதி சாஸ்த்ரேஷு தோ₄ஷால்லேபோஅஸ்ய வித்₃யதே ।।17
அகர்த்ராத்மதி₄யா வஸ்துமஹிம்நைவ ந லிப்யதே ।
அச்லேஷநாசாவப்யுக்தாவஜ்ஞே கோ₄ஷஸ்து ஸார்த₂க: ।।18

(அ..ம்)

ஞானிக்கு பாபத்தின் லேபம் (ஒட்டுதல்) உண்டா? அல்லது கிடையாதா? "அனுபவிக்காதுபோனல் நாசம் கிடையாது" என்று சாஸ்திரங்களில் கோஷிக்கப்பட்டிருப்பதால், இவருக்கு லேபம் உண்டு. செய்யும் தன்மை அற்றதே ஆத்மாவென்பதினுல், வஸ்துவின் மஹிமையினுலேயே லேபம் கிடையாது. மேலும் (பின்னுல் செய்யப்படுவதற்கு) ஒட்டுதலின்மையும் (முன் செய்யப்பட்டதற்கு) நாசமும் சொல்லப்பட்டுமிருக்கின்றன. (சாஸ்திரத்தில் கண்ட) கோஷமோ அக்ஞானியின் விஷயத்தில் அர்த்தமுள்ளது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

**"नाभुक्तं क्षीयते कर्म कल्पकोटिशतैरपि"** 'நூறு கோடி கல்பங்கள் ஆனுலும் கர்மா அனுபவிக்கப்படாமல் நாசத்தையடையாது" என்று எல்லா சாஸ்திரங்களிலும் பிரஸித்தமாய் இருப்பதால், பிரஹ்மக் ஞானிக்கும் கூட பாபத்தின் லேபம் உண்டு தான். அவனும் அனுபவித்தேயாக வேண்டும்.

ஸித்தாந்தம் :
நிர்குணமான பிரஹ்மத்தையே தன் ஆத்மாவின் வாஸ்தவமான தத்வமாக அறிந்தவருக்கு "நான் செய்தவன் இல்லை, நான் செய்கிறவன் இல்லை, நான் செய்யப்போகிறவனும் இல்லை" என்று மூன்று காலத்திலும் செய்யும் தன்மையற்ற பிரஹ்ம ஸ்வரூபமாகவே இருப்பதாகவுள்ள நிச்சயமிருப்பதால் பாபத்தின் லேபம் உண்டா இல்லையாயென்ற ஸந்தேஹத்திற்கே (ஏற்பட) இடமில்லை. செய்யாதவனுக்கு லேபமிருக்கலாமென்று மந்தபுத்தி உள்ளவர்கள் கூட ஸந்தேஹிக்கமாட்டார்கள். ஸகுண பிரஹ்மத்தை அறிந்தவனுக்கு ஒட்டா திருத்தல், நாசம் இரண்டும் சொல்லப்பட்டிருப்பதால் அவனுக்கும் லேபம் கிடையாது. அதாவது "**यथा पुष्करपलाश आपो न श्लिष्यन्त एवमेवंविदि पापं कर्म न श्लिष्यते**" "தாமரை இலையில் எப்படி ஜலம் ஒட்டுவது இல்லையோ, அப்படியே இவ்விதம் அறிந்தவரிடம் பாபமான கர்மா ஒட்டுவது கிடையாது" என்று பிரஹ்மத்தை ஸாக்ஷாத்கரித்ததற்குப் பிறகு தேஹம் இந்திரியம் இவைகள் உடைய வியவஹாரத்தினுல் ஏற்படக் கூடிய பாபத்திற்கு ஒட்டுதல் இல்லை என்று சொல்லப்படுகிறது. ஸாக்ஷாத்கரிப்பதற்கு முன்னுல் இந்த ஜன்மாவிலோ, முன் ஜன்மாக்களிலோ சேர்ந்திருக்கும் பாபங்களின் கூட்டத்திற்கும் "**तद्यथेषीकातूलमग्नौ प्रोतं प्रदूयेत, एवं हास्य सर्वे पाप्मान: प्रदूयन्ते**" "இஷீகையின் பஞ்சு அக்னியில் போட்டால் எப்படி நசித்து விடுகிறதோ, இவ்விதமே இவருடைய எல்லா பாபங்களும் நசித்து விடுகின்றன" என்று நாசம் சொல்லப்பட்டிருக்கிறது. "அனுபவிக்கப்படாதது நசிக்காது" என்பது முதலான சாஸ்திரமோ ஸகுண பிரஹ்மம், நிர்குண பிரஹ்மம் இரண்டையும் அறியாதவர்களை விஷயமாய் உள்ளது. ஆகையால் ஞானிக்கு பாபத்தின் லேபம் கிடையாது.

## १०.इतरासंश्लेषाधिकरणम्

## 10.இதராஸம்ச்லேஷாதி₄கரணம்

(ஸூத்ரம் 14)

**इतरस्याप्येवमसंश्लेष: पाते तु ।।१४।।**

இதரஸ்யாப்யேவமஸம்ச்லேஷ: பாதே து 14

(மற்றதற்கும்கூட இவ்விதம் ஒட்டாமை, விழுந்தாலோ)

முன் அதிகரணத்தில் பாபத்திற்கு லேபம் உண்டா? என்பது மாத்திரம் விசாரிக்கப்பட்டது. புண்ணியத்திற்கு லேபம் உண்டா? என்பது இங்கே விஷயம்.

पुण्येन लिप्यते नो वा लिप्यतेऽस्य श्रुतत्वतः ।
न हि श्रौतेन पुण्येन श्रौतं ज्ञानं विरुध्यते ।। १९ ।।
अलेपो वस्तुसामर्थ्यात्समानः पुण्यपापयोः ।
श्रुतं पुण्यं पापतया तरणं च समं श्रुतम् ।। २० ।।

புண்யேந லிப்யதே நோ வா லிப்யதேஅஸ்ய ச்ருதத்வத: ।
ந ஹி ச்ரௌதேந புண்யேந ச்ரௌதம் ஜ்ஞாநம் விருத்₄யதே ।।19
அலேபோ வஸ்துஸாமர்த்₂யாத்ஸமாந: புண்யபாபயோ: ।
ச்ருதம் புண்யம் பாபதயா தரணம் ச ஸமம் ச்ருதம் ।। 20

(அ..ம்)

புண்ணியத்தினுல் தீண்டப்படுகிருனு? அல்லது இல்லையா? இது (புண்ணியம்) வேதத்தில் கண்டிருப்பதினுல் தீண்டப்படுகிருன். வேதத்தின் சொல்லிய புண்ணியத்துடன் வேதத்தில் சொல்லிய ஞானம் விரோதப்படாதல்லவா?

வஸ்துவின் யோக்கியதையினுல் லேபம் இன்று என்பதால் புண்ணியம், பாபம் இரண்டிற்குமே ஸமானமாயுள்ளது தான். புண்ணியம் கூட பாமென்றே சொல்லப்படுகிறது. தாண்டுவது இரண்டிற்கும் ஸமமாகவே சொல்லப்பட்டு இருக்கிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பாபம் வேண்டுமானுல் ஒட்டாமலிருக்கட்டும். புண்ணியம் வேத விஹிதம் ஆனதினுல், வேத விஹிதமான பிரஹ்ம ஞானத்துடன் ஸமமாயிருப்பதால் விரோதத்திற்கு இடமில்லை. ஆகையால் புண்ணியத்தின் லேபம் உண்டு.

ஸித்தாந்தம் :

ஆத்மா செய்கிறவனல்ல என்ற வஸ்துவின் ஸாமர்த்தியத்தினுல் பாபம் போலவே, புண்ணியத்தினுலும் அவன் தீண்டப்படுவதில்லை. ஸகுண பிரஹ்மத்தை அறிந்தவன் விஷயத்திலோ (பிரஹ்மலோகமடைய ஸாதனமாயுள்ள) உபாஸனைக்கு வேருயுள்ள எந்த கார்யமான புண்ணியமும் பாபத்தைப் போலவே கீழான ஜன்மாவுக்குக் காரணமாயிருக்குமாதலால், பாபத்திற்கு ஸமானம் தான் என்று கருதி தஹரவித்யையின் பின் வாக்கியத்தில் சுருதி அதையும் பாபமாகவே சொல்கிறது. "सर्वे पाप्मानोऽतो निवर्तन्ते" "எல்லா பாபங்களும் இவனிடமிருந்து விலகிவிடுகின்றன," அதாவது நல்லசெய்கை, கெட்டசெய்கை அவைகளின் பலன் என்று எது எதெல்லாம் முன்

வாக்கியத்தில் காணப்பட்டதோ, அந்த எல்லா பாபங்களும் இந்த உபாஸகனிடமிருந்து விலகிவிடுகின்றன. மேலும "उभे उहैवैष एते तरति" "அவன் இந்த இரண்டையுமே தாண்டிவிடுகிருன்" என்று ஞானிக்கு புண்ணியம்,பாபம் இரண்டையும் தாண்டி விடுதலே ஸமமாகவே வேதம் சொல்கிறது.

ஆகையால் பாபம் போலவே புண்ணியத்திலும் லேபம் கிடையாது.

# ११.अनारब्धाधिकरणम्

## 11.அநாரப்$_3$தா$_4$தி$_4$கரணம்

(ஸூத்ரம் 15)

**अनारब्धकार्ये एव तु पूर्वे तदवधेः ।।१५।।**

அநாரப்$_3$த$_4$கார்யே ஏவ து பூர்வே தத$_3$வதே$_4$: 15

( கார்யத்தை ஆரம்பிக்காத முன்னுள்ளவைதான், அதற்கு எல்லையிருப்பதால் )

முன் இரண்டு அதிகரணங்களில் இதற்கு முன் சேர்ந்திருக்கும் ஸஞ்சிதமான புண்ணியபாபங்கள் நசித்து விடுவதாயும், இனி செய்யநேரிடும் ஆகாமியான புண்ணியபாபங்கள் ஒட்டாது என்றும் சொல்லப்பட்டது. இப்பொழுது பலன் கொடுக்க ஆரம்பித்து இந்த சரீரத்தைக் கொடுத்த கர்மாவும் நசித்து விடுமா? நசித்து விட்டால் ஞானமேற்பட்ட பிறகு இந்த சரீரம் இருக்க நியாயமில்லேயே? என்ற விஷயம் இங்கு விசாரிக்கப்படுகிறது.

**आरब्धे नश्यतो नो वा सञ्चिते इव नश्यतः ।**
**उभयत्राप्यकर्तृत्वतद्बोधौ सदृशौ खलु ।। २१ ।।**
**आदेहपातसंसारश्रुतेरनुभवादपि ।**
**इषुचक्रादिदृष्टान्तान्नैवाऽऽरब्धे विनश्यतः ।। २२ ।।**

ஆரப்$_3$தே$_4$ நச்யதோ நோ வா ஸஞ்சிதே இவ நச்யத: ।
உப$_4$யத்ராப்யகர்த்ரு த்வதத்$_3$போ$_3$தௌ$_4$ ஸத்$_3$ருசௌ க$_2$லு ।। 21
ஆதே$_3$ஹபாதஸம்ஸாரச்ருதேரநுப$_4$வாத$_3$பி ।
இஷுசக்ராதி$_3$த்$_3$ருஷ்டாந்தாந்நைவஆரப்$_3$தே$_4$ விநச்யத: ।। 22

(அ..ம்)

பலனைக் கொடுக்க ஆரம்பித்துள்ள புண்ணிய பாபம் இரண்டும் நசிக்கின்றனவா? அல்லது இல்லேயா? ஸஞ்சிதங்களேப் போலவே நசிக்கின்றன. (ஸஞ்சிதம், பிராரப்தம் ஆகிய) இரண்டிலுமே செய்யாத் தன்மை அதன் அறிவு என்ற இரண்டும் ஸமானமல்லவா?

சரீரம் விழும் வரை ஸம்ஸாரமுண்டென்ற வேதம் சொல்வதாலும், அனுபவத்தினுலும், அம்பு, சக்கிரம் முதலான திருஷ்டாந்தத்தினுலும் ஆரம்பித்தது நசிக்கவே நசிக்காது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஞானத்திற்கு முன்னுல் சேகரிக்கப்பட்ட புண்ணியபாபங்கள் இரண்டு விதம். பலனைக் கொடுக்க ஆரம்பித்தவையென்றும், பலனைக் கொடுக்க ஆரம்பிக்காதவையென்றும் அவ்விரண்டிலும் ஆத்மா கர்த்தாவல்ல என்பது ஸமானம். அப்படியே அதன் அறிவு ஸமானம். ஆகையால் பலனைக் கொடுக்க ஆரம்பிக்காதவைகளைப் போலவே, பலனைக் கொடுக்க ஆரம்பித்தவைகளுக்கும் ஞானம் உதயமான ஸமயத்திலேயே நாசம் தான்.

ஸித்தாந்தம் :

ஆரம்பித்திருக்கிறவைகளுக்கு நாசமில்லையென்பது சுருதி அனுபவம். யுக்தி இந்த மூன்றிலும் தெரிகிறது. "तस्य तावदेव चिरं यावन्न विमोक्ष्येऽथ संपत्स्ये" "எதுவரை விடுபடவில்லையோ அது வரை தான் அவருக்கு தாமதம், பிறகு பிரஹ்மமாகி விடுகிருன்", அதாவது தத்வத்தையறிந்த அவருக்கு மோக்ஷம் தாமதித்தாலும் மிகவும் தாமஸமில்லை. இவர் தாயாரின் கர்ப்பத்தில் வரும் காலத்தில் ஏற்பட்டுள்ள ஆயுஸிற்கு கூடிய மேற்படாததினுல் பிராணனில் இருந்து இந்த சரீரம் விடுபடாது, அவ்விதம் விடுபடும் வரை தான் தாமஸம். அதன் பிறகு சரீரமும், பிராணனும் பிரிந்து விட்டதேயானுல் பிரஹ்மமாகவே ஆகி விடுகிருன் என்று சுருதி சொல்கிறது. இந்த சுருதியினுல் தத்வமறிந்தவனுக்குக் கூட சரீரம் விழும் வரை ஸம்ஸாரம் எப்படி ஒப்புக்கொள்ளப்பட்டு இருக்கிறதோ, அப்படியே அறிந்தவர்களுடைய அனுபவமும் இவ்விஷயத்தில் ஸ்பஷ்டமாக இருக்கிறது. அம்பராத்தூணியிலிருக்கும் அம்புகள் விஷயமாய் வில்லாளிக்கு எடுப்போமா வேண்டாமா என்பதில் ஸ்வாதந்திரியமிருந்த போதிலும், விட்டு விட்ட அம்பு விஷயத்தில் ஸ்வாதந்திரியம் காண்பதில்லை. வேகம் க்ஷீணித்தால் அம்பு தானுகவே விழுந்து விடும். இவ்விதமே குயவனுடைய சக்கிரத்தையும் உதாஹரணமாக எடுத்துக் கொள்ளலாம். அதே மாதிரி தார்ஷ்டாந்திகத்தில் பிரஹ்மக் ஞானத்திற்கும் பலனைக் கொடுக்க ஆரம்பிக்காத கர்மாக்களை நாசம் செய்வதில் ஸ்வாதந்திரியம் இருக்கும். பலனைக் கொடுக்க ஆரம்பித்து விட்ட கர்மாக்கள் விஷயத்திலோ

ஸ்வாதந்திரியம் கிடையாது. பலனைக் கொடுக்க ஆரம்பித்து விட்டதென்ற காரணத்திலேயே, மேலும் இவ்விதம் சுருதி அனுபவம் யுக்தி இவைகளைக் கொண்டு பிராப்தம் மீதமாயிருப்பது ஒப்புக் கொள்ளப் படவில்லையானால், ஆத்மக் ஞானத்தை உபதேசிக்கவே யாரும் இல்லாமல் போய்விடுமானதினால் வித்யா ஸம்பிரதாயமே அறுந்து விடும். பிரஹ்மத்தை அறியாதவன் உபதேசிப்பான் என்று சொல்வது ஸாத்தியமில்லை. அறிந்தவனே அறிந்த ஸமயத்திலேயே முக்தியடைந்து விட்டால், பிறகு யார் தான் உபதேசிப்பவனாக இருக்க முடியும்?

ஆகையால் பலன் கொடுக்க ஆரம்பித்துள்ள புண்ணியபாபம் இரண்டிற்கும் நாசம் கிடையாது.

# १२.अग्निहोत्राद्यधिकरणम्

## 12.அக்$_3$நிஹோத்ராத்$_3$யதி$_4$கரணம்

(ஸூத்ரம் 16,17)

**अग्निहोत्रादि तु तत्कार्यायैव तद्दर्शनात् ।१६।।**

அக்$_3$நிஹோத்ராதி$_3$ து தத்கார்யாயைவ தத்$_3$த$_3$ர்சநாத் 16

( அக்னிஹோத்ரம் முதலியதோ அதன் கார்யத்திற்காகவே அவ்விதம் தெரிவதால் )

**अतोऽन्यापि ह्येकेषामुभयोः ।।१७।।**

அதோஅந்யாபி ஹ்யேகேஷாமுப$_4$யோ: 17

( அதைவிட வேறு கர்மாவும் சில சாகிகளுக்கு இருவருக்கும் )

காம்யமாக முன் செய்யப்பட்ட புண்ணியங்களுக்கு எப்படி நாசமோ, அப்படியே முன் செய்த நித்ய கர்மாக்களுக்கும் நாசம் தானா? என்பது விஷயம்.

**नश्येन्नो वाऽग्निहोत्रादि नित्यं कर्म विनश्यति ।**
**यतोऽयं वस्तुमहिमा न क्वचित्प्रतिहन्यते ।। २३ ।।**
**अनुषक्तफलांशस्य नाशेऽप्यन्यो न नश्यति ।**
**विद्यायामुपयुक्तत्वाद् भाव्यश्लेषस्तु काम्यवत् ।। २४ ।।**

நச்யேந்நோ வாஅக்$_3$நிஹோத்ராதி$_3$ நித்யம் கர்ம விநச்யதி ।
யதோஅயம் வஸ்துமஹிமா ந க்வசித்ப்ரதிஹந்யதே ।। 23
அநுஷக்தப$_2$லாம்சஸ்ய நாசேஅப்யந்யோ ந நச்யதி ।
வித்$_3$யாயாமுபயுக்தத்வாத்$_3$ பா$_4$வ்யச்லேஷஸ்து காம்யவத் ।।24

(அ..ம்)

அக்னிஹோத்ரம் முதலான நித்ய கர்மா நசிக்குமா? அல்லது நசிக்காதா? வஸ்துவின் மஹிமை என்கிற இது எங்கேயும் தடைபடாது என்பதினுல் நசிக்கும்.

பலனில் அதுவாக வருகிற அம்சத்திற்கு நாசமிருந்தாலும் கூட மற்ருெரு அம்சம் நசிப்பதில்லை. வித்யையில் உபயோகப்பட்டுவிட்ட படியால் பின்னுல் ஏற்படுவதற்கோ காம்யம் போல ஒட்டாத்தன்மை தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஞானம் ஏற்படுவதற்கு முன்னுல் இந்த ஜன்மாவிலோ முன் ஜன்மாக்களிலோ எந்த அக்னிஹோத்ரம் முதலான கர்மா அனுஷ்டிக்கப்பட்டிருக்கிறதோ, அவை விஷயமாயும் ஆத்மா செய்கிறவனல்லவென்ற ஞானம் இப்பொழுது ஏற்பட்டுவிட்டால் அதன் மஹிமையால் நாசம் ஒப்புக் கொண்டு தான் தீர வேண்டும்.

ஸித்தாந்தம் :

நித்ய கர்மாவில் இரண்டு அம்சங்கள் இருக்கின்றன. ஒன்று முக்கியமாக சித்த சுத்தியைக் கொடுக்கும் அம்சம். மற்ருென்று கர்மாவையொட்டி ஸ்வர்க்கம் முதலான பலனைக் கொடுக்கும் அம்சம். இவ்விரண்டு அம்சங்களில் இரண்டாவதிற்கு நாசம் இருக்கட்டும். சித்த சுத்தியைக் கொடுக்கும் அம்சமோ சித்த சுத்தியைக் கொடுத்து வித்யைக்கு உபயோகப்பட்டு விட்டபடியால் அதற்கு நாசம் என்று சொல்ல முடியாது. உலகத்திலும் அனுபவிக்கப்பட்டுத் தீர்ந்து போன நெல் முதலியதை நஷ்டமென்பது நினைப்பதில்லை. ஞானமேற்பட்ட பிறகு செய்யப்படும் நித்ய கர்மா எதுவோ, அதற்கு காம்ய கர்மா போலவே ஒட்டாத் தன்மை தான்.

## १३.विद्याज्ञानसाधनत्वाधिकरणम्

## 13.வித்$_3$யாஜ்ஞாநஸாத$_4$நத்வாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 18)

**यदेव विद्ययेति हि ।।१८।।**

யதே$_3$வ வித்$_3$யயேதி ஹி 18

( 'எது அறிவுடனேயே' என்றல்லவா? )

வித்யைக்கு ஸாதனமாயுள்ள நித்ய கர்மாவுக்கும் இரண்டு விதமாக இருக்கலாம்: அங்கத்தையொட்டிய உபாஸனேயுடன் சேர்ந்தது, சேராதது என்று. இதில் எது வித்யா ஸாதனம்? என்பது விஷயம்.

किमङ्गोपास्तिसंयुक्तमेव विद्योपयोग्युत ।
केवलं वा, प्रशस्तत्वात्सोपास्त्येवोपयुज्यते ।। २५ ।।
केवलं वीर्यवद्विद्यासंयुक्तं वीर्यवत्तरम् ।
इति श्रुतेस्तारतम्यादुभयं ज्ञानसाधनम् ।। २६ ।।

கிமங்கோ₃பாஸ்திஸந்யுக்தமேவ வித்₃யோபயோக்₃யுத ।
கேவலம் வா,ப்ரசஸ்தத்வாத்ஸோபாஸ்த்யேவோபயுஜ்₃யதே ।। 25
கேவலம் வீர்யவத்₃வித்₃யாஸம்யுக்தம் வீர்யவத்தரம் ।
இதி ச்ருதேஸ்தாரதம்யாது₃ப₄யம் ஜ்ஞாநஸாத₄நம் ।। 26

(அ..ம்)

அங்கத்தின் உபாஸனேயுடன் கூடினது தான் ஞானத்திற்கு உபயோகம் உள்ளதா? அல்லது வெறும் கர்மாவேயா? சிலாக்கியமாயிருப்பதால் உபாஸனேயோடு கூடியது தான் உபயோகப்படும்.

வெறும் கர்மா வீர்யத்தை உடையது, உபாஸனேயுடன் சேர்ந்தது மிகவும் வீர்யத்தையுடையது என்று சொல்லியிருப்பதால், இரண்டுமே தாரதம்யத்துடன் ஞான ஸாதனம் தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

உபாஸனேயுடன் கூடின கர்மா சிலாக்கியமாயிருப்பதால், அது தான் ஞான ஸாதனம், உபாஸனேயற்றது ஞான ஸாதனமாகாது.

ஸித்தாந்தம் :

"यदेव विद्यया करोति तदेव वीर्यवत्तरं भवति" "எதை அறிவுடன் செய்கிருனே அதுவே தான் மிகவும் வீர்யமுள்ளதாக இருக்கும்" என்ற சுருதி உபாஸனேயுடன் சேர்ந்த கர்மாவிற்கு அதிகமான வீர்யமுண்டென்று சொல்வது, உபாஸனேயற்றதற்கும் வீர்ய முண்டென்பதை அனுமதிக்கிறது. அப்படியில்லேயானுல் அதிகமாக என்பதைக் காட்டும் "தர" என்ற பிரத்யயம் பொருந்தாது. ஆகையால் உபாஸனையுடன் சேர்ந்திருந்தாலும், சேராமலிருந்தாலும் இரண்டிற்கும் தாரதம்யத்துடன் ஞான ஸாதனமாயிருக்கும் தன்மையுண்டு.

# १४.इतरक्षपणाधिकरणम्

## 14.இதரக்ஷபணாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 19)

**भोगेन त्वितरे क्षपयित्वा सम्पद्यते ।।१९।।**

போ$_4$கே$_3$ந த்விதரே க்ஷபயித்வா ஸம்பத்$_3$யதே 19

( போகத்தினால் மற்றவைகளை க்ஷயம் செய்து ஒன்றுசேருகிறான் )

பிராரப்த கர்மாவினால் இன்னும் பல ஜன்மாக்கள் எடுக்க நேரிட்டால் அவர்களுக்கு மோக்ஷம் ஸித்திக்குமா? என்பது விஷயம்.

**बहुजन्मप्रदारब्धयुक्तानां नास्त्युतास्ति मुक् ।**
**विद्यालोपे कृतं कर्म फलदं तेन नास्ति मुक् ।। २७ ।।**
**आरब्धं भोजयेदेव न तु विद्यां विलोपयेत् ।**
**सुप्तबुद्धवदश्लेषतादवस्थ्यात्कुतो न मुक् ।। २८ ।।**

ப$_3$ஹுஜந்மப்ரதா$_3$ரப்$_3$த$_4$யுக்தாநாம் நாஸ்த்யுதாஸ்தி முக் ।
வித்$_3$யாலோபே க்ருதம் கர்ம ப$_2$லத$_3$ம் தேந நாஸ்தி முக் ।। 27
ஆரப்$_3$த$_4$ம் போ$_4$ஜயேதே$_3$வ ந து வித்$_3$யாம் விலோபயேத் ।
ஸுப்தபு$_3$த்$_3$த$_4$வத$_3$ச்லேஷதாத$_3$வஸ்த்$_2$யாத்குதோ ந முக் ।। 28

(அ..ம்)

பல ஜன்மாக்களைக் கொடுக்கும் பிராரப்த கர்மாவையுடையவர்களுக்கு. முக்தி கிடையாதா? அல்லது உண்டா? வித்யை போய்விடுமானதினால், செய்யப்படும் கர்மா பலனைக் கொடுக்கும். ஆகையால் முக்தி கிடையாது.

பிராரப்த கர்மா போகத்தைத் தான் கொடுக்குமே தவிர வித்யையை அழித்து விடாது. தூங்கி விழித்துக் கொள்பவன் விஷயத்தில் போல ஒட்டாமல் இருப்பது முன் நிலையிலேயே இருக்குமானதினால் ஏன் முக்தி ஏற்படாது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிராரப்த போகத்தையனுபவிப்பதற்காக அநேக ஜன்மாக்கள் ஏற்படும் போது முன் ஸம்பாதித்த ஞானம் போய்விடுமானதினால் அவனால் எது செய்யப் படுகிறதோ அது பலனைக் கொடுக்குமானதினால் மேல் மேல் ஜன்மாக்கள் அவசியம் ஏற்பட்டே தீரும். ஆகையால் ஆதிகாரிக புருஷர்களுக்கு முக்தி கிடையாது.

ஸித்தாந்தம் :

பிராரப்த கர்மாவென்பது தன்னுடைய பலனுகிய ஸுகதுக்கங்களை அனுபவிப்பதற்காக ஏற்பட்டிருப்பதால், அவைகளை அனுபவிக்கச் செய்யும் வித்யையை போக்கடிப்பதற்காக எவ்வித கர்மாவும் முன்னுல் அனுஷ்டித் திருப்பது கிடையாது. அப்படியிருந்தாலல்லவா அதன் பலத்தினுல் வித்யை போய்விடுமோ என்று ஸந்தேஹிக்க முடியும்? மத்தியில் விட்டுப் போகிறது என்பது மாத்திரத்தினுல் வித்யை போய் விடாது. தூங்குவதினுல் இடைவெளியேற்படும் போது வித்யை போய் விடுவதாகப் பார்த்ததில்லை. ஆகையால் வித்யை இருக்கவே இருக்கும். அது இருக்கும் போது எத்தனை கர்மாக்கள் செய்தாலும் ஒட்டாது. ஆகையால் அதிகாரிகளுக்கும் முக்தி நிச்சயம். இவ்விஷயம் முன்னுலேயே மூன்ருவது அத்யாயம், மூன்ருவது பாதத்தில் தீர்மானிக்கப்பட்டிருந்த போதிலும் இங்குள்ள ஆக்ஷேபணைக்கு ஸமாதானமாக இங்கே சொல்லப்பட்டது.

இவ்விதம் நான்காவது அத்யாயம் முதல் பாதத்தில் அதிகரணங்கள் 14 சுலோகங்கள் 28 (ஸூத்ரங்கள் 19).

================================

இந்த பாதத்தில் சரீரத்தை விட்டுக் கிளம்புதல் எப்படி என்று விசாரிக்கப்படுகிறது.

# १.वागधिकरणम्

## 1.வாக$_3$தி$_4$கரணம்

(ஸூத்ரம் 1,2)

**वाङ्मनसि दर्शनाच्छब्दाच्च ।।१।।**

வாங் மனஸி த$_3$ர்சநாச்ச$_2$ப்$_3$தா$_3$ச்ச 1

(வாக்கு மனஸில், பார்க்கப்படுகிறபடியால், சப்தத்தினாலும்)

**अत एव च सर्वाण्यनु ।।२।।**

அத ஏவ ச ஸர்வாண்யநு 2

(இதனாலேயேதான் எல்லாம் கூடவே)

இந்திரியங்கள் அடங்கும் விதம் இதில் சொல்லப்படுகிறது.

**वागादीनां स्वरूपेण वृत्त्या वा मानसे लयः ।**
**श्रुतिर्वाङ्मनसीत्याह स्वरूपविलयस्ततः ।। १ ।।**
**न लीयतेऽनुपादाने कार्यं वृत्तिस्तु लीयते ।**
**वह्निवृत्तेर्जले शान्तेर्वाक्शब्दो वृत्तिलक्षकः ।। २ ।।**

வாகா$_3$தீ$_3$நாம் ஸ்வரூபேண வ்ருத்த்யா வா மாநஸே லய: ।
ச்ருதிர்வாங்மனஸீத்யாஹ ஸ்வரூபவிலயஸ்தத: ।। 1
ந லீயதேஅனுபாதா$_3$நே கார்யம் வ்ருத்திஸ்து லீயதே ।
வஹ்நிவ்ருத்தேர்ஜ$_3$லே சாந்தேர்வாக்சப்$_3$தோ$_3$ வ்ருத்திலக்ஷக: ।।2

(அ..ம்)

வாக் முதலியவைகளுக்கு மனஸில் லயம் என்பது ஸ்வரூபத்துடனேயா? அல்லது விருத்தியால் மாத்திரமா? சுருதி "வாக்கு மனஸில்" என்று சொல்கிறது. ஆகையால் ஸ்வரூபத்திற்கே லயம். காரியமானது தனக்கு உபாதான காரணமில்லாததினால் லயம் அடையாது. ஆனால் விருத்தி லயமடையும், நெருப்பின் விருத்தி ஜலத்தில் சமனமடைவதால் (சுருதியிலுள்ள) வாக் என்ற சப்தம் விருத்தியைத்தான் குறிக்கிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

சாந்தோக்யத்தில் "अस्य सोम्य पुरुषस्य प्रयतो वाङ्मनसि संपद्यते ,मनः प्राणे प्रणस्तेजसि तेजः परस्यां देवतायाम्" "ஹே ஸோம்ய! இறந்து போகிற இந்த

புருஷனுடைய வாக் மனஸில் சேர்ந்து விடுகிறது, மனஸ் பிராணனில், பிராணன் தேஜஸில், தேஜஸ் பரமாத்மாவில்" என்று வெளிக்கிளம்பும் கிரமம் சொல்லப்படுகிறது. இறக்கும் புருஷனுடைய வாக் முதலிய பத்து இந்திரியங்களும் மனஸில் லயமடைகின்றன.

ஸ்வரூபத்தோடு லயமா? விருத்திக்கு மாத்திரம் லயமா? என்று ஸந்தேஹம் வரும் போது சுருதியில் விருத்தியென்ற சப்தத்தையே காணுமல் வாக் மனஸில் என்று சொல்லியிருப்பதால், ஸ்வரூபத்திற்கே தான் லயம் என்று ஏற்படுகிறது.

ஸித்தாந்தம் :

வாக் முதலியவைகளுக்கு மனஸ் உபாதான காரணமில்லை. கார்யம் தன் உபாதானகாரணத்தில் தான் ஸ்வரூபத்துடன் லயமடையுமென்பது மண்குடம் முதலியதில் பார்த்திருக்கிறோம். ஆகையால் வாக் முதலியவைகளுக்கு மனஸில் ஸ்வரூபத்துடன் லயம் கிடையாது. விருத்தியோ உபாதானமல்லாததிலும் லயமடையலாம். அக்னிக்கு ஜலம் உபாதான காரணமில்லை. தணல்களை ஜலத்தில் போட்டால், அக்னியின் விருத்திகளாகிய எரித்தல் பிரகாசித்தல் இவை லயமாகி விடுகின்றன. சுருதியில் கண்ட வாக் என்ற சப்தத்தினுல் விருத்தி தான் குறிக்கப்படுகிறது. விருத்தியையும் விருத்தியையுடையதையும் ஒன்றுக பாவித்து அவ்விதம் சொல்லப்படுகிறது. ஆகையால் வாக்கு முதலியவைகளின் விருத்திக்குத் தான் மனஸில் லயம்.

## २.मनोऽधिकरणम्
## 2.மனோஅதி$_4$கரணம்

(ஸூத்ரம் 3)

तन्मनः प्राण उत्तरात् ।।३।।

தந்மன: ப்ராண உத்தராத் 3

(அந்த மனஸ் பிராணனில், மேல் வாக்கியப்படி)

மனஸ் பிராணனில் லயமடைவது எப்படி? என்பது விஷயம்.

मनः प्राणे स्वयं वृत्त्या वा लीयेत स्वयं यतः ।
कारणान्नोदकद्वारा प्राणो हेतुर्मनः प्रति ।। ३ ।।
साक्षात्स्वहेतौ लीयेत कार्यं प्राणालिके न तु ।
गौणः प्राणालिको हेतुस्ततो वृत्तिलयो धियः ।। ४ ।।

மந: ப்ராணே ஸ்வயம் வ்ருத்த்யா வா லீயேத ஸ்வயம் யத:।
காரணாந்நோத$_3$கத்$_3$வாரா ப்ராணோ ஹேதுர்மந: ப்ரதி ।। 3

**ஸாக்ஷாத்ஸ்வஹேதௌ லீயேத கார்யம் ப்ராணாலிகே ந து ।**
**கௌணை: ப்ராணாலிகோ ஹேதுஸ்ததோ வ்ருத்திலயோ தி₄ய:॥4**

(அ..ம்)

மனஸ் பிராணனில் ஸ்வரூபத்துடன் லயிக்கிறதா? அல்லது, விருத்தியால் தானு? காரணமாயுள்ள அன்னம், ஜலம் இவை மூலமாக மனஸிற்குக் காரணமாக பிராணன் இருப்பதினுல் ஸ்வரூபத்துடனேயே லயம்.

தனக்கு நேர் காரணமாயிருப்பதில் தான் கார்யம் லயிக்கும், பரம்பரையாய் காரணமாயிருப்பதில் லயிக்காது. பரம்பரையாய் காரணமென்பது கௌணம் தான். ஆகையால் மனஸிற்கு லயம் விருத்தியினுல் தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"**अन्नमयं हि सोम्य मनः**" "ஹே ஸோம்ய! மனஸ் அன்னத்தினுல் ஏற்படுவது" என்பதினுல் மனஸிற்குக் காரணம் அன்னம் "**आपोमयः प्राणः**" "பிராணன் ஜலத்தின் கார்யம்" என்றதினுல், பிராணனுக்குக் காரணம் ஜலம். அப்படி இருப்பதால் மனஸ், பிராணன் என்ற சப்தங்களால் அவைகளின் காரணங்களாகிய அன்னத்தையும் ஜலத்தையும் குறிப்பதாக எடுத்துக் கொண்டு "மனஸ் பிராணனில் லயிக்கிறது" என்ற வாக்கியத்திற்கு "அன்னம் ஜலத்தில் லயிக்கிறது" என்ற அர்த்தம் கிடைக்கிறது. அன்னமென்ற பிருதிவிக்கோ ஜலம் உபாதான காரணம். ஆகையால் அன்னம் ஜலத்தில் லயிக்கலாம். அன்ன கார்யமான மனஸ் ஜலகார்யமான பிராணனிலும் லயிக்கலாம். பரம்பரையாக (ஜலம் மூலமாக) பிராணன் மனஸிற்கு (அன்னம் மூலமாக) உபாதான காரணமாவதால். ஆகையால் மனஸ் ஸ்வரூபத்துடன் பிராணனில் லயிக்கிறது.

ஸித்தாந்தம் :

உபாதானம் என்பது முக்கியமானதென்றும், பரம்பரையா என்றும் இரண்டு விதம். மண்ணுக்கும் குடத்திற்கும் இருப்பது போல, உபாதானகாரணம், கார்யம் என்ற முக்கியமான நிலை மனஸிற்கும் பிராணனுக்கும் கிடையாது. ஏதோ ஸம்பந்த பரம்பரையைக் கொண்டு தான் சொல்ல வேண்டியிருக்கிறது அவ்விதமாக பரம்பரையாக உபாதான காரணமாவதில் எந்த கார்யமும் லயமடைவதை நாம் கண்டதில்லை.

ஆகையால் நேர் உபாதான காரணமல்லாத பிராணனில் மனஸ் ஸ்வரூபத்துடன் லயமடைய முடியாது, விருத்தியால் தான் லயம் என்று அறிந்து கொள்ள வேண்டும்.

# ३.आध्यक्षाधिकरणम्

## 3.ஆத்₄யக்ஷாதி₄கரணம்

(ஸூத்ரம் 4 - 6)

सोऽध्यक्षे तदुपगमादिभ्यः ।।४।।

ஸோஅத்₄யக்ஷே தது₃பக₃மாதி₃ப்₄ய: 4

(அது அத்யக்ஷனிடத்தில், அவரை அடைவது முதலானதிலிருந்து)

भूतेषु तच्छ्रुतेः ।।५।।

பூ₄தேஷு தச்ச்₂ருதே: 5

(பூதங்களில், அவ்விதம் சொல்லப்பட்டிருப்பதால்)

नैकस्मिन्दर्शयतो हि ।।६।।

நைகஸ்மிந்த₃ர்சயதோ ஹி 6

(ஒன்றில் இல்லை, இரண்டும் காட்டுகின்றனவே)

பிராணனுக்கு லயம் எங்கே? என்பது இங்கு விஷயம்.

असोर्भूतेषु जीवे वा लयो भूतेषु तच्छ्रु तेः ।
स प्राणस्तेजसीत्याह न तु जीव इति क्वचित् ।। ५ ।।
एवमेवेममात्मानं प्राणा यन्तीति च श्रुतेः ।
जीवे लीत्वा सहैतेन पुनर्भूतेषु लीयते ।। ६ ।।

அஸோர்பூ₄தேஷு ஜீவே வா லயோ பூ₄தேஷு தச்ச்₂ரு தே:।
ஸ ப்ராணஸ்தேஜஸீத்யாஹ ந து ஜீ₃வ இதி க்வசித் ।। 5
ஏவமேவேமமாத்மாநம் ப்ராணா யந்தீதி ச ச்ருதே: ।
ஜீவே லீத்வா ஸஹைதேந புநர்பூ₄தேஷு லீயதே ।। 6

(அ..ம்)

பிராணனுக்கு லயம் பூதங்களிலா? அல்லது ஜீவனிடத்திலா? பூதங்களில் தான் அவ்விதமே சொல்லப்படுவதால். "அந்த பிராணன் தேஜஸில்" என்று சொல்கிறதே தவிர "ஜீவனிடத்தில்" என்று எந்தவிடத்திலும் சொல்லவில்லை.

"இவ்விதமே தான் இந்த ஆத்மாவை பிராணன்கள் அடைகின்றன" என்ற சுருதியிருப்பதால், (பிராணன்) ஜீவனிடத்தில் லயித்து விட்டு இந்த ஜீவனுடன் கூடவே மறுபடியும் பூதங்களில் லயமடைகிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :
"प्राणस्तेजसि" "பிராணன் தேஜஸில்" என்று தெளிவாய் வாக்கிய மிருப்பதால், தனக்குள் லயித்துள்ள மனஸ் உள்பட பதினொரு இந்திரியங்களுடன் சேர்ந்த பிராணன் தேஜஸ், அப்பு, அன்னம் என்ற பூதங்களில் விருத்தியால் லயத்தையடைகிறது.

ஸித்தாந்தம் :
"एवमेवेममात्मानमन्तकाले सर्वे प्राणा अभिसमायन्ति" "இவ்விதமே இந்த ஆத்மாவை கடைசி காலத்தில் எல்லா பிராணங்களும் வந்து அடைகின்றன" அதாவது வெளியில் புறப்பட நினைக்கும் அரசனை எப்படி எல்லா சேவர்களும் அடைவார்களோ அதைப் போல, என்று சுருதியின் அர்த்தம். இது "பிராணன் தேஜஸில்" என்ற சுருதிக்கு விரோதமாகாது. ஜீவனுடன் சேர்ந்து கொண்ட பிராணன் பின்னால் தேஜஸ் முதலான பூதங்களில் லயிக்கிறது என்று வியாக்யானம் செய்ய முடியும்.
ஆகையால் பிராணன் முதலில் ஜீவனிடத்தில் லயித்து பிற்பாடு அவ்வழியாகவே பூதங்களில் லயிக்கிறது.

## ४.आसृत्युपक्रमाधिकरणम्
## 4.ஆஸ்ருத்யுபக்ரமாதி₄கரணம்
(ஸூத்ரம் 7)

**समाना चाऽऽसृत्युपक्रमादमृतत्वं चानुपोष्य ॥७॥**
ஸமானா சாஆஸ்ருத்யுபக்ரமாத₃ம்ருதத்வம் சானுபோஷ்ய ..7..
ஸமாநா சாஆஸ்ருத்யுபக்ரமாத₃ம்ருதத்வம் சானுபோஷ்ய
ஸமாநா சா ஆஸ்ருத்யுபக்ரமாத₃ம்ருதத்வம்

ஸமாநா சாஆஸ்ருத்யுபக்ரமாத₃ம்ருதத்வம் — ஸமானம்தான் பொசுக்காமல் (மார்கம் துடங்கும்வரை ஸமானம்தான் அமிருதத்வம்)

நிர்குண பிரஹ்மத்தையறிந்தவருக்கு சரீரத்தை விட்டு ஜீவன் வெளிக் கிளம்புதல் கிடையாதென்பது பின்னால் சொல்லப்போகிறார். பிரஹ்ம லோகம் போக வேண்டியிருப்பதால், ஸகுண பிரஹ்மத்தை அறிந்தவருக்கு வெளிக் கிளம்புதல் உண்டு. அவர் வெளிக் கிளம்புவதற்கும், ஞானியில்லாதவர் வெளிக்கிளம்புவதற்கும் வித்யாஸம் ஏதேனும் உண்டா? என்பது இங்கு விஷயம்.

**ज्ञान्यज्ञोत्क्रान्तिरसमा समा वा, नहि सा समा ।**
**मोक्षसंसाररूपस्य फलस्य विषमत्वतः ॥ ७ ॥**
**आसृत्युपक्रमं जन्म वर्तमानमतः समा ।**

**पश्चात्तु फलवैषम्यादसमोत्क्रान्तिरेतयोः ।। ८ ।।**

ஜ்ஞாந்யஜ்ஞோத்க்ராந்திரஸமா ஸமா வா, நஹி ஸா ஸமா ।
மோக்ஷஸம்ஸாரரூபஸ்ய ப₂லஸ்ய விஷமத்வத: ।। 7
ஆஸ்ருத்யுபக்ரமம் ஜன்ம வர்தமாநமத: ஸமா ।
பச்சாத்து ப₂லவைஷம்யாத₃ஸமோத்க்ராந்திரேதயோ: ।। 8

(அ..ம்)

ஞானி ,அக்ஞானி இருவருக்கும் உத்கிராந்தி (சரீரத்தை விட்டு வெளிக்கிளம்புதல்) ஸமானமாயில்லையா? அல்லது ஸமானம் தானு? மோக்ஷமாகிறபலனுக்கும், ஸம்ஸாரமாகிறபலனுக்கும் வித்யாஸமிருப்ப தால் அது ஸமானமேயில்லை.

மார்க்கத்தின் ஆரம்பம் வரை இப்பொழுதுள்ள ஜன்மா தான். ஆகையால் (அதுவரை) ஸமானம். பிறகோ பலனில் வித்யாஸமிருப்பதால் இருவர்கள் உடைய உத்கிராந்தியும் வெவ்வேறு.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

ஸகுண பிரஹ்மத்தையறிந்தவனுக்கு பலனுயிருக்கிற பிரஹ்ம லோகத்தை அடைவதான மோக்ஷமும், அக்ஞானிக்குபலனுயிருக்கிற ஸம்ஸாரமும், வித்யாஸப் படுவதால் அப்பலன்களையடைவதற்கு துவாரமாயிருக்கிற உத்கிராந்தியிலும் வித்யாஸம் இருப்பது தான் உசிதம்.

ஸித்தாந்தம் :

ஸகுண பிரஹ்மத்தையறிந்தவனுக்கு சிரஸிலுள்ள நாடியில் பிரவேசம், பிறகு உத்திரமார்க்கத்தின் ஆரம்பம். அக்ஞானிக்கு வேறு நாடியில் பிரவேசம், பிறகு வேறு மார்க்கத்தின் ஆரம்பம் இருவருக்குமே அந்த மார்க்கம் வரை இப்பொழுதிருக்கும் இதே ஜன்மாதான். ஆகையால் இங்கே அனுபவிக்க வேண்டிய ஸுக துக்கங்கள் போலவே அதுவரையுள்ள உத்கிராந்தியும் ஸமானமே.

மார்க்கம் ஆரம்பித்துவிட்டாலோ பலனில் வித்யாஸமிருப்பதினுல் உபக்கிராந்தியிலும் வித்யாஸம் இருக்கட்டும்.

## ५.संसारव्यपदेशाधिकरणम्

## 5.ஸம்ஸாரவ்யபதே₃சாதி₄கரணம்

(ஸூத்ரம் 8 - 11)

**तदाऽपीतेः संसारव्यपदेशात् ।।८।।**

ததா₃அபீதே: ஸம்ஸாரவ்யபதே₃சாத் ..8..
(அது மோக்ஷம் வரையில், ஸம்ஸாரம்
குறிப்பிட்டிருக்கிறபடியால்)

**सूक्ष्मं प्रमाणतश्च तथोपलब्धेः ।।९।।**

ஸூக்ஷ்மம் ப்ரமாணதச்ச ததோ₂பலப்₃தே₄: ..9..
(ஸூக்ஷ்மம் அளவிலும், அவ்விதம் தெரிவதால்)

**नोपमर्देनातः ।।१०।।**

நோபமர்தே₃நாத: ..10..
(நாசமாவதால் (நாசம்) இல்லை, இதனால்)

**अस्यैव चोपपत्तेरेष ऊष्मा ।।११।।**

அஸ்யைவ சோபபத்தேரேஷ ஊஷ்மா ..11..
(இந்த உஷ்ணம் இதனுடையதேதான், (அப்படியே)
பொருந்துவதால்)

தேஜஸில் அடங்கின பிறகு "**तेजः परस्यां देवतायाम्**" "தேஜஸ்பரமாத்மாவில்" லயிப்பதாகச் சொல்லியிருக்கிறது. இவ்விதம் தேஜஸ் முதலான பூதங்கள் பரமாத்மாவில் லயமடைவது என்பது ஸ்வரூபத்துடனேயா? அல்லது விருத்தியால் தானு? என்பது விஷயம்.

**स्वरूपेणाथ वृत्त्या वा भूतानां विलयः परे ।**
**स्वरूपेण लयो युक्तः स्वोपादाने परात्मनि ।। ९ ।।**
**आत्मज्ञस्य तथात्वेऽपि वृत्त्यैवान्यस्य तल्लयः ।**
**न चेत्कस्यापि जीवस्य न स्याज्जन्मान्तरं क्वचित् ।। १० ।।**

ஸ்வரூபேணாத₂ வ்ருத்த்யா வா பூ₄தாநாம் விலய: பரே ।
ஸ்வரூபேண லயோ யுக்த: ஸ்வோபாதா₃நே பராத்மநி ।। 9
ஆத்மஜ்ஞஸ்ய ததா₂த்வேஅபி வ்ருத்த்யைவாந்யஸ்ய தல்லய: ।
ந சேத்கஸ்யாபி ஜீவஸ்ய ந ஸ்யாஜ்ஜன்மாந்தரம் க்வசித் ।। 10

(அ..ம்)

பூதங்கள் பரமாத்மாவில் லயிப்பது ஸ்வரூபத்துடனேயா? அல்லது விருத்தியாலா? பரமாத்மா தங்களுக்கு உபாதான காரணமாயிருப்பதால், ஸ்வரூபத்துடனேயே லயம் தான் உசிதம். ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்தவனுக்கு அப்படியிருந்த போதிலும், மற்றவருக்கு பரமாத்மாவில் லயம் விருத்தியால் தான். அப்படியில்லையானுல் எந்த ஜீவனுக்குமே எக்காலத்திலும் வேறு ஜன்மா ஏற்பட முடியாது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பூதங்களுக்கெல்லாம் பரமாத்மாவே உபாதான காரணமாயிருப்பதால் அவைகள் அவரிடத்தில் ஸ்வரூபத்துடனேயே லயமடைகின்றன என்பது தான் பொருந்தும்.

ஸித்தாந்தம் :

ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்தவனுக்கு பூதங்கள் ஸ்வரூபத்துடனேயே பர்மாத்மாவில் லயமடையலாம். இது பின்னால் சொல்லப்படும். உபாஸகனுக்கோ, கர்மிக்கோ வேறு ஜன்மா ஏற்பட வேண்டியதாய் இருப்பதால் விருத்தி லயம் என்று தான் ஒப்புக் கொள்ள வேண்டும்.

# ६.प्रतिषेधाधिकरणम्

## 6.ப்ரதிஷேதா$_4$தி$_4$கரணம்

(ஸூத்ரம் 12 - 14)

**प्रतिषेधादिति चेन्न शारीरात् ।।१२।।**

ப்ரதிஷேதா$_4$தி$_3$தி சேந்ந சாரீராத் 12

(தடுத்திருப்பதால் என்று சொன்னால் சரியல்ல, சாரீரனிடமிருந்து (ஜீவனிலிருந்து) )

**स्पष्टो ह्येकेषाम् ।।१३।।**

ஸ்பஷ்டோ ஹ்யேகேஷாம் 13

(ஸ்பஷ்டமல்லவா, சிலர்களுக்கு)

**स्मर्यते च ।।१४।।**

ஸ்மர்யதே ச 14

(ஸ்மரிக்கப்பட்டுமிருக்கிறது)

ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடைந்தவருக்கு"न तस्य प्राणा उत्क्रामन्ति" அவருடைய பிராணன்கள் வெளிக்கிளம்புகிறதில்லை" என்று சொல்லப்பட்டிருக்கிறது. எதிலிருந்து வெளிக்கிளம்புகிறதில்லை என்பது இங்கு விசாரிக்கப்படுகிறது.

**किं जीवादथवा देहात्प्राणोत्क्रान्तिर्निवार्यते ।**
**जीवान्निवारणं युक्तं जीवेद्देहोऽन्यथा सदा ।। ११ ।।**
**तप्ताश्मजलवद्देहे प्राणानां विलयः स्मृतः ।**
**उच्छ्वयत्येव देहोऽन्ते देहात्मा विनिवार्यते ।। १२ ।।**

கிம் ஜீ$_3$வாத$_3$த$_2$வா தே$_3$ஹாத்ப்ராணோத்க்ராந்திர்நிவார்யதே ।
ஜீ$_3$வாந்நிவாரணம் யுக்தம் ஜீ$_3$வேத்$_3$தே$_3$ஹோஅன்யதா$_2$ ஸதா ।। 11

தப்தாச்மஜலவத்₃தே₃ஹே ப்ராணாநாம் விலய: ஸ்ம்ருத: ।
உச்ச்₂வயத்யேவு தே₃ஹோஅந்தே தே₃ஹாத்மா விநிவார்யதே ।। 12

(அ..ம்)

பிராணன்களின் உத்கிராந்தி ஜீவனிடத்திலிருந்து தடுக்கப்படுகிறதா? அல்லது சரீரத்திலிருந்தா? ஜீவனிடத்திலிருந்து (உத்கிராந்தி) தடுப்பது தான் நியாயம். வேறு விதமானல், சரீரமெப்பொழுதும் ஜீவித்துக் கொண்டே இருக்கும்படி நேரிடும்.

தபிக்கும் கல்லில் போட்ட ஜலம் போல, தேஹத்திலேயே பிராணன்களுக்கு லயம் சொல்லப்படுகிறது. கடைசியில் தேஹம் ஊதி விடுகிறது. (ஆகையால்) சரீரத்திலிருந்து தான் (உத்கிராந்தி) தடுக்கப்படுகிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

பிராணன்கள் வெளிக்கிளம்புவதில்லையென்பது ஜீவனிடமிருந்து வெளிக் கிளம்புவதில்லையென்றுதான் இருக்க வேண்டும். சரீரத்திலிருந்து வெளிக்கிளம்பு வதில்லையென்று வைத்துக் கொண்டால், சரீரத்திலேயே இருக்கின்றனவென்று ஆகுமானதினல் சரீரத்தில் இறப்பு கிடையாது என்று ஏற்படும்.

ஸித்தாந்தம் :

தபிக்கும் கல்லில் போடப்பட்ட ஜலம் வேறு இடம் போவதுமில்லை, அங்கே காணப்படுவதுமில்லை. அங்கேயே ஸ்வரூபத்துடன் மறைந்து விடுகிறது என்பது போலவே தத்வமறிந்தவனுடைய பிராணன்களும் வெளிக்கிளம்பப்போகவில்லை யானலும், அங்கேயும் இல்லாமல் லயித்து விடுகின்றன. ஆகையால் தான் ஜீவித்திராததினல் இறந்து போன சரீரம் என்ற வியவஹாரம் ஏற்படுகிறது. வெளியில் போகாமலிருந்தும் சரீரத்தில் தங்கி விடவில்லைவென்பதற்கு அடையாளம் சரீரம் ஊதிப்போவது. இவ்வளவு சிரமப்பட்டு வெளியில் போகவுமில்லை, தங்கிவிடவுமில்லை என்று சொல்வதைவிட ஜீவனிடத்திலிருந்து வெளிக்கிளம்புதலில்லையென்று சொல்லி விடலாமே என்ருல், ஜீவனிடத்திலியே வெளிக்கிளம்புகிறதில்லை என்ருல் ஜீவனேடேயே இருக்கின்றன என்று ஏற்படும். அப்படியானல் வேறு தேஹத்தையெடுக்க வேண்டியது அவசியமாகும். முக்திக்கே இடமில்லையென்று ஏற்பட்டு விடும்.

ஆகையால் உத்கிராந்தியைத் தடுத்தது தேஹத்திலிருந்தே தவிர ஜீவனிடம் இருந்தல்ல.

## ७.वागादिलयाधिकरणम्

## 7.வாகா$_3$தி$_3$லயாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 15)

**तानि परे तथाह्याह ।।१५।।**

தாநி பரே ததா$_2$ஹ்யாஹ 15

(அவைகள் பரத்தில் அப்படியல்லவா சொல்கிறது)

ஆத்ம ஞானியின் வாக்கு முதலியது எதில் லயமடைகிறது? என்பது விஷயம்

**ज्ञस्य वागादयः स्वस्वहेतौ लीनाः परेऽथवा ।**
**गताः कला इति श्रुत्या स्वस्वहेतुषु तल्लयः ।। १३ ।।**
**नद्यब्धिलयसाम्योक्तेर्विद्वद्दृष्ट्या लयः परे ।**
**अन्यदृष्टिपरं शास्त्रं गता इत्याद्युदाहृतम् ।। १४ ।।**

ஜ்ஞஸ்ய வாகா$_3$த$_3$ய: ஸ்வஸ்வஹேதௌ லீநா: பரேஅத$_2$வா
க$_3$தா: கலா இதி ச்ருத்யா ஸ்வஸ்வஹேதுஷு தல்லய: ।। 13
நத்$_3$யப்தி$_4$லயஸாம்யோக்தேர்வித்$_3$வத்$_3$த்$_3$ருஷ்ட்யா லய: பரே ।
அந்யத்$_3$ருஷ்டிபரம் சாஸ்த்ரம் க$_3$தா இத்யாத்$_3$யுதா$_3$ஹ்ருதம் ।। 14

(அ..ம்)

ஞானியினுடைய வாக்கு முதலியவைகள் அததன் காரணத்தில் லயிக்கின்றனவா? அல்லது பரமாத்மாவிலேயேயா? "கலைகள் அடைகின்றன" என்ற சுருதியினுல் அததன் காரணங்களில் தான் அவைகளுக்கு லயம்.

நதி ஸமுத்திரத்தில் லயமடைவதற்கு ஸமானமாகச் சொல்லி யிருப்பதால், ஞானியின் பார்வையில் பரமாத்மாவில் தான் லயம். "கலைகள் அடைகின்றன" என்பது முதலானதைச் சொல்லும் சாஸ்திரம், மற்றவர் பார்வையில் சொல்லப்பட்டது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

**"गताः कलाः पञ्चदश प्रतिष्ठा"** "பதினைந்து கலைகளும் பிரதிஷ்டைகளை அடைகின்றன" என்ற வாக்கியத்தினுல். கலைகள் என்ற சப்த்தினுல் சொல்லப்படுகிற வாக்கு முதலியவைகள் பிரதிஷ்டைகள் என்ற சப்தத்தினுல் சொல்லப்படும் அததன் காரணங்களை அடைவதாகச் சொல்லப்படுகிறது. **"यत्रास्य पुरुषस्याग्निं वागप्येति, वातं प्राणः,चक्षुरादीत्यम्"**

"எப்பொழுது இந்த புருஷனுடைய வாக்கு அக்னியை அடைகிறது, பிராணன் வாயுவை, கண் ஸூர்யனை" என்பது முதலான சுருதியுமிருக்கிறது. ஆகையால் தத்வஞானியினுடைய வாக்கு முதலான பிராணன்கள் லயமடையும் போது தம் தம் காரணங்களான அக்னி முதலியவைகளிலேயே லயிக்கின்றன. பரமாத்மாவில் லயிப்பதில்லை.

ஸித்தாந்தம் :
"**यथा नद्यः स्यन्दमानाः समुद्रेऽस्तं गच्छन्ति नामरूपे विहाय । तथा विद्वान्नामरूपाद्विमुक्तः परात्परं पुरुषमुपैति दिव्यम्**" "ஓடிக் கொண்டிருக்கிற நதிகள் எப்படி நாமரூபங்களை விட்டு விட்டு ஸமுத்திரத்தில் லயத்தையடைகின்றனவோ, அப்படியே ஞானி நாம ரூபங்களிலிருந்து விடுபட்டவனாக மேலானதிற்கும் மேலானதாய் ஸ்வயம் பிரகாசமாயிருக்கும் புருஷனை அடைகிறான்" என்ற சுருதியில் நதிகள் ஸமுத்திரத்தில் லயமடைவதை திருஷ்டாந்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ஆத்ம ஞானியினுடைய பார்வையில் பரமாத்மாவினிடத்திலேயே லயம். இந்த சுருதியிலிருந்து தார்ஷ்டாந்திகத்தில் பரமாத்மாவில் தான் லயம் என்பது தெளிவாகக் காணவில்லையென்று நினைத்தால், இன்னமும் தெளிவாக சொல்லும் சுருதியுமிருக்கிறது. "**यथेमा नद्यः स्यन्दमानाः समुद्रायणाः समुद्रं प्राप्यास्तं गच्छन्ति । भिद्येते तासां नामरूपे समुद्रः इत्येवं प्रोच्यते । एवमेवास्य परिद्रष्टुरिमाः षोडशकलाः पुरुषायणाः पुरुषं प्राप्यास्तं गच्छन्ति । भिद्येते तासां नामरूपे पुरुषः इत्येवं प्रोच्यते**" "இந்த பிரவஹிக்கிற நதிகள் ஸமுத்திரத்தையடைய வேண்டிய ஸ்தானமாய் உள்ளவைகள் ஸமுத்திரத்தை அடைந்து லயத்தை அடைகின்றன. அவைகளுடைய நாமமும் ரூபமும் உடைபட்டு விடுகின்றன. "ஸமுத்திரம்" என்று இவ்விதம் சொல்லப்படுகிறது என்பது எப்படியோ இவ்விதமே இந்த ஞானியினுடைய இந்த பதினாறு கலைகளும் புருஷனையடைய வேண்டிய ஸ்தானமாயுள்ளவைகள் புருஷனை அடைந்து லயம் அடைகின்றன. அவைகளின் நாமமும் ரூபமும் உடைபடுகின்றன, "புருஷன்" என்று இவ்விதம் சொல்லப்படுகிறது. இங்கு உடைபடுவது என்பதற்கு மறைந்து விடுவது என்று தாத்பர்யம். இந்த சுருதி தத்வத்தையறிந்தவனுடைய பார்வையை விஷயமாயுள்ளது. " கலைகள் அடைகின்றன" என்ற சாஸ்திரமோ வெளியில் நின்று பார்க்கும் புருஷனுக்குத் தோன்றக் கூடியதை விஷயமாயுள்ளது. தத்வமறிந்தவன் இறக்கும் காலத்தில் பக்கத்திலுள்ள ஜனங்கள் தங்கள் தங்களையே

திருஷ்டாந்தமாக வைத்துக் கொண்டு அவருடைய வாக்கு முதலியவைகளுக்கும் அக்னி முதலானதில் லயம் என்று எண்ணுகிறார்கள். ஆகையால் சுருதிகளுக்குள் விரோதமில்லை.

ஆகையால் தத்வ ஞானியின் பிராணன்களுக்கு பரமாத்மாவில் லயம்.

## ८.अविभागाधिकरणम्

## 8.அவிபா$_4$கா$_3$தி$_4$கரணம்

(ஸூத்ரம் 16)

**अविभागो वचनात् ।।१६।।**

அவிபா$_4$கோ$_3$ வசநாத் 16

(பிரிவின்மை, வசனத்தினால்)

அந்த லயம் என்பது பூராவுமேயா? ஏதேனும் பாக்கியுண்டா? என்பது இங்கு விஷயம்.

**तल्लयः शक्तिशेषेण निःशेषेणाथवाऽऽत्मनि ।**
**शक्तिशेषेण युक्तोऽसावज्ञानिष्वेतदीक्षणात् ।। १५ ।।**
**नामरूपविभेदोक्तेर्निःशेषेणैव तल्लयः ।**
**अज्ञे जन्मान्तरार्थं तु शक्तिशेषत्वमिष्यते ।। १६ ।।**

தல்லய: சக்திசேஷேண நி:சேஷேணாத$_2$வாஆத்மநி।
சக்திசேஷேண யுக்தோஅஸாவஜ்ஞாநிஷ்வேததீ$_3$க்ஷணாத்।। 15
நாமரூபவிபே$_4$தோ$_3$க்தேர்நி:சேஷேணைவ தல்லய: ।
அஜ்ஞே ஜ$_3$ன்மாந்தரார்த$_2$ம் து சக்திசேஷத்வமிஷ்யதே।।16

(அ..ம்)

பரமாத்மாவில் அந்த லயம் என்பது சக்தியை மிச்சம் வைத்தா? அல்லது மிச்சமேயில்லாமலா? சக்தியை மிச்சம் வைத்து லயம் என்பது தான் நியாயம், அவ்விதம் அக்ஞானிகளிடத்தில் பார்க்கப்படுவதால்.

நாமரூபம் உடைபடுவதாக சொல்வதால் அந்த லயம் மிச்சமன்னியில் தான். அக்ஞானிகள் விஷயத்திலோ மறு ஜன்மம் எடுக்க வேண்டிய தற்காக சக்தி மிச்சமென்று ஒப்புக் கொள்ளப்படுகிறது.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

அக்ஞானிகளுடைய வாக்கு முதலியவைகளின் லயம் எப்படி மிச்சமுள்ளதாகவே இருக்கிறதோ, அப்படியே தத்வக் ஞானி விஷயத்திலும் இருக்க வேண்டும், வாக்கு முதலியதின் லயமானதினல்; ஆகையால் மிச்ச மன்னியில் லயமில்லை.

ஸித்தாந்தம் :

"**भिद्येते तासां नामरूपे**" "அவைகளுடைய நாம ரூபங்கள் உடைபட்டு விடுகின்றன" என்ற வாக்கியத்தில் ஜீவனுடைய ஸம்ஸாரத்திற்குக் காரணமாயுள்ள பதினாரு கலைகள் எவையோ அந்த கலைகளுக்கு நாம ரூபங்கள் போய் விடுவது சொல்லப்படுகிறது. வாக்கியத்தின் ஆரம்பத்தில் "**स प्राणमसृजत। प्राणाच्छ्रद्धां खं वायुर्ज्योतिरापः पृथिवीन्द्रियं मनोऽन्नम् । अन्नाद्वीर्यं तपो मन्त्राः कर्म लोकाः, लोकेषु च नाम च**" "அவர் பிராணனை ஸ்ருஷ்டித்தார், பிராணனிலிருந்து சிரத்தை, ஆகாசம், வாயு, ஜ்யோதிஸ், ஜலம், பிருதிவீ, இந்திரியம், மனஸ், அன்னம்; அன்னத்திலிருந்து வீர்யம், தபஸ், மந்திரங்கள், கர்மா, லோகங்கள்; லோகங்களில் நாமத்தையும்" என்று கலைகள் வரிசையாக சொல்லப் பட்டிருக்கின்றன. இவ்விதம் பிராணன் முதல் நாமம் முடியவுள்ள கலைகளுடைய நாம ரூபங்கள் சக்தியை மிச்சமாகக் கொண்டு தான் லயிக்கின்றனவென்றால், நாம ரூபங்கள் உடைபட்டுப் போகின்றன என்று சொல்லும் சுருதி பாதிக்கப்படும், சக்திஸ்வரூபமாய், ஸூக்ஷ்மமாய் நாம ரூபங்கள் இன்னமும் இருந்து வருவதால். ஆகையால் பூராவுமாகத் தான் லயம். அக்ஞானி விஷயத்திலோ வேறு ஜன்மா ஸித்திக்க வேண்டியதற்கு சக்தி மிச்சம் இருக்க வேண்டியது நியாயம். ஆகையால் தத்வக்ஞானியின் வாக்கு முதலியவைகளுக்கு எவ்வித மிச்சமும் மன்னியில் பரமாத்மாவினிடம் லயம்.

## ९.तदोकोऽधिकरणम्

## 9.ததோ₃கோஅதி₄கரணம்

(ஸூத்ரம் 17)

**तदोकोग्रज्वलनं तत्प्रकाशितद्वारो विद्यासामर्थ्यात्तच्छेषगत्यनुस्मृतियोगाच्च हार्दानुगृहीतः शताधिकया ॥१७॥**

ததோ₃கோக்₃ரஜ்₃வலநம் தத்ப்ரகாசிதத்₃வாரோ வித்₃யாஸாமர்த்₂யாத்தச்சே₂ஷக₃த்யநுஸ்ம்ருதியோகா₃ச்ச ஹார்தா₃னுக்₃ருஹீத: சதாதி₄கயா 17

(அவனிருப்பிடத்தின், நுனியில் ஜ்வலிப்பது, அதனால் பிரகாசிக்கப்பட்ட வழியுள்ளவனாய், உபாஸனையும் பலத்தினாலும் அதன் அங்கமான கதியை நினைப்பதின் சேர்க்கையினாலும், ஹ்ருதயத்திலுள்ளவரால் அனுக்கிரஹிக்கப்பட்டவனாய் நூற்றுக்கு மேலானதினால்)

உபாஸகனுக்கும் மற்றவருக்கும் மார்க்கம் ஆரம்பிக்கும் வரை உத்கிராந்திக் கிரமம் ஒரே விதம் என்று சொல்லப்பட்டது. மார்க்கம்

ஆரம்பிக்கும் ஸமயத்தில் எப்படியிருக்கும்? ஏதேனும் வித்யாஸம் உண்டா? என்பது இங்கு விசாரிக்கப்படுகிறது.

**अविशेषो विशेषो वा स्यादुत्क्रान्तेरुपासितुः ।**
**हृत्प्रद्योतनसाम्योक्तेरविशेषोऽन्यनिर्गमात् ।। १७ ।।**
**मूर्धन्ययैव नाड्याऽसौ व्रजेन्नाडीविचिन्तनात् ।**
**विद्यासामर्थ्यतश्चापि विशेषोऽस्त्यन्यनिर्गमात् ।। १८ ।।**

அவிசேஷோ விசேஷோ வா ஸ்யாது₃த்க்ராந்தேருபாஸிது: ।
ஹ்ருத்ப்ரத்₃யோதநஸாம்யோக்தேரவிசேஷோஅந்யநிர்க₃மாத் ।।17
மூர்த₄ந்யயைவ நாட்யாஅஸௌ வ்ரஜேந்நாடீவிசிந்தநாத் ।
வித்₃யாஸாமர்த்₂யதச்சாபி விசேஷோஅஸ்த்யந்யநிர்க₃மாத் ।। 18

(அ..ம்)

உபாஸகனுடைய உத்கிராந்தியில் வித்யாஸம் இல்லையா? அல்லது வித்யாஸம் உண்டா? ஹ்ருதயம் பிரகாசிக்கும் என்பதில் ஸமானத் தன்மை சொல்வதால், மற்றவரின் உத்கிராந்தியிலிருந்து வித்யாஸம் கிடையாது.

சிரஸிலுள்ள நாடி வழியாகத்தான் இவன் போகிறான். நாடியையே சிந்தனை செய்ததினாலும் உபாஸனையின் சக்தியினாலும், மற்றவர் உத்கிரர்ந்தியிலிருந்து வித்யாஸம் உண்டு.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"**तस्य हैतस्य हृदयस्याग्रं प्रद्योतते, तेन प्रद्योतेनैष आत्मा निष्क्रामति चक्षुष्टो वा मूर्ध्नो वाऽन्येभ्यो वा शरीरदेशेभ्यः**" "அந்த இவனுடைய ஹ்ருதயத்தின் நுணி நன்கு பிரகாசிக்கும், அந்த பிரகாசத்தினால் இந்த ஆத்மா கண் வழியாகவோ, சிரஸ் வழியாகவோ, சரீரத்திலுள்ள வேறு இடத்து வழியாகவோ, வெளிச் செல்லுகிறான்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது வாக்கு மனஸில் அடங்குகிறது என்ற வரிசையாக ஜீவனுடன் சேர்ந்த லிங்க சரீரம் சக்தியை மீதமாய் வைத்துக் கொண்டு பரமாத்மாவில் எப்பொழுது லயிக்கிறதோ, அப்பொழுது முன்னுள்ள ஜன்மம் முடிந்து விடுகிறது. அதன் பிறகு வேறு ஜன்மம் எடுக்க வேண்டியதற்காக அந்த லிங்க சரீரம் மறுபடியும் ஹ்ருதயத்தில் தோன்றுகிறது, அந்த ஸமயத்தில் ஹ்ருதயத்தின் நுணியிலிருக்கும் லிங்க சரீரத்திற்கு இனி அடைய வேண்டியதாயுள்ள பின் ஜன்மத்தைக் காட்டக் கூடியதாக ஒரு கடைசி எண்ணமாக ஒரு பிரகாசம் ஏற்படுகிறது. அந்த பிரகாசத்தின் கூடவே அவன் நாடிகள் வழியாக வெளியே போகிறான். இது

எல்லாருக்கும் ஸமானம். ஆகையால் உபாஸகனுக்கு மற்றவர்களை விட விசேஷம் எதுவுமில்லை.

ஸித்தாந்தம் :
இதுவெல்லாம் ஸமானமாயிருந்தாலும் உபாஸகன் சிரஸிலுள்ள நாடி வழியாகத் தான் வெளியே போகிறான். மற்றவர்கள் வேறு நாடிகள் வழியாகத்தான் என்ற வித்யாஸமிருக்கிறது. அவனால் சிரஸிலுள்ள நாடியே தியானம் செய்யப் பட்டிருப்பதாலும், ஸகுண பிரஹ்மத்தின் உபாஸனையின் ஸாமர்த்தியத்தினாலும் அவனுக்கு அது வழியாகத்தான் வெளியேறல்.இவ்விஷயம் "शतं चैका च हृदयस्य नाड्यस्तासां मूर्धानमभिनिःसृतैका । तयोर्ध्वमायन्नमृतत्वमेति विष्वङ्ङन्याउत्क्रमणे भवन्ति।। "ஹ்ருதயத்தில் நூற்றியொன்று நாடிகள் இருக்கின்றன. அவைகளில் ஒன்று சிரஸை நோக்கிச் செல்கிறது. அது வழியாக மேலே போகிறவன் மரணமற்ற தன்மையை அடைகிறான். வெளிக்கிளம்ப பலவிதமான மற்ற நாடிகள் இருக்கின்றன" என்று வேறு சுருதியினால் ஸ்பஷ்டமாகவே தெரிகிறது. மற்ற நாடிகள் வெளிக் கிளம்ப உபயோகப்படுகின்றவே தவிர, மரணமற்ற தன்மையை அடைய உபயோகமில்லையென்று அர்த்தம்.
ஆகையால் உபாஸகனுக்கு விசேஷம் உண்டு.

## १०.रश्म्यधिकरणम्

## 10.ரச்ம்யதி$_4$கரணம்

(ஸூத்ரம் 18,19)

**रश्म्यनुसारी ।।१८।।**

ரச்ம்யனுஸாரீ 18

(கிரணத்தை அனுஸரித்தவனாக)

**निशि नेति चेन्न सम्बन्धस्य यावद्देहभावित्वाद्दर्शयति च ।।१९।।**

நிசி நேதி சேந்ந ஸம்ப$_3$ந்த$_4$ஸ்ய யாவத்$_3$தே$_3$ஹபா$_4$வித்வாத்$_3$த$_3$ர்சயதி ச 19

(இரவில் கிடையாது என்றால் அப்படியல்ல, ஸம்பந்தம் தேஹம் இருக்கும் வரை உள்ளத்தால், அவ்விதமே காட்டுகிறது)

இவ்விதம் சிரஸிலுள்ள நாடி வழியாக வெளிக் கிளம்புகிறவன் "अथैतैरेव रश्मिभिरूर्ध्वमाक्रमते" "பிறகு இந்த (ஸூர்ய) கிரணங்களைக் கொண்டே மேலே போகிறான்" என்று சொல்லப்படுகிறது. அப்படியானால், அவன் இறக்கும் போது பகலாகத் தான் இருக்க வேண்டுமா? என்பது விஷயம்.

**अहन्येव मृतो रश्मीन्याति निश्यपि वा निशि ।**
**सूर्यरश्मेरभावेन मृतोऽहन्येव याति तम् ।। १९ ।।**
**यावद्देहं रश्मिनाड्योर्योगो ग्रीष्मक्षपास्वपि ।**
**देहदाहाच्छ्रुतत्वाच्च रश्मीन्निश्यपि यात्यसौ ।। २० ।।**

அஹம்யேவ ம்ருதோ ரச்மீந்யாதி நிச்யபி வா நிசி ।
ஸூர்யரச்மேரபா$_4$வேந ம்ருதோஅஹம்யேவ யாதி தம் ।। 19
யாவத்தே$_3$ஹம் ரச்மிநாட்யோர்யோகோ$_3$ க்$_3$ரீஷ்மக்ஷபாஸ்வபி ।
தே$_3$ஹதா$_3$ஹாச்ச்$_2$ருதத்வாச்ச ரச்மீந்நிச்யபி யாத்யஸௌ ।। 20

(அ..ம்)

பகலில் இறந்தவன் தான் கிரணங்களை அடைகிருனு? அல்லது, இரவில் இறந்தவனுமா? இரவில் ஸூர்ய கிரணம் இல்லாததினுல் பகலின் இறந்தவன் தான் அதையடைகிருன்.

சரீரமுள்ளவரை கிரணத்திற்கும் நாடிக்கும் ஸம்பந்தமுண்டு. கோடை கால இரவுகளில் கூட சரீரம் தபிப்பதினுலும், வேதத்தில் சொல்லப்படுவதினுலும் இரவில் கூட இவன் கிரணங்களை அடைகிருன்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

இரவில் ஸூர்ய கிரணமேயில்லாததினுல், பகலில் இறந்தவனுக்குத் தான் கிரணத்துடன் ஸம்பந்தம் ஏற்பட முடியும்.

ஸித்தாந்தம் :

கிரணத்திற்கும் சரீரத்திற்கும் சரீரமிருக்கும் வரை ஸம்பந்தமுண்டு. அதனுல் தான் கோடைகால இரவுகளிலும் கூட சரீரம் உஷ்ணத்தினுல் தபிப்பது காணப்படுகிறது. மற்ற ரிதுக்களில் வேறு காரணங்களால் தடுக்கப்படுவதால் தெரியவில்லை. வேதமும் "**अमुष्मादादित्यात्प्रतायन्ते वा आसु नाडीषु सृप्ता आभ्यो नाडीभ्यः प्रतायन्ते तेऽमुष्मिन्नादित्ये सृप्ताः**" "இந்த ஸூர்யனிடமிருந்து நீண்டு வருகின்றன; அவை இந்த நாடிகளில் சேருகின்றன; இந்த நாடிகளிலிருந்து நீண்டு வருகின்றன; அவை இந்த ஸூர்யனில் சேருகின்றன" என்று கிரணத்திற்கும் நாடிகளுக்குமுள்ள விட்டுப் பிரியாத்தன்மையைச் சொல்கிறது.

ஆகையால் இரவில் இறப்பவனும் கிரணங்களை அடைகிருன்.

## ११.दक्षिणायनाधिकरणम्

## 11.தக்ஷிணாயநாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 20,21)

अतश्चायनेऽपि दक्षिणे ।।२०।।
அதச்சாயநேஅபி த₃க்ஷிணே 20
(இதனாலேயே தக்ஷிணாயனத்திலும்கூட)
योगिनः प्रति च स्मर्यते स्मार्ते चैते ।।२१।।
யோகிந: ப்ரதி ச ஸ்மர்யதே ஸ்மார்தே சைதே 21
(யோகிகளை உத்தேசித்துத்தான் ஸ்மரிக்கப்பட்டிருக்கிறது இவை ஸ்மார்த்தம்தான்)

பிரஹ்ம லோகத்தையடையும் மார்க்கம் உத்தரமார்க்கமென்று சொல்லப் பட்டிருப்பதால், தக்ஷிணுயனத்தில் இறப்பவருக்கு பிரஹ்ம லோகம் கிடைக்குமா? என்பது விஷயம்.

अयने दक्षिणे मृत्वा धीफलं नैत्यथैति वा ।
नैत्युत्तरायणाद्युक्तेर्भीष्मस्यापि प्रतीक्षणात् ।। २१ ।।
आतिवाहिकदेवोक्तेर्वरख्यात्यै प्रतीक्षणात् ।
फलैकान्त्याच्च विद्यायाः फलं प्राप्नोत्युपासकः ।। २२ ।।

அயநே த₃க்ஷிணே ம்ருத்வா தீ₄ப₂லம் நைத்யதை₂தி வா ।
நைத்யுத்தராயணாத்₃யுக்தேர்பீ₄ஷ்மஸ்யாபி ப்ரதீக்ஷணாத் ।। 21
ஆதிவாஹிகதே₃வோக்தேர்வரக்யாத்யை ப்ரதீக்ஷணாத் ।
ப₂லைகாந்த்யாச்ச வித்₃யாயா: ப₂லம் ப்ராப்நோத்யுபாஸக: ।।22

(அ..ம்)

தக்ஷிணுயனத்தில் இறந்தால் உபாஸனையில் பலனை அடைவதில்லையா? அல்லது அடைகிருனு? "உத்தராயணம்" (வடக்கு மார்க்கம்) என்பது முதலானது சொல்லப் பட்டிருப்பதாலும் பீஷ்மர் காத்துக் கொண்டிருந்ததாலும், அடைவதில்லை.

ஆதிவாஹிக (அழைத்துக் கொண்டு போகிற) தேவர்களே சொல்லப்படுவதாலும் (தனக்குள்ள) வரனை வெளிப்படுத்தவே பீஷ்மர் (உத்தராயணத்தை) எதிர்பார்த்தி ருந்ததினுலும், உபாஸனைக்கு பலன் அவசியம் ஏற்பட்டாக வேண்டியதாகையாலும், உபாஸகன் பலனை அடைகிருன்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

வேதத்திலும் ஸ்மிருதிகளிலும் பிரஹ்ம லோகம் போகும் மார்க்கம் உத்தர மார்க்கம் என்று சொல்லப்பட்டிருப்பதால், தக்ஷிணுயனத்தில் இறக்கும் உபாஸகனுக்கு உபாஸனையின் பலனுகிய பிரஹ்ம லோகம் போவது ஸம்பவிக்காது. தக்ஷிணுயனத்தில் இறந்தவனுக்கும் அந்த பலனுண்டென்று அங்கீகரித்தால், பீஷ்மாச்சாரியார் உத்தராயணத்தை

எதிர்பார்த்துக் கொண்டு அதுவரை சரீரத்தை தரித்துக் கொண்டிருந்தது அர்த்தமில்லையென்று ஏற்பட்டுவிடும்.

ஸித்தாந்தம் :
உத்தராயணம் என்ற சப்தம் காலத்தை சொல்லவில்லை, அழைத்துச் செல்லும் தேவதைகளைத்தான் சொல்கிறது என்பது அடுத்த பாதத்தில் சொல்லப்படும். பீஷ்மர் காத்துக் கொண்டிருந்தது தன் தகப்பனுருடைய பிரஸாதத்தினுல் தன்னிஷ்டப்படி தேஹத்தை விடலாமென்றுகிடைத்த வரனை வெளிப்படுத்துவதற்காகத் தான். ஏதோ சில காலத்தில் மரணமேற்பட்ட தோஷத்தினுல் பலனை அடைவதில்லை என்ருல், அப்பொழுது உபாஸனைக்கு பலன் நிச்சயமில்லை என்ருகி விடும்.
ஆகையால் தக்ஷிணயனத்தில் இறந்தவனும் கூட உபாஸனையின் பலனை அடைகிருன்.

இவ்விதம் நான்காவது அத்யாயம் இரண்டாவது பாதத்தில் அதிகரணங்கள் 11 சுலோகங்கள் 22 (ஸூத்ரங்கள் 21).

==============================

# நான்காவது அத்யாயம் : மூன்றாவது பாதம்

இந்த பாதத்தில் அந்த உத்தர மார்க்கம் வர்ணிக்கப்படுகிறது.

## १.अर्चिराद्यधिकरणम्

## 1.அர்சிராத்$_3$யதி$_4$கரணம்

(ஸூத்ரம் 1)

**अर्चिरादिना तत्प्रथितेः ।।१।।**

அர்சிராதி$_3$நா தத்ப்ரதி$_2$தே; 1

( அர்ச்சிஸ் முதலானதினால் அது பிரஸித்தமானதினால் )

அந்த மார்க்கம் ஒரே விதம் தானு? என்பது விஷயம்.

**नानाविधो ब्रह्मलोकमार्गो यद्वाऽर्चिरादिकः ।**
**नानाविधः स्याद्विद्यासु वर्णनादन्यथाऽन्यथा ।। १ ।।**
**एक एवार्चिरादिः स्यान्नानाश्रुत्युक्तपूर्वकः ।**
**यतः पञ्चाग्निविद्यायां विद्यान्तरवतां श्रुतः ।। २ ।।**

நாநாவிதோ$_4$ ப்$_3$ரஹ்மலோகமார்கோ$_3$ யத்$_3$வாஅர்சிராதி$_3$க; ।
நாநாவித$_4$; ஸ்யாத்$_3$வித்$_3$யாஸு வர்ணநாத$_3$ந்யதா$_2$அந்யதா$_2$ ।। 1
ஏக ஏவார்சிராதி$_3$; ஸ்யாந்நாநாச்ருத்யுக்தபூர்வக; ।
யத; பஞ்சாக்$_3$நிவித்$_3$யாயாம் வித்$_3$யாந்தரவதாம் ச்ருத; ।। 2

(அ..ம்)

பிரஹ்மலோகத்திற்கு மார்க்கம் பலவிதமா? அல்லது "அர்ச்சிராதி" (வெளிச்சத்தை முதலில் உடையது மாத்திரம்) தானு? உபாஸனைகளில் வெவ்வேறு விதமாக வர்ணிக்கப்பட்டிருப்பதால் பல விதமாகத்தான் இருக்கும்.

பஞ்சாக்னி வித்யையில் மற்ற உபாஸனையுள்ளவர்களுக்கும் சொல்லி இருப்பதால், பல வித சுருதிகளில் சொல்லியருப்பதை பர்வங்களாகக் கொண்ட அர்ச்சிராதி மார்க்கம் ஒன்றே தான்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

சாந்தோக்யம் பிருஹதாரண்யகம் ஆகிய இரண்டிலும் பஞ்சாக்னி வித்யையில் பிரஹ்மலோக மார்க்கமானது "**तेऽर्चिषमभिसंभवन्ति अर्चिषोऽहः**" "அவர்கள் அர்ச்சிஸை (வெளிச்சத்தை) அடைகிறார்கள், வெளிச்சத்திலிருந்து பகலை" என்று அர்ச்சிராதி மார்க்கம் சொல்லப்பட்டிருக்கிறது. வேறு உபாஸனையிலோ, "**स वायुमागच्छति**" "அவன் வாயுவிடம் வருகிறான்"

என்று வாயுவை ஆரம்பமாகச் சொல்லி இருக்கிறது. கௌஷீதகிகள் பர்யங்க வித்யையில் அக்னியை ஆரம்பமாகக் கண்டு "स एतं देवयानं पन्थानमापद्याग्निलोकमागच्छति" "அவன் இவ்விதம் தேவயான மார்க்கத்தை அடைந்து அக்னி லோகத்திற்கு வருகிறுன்" என்றுள்ள சுருதியை சொல்லுகிறுர்கள். இப்படியே வேறுயிடங்களிலும் காணலாம். ஆகையால் பிரஹ்ம லோகம் போகும் மார்க்கம் பல விதம்.

ஸித்தாந்தம் :
பஞ்சாக்னி வித்யையின் பின்னுள்ள வாக்கியத்தில் "ये इत्थं विदुः ये चेमेऽरण्ये श्रद्धां तप इत्युपासते, तेऽर्चिषमभिसंभवन्ति" "எவர்கள் இவ்விதம் அறிகிறுர்களோ, அப்படியே எந்த இவர்கள் அரண்யத்திலிருந்து கொண்டு சிரத்தையென்றும், தபஸ் என்றும் உபாஸிக்கிறுர்களோ, அவர்கள் அர்ச்சிஸை அடைகிறுர்கள்" என்று பஞ்சாக்னி வித்யையை அறிபவர்களையும், வேறு வித்யையை உபாஸிக்கிறவர்களையும் உத்தேசித்து அர்ச்சிராதி மார்க்கத்தை சொல்லுகிறது. ஆகையால் அர்ச்சிராதி மார்க்கம் ஒன்றே தான். வேறு சுருதிகளில் சொல்லப்படும் வாயு முதலியவைகளை குணோபஸம்ஹார நியாயப்படி இந்த அர்ச்சிராதி மார்க்கத்திலேயே நுழைத்து அதிலேயே பர்வங்கள் என்று சேர்த்து விடலாம். ஆகையாலும் அர்ச்சிராதி மார்க்கம் ஒன்றே தான்.

## २.वाय्वधिकरणम्

## 2.வாய்வதி₄கரணம்

(ஸூத்ரம் 2)

**वायुमब्दादविशेषविशेषाभ्याम् ।।२।।**

வாயுமப்₃தா₃த₃விசேஷவிசேஷாப்₄யாம் 2

( ஸம்வத்ஸரத்திலிருந்து வாயுவை, விசேஷமன்னியிலும் விசேஷமுள்ளதாயுமிருப்பதால் )

அர்ச்சிராதி மார்க்கத்தில் வாயுவை எங்கே சேர்ப்பது என்பது இங்கே விஷயம்.

**संनिवेशयितुं वायुरत्राशक्योऽथ शक्यते ।**
**न शक्यो वायुलोकस्य श्रुतक्रमविवर्जनात् ।। ३ ।।**
**वायुच्छिद्राद्विनिष्क्रम्य स आदित्यं व्रजेदिति ।**
**श्रुतेरर्वाग्रवेर्वायुर्देवलोकस्ततोऽप्यधः ।। ४ ।।**

ஸம்நிவேசயிதும் வாயுரத்ராசக்யோஅத₂ சக்யதே ।
ந சக்யோ வாயுலோகஸ்ய ச்ருதக்ரமவிவர்ஜநாத் ।।3

வாயுச்சி₂த்₃ராத்₃விநிஷ்க்ரம்ய ஸ ஆதி₃த்யம் வ்ரஜேதி₃தி ।
ச்ருதேரர்வாக்₃ரவேர்வாயுர்தே₃வலோகஸ்ததோஅப்யத₄: ।। 4

(அ..ம்)

இங்கே வாயுவை நுழைக்க முடியாதா? அல்லது முடியுமா? சொல்லப்பட்டிருக்கும் வரிசை விட்டுப் போகுமானதால் வாயு லோகத்திற்கு இடம் கொடுக்க முடியாது.

"வாயு துவாரம் வழியாக வெளிவந்து அவன் ஆதித்யனை அடைகிறான்" என்ற சுருதியிருப்பதால், ஸுர்யனுக்குக் கீழே வாயு; அதற்கும் கீழே தேவ லோகம் (என்று இடம் கொடுக்க வேண்டும்).

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"तेऽर्चिषमभिसंभवन्ति, अर्चिषोऽहः अह्न आपूर्यमाणपक्षम्, आपूर्यमाणपक्षाद्यान्षडुदङ्ङेति मासांस्तान्मासेभ्यः संवत्सरम्, संवत्सरादादित्यमादित्याच्चन्द्रमसं, चन्द्रमसो विद्युतं, तत्पुरुषोऽमानवः, स एतान्ब्रह्म गमयति" "அவர்கள் அர்ச்சிஸை அடைகிறார்கள், அர்ச்சிஸிலிருந்து பகலை, பகலிலிருந்து சுக்ல பக்ஷத்தை சுக்ல பக்ஷத்திலிருந்து எந்த ஆறு மாஸங்களில் ஸுர்யன் வடக்கே போகிறாரோ அந்த மாஸங்களை, மாசங்களிலிருந்து வருஷத்தை, வருஷத்திலிருந்து ஸூர்யனை, ஸூர்யனிடமிருந்து சந்திரனை, சந்திரனிலிருந்து மின்னலை, அங்கே மனுவின் ஸம்பந்தமில்லாத புருஷன் இவர்களை பிரஹ்ம லோகம் சேர்ப்பிக்கிறான்" என்று அர்ச்சிராதி மார்க்கத்தில் வரிசையாக சொல்லப்பட்டு இருக்கிறது. இதில் வேறு சுருதியில் கண்ட வாயுவை எங்கேயாவது இடம் கொடுத்து நுழைக்க முடியாது. இதற்குப் பிறகு வாயு என்று வரிசை சொல்லப் படாததாலும், வரிசையை கல்பிக்கக் காரணமில்லாததினாலும் வழியில்லை.

ஸித்தாந்தம் :

வேறு சுருதியே வரிசையை கல்பித்துக் கொடுக்கிறது. எப்படியென்றால் "स वायुमागच्छति तस्मै स विजिहीते यथा रथचक्रस्य खम् । तेन स ऊर्ध्व आक्रमते स आदित्यमागच्छति" "அவன் வாயுவிடம் வருகிறான். அவனுக்கு அது ரதசக்ரத்தின் இடைவெளி போல விலகிக் கொள்கிறது. அவன் அந்த இடைவெளி வழியாக மேலே போகிறான். அவன் ஆதித்யனை அடைகிறான்" என்பதினால் உபாஸகன் இங்கிருந்து புறப்பட்டு எப்பொழுது வாயு லோகம் செல்லுகிறானே அப்பொழுது அந்த வாயு மண்டலத்தில் ஒரு இடுக்கு இருக்கிறது; ரத சக்ரத்தின்

இடைவெளியளவுள்ள அந்த வாயுவின் இடுக்கு வழியாக வாயு மண்டலத்தைத் தாண்டி ஆதித்ய மண்டலம் போகிறுன் என்று சொல்லப் பட்டதாக ஆகிறது. இவ்விதம் ஆதித்யனுக்கு முன்னுலிருக்கும் தன்மை வாயுவிற்கு என்று வரிசையை தீர்மானிக்க முடிகிறது. ஆக மாஸங்களில் இருந்து வருஷம், வருஷத்திலிருந்து வாயு, வாயுவிலிருந்து ஆதித்யன்" என்று இடம் கொடுக்க வேண்டும். பிருஹதாரண்யகத்திலோ, மாசங்களுக்குப் பிறகு வருஷத்தை விட்டு விட்டு அதன் ஸ்தானத்தில் தேவலோகம் சொல்லப்பட்டிருக்கிறது. மாசங்களும் வருஷம் நெருங்கி ஸம்பந்தமுள்ளதென்பது பிரஸித்தமானதினுல் அவைகள் சேர்ந்து இருப்பதைத் தடுக்க முடியாது. ஆகையால் தேவலோகத்தை வருஷத்திற்குப் பிறகும் வாயுவிற்கு முன்னுலும் போட்டுக்கொள்ள வேண்டும். ஆகையால் இவ்விதம் வருஷத்திற்கும் ஆதித்யனுக்கும் மத்தியில் தேவலோகத்தையும், வாயுலோகத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

## ३.तडिदधिकरणम्

## 3.தடி₃ததி₄கரணம்

### (ஸூத்ரம் -3)

**तडितोऽधि वरुणः सम्बन्धात् ।।३।।**

தடிதோஅதி₄ வருண; ஸம்ப₃ந்தா₄த் 3

( மின்னலுக்கு மேல் வருணன், ஸம்பந்தமிருப்பதால் )

இவைகளைத் தவிர கௌஷீதகீயில் "स वरुणलोकम्, स इन्द्रलोकम्, स प्रजापतिलोकम्" "அவன் வருண லோகத்தை, அவன் இந்திர லோகத்தை, அவன் பிரஜாபதி லோகத்தை (அடைகிறுன்)" என்று சொல்லப்படும் லோகங்களுக்கு இடம் எங்கே? என்பது இங்கு விஷயம்.

**वरुणादेः संनिवेशो नास्ति तत्रोत विद्यते ।**
**नास्ति वायोरिवैतस्य व्यवस्थाश्रुत्यभावतः ।। ५ ।।**
**विद्युत्संबन्धिवृष्टिस्थनीरस्याधिपतित्वतः ।**
**वरुणो विद्युतोऽस्त्यूर्ध्वं तत इन्द्रप्रजापती ।। ६ ।।**

வருணாதே₃: ஸந்நிவேசோ நாஸ்தி தத்ரோத வித்₃யதே ।
நாஸ்தி வாயோரிவைதஸ்ய வ்யவஸ்தா₂ச்ருத்யபா₄வத; ।। 5
வித்₃யுத்ஸம்ப₃ந்திவ்ருஷ்டிஸ்தநீரஸ்யாதி₄பதித்வத; ।
வருணோ வித்₃யுதோஅஸ்த்யூர்த்₄வ தத இந்த்₃ரப்ரஜா₃பதீ ।। 6

(அ..ம்)

அங்கே வருணன் முதலியதிற்கு இடம் கொடுப்பது இல்லையா? அல்லது உண்டா? வாயுவிற்கு இருந்தது போல இதற்கு தீர்மானித்துக் கொடுக்கும் சுருதி இல்லாத படியால் இடம் கிடையாது.

மின்னலோடு ஸம்பந்தப்பட்ட மழையிலுள்ள ஜலத்திற்கு அதிபதியாய் இருக்கும் தன்மையிருப்பதால், மின்னலுக்கு மேல் வருணன் இருக்கிறார். பிறகு இந்திரனும் பிரஜாபதியும்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

வாயு ஆதித்யனுக்கு முன்னால் என்று தீர்மானிக்க ஒரு சுருதி உதவிற்று. இந்த வருணன், இந்திரன், பிரஜாபதி இவர்கள் ஸம்பந்தமாய் எவ்வித சுருதியும் இல்லாததினால் இவர்களை அர்ச்சிராதி மார்க்கத்தில் சேர்க்க நியாயமில்லை.

ஸித்தாந்தம் :

சுருதியில்லையானாலும், மின்னலுக்கும் மழைக்கும் ஸம்பந்தமுண்டு. மழையில் ஜலம் இருக்கிறது. ஜலத்திற்கு அதிபதி வருணன் என்ற முறையில் மின்னலுக்கும் வருணனுக்கும் ஸம்பந்தமிருப்பதால் மின்னல் லோகத்திற்கு மேலே வருண லோகத்தை வைத்துக் கொள்ள வேண்டும். இந்திரனுக்கும் பிரஜாபதிக்கும் வேறு ஸ்தானம் ஸம்பவிக்காததினால் "புதிதாக வந்தவர்களுக்கு கடைசியில் இடம்" என்ற நியாயப்படி வருண லோகத்திற்கும் பிற்பாடு அவர்களுக்கு இடம். ஆக இவ்விதம் வருணன் முதலானவர்களுக்கும் இடம் கொடுத்து விட்டபடியால் அர்ச்சிராதி மார்க்கம் வியவஸ்தை செய்யப்பட்டு விட்டது.

## ४.आतिवाहिकाधिकरणम्

## 4.ஆதிவாஹிகாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 4 - 6)

**आतिवाहिकास्तल्लिङ्गात् ।।४।।**

ஆதிவாஹிகாஸ்தல்லிங்கா$_3$த் 4

( அழைத்துச்செல்லுகிறவர்கள், அதற்கு அடையாளமிருப்பதால் )

**उभयव्यामोहात्तत्सिद्धेः ।।५।।**

உப$_4$யவ்யாமோஹாத்தத்ஸித்$_3$தே$_4$: 5

( இருவருக்கும் மோஹமானதினால் அது ஸித்திப்பதினால் )

वैद्युतेनैव ततस्तच्छ्रु तेः ।।६।।

வைத்$_4$யுதேனைவ ததஸ்தச்ச்$_2$ரு தே; 6

( அங்கிருந்து வித்யுல்லோகத்திற்கு வந்தவனாலேயே, அவ்விதம் சொல்லப்பட்டிருப்பதால் )

இந்த அர்ச்சிஸ் முதலானவை என்ன? என்பது விஷயம்.

मार्गचिह्नं भोगभूर्वा नेतारो वाऽर्चिरादयः ।
आद्यौ स्यातां मार्गचिह्नसारूप्याल्लोकशब्दतः ।। ७ ।।
अन्ते गमयतीत्युक्तेर्नेतारस्तेषु चिद्दशः ।
निर्देशोऽस्त्यत्र लोकाख्या तन्निवासिजनान्प्रति ।। ८ ।।

மார்க$_3$சிஹ்நம் போ$_4$க$_3$பூ$_4$ர்வா நேதாரோ வாஅர்சிராதய; ।
ஆத்$_3$யௌ ஸ்யாதாம் மார்க$_3$சிஹ்நஸாரூப்யால்லோகசப்$_3$தத;.।।7அந்
தே க$_3$மயதீத்யுக்தேர்நேதாரஸ்தேஷு சித்$_3$ருச; ।
நிர்தேசோஅஸ்த்யத்ர லோகாக்$_2$யா தந்நிவாஸிஜ$_3$நாந்ப்ரதி ।।8

(அ..ம்)

அர்ச்சிஸ் முதலியவைகள் வழியிலுள்ள அடையாளங்களா? அல்லது அனுபவிக்கும் ஸ்தலங்களா? அல்லது அழைத்துச் செல்கிறவர்களா? வழியிலுள்ள அடையாளங்கள் போலவேயிருப்பதாலும், லோகம் என்ற சப்தமிருப்பதினுலும், முதலில் சொன்ன இரண்டாகத்தான் இருக்கும். கடைசியில் "சேர்ப்பிக்கிருன்" என்று சொல்லியிருப்பதால், அழைத்துச் செல்கிறவர்கள் தான். அவர்களிடத்திலும் இது மாதிரி சொல்வது உண்டு. இங்கே லோகம் என்ற பெயர் அங்கு வஸிக்கும் ஜனங்களை உத்தேசித்து.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

அர்ச்சிஸ் என்பது முதலானவைகள் எவை சொல்லப்படுகின்றனவோ, அவை வழியிலுள்ள அடையாளங்களாகத்தான் இருக்க வேண்டும். உலகத்தில் வழியைத் தெரிவிப்பதற்காக "கிராமத்திலிருந்து வெளிக்கிளம்பி, நதிக்குப்போ, அங்கிருந்து மலைக்குப்போ, அங்கிருந்து இடைச்சேரிக்கு" என்று சொல்வது போலேவே" அர்ச்சிஸிலிருந்து பகல், பகலிலிருந்து சுக்லபக்ஷம்" என்றெல்லாம் சொல்லப் பட்டிருக்கிறது. உலகத்தில் வழி காட்டுவதற்கு ஸமானமாகவே இருப்பதால் இவை வழியிலுள்ள அடையாளங்கள். அல்லது லோகம் என்ற சப்தம் அனுபவிக்கும் ஸ்தலங்கள் என்ற அர்த்தத்திலேயே பிரஸித்தமாக இருப்பதால், இங்கேயும் வாயுலோகம், வருணலோகம், என்று சொல்லப்பட்டு இருப்பதால் பிரஹ்மலோகம் போகிறவனுக்கு

மத்தியில் இளைப்பாறும் ஸ்தானங்களாகிய போக பூமிகளாக அர்ச்சிஸ் முதலியவை இருக்கலாம்.

ஸித்தாந்தம் :

"तत्पुरुषोऽमानवः। स एतान्ब्रह्म गमयति" "அங்குள்ள புருஷன் மனு ஸம்பந்தமில்லாதவன்.அவன் இவர்களை பிரஹ்மலோகம்சேர்ப்பிக்கிறன்" என்று கடைசியில் அப்புருஷனுக்கு அழைத்துச் செல்லும் தன்மை சொல்லியிருப்பதால், அவனுடன் சேர்ந்தே சொல்லியிருப்பதால், அர்ச்சிஸ் முதலியவைகளும் அழைத்துச் செல்லும் தேவதைகள்தான் என்று தெரிகிறது. வழியிலுள்ள அடையாளம் போல குறிப்பிட்டிருக்கிறது என்பது அழைத்துச் செல்பவர்களிடமும் பொருந்தும். "நீ இங்கிருந்து பலவர்மாவிடம் போ, அவனிடமிருந்து ஜயகுப்தனை, அவனிடமிருந்து தேவதத்தனை" என்பது முதலானபடி சொல்வதுமுண்டு.லோகம் என்பது பிரஹ்ம லோகம் போகிற உபாஸகனுக்கு அந்தந்த லோகங்களில் போகம் கிடையாதபோதிலும் அங்கு வஸிக்கும் அழைத்துச் செல்லும் தேவர்களுக்கு போக பூமியாயிருப்பதால், அவ்விதம் சொல்லப் படுகிறது. ஆகையால் அர்ச்சிஸ் முதலானவை அழைத்துச் செல்லும்தேவதைகள். (உபாஸகனுக்கு பிரஹ்ம லோகம் போய்ச் சேரும் வரை பிரக்ஞை கிடையாதபடியால், இந்த தேவதைகள் தூக்கிச்செல்பவர்கள்அல்லது கடத்தி விடுபவர்கள் என்றால் தான் "ஆதிவாஹிகர்" என்ற சப்தத்தில் தாத்பர்யம் நன்கு விளங்கும்).

## ५.कार्याधिकरणम्

## 5.கார்யாதி₄கரணம்

(ஸூத்ரம் 7 - 14)

**कार्यं बादरिरस्य गत्युपपत्तेः ।।७।।**

கார்யம் பா₃த₃ரிரஸ்ய க₃த்யுபபத்தே; ..7..

( கார்யம் என்று பாதரி, இதற்கு அடைவது பொருத்தமானதினால் )

**विशेषितत्वाच्च ।।८।।**

விசேஷிதத்வாச்ச ..8..

( குறிப்பிட்டிருக்கிறபடியாலும் )

**सामीप्यात्तु तद्व्यपदेशः ।।९।।**

ஸாமீப்யாத்து தத்₄வ்யபதே₃ச; 9

( ஸமீபத்திலிருக்கும் தன்மையினாலேதான் அவ்விதம்

சொல்லப்படுகிறது )

**कार्यात्यये तदध्यक्षेण सहातः परमभिधानात् ।।१०।।**

கார்யாத்யயே தத₃த்₄யக்ஷேண ஸஹாத; பரமபி₄தா₄நாத் 10

( கார்யலோகம் நசிக்கும்போது அதன் அத்யக்ஷர்கூட, அங்கிருந்து பரத்தை, சொல்லியிருப்பதால் )

**स्मृतेश्च ।।११।।**

ஸ்ம்ருதேச்ச 11

( ஸ்மிருதியினாலும் )

**परं जैमिनिर्मुख्यत्वात् ।।१२।।**

பரம் ஜை₃மிநிர்முக்₂யத்வாத் 12

( மேலானது என்று ஜைமினி, முக்கியத் தன்மையுள்ளதால் )

**दर्शनाच्च ।।१३।।**

த₃ர்சநாச்ச 13

( காண்பதினாலும் )

**न च कार्ये प्रतिपत्त्यभिसन्धिः ।।१४।।**

ந ச கார்யே ப்ரதிபத்தயபி₄ஸந்தி; 14

( காரிய பிரஹ்மத்தையடையும் ஸங்கல்பமில்லை )

இவ்விதமாக மார்க்கத்தைப்பற்றி சொல்லிவிட்டு அந்த மார்க்கம் வழியாகச் சென்று அடைவது என்ன? என்பது விஷயம்.

**परं ब्रह्माथवा कार्यमुदङ्मार्गेण गम्यते ।**
**मुख्यत्वादमृतत्वोक्तेर्गम्यते परमेव तत् ।। ९ ।।**
**कार्यं स्याद् गतियोग्यत्वात्परस्मिन् तदसंभवात् ।**
**सामीप्याद् ब्रह्मशब्दोक्तिरमृतत्वं क्रमाद् भवेत् ।। १० ।।**

பரம் ப்₃ரஹ்மாத₂வா கார்யமுத₃ங்மார்கே₃ண க₃ம்யதே ।
முக்₂யத்வாத₃ம்ருதத்வோக்தேர்க₃ம்யதே பரமேவ தத் ।। 9
கார்யம் ஸ்யாத் க₃தியோக்₃யத்வாத்பரஸ்மிந் தத₃ஸம்ப₄வாத் ।
ஸாமீப்யாத்₃ ப்₃ரஹ்மசப்₃தோ₃க்திரம்ருதத்வம் க்ரமாத் ப₄வேத் ।।10

(அ..ம்)

உத்தர மார்க்கத்தில் பரபிரஹ்மம் அடையப்படுகிறதா? அல்லது கார்ய பிரஹ்மமா? முக்கியமான அர்த்தமாயிருப்பதால், மரணமற்ற தன்மை சொல்லி இருப்பதாலும் அந்த பரபிரஹ்மம் தான் அடையப்படுகிறது. போவதற்குத் தகுந்ததாயிருப்பதாலும் பரபிரஹ்ம விஷயத்தில் அது (போவது என்பது) ஸம்பவிக்காததினாலும், கார்யம் தான். ஸமீபத்திலிருப்பதால் பிரஹ்மம் என்ற சப்தம் சொல்லப்பட்டிருக்கிறது. கிரமமாக மரணமற்ற தன்மையும் ஏற்படும்

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"स एतान्ब्रह्म गमयति" "அவன் இவர்களை பிரஹ்மத்தை அடைவிக்கிறுன்" என்று உத்தரமார்க்கத்திஞல் அடையப்படும் வஸ்து "பிரஹ்மம்" என்று சொல்லப் படுகிறது. அந்த சப்தத்திற்கு முக்கியமான அர்த்தம் பரபிரஹ்மமே ஆனதால், உபாஸகன் அடைவதும் அந்த பரபிரஹ்மம்தான். மேலும் "तयोर्ध्वमायन्नमृतत्वमेति" "அது வழியாக (சிரஸிலுள்ள நாடி வழியாக) மேலே போகிறவன் மரணமற்ற தன்மையை அடைகிறுன்" என்ற பலனும் பரபிரஹ்மமென்று வைத்துக் கொண்டால் தான் உசிதமாகும்.

ஸித்தாந்தம் :

இங்கே கண்ட பிரஹ்மம் ஸத்யலோகமென்றகார்ய பிரஹ்மம் தான். அது தான் உபாஸகனை விட வேருயிருப்பதிஞலும், அளவிற்குள்பட்டிருப்பதாலும், போய் அடைவதற்குத் தகுதியுள்ளது. பரபிரஹ்மமோ எங்குமிருப்பதால் அவ்விதமாகாது; மேலும் உபாஸகனுடைய ஸ்வரூபமாகவேயிருப்பதிஞலும் (புதிதாய் அடைய வேண்டியதில்லை). ஆகையால் முக்கியமான அர்த்தம் ஸம்பவிக்காததிஞல், ஸமீபத்திலிருக்கிறதென்ற ஸம்பந்தத்தைக் கொண்டு, பிரஹ்ம சப்தம் ஸத்ய லோகத்தை சொல்கிறது. அந்த லோகத்திலுள்ளவர்களுக்கு தத்வக்ஞானம் அவசியம் ஏற்பட்டு மறுபடியும் வேறு ஜன்மமெடுத்து தாமதிக்கஇடமன்னியில் மோக்ஷம் கிடைக்கப்போவதால் அந்த ஸத்ய லோகம் பரபிரஹ்மத்திற்கு ஸமீபத்தில் தானே இருக்கிறது? அதஞல் தான் ஸ்மிருதியும் "ब्रह्मणा सह ते सर्वे प्राप्ते च प्रतिसंचरे । परस्यान्ते कृतात्मानः प्रविशन्ति परं पदम् ।।" "பிரளயம் ஏற்படும் போது மேலாயுள்ள பிரஹ்மாவிற்கு முடிவு வரும் போது அவர்கள் எல்லாரும் கிருதாத்தர்களாக பிரஹ்மாவுடன் கூடவே பரமான பதத்தை அடைகிறுர்கள்" என்று சொல்கிறது. இவ்விதமிருப்பதால் மரணமற்ற தன்மையைச் சொல்லும் சுருதிக்கு கிரம முக்தியில் அபிப்ராயம்.

ஆகையால் உத்தரமார்க்கத்தால் அடைவது கார்ய பிரஹ்மம்.

## ६.अप्रतीकालम्बनाधिकरणम्

## 6.அப்ரதீகாலம்ப₃நாதி₄கரணம்

(ஸூத்ரம் 15,16)

अप्रतीकालम्बनान्नयतीति बादरायण उभयथाऽदोषात्तत्क्रतुश्च ।।१५।।
அப்ரதீகாலம்ப₃நாந்நயதீதி பா₃த₃ராயண
உப₄யதா₂அதோ₃ஷாத்தத்க்ரதுச்ச.15
( பிரதீகத்தை அவலம்பிக்காதவர்களை கொண்டுபோகிறான் என்று பாதராயணர் இரண்டு விதத்தினால் தோஷமில்லை, அதில் எண்ணமும் )
विशेषं च दर्शयति ।।१६।।
விசேஷம் ச தர்சயதி 16
( விசேஷத்தையும் காட்டுகிறது )

இந்த பிரஹ்மலோகமடைவது எல்லா உபாஸகர்களுக்கும் உண்டா? என்பது விஷயம்.

प्रतीकोपासकान्ब्रह्मलोकं नयति वा न वा ।
अविशेषश्रुतेरेतान्ब्रह्मोपासकवन्नयेत् ।। ११ ।।
ब्रह्मक्रतोरभावेन प्रतीकार्हफलश्रवात् ।
न तान्नयति पञ्चाग्निविदो नयति तच्छ्रुतेः ।। १२ ।।

ப்ரதீகோபாஸகாந்ப்₃ரஹ்மலோகம் நயதி வா ந வா ।
அவிசேஷச்ருதேரேதாந்ப்₃ரஹ்மோபாஸகவந்நயேத் ।। 11
ப்₃ரஹ்மக்ரதோரபா₄வேந ப்ரதீகார்ஹபல₂ச்ரவாத் ।
ந தாந்நயதி பஞ்சாக்₃நிவிதோ₃ நயதி தச்ச்₂ருதே: ।।12

(அ..ம்)

பிரதீகத்தை உபாஸிக்கிறவர்களை பிரஹ்மலோகம் கொண்டு போகிருனு? அல்லது கிடையாதா? வித்யாஸப்படுத்தி சுருதியில்லாதபடியால், பிரஹ்மத்தை உபாஸிக் கிறவர்களைப் போலவே, இவர்களையும் கொண்டு போவான்.

பிரஹ்மம் என்ற பாவனையில்லாததினுலும், பிரதீகங்களுக்குத் தக்கபடி பலன்கள் சொல்லியிருப்பதாலும், அவர்களை கொண்டு போவதில்லை. பஞ்சாக்னியறிந்தவர் களை கொண்டு போகிருன், அதற்கு சுருதியிருப்பதால்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

"स एतान्ब्रह्म गमयति""அவன் இவர்களை பிரஹ்ம லோகத்தை அடைவிக்கிருன்" என்ற வாக்கியத்தில் எவ்வித வித்யாஸமும் காணுததினுல் அந்த புருஷன் பிரஹ்ம உபாஸகர்களைப்போலவே பிரதீகோபாஸகர்களையும் ஸத்யலோகம் சேர்ப்பிக்கிருன் என்று தெரிகிறது.

ஸித்தாந்தம் :
"**तं यथा यथोपासते तदेव भवति**" "அவரை எப்படி எப்படி உபாஸிக்கிருனே, அதுவாகவே ஆகிருன்" என்ற வேதத்திலிருந்து பிரஹ்ம பாவனையே பிரஹ்ம பிராப்திக்கு ஹேது என்று தெரிகிறது. பிரதீகத்தை உபாஸிக்கிறவர்களுக்கோ பிரஹ்ம பாவனையே கிடையாது; அது இருந்தாலல்லவா பிரஹ்ம லோகம்போக முடியும்! மேலும் அந்தந்த பிரதீகத்திற்குத் தக்கபடி பலன்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. "**यावन्नाम्नो गतं तत्रास्य यथाकामचारो भवति**" "எதுவரை நாமாவுக்கு போக்கு உண்டோ அங்கே எல்லாம் இவனுக்கு இஷ்டப்படி ஸஞ்சரிப்பது ஏற்படும்" அதாவது நாமத்தை பிரஹ்மமென்று உபாஸிக்கிறவனுக்கு சப்த சாஸ்திரம் முதலான குறிப்பிட்ட நாமாக்களில் ஸ்வாதந்திரியம் உண்டாகும் என்பது பலன். இவைகளே பலனுகுமானதினுல் பிரஹ்ம லோகம் என்பது இவர்களுக்கு பலன் ஆகாது. அப்படியானுல் பிரதீகோபாஸகர்களாகவேயிருக்கும். பஞ்சாக்னி வித்யையை உபாஸித்தவர்களுக்கு மாத்திரம் பிரஹ்மலோகம் எப்படிக் கிடைக்கும்? அவர்களும் பிரஹ்மோபாஸகர்கள் அல்லவே? என்ருல் சுருதி அவ்விதம் சொல்கிறது என்ற பலத்தினுல் என்கிருேம்.
ஆகையால் அநேகமாய் பிரதீக உபாஸகர்களுக்கு ஸத்யலோகம் அடைவது கிடையாது.

இவ்விதம் நான்காவது அத்யாயம் மூன்ருவது பாதத்தில் அதிகரணங்கள் 6 சுலோகங்கள் 12 (ஸூத்ரங்கள் 16).

===============================

## நான்காவது அத்யாயம் : நான்காவது பாதம்

இந்த பாதத்தில் பரபிரஹ்மத்தையடைந்தவருடைய நிலையும் பிரஹ்ம லோகத்தையடைந்தவருடைய நிலையும் எடுத்துச்சொல்லப்படுகின்றன.

### १.सम्पद्याविर्भावाधिकरणम्
### 1.ஸம்பத்$_3$யாவிர்பா$_4$வாதி$_4$கரணம்
(ஸூத்ரம் 1 - 3)

**संपद्याऽऽविर्भावः स्वेन शब्दात् ।।१।।**

ஸம்பத்$_3$யாஆவிர்பா$_4$வ; ஸ்வேந சப்தாத் 1

( அடைந்து தானாக ஆவிர்பாவம், ஸ்வேந என்ற சப்தமிருப்பதினால் )

**मुक्तः प्रतिज्ञानात् ।।२।।**

முக்த; ப்ரதிஜ்ஞாநாத் 2

( விடுபட்டவன், பிரதிக்ஞையிருப்பதால் )

**आत्मा प्रकरणात् ।।३।।**

ஆத்மா ப்ரகரணாத் 3

( ஆத்மா, பிரகரணத்தினால் )

முக்தி என்பது புதிதான நிலையா? என்பது இங்கே விஷயம்.

**नाकवन्नूतनं मुक्तिरूपं यद्वा पुरातनम् ।**
**अभिनिष्पत्तिवचनात्फलत्वादपि नूतनम् ।। १ ।।**
**स्वेन रूपेणेति वाक्ये स्वशब्दात्तत्पुरातनम् ।**
**आविर्भावोऽभिनिष्पत्तिः फलं चाज्ञानहानितः ।। २ ।।**

நாகவந்நூதநம் முக்திரூபம் யத்$_3$வா புராதநம் ।
அபி$_4$நிஷ்பத்திவசநாத்பலத்வாத$_3$பி நூதநம் ।। 1
ஸ்வேந ரூபேணேதி வாக்யே ஸ்வசப்தா$_3$த்தத்புராதநம் ।
ஆவிர்பா$_4$வோஅபி$_4$நிஷ்பத்தி; ப$_2$லம் சாஜ்ஞாநஹாநித; ।। 2

(அ..ம்)

முக்தியின் ரூபம் ஸ்வர்க்கம் போல புதிதாக ஏற்படுவதா? அல்லது முன் இருந்து தானா? "ஆகிறான்" என்ற வசனமிருப்பதாலும், பலனாகவிருப்பதாலும் புதிது தான்.

"தன் ரூபத்துடன்" என்ற வாக்கியத்தில் "தன்" என்ற சப்தமிருப்பதால், அது முன்னிருந்தது தான். "ஆவது" என்பது வெளியில் வருவது தான். அக்ஞானம் நாசமடைவதால் பலன் (என்று சொல்லப்படுகிறது).

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

" एष संप्रसादोऽस्माच्छरीरात्समुत्थाय परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाभिनिष्पद्यते "

"இந்த ஸம்பிரஸாதன் இந்த சரீரத்திலிருந்து நன்குக் கிளம்பி மேலான ஜ்யோதிஸை அடைந்து தன் ரூபத்துடன் ஆகிருன்" என்று சொல்லப் பட்டிருக்கிறது. உபாதி விலகினுல் நன்கு தெளிவடைகிறது என்ற காரணத்தினுல் ஜீவன் ஸம்பிரஸாதன் என்று சொல்லப் படுகிருன். அவன் (ஸ்தூல,ஸூக்ஷ்ம, காரணமென்ற) மூன்று சரீரங்களிலுமுள்ள அபிமானத்தை விட்டு விட்டு பரம்பிரஹ்மத்தையடைந்து முக்தி ரூபத்துடன் இருக்கிருன் என்று அர்த்தம். அந்த முக்தி ரூபம் ஜீவனுக்கு முன்னமேயே ஸித்தமாயுள்ளதில்லை; ஸ்வர்க்கம் போல புதிதாக வந்தது தான். ஏனென்ருல் "ஆகிருன்" என்ற சப்தத்தினுல் உண்டாகும் தன்மை சொல்லப்படுகிறது. மேலும் முன்னுலேயே ஸித்தமென்ருல், ஸம்ஸார தசையிலும் இருந்திருக்குமாதலால் அதற்கு பலனுயிருக்கும் தன்மையேற்படாது. ஆகையால் இந்த முக்தி தசையில் உள்ள ரூபம் ஸ்வர்க்கம் போல புதிது தான்.

ஸித்தாந்தம் :

"தன் ரூபத்துடன் ஆகிருன்" என்பதில் "தன்" என்று குறிப்பிடப்பட்டிருப்பதால் இந்த ரூபம் முன்னமேயே உள்ளது தான் என்று ஏற்படுகிறது. "தன்" என்ற சப்தம் "தனக்கு ஏற்பட்ட" என்ற அர்த்தத்தைச் சொல்லாது ஏனென்ருல் முக்தியில் எந்த எந்த ரூபத்தை எடுத்துக் கொள்ளுகிருனே அது எல்லாமே அவனுக்கு ஏற்பட்டவைகளேயல்லவா? "தனக்கு சொந்தமான" என்று அர்த்தம் சொன்னுல் தான் மற்ற ரூபங்களை விலக்கிக்காட்ட முடியும். அதாவது "தானுயுள்ளதான" என்று எடுத்துக் கொள்ள வேண்டுமே தவிர "தன்னுடையதான" என்று எடுத்துக்கொள்ளக் கூடாது.ஆகிருன் என்பது உண்டாவதைச் சொல்லவில்லை, முன்னுலேயே இருந்து வருவதற்கு உண்டாவது கிடையாததினுல். ஆகையால் ஆகிறது என்பது தத்வ ஞானத்தினுல் பிரஹ்மமாயிருக்கும் தன்மை வெளிப்படுகிறது என்று மாத்திரம் அர்த்தம். அப்படியானுல் "பரமாத்மாவை அடைந்து, ஆகிருன்" என்ருல் அவ்விரண்டு பதங்களால் ஒரே அர்த்தத்தைத் திரும்பச் சொன்னதாக ஆகாதா? என்று எண்ண வேண்டாம். "அடைந்து" என்ற சப்தத்தினுல் தத் பதார்த்தத்தை சோதிப்பதும் (பிரஹ்மத்தின் ஸ்வரூபத்தை அறிவதும்),

"ஆகிருன்" என்ற சப்தத்தினல் வாக்கியார்த்தத்தை (நானே பிரஹ்மம் என்றதை) அறிவதும் சொல்லப்படுகின்றன.முன்னுலேயே ஸித்தமாயிருந்தால் முக்தி ரூபம் பலனுக இருக்க முடியுமா என்பது தவறு. முன்னுல் அக்ஞானத்துடன் சேர்ந்திருந்த ரூபம் போய் விட்டபடியால் அக்ஞானமற்ற ரூபம் முன்னமேயிருந்து இப்பொழுது வெளிப்படும் போது பலனுகக்கூடியதால். ஆகையால் முக்தியில் உள்ள ரூபம் முன்னமே இருந்த வஸ்து தான்.

## २.अविभागेन दृष्टत्वाधिकरणम्

## 2.அவிபா$_4$கே$_3$ந த்$_3$ருஷ்டத்வாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 4)

**अविभागेन दृष्टत्वात् ।।४।।**

அவிபா$_4$கே$_3$ந த்$_3$ருஷ்டத்வாத் ..4..

( பிரிவில்லாமல், காணப்படுவதால் )

அந்த முக்தி ரூபம் பிரஹ்மமே தானு? பிரஹ்மத்தை விட வேருயுள்ளதா? என்று இங்கு விசாரிக்கப்படுகிறது.

**मुक्तरूपाद् ब्रह्म भिन्नमभिन्नं वा, विभिद्यते ।**
**संपद्य ज्योतिरित्येवं कर्मकर्तृभिदोक्तितः ।। ३ ।।**
**अभिनिष्पन्नरूपस्य स उत्तमपुमानिति ।**
**ब्रह्मत्वोक्तेरभिन्नं तद् भेदोक्तिरुपचारतः ।। ४ ।।**

முக்தரூபாத் ப்$_3$ரஹ்ம பி$_4$ந்நமபி$_4$ந்நம் வா,விபி$_4$த்$_3$யதே ।
ஸம்பத்$_3$ய ஜ்யோதிரித்யேவம் கர்மகர்த்ருபி$_4$தோ$_3$க்தித: ।। 3
அபி$_4$நிஷ்பந்நரூபஸ்ய ஸ உத்தமபுமாநிதி ।
ப்$_3$ரஹ்மத்வோக்தேரபி$_4$ந்நம் தத் பே$_4$தோ$_3$க்திருபசாரத; ।। 4

(அ..ம்)

முக்தனுடைய ரூபத்திலிருந்து பிரஹ்மம் வேரு? அல்லது வேறில்லையா? "ஜ்யோதிஸை அடைந்து" என்று இவ்விதம் அடையப்படுவதாகவும் அடைகிறவனுகவும் பேதம் சொல்லப்பட்டிருப்பதால்.

வேறு.ஆன ரூபத்திற்கு "அவன் உத்தம புருஷன்" என்று பிரஹ்மமாயிருக்கும் தன்மை சொல்லப் படுவதால் அது வேறில்லை. பேதம் சொன்னது உபசாரத்தினுல்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

முன் அதிகரணத்தில் தீர்மானிக்கப்பட்ட முக்தனுடைய ஸ்வரூபம் அந்த பரபிரஹ்மத்திலிருந்து வேருயிருப்பது தான் நியாயம். ஏனென்ருல் "एष संप्रसादः परं ज्योतिरुपसंपद्य""இந்த ஸம்பிரஸாதன் மேலான ஜ்யோதிஸை அடைந்து" என்றவிடத்தில் ஸம்பிரஸாதன் என்ற சப்தத்திஞல் சொல்லப்படும் ஜீவன் அடைவது என்பதில் கர்த்தாவாகவும் (அடைகிறவஞகவும்) ஜ்யோதிஸ் என்ற சப்தத்திஞல் சொல்லப்படும் பிரஹ்மம் அடைவது என்பதில் கர்மாவாகவும் (அடையப்படுவதாகவும்) குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆகையால் மோக்ஷத்தை அடை ந்த ஜீவனுடைய ஸ்வரூபம் பிரஹ்மத்தைவிட வேறுபட்டது.

ஸித்தாந்தம் :
"ஜ்யோதிஸை அடைந்து" என்ற வாக்கியம் தத்பதார்த்தத்தை சோதிப்பதை (பிரஹ்மத்தின் ஸ்வரூபத்தை அறிவதை) விஷயமாகவுள்ளது என்பதிஞல் அந்த ஸமயத்தில் பேதம் இருக்கட்டுமே? அதன் பிறகு "தன் ரூபத்துடன் ஆகிருன்" என்ற வாக்கியம் வாக்கியார்த்தத்தை (நானே பிரஹ்மம் என்பதை) அனுபவிக்கும் தசையிலுள்ள முக்தியின் ஸ்வரூபத்தை எடுத்துக்காட்டுகிறது. மேலும்"सः उत्तमःपुरुषः" "அவன் மிகவும் மேலான புருஷன்" என்ற வாக்கியத்தில் "அவன்" என்ற சப்தத்தால் ஆன ரூபத்தையுடைய முக்தனுடைய ஸ்வரூபத்தைக் குறிப்பிட்டு அவனுக்கு "மிகவும் மேலான புருஷன்" என்ற சப்தத்தால் சொல்லப்படும் பிரஹ்ம ஸ்வரூபமாயிருக்கும் தன்மை சொல்லப்படுகிறது.
ஆகையால் முக்தியடைந்தவன் உடைய ஸ்வரூபம் பிரஹ்மத்திலிருந்து வேறுபட்டதில்லை.

## ३.ब्रह्माधिकरणम्

## 3.ப்₃ரஹ்மாதி₄கரணம்

(ஸூத்ரம் 5 - 7)

**ब्राह्मेण जैमिनिरुपन्यासादिभ्यः ।।५।।**

ப்₃ராஹ்மேண ஜைமிநிருபந்யாஸாதி₃ப்₄ய; ..5..

( பிரஹ்மஸ்வருபத்துடன் என்று ஜைமினி, உபந்யாஸம் முதலியதால் )

**चितितन्मात्रेण तदात्मकत्वादित्यौडुलोमिः ।।६।।**

சிதிதந்மாத்ரேண ததா₃த்மகத்வாதி₃த்யௌடு₃லோமி; ..6..

( சைதன்ய மாத்திமாக, அதை ஸ்வருபமாயுள்ளதால்

என்று ஔடுலோமி )

एवमप्युपन्यास्यात्पूर्वभावादविरोधं बादरायणः ।।७।।

ஏவமப்யுபந்யாஸ்யாத்பூர்வபா$_4$வாத$_3$விரோத$_4$ம் பா$_3$த$_3$ராயண; ..7..

( இப்படியானாலும் உபன்யாஸத்தினால் முன் சொன்னதுமிருப்பதினால் விரோதமில்லையென்று பாதராயணர் )

முக்தனுடைய ஸ்வரூபம் பிரஹ்மத்திலிருந்து வேறுபடவில்லையென்று இருந்த போதிலும், பிரஹ்மமாகவேயிருக்கும் தன்மை குணங்களையுடைய பிரஹ்மமாகவா? அல்லது குணமற்ற பிரஹ்மமாகவா? என்பது விஷயம்.

क्रमेण युगपद्वाऽस्य सविशेषाविशेषते ।
विरुद्धत्वात्कालभेदाद् व्यवस्था श्रुतयोस्तयोः ।। ५ ।।
मुक्तामुक्तदृशोर्भेदाद् व्यवस्था संभवे सति ।
अविरुद्धं यौगपद्यमश्रुतं क्रमकल्पनम् ।। ६ ।।

க்ரமேண யுக$_3$பத்$_3$வாஅஸ்ய ஸவிஷேசாவிசேஷதே ।
விருத்$_3$த$_4$த்வாத்காலபே$_4$தா$_3$த்$_3$ வ்யவஸ்தா$_2$ ச்ருதயோஸ்தயோ; ।।5
முக்தாமுக்தத்$_3$ருசோர்பே$_4$தா$_4$த்$_4$ வ்யவஸ்தா$_2$ ஸம்ப$_4$வே ஸதி ।
அவிருத்$_3$த$_4$ம் யௌகபத்$_3$யமச்ருதம் க்ரமகல்பநம் ।। 6

(அ..ம்)

இவனுக்கு ஸகுணமாயிருத்தல், நிர்குணமாயிருத்தல் இரண்டும் வரிசையாக ஏற்படுகிறதா? அல்லது ஸமகாலத்திலேயே? அந்த இரண்டு சுருதிகளும் விருத்தமாயிருப்பதால், காலத்தின் வித்யாஸத்தினுல் வியவஸ்தை.

முக்தனுடைய பார்வை, முக்தனல்லாதவனுடைய பார்வை இவைகளுக்குள் உள்ள பேதத்தினுல் வியவஸ்தை ஸம்பவிக்கிறபடியால், ஸமகாலத்தில் இரண்டுமிருப்பது விருத்தமில்லை. வரிசையென்று கல்பிப்பது கேட்கப்படாதது (வேதத்தில் காணுதது).

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

முக்தனுடைய ஸ்வரூபமாயிருக்கும் பிரஹ்மம் வேதங்களில் இரண்டு விதமாக சொல்லப்பட்டிருக்கிறது. சிலவிடத்தில் "य आत्माऽपहतपाप्मा विजरो विमृत्युर्विशोको विजिघत्सोऽपिपासः सत्यकामः सत्यसंकल्पः" "எந்த ஆத்மா பிறப்பற்றவர், ஜரையற்றவர், மரணமற்றவர், சோகமற்றவர், பசியற்றவர், தாஹமற்றவர், தவருத காமத்தையுள்ளவர், தவருத ஸங்கல்பத்தையுள்ளவர்" என்ற சுருதி குணத்துடன் கூடியதைச் சொல்கிறது. "स यथा सैन्धवघनोऽनन्तरोऽबाह्यः कृत्स्नो रसघन एव। एवं वा

अरेऽयमात्माऽनन्तरोऽबाह्यः कृत्स्नः प्रज्ञानघन एव" "எப்படி அந்த உப்புக்கட்டி உள்ளென்றிராமல், வெளியென்றிராமல் பூராவும் உப்புக் கட்டியே தானே அப்படியே தான் இந்த ஆத்மா உள்ளேயென்றிராமல்,வெளியென்றிராமல் முழுவதும் அறிவுக் கட்டியே தான்" என்ற சுருதி குணமற்றதை சொல்கிறது. குணத்துடன் இருத்தல், குணமற்றிருத்தல் என்ற இந்த இரண்டும். முக்தி தசையில் பிரஹ்மத்திற்கு ஸமகாலத்தில் இருக்க முடியாது ஒன்றுக்கொன்று விரோதமாயிருப்பதால். ஆகையால் கால பேதத்தினுல் (இப்படி சிலக்காலம் அப்படி சிலக்காலம் என்று) வியவஸ்தை செய்ய வேண்டும்.

ஸித்தாந்தம் :
பார்க்கிறவர்களுக்குள் இருக்கும் பேதத்தினுலேயே, குணத்துடனிருப்பது குணமற்றிருப்பது இரண்டும் ஸமகாலத்தில் பொருந்தக் கூடியது. அதாவது முக்தனுடைய பார்வையில் குணமற்ற தன்மை தான். பந்தப்பட்டிருக்கிற வனுடைய பார்வையிலோ, ஸர்வக்ஞத்வம் முதலான குணங்களுடன் கூடினதாகவிருந்து கொண்டு ஜகத் காரணமாயிருக்கும் ஸகுணமான பிரஹ்மமே முக்தனுடைய ஸ்வரூபமாகத் தோன்றும். முக்தியடைந்த புருஷர்கள் எக்காலத்திலும் "நாங்கள் ஸர்வக்ஞத்வம், ஸத்யஸங்கல்பத்வம் முதலான குணங்களுடன் கூடினவர்களாக இருக்கிறேம் என்று அறிவது கிடையாது. ஏனென்ருல் அவ்விதம் எண்ணம் ஏற்படுவதற்குக் காரணமாயுள்ள அவித்யை நாசமாகிவிட்டது. கட்டுப்பட்டிருப்ப வர்களோ அவித்யையோடு கூடினவர் களாயிருப்பதால் குணமற்றதாக வேயிருந்து வரும் பிரஹ்மத்தை ஸர்வக்ஞத்வம் முதலான குணங்களுடன் கூடியதென்று கல்பிக்கிருர்கள். ஆகையால் பார்ப்பவர்களில் உள்ள பேதத்தினுலேயே வியவஸ்தை ஸித்திக்குமானதினுல் காலத்தினுல் பேதமென்று கல்பிக்க என்ன அவசியம்?
ஆகையால் குணமுடையது, குணமற்றது என்ற இரண்டும் ஒரே ஸமயத்தில் தான்.

## ४.सङ्कल्पाधिकरणम्

## 4.ஸங்கல்பாதி₄கரணம்

(ஸூத்ரம் 8 - 9)

संकल्पादेव तु तच्छ्रुतेः ॥८॥

ஸங்கல்பாதே₃வ து தச்ச்₂ருதே; 8
( ஆனால் ஸங்கல்பத்தினால் தான், அவ்விதம் சொல்லப்பட்டிருப்பதால் )

**अत एव चाऽनन्याधिपतिः ॥९॥**

அத ஏவ சாஅனன்யாதி₄பதி; 9
( இதனால் தான் வேறு அதிபதியில்லாதலிருப்பதும் )

இதுவரை மூன்று அதிகரணங்களால் பிரஹ்மமாக ஆகிறதான விதேஹமும் விசாரிக்கப்படுகிறது. பிரஹ்மலோகத்தையடைவதான ஸகுண முக்தி பாக்கியுள்ள மூன்று அதிகரணங்களில் விசாரிக்கப்படுகின்றன. இந்த அதிகரணத்தில் பிரஹ்ம லோகத்திலுள்ள போக்ய வஸ்துக்களின் தன்மை எப்படி? என்பது விஷயம்,

**भोग्यसृष्टावस्ति बाह्यो हेतुः संकल्प एव वा ।**
**आशामोदकवैषम्याद्धेतुर्बाह्योऽस्ति लोकवत् ॥ ७ ॥**
**संकल्पादेव पितर इति श्रुत्याऽवधारणात् ।**
**संकल्प एव हेतुः स्याद्वैषम्यं चानुचिन्तनात् ॥ ८ ॥**

போ₄க்யஸ்ருஷ்டாவஸ்தி பா₃ஹ்யோ ஹேது; ஸங்கல்ப ஏவ வா
ஆசாமோத₃கவைஷம்யாத்₃தே₄துர்பா₃ஹ்யோஅஸ்தி லோகவத் 7
ஸங்கல்பாதே₃வ பிதர இதி ச்ருத்யாஅவதா₄ரணாத்
ஸங்கல்ப ஏவ ஹேது; ஸ்யாத்₃வைஷம்யம் சாநுசிந்தநாத் .. 8 ..

(அ..ம்)

(பிரஹ்ம லோகத்தில்) போக்ய வஸ்துவை ஸ்ருஷ்டி செய்வதில் காரணமாக வெளி பதார்த்தம் உண்டா? அல்லது வெறும் ஸங்கல்பம் மாத்திரம் தானு? ஆசைப்படும் மோதகத்திலிருந்து வித்யாஸம் உள்ளதால், உலகத்தில் போல வெளி பதார்த்தம் உண்டு.

"ஸங்கல்பத்தினுலேயே பித்ருக்கள்" என்ற சுருதியினுல் அழுத்திச் சொல்லியிருப்பதினுல் ஸங்கல்பம் தான் காரணம் ஆகும்.(ஆசைப்படும் மோதகத்திலிருந்து) வித்யாஸமும் ஸங்கல்பத்தினுலும்.

(வி..ம்)

பூர்வபக்ஷம் :

அர்ச்சிராதி மார்க்கம் வழியாக பிரஹ்ம லோகம் போய்ச்சேர்ந்த உபாஸகனுக்கு அது பலமேற்படுவதற்காக போக்யமாயுள்ள பதார்த்தங்கள் தேவைப்படுமானதினுல் அவைகளே ஸ்ருஷ்டி செய்வதற்கு வெளியிலுள்ள ஸாதன வஸ்துக்கள் அபேக்ஷிக்கப்படும். அந்த போக்ய பதார்த்தங்கள் வெறும் மனசினுல் மாத்திரம் ஸங்கல்பிக்கப்பட்டவை தான் என்ருல் அப்பொழுது நாமும்

ஆசைப்படும் போது மனசினுல் ஸங்கல்பிக்கும் மோதகத்திற்கு ஸமானமாகவேயிருக்குமாதலால் சரியானபடி முழுபோகமும் ஏற்பட முடியாது. ஆகையால் பிரஹ்மலோகத்தில் உள்ள பதார்த்தங்கள் வெளி வஸ்துவினால் செய்யப்படுபவைகள்.

ஸித்தாந்தம்

**"स यदि पितृलोककामो भवति, संकल्पादेवास्य पितरः समुत्तिष्ठन्ति"** "அவர் பித்ருக்களை பார்ப்பதில் ஆசையுள்ளவராகவே இருந்தால் அவருடைய ஸங்கல்பத்தினுலேயே அவருடைய பித்ருக்கள் நன்கு முன் நிற்கிறுர்கள்" என்பது முதலானதினுல் பித்ருக்கள், மாதாக்கள்,ஸஹோதரர்கள், கந்தம், மாலை முதலான போக பதார்த்தங்களை செய்வதில் ஸங்கல்பத்தை ஸாதனமாகச் சொல்லித்தான் வெளி ஸாதனங்களை மறுக்கிறது. ஸங்கல்ப காரியத்திற்கும் ஆசைப்படும் மோதகத்திற்கும் ஸமானமா யிருக்கும் தன்மையில் சங்கை வேண்டாம்; ஏனெனில் சம்பாதித்த மோதகங்களுக்கு ஸமானத்தினுடைய கல்பினை உண்டாகிறது. கல்பனாசக்திக்கு உபாஸனா பிராஸாதத்தினாலே அளவு கிடையாது. ஆகையால் ஸங்கல்பம் தான் போக ஸ்ருஷ்டிக்குக் காரணம்.

# ५.अभावाधिकरणम्

## 5.அபா$_4$வாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 10 - 14)

**अभावं बादरिराह ह्येवम् ॥१०॥**

அபா$_4$வம் பா$_3$த$_3$ரிராஹ ஹ்யேவம் 10

( இல்லையென்பதை பாதரி, இப்படியல்லவா சொல்கிறரது )

**भावं जैमिनिर्विकल्पामननात् ॥११॥**

பா$_4$வம் ஜைமிநிர்விகல்பாமநநாத் 11

( உண்டென்பதை ஜைமினி, விகல்பம் சொல்லப்படுவதால் )

**द्वादशाहवदुभयविधं बादरायणोऽतः ॥१२॥**

த்$_3$வாத$_3$சாஹவது$_3$ப$_4$யவித$_4$ம் பா$_3$த$_3$ராயணோஅத; 12

( இதனால் த்வாதசாஹல்போல இரண்டு விதமாகவும் பாதராயணர் )

**तन्वभावे सन्ध्यवदुपपत्तेः ॥१३॥**

தந்வபா$_4$வே ஸந்த்$_4$யவது$_3$பபத்தே; 13

( சரீரமில்லாத போது, ஸ்வப்னத்தில் போல இருக்கக்கூடியதால் )

**भावे जाग्रद्वत् ॥१४॥**

பா$_4$வே ஜாக்$_3$ரத்$_3$வத் 14

( சரீரமுண்டெனில், விழிப்புப்போல )

ஸங்கல்பத்திஞலேயே போக்ய பதார்த்தங்களை ஸ்ருஷ்டி செய்தாலும் அவைகளை அனுபவிக்க தேஹம் இந்திரியங்கள் வேண்டுமா? அவைகள் அங்கே உண்டா? என்பது விஷயம்..

व्यवस्थितावैच्छिकौ वा भावाभावौ तनोर्यतः ।
विरुद्धौ तेन पुंभेदादुभौ स्यातां व्यवस्थितौ ।। ९ ।।
एकस्मिन्नपि पुंस्येतावैच्छिकौ कालभेदतः ।
अविरोधात्स्वप्नजाग्रद्भोगवद्युज्यते द्विधा ।। १० ।।

வ்யவஸ்தி$_2$தாவைச்சி$_2$கௌ வா பா$_4$வாபா$_4$வௌ தநோர்யத; ।
விருத்$_3$தௌ$_4$ தேந பும்பே$_4$தா$_3$துபௌ$_4$ ஸ்யாதாம் வ்யவஸ்தி$_2$தௌ ।। 9
ஏகஸ்மிந்நபி பும்ஸ்யேதாவைச்சி$_2$கௌ காலபே$_4$த$_3$த; ।
அவிரோதா$_4$த்ஸ்வப்நஜாக்$_3$ரத்$_3$போ$_4$க$_3$வத்$_3$யுஜ்யதே த்$_3$விதா$_4$ ।। 10

(அ..ம்)

சரீரம் இருப்பதும் இல்லாததும் வியவஸ்தைக்கு உள்பட்டதா? அல்லது இஷ்டத்தைப் பொருத்ததா? ஒன்றுக்கொன்று விரோதமாயிருப்பதால். புருஷர்களில் பேதத்தைக் கொண்டு இரண்டுமே வியவஸ்தைக்கு உள்பட்டது. ஒரே புருஷனிடத்தில் இவை இரண்டும் கால பேதத்திஞல், ஸ்வப்னம் விழிப்புகளில் உள்ள போகம் போல விரோதப்படாததிஞல் இரண்டு விதமாயும் இருப்பது பொருந்தும். (வி..ம்)

பூர்வபக்ஷம் :

"**मनसैतान्कामान्पश्यन्रमते य एते ब्रह्मलोके**" "பிரஹ்ம லோகத்தில் எந்த இவைகளோ, அந்த காமங்களை மனஸிஞல் பார்த்து ரசிக்கிருன்" என்ற மானஸமான போகத்தைச் சொல்கிற சுருதி இந்திரியங்களோடு கூடிய வெளி சரீரம் கிடையாதென்பதைச் சொல்கிறது. "**स एकधा भवति त्रिधा भवति**" "அவன் ஒன்ருக இருக்கிருன், மூன்ருக இருக்கிருன்" என்ற சுருதி சரீரம் உண்டென்பதை சொல்கிறது. சரீரம் இருப்பது இல்லாதது இந்த இரண்டும் ஒரே புருஷனிடமிருப்பது விருத்தமாகும். ஆகையால் புருஷர்களின் பேதத்தைக் கொண்டு (சிலருக்கு சரீரம் உண்டு, சிலருக்கு கிடையாது என்று) வியவஸ்தை செய்ய வேண்டும்.

ஸித்தாந்தம் :

அவ்விரண்டும் ஒரே புருஷனிடத்திலேயே கால வேறுபாட்டிஞல் வியவஸ்தை செய்யலாம். எப்பொழுது சரீரத்தை விரும்புகிருஞே எப்பொழுது ஸங்கல்பத்திஞலேயே சரீரத்தை ஸ்ருஷ்டித்துக் கொண்டு

விழிப்பு காலத்தில் போல போகங்களை விரும்புகிறுன். எப்பொழுது சரீரத்தை விரும்பவில்லையோ, அப்பொழுது ஸங்கல்பத்தினுலேயே அந்த சரீரத்தை உபஸம்ஹாரம் செய்து கனவில் இருப்பது போல மனஸினுலேயே போகங்களை அனுபவிக்கிறுன். இவ்விதமாக ஒரே புருஷனுக்கே சரீரம் இருப்பது இல்லாதது இரண்டும் தன் விருப்பத்தையொட்டி பொருத்தமானதே.

## ६. प्रदीपाधिकरणम्

## 6. ப்ரதீ$_3$பாதி$_4$கரணம்

(ஸூத்ரம் 15,16)

**प्रदीपवदावेशस्तथाहि दर्शयति ।। १५ ।।**

ப்ரதீ$_3$பவதா$_3$வேசஸ்ததா$_4$ஹி த$_3$ர்சயதி 15

( விளக்குப்போல் ஆவேசமுண்டு அப்படியே காட்டுகிறது )

**स्वाप्ययसंपत्त्योरन्यतरापेक्षमाविष्कृतं हि ।। १६ ।।**

ஸ்வாப்யயஸம்பத்த்யோரந்யதராபேக்ஷமாவிஷ்க்ருதம் ஹி 16

( தூக்கம், நிர்குணமோக்ஷம் இவ்விரண்டின் ஒன்றில் கூறியதன்றோ )

அநேக சரீரங்கள் இருக்கலாமென்றுல் எல்லா சரீரங்களிலும் ஆத்மா உண்டா? என்பது விஷயம்.

**निरात्मानोऽनेकदेहाः सात्मका वा निरात्मकाः ।**
**अभेदादात्ममनसोः एकस्मिन्नेव वर्तनात् ।। ११ ।।**
**एकस्मान्मनसोऽन्यानि मनाम्सि स्युः प्रदीपवत् ।**
**आत्मभिस्तदवच्छिन्नैः सात्मकाः स्युस्त्रिधेत्यतः ।। १२ ।।**

நிராத்மாநோஅநேகதே$_3$ஹா: ஸாத்மகா வா நிராத்மகா: ।
அபே$_4$தா$_3$தா$_3$த்மமநஸோ: ஏகஸ்மிந்நேவ வர்தநாத் ।। 11 ।।
ஏகஸ்மாந்மநஸோஅந்யாநி மநாம்ஸி ஸ்யு: ப்ரதீ$_3$பவத் ।
ஆத்மபி$_4$ஸ்தத$_3$வச்சி$_2$ந்நை: ஸாத்மகா: ஸ்யுஸ்த்ரிதே$_4$த்யத: ।। 12 ।।

(அ.ம்)

பல தேஹங்கள் ஆத்மாவற்றவைகளா? அல்லது ஆத்மாவுடன் கூடினவைகளா? ஆத்மாவும் மனஸும் வேறுபடாததினுல் ஒன்றிலேயே இருக்குமாதலால் (மற்றவை) ஆத்மாவற்றவை தான். அந்த ஒரு மனஸிலிருந்து மற்ற மனஸ்கள் தீபம் போல் ஏற்படலாம். மனஸ்களினுல் வரையறுக்கப்பட்ட ஆத்மாக்களைக் கொண்டு ஆத்மா உள்ளவைகளாக இருக்கலாம். "மூன்ருக" என்றிருப்பதால்.

(வி.ம்)

பூர்வபக்ஷம் :

**"स एकधा भवति, त्रिधा भवति ,पञ्चधा,सप्तधा,नवधा"** "அவன் ஒன்ருக இருப்பான், மூன்ருக இருப்பான், ஐந்தாக, ஏழாக, ஒன்பதாக" என்று ஒரே ஸமயத்தில் இஷ்டப்படி பல சரீரங்கள் எடுத்துக் கொள்வது சொல்லப்படுகிறது. ஆத்மாவும் மனஸும் ஒன்ருனபடியால் ஒரு சரீரத்தில் மட்டும் ஆத்மா உண்டு.

ஸித்தாந்தம் :

ஒரு விளக்கிலிருந்து மற்றொரு விளக்கை ஏற்றுவது போல் ஒரு மனதிலிருந்து பல மனதுகளின் ஸ்ருஷ்டி ஏற்பட முடியும். எனவே ப்ரதி மனதிலும் வெவ்வேறு ஆத்மா தனித்தனி உடலினுள்ளும் உண்டு. அந்த ஆத்மாக்களினுல் எல்லா சரீரமும் ஆத்மையை உடையவைகளேயாகும்.

## ७. जगद्व्यापाराधिकरणम्

## 7. ஜக₃த்₃வ்யாபாராதி₄கரணம்

(ஸூத்ரம் 17 - 22)

**जगद्व्यापारवर्जं प्रकरणादसन्निहितत्वाच्च ।। १७ ।।**

ஜக₃த்₃வ்யாபாரவர்ஜம் ப்ரகரணாத₃ஸந்நிஹிதத்வாச்ச 17

( உலகப்படைப்பு போன்றது தவிர ப்ரகரணத்தினால் அப்போது இல்லாததால் )

**प्रत्यक्षोपदेशादिति चेन्नाऽऽधिकारिकमण्डलस्थोक्तेः ।। १८ ।।**

ப்ரத்யக்ஷோபதே₃ஷாதி₃தி சேந்நாஆதி₄காரிகமண்ட₃லஸ்தோ₂க்தே: 18

(ச்ருதியில் கூறப்பட்டுள்ளதால் உண்டோ எனில் கிடையாது அங்கு ஈச்வரனே கூறப்பட்டுள்ளார் )

**विकारावर्त्ति च तथाहि स्थितिमाह ।। १९ ।।**

விகாராவர்த்தி ச ததா₂ஹி ஸ்தி₂திமாஹ 19

( உலகிற்கு அப்பாலும் உள்ளதாக கூறப்பட்டுள்ளதே )

**दर्शयतश्चैवं प्रत्यक्षानुमाने ।। २० ।।**

த₃ர்சயதச்சை₂வம் ப்ரத்யக்ஷாநுமாநே 20

( ச்ருதியும், ஸ்மிருதியும் கூறுகின்றனவே)

**भोगमात्रसाम्यलिङ्गाच्च ।। २१ ।।**

போ₄க₃மாத்ரஸாம்யலிங்கா₃ச்ச 21

(போகத்தில் மட்டும் தான் ஒற்றுமை ஸூசிக்கப்பட்டுள்ளது)

**अनावृत्तिः शब्दात् अनावृत्तिः शब्दात् ।। २२ ।।**

அநாவ்ருத்தி: சப்₃தா₃த் அநாவ்ருத்தி: சப்₃தா₃த் 22

(திரும்புவதில்லை சப்தமிருப்பதால், திரும்புவதில்லை சப்தமிருப்பதால்)

**जगत्स्रष्टृत्वमस्तयेषां योगिनामथ नास्ति वा ।**
**अस्ति स्वाराज्यमाप्नोतीत्युक्तैश्वयनिवग्रहात् ।। १३ ।।**
**सृष्टावप्रकृतत्वेन स्त्रष्टृता नास्ति योगिनाम् ।**
**स्वाराज्यमीशो भोगाय ददौ मुक्तिं च विद्यया ।। १४ ।।**

ஜக₃த்ஸ்ரஷ்ட்ருத்வமஸ்தயேஷாம் யோகி₃நாமத₂ நாஸ்தி வா ।
அஸ்தி ஸ்வாராஜ்யமாப்நோதீத்யுக்தைச்வயநிவக்₃ரஹாத் ।। 13 ।।
ஸ்ருஷ்டாவப்ரக்ருதத்வேந ஸ்ரஷ்ட்ருதா நாஸ்தி யோகி₃நாம் ।
ஸ்வாராஜ்யமீசோ போ₄கா₃ய த₃தௌ₃ முக்திம் ச வித்₃யயா ।। 14 ।

(அ.ம்:)
யோகிகளுக்கு உலகப் படைப்புத் தொழில் உண்டா இல்லையா என்ற விசாரத்தில், ஸ்வாராஜலத்தைப் பெறுகிருன் என்று முழுமையான ஈச்வரத் தன்மையைக் கூறியுள்ள காரணத்திஞல் படைப்பும் யோகிகளுக்கு உண்டு.
ஸ்ருஷ்டி காலத்தில் யோகியின் இருத்தலே இடையாதானதால் உலகப் படைப்பு இவருக்கு கிடையாது. ஈச்வரன் யோகிகளுக்கு தனது சுகபோகங்களில் மட்டும் பங்கு தருகிருர். கடைசியில் ஞானமறிந்து முக்தியையும் தருவார்.
வி.ம் :

பூர்வபக்ஷம் :
யோகிகள் ஸகுணப்ரம்மலோகத்தில் சென்று ஸ்வாராஜ்யம் பெறுவதாக "**आप्नोतिस्वाराज्यं**" என்று கூறப்பட்டுள்ளதால், இவர்களுக்கு ஜகத்ஸ்ருஷ்டி தொழிலும் உண்டு என்றே கூறவேண்டும்.

ஸித்தாந்தம் :
ஸகுணப்ரம்மலோகமடைந்த யோகிகளுக்கு ஸ்வாராஜ்யப்ராப்தி யென்றால் இவர்களுக்கு சுகபோகங்களில் ஈச்வரனுடைய ஸாம்யம் உண்டு என்று மட்டுமே பொருள். உலகப்படைப்பு போன்ற தொழிலில் பங்கு கிடையாது. யோகிகள் ஸகுணப்ரம்மத்தின் பராந்தகாலத்தில் ( **परान्तकाले** ) ஸகுணப்ரம்மத்தின் அருளால் ஞானம் பெற்று அவருடன் ப்ரம்மமுக்தியையும் பெறுவார்கள். இவ்விதம் இவர்கள் மறுபிறவியை அடைவதில்லை என்பதும் உறுதி.

